# பாண்டியர் செப்பேடுகள் பத்து



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

சி.ஐ.டி. வளாகம், தரமணி,

சென்னை - 600 113.

## BIBLIOGRAPHICAL DATA

| | |
|---|---|
| Title of the book | Pandiar Cheppedugal Pattu |
| First Edition | Published by The Tamil Varalatru Kazhagam (The Tamil History Academy) 40, Peters Road, Madras - 14, 1967 |
| Publisher | International Institute of Tamil Studies, Chennai - 600 113. |
| Publication No. | 325 |
| Language | Tamil |
| Reprint | 1999 |
| Paper used | TNPL - 70 GSM - Super Printing |
| Size of the Book | 1/4 Crown |
| Printing types used | 10 point |
| Number of pages | 400 |
| Number of copies | 1000 |
| Price | Rs. 125/- |
| Printing | **Pavai Printers (P) Ltd.,** Chennai - 600 014. PH: 8532441, 8532973 |
| Subject | Epigraphy |

**தமிழ் வளர்ச்சி இயக்ககத்தின் அரிய நூல் வெளியிடும் திட்டத்தில் நிதியுதவி பெற்று இந்நூல் வெளிவருகிறது.**

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

**முனைவர் ச.சு. இராமர் இளங்கோ**
**இயக்குநர்**

# அணிந்துரை

தமிழ்நாட்டின் வரலாற்றை அறிய உதவுபவை இலக்கியச் சான்றுகள், ஓலைச் சுவடிகள், கல்வெட்டுகள், செப்பேடுகள், காசுகள், அகழாய்வில் கிடைத்த பொருள்கள் போன்றவை ஆகும்.

**பாண்டியர் செப்பேடுகள் பத்து** எனும் இந்நூலில் முற்காலப் பாண்டியர்களின் ஆட்சித் திறனும், வீரமும், கொடையும் விரிவாக விளக்கப்பட்டுள்ளன.

குறிப்பாகப் பாண்டிய மன்னர்கள் தமிழை ஆட்சிமொழியாகப் பயன்படுத்திய பாங்கினை இந்நூலில் காணலாம். அக்கால அரசில் பயன்படுத்திய ஆணத்தி, குடிகாவல் நாயகன், கணக்கர், திருமந்திர ஓலை, திருவாய் கேள்வி, கரணத்தார் போன்ற பல கலைச்சொற்கள் இச்செப்பேடுகள் மூலம் தெரிய வருகின்றன.

கொடை வழங்கிய மன்னர், அக்கொடை தொடர்ந்து நடைபெற வேண்டுமென விரும்பி வேண்டுவதைக் காணலாம். ''மற்றிதனைக் காத்தார் தம் மலரடி என் முடிமேலன என்று கொற்றவனே பணித்தருளி'' எனும் சொற்றொடர் குறிப்பிடத்தக்கது. வழங்கப்படும் ஆணையை நிறைவேற்றுவதற்கு ஓர் 'ஆணத்தி' நியமிக்கப்படுகிறார். கொடுக்கப்படும் நிலத்திற்கு நான்கு பக்க எல்லை தெளிவாகக் குறிப்பிடப்படுகிறது. அவ்வெல்லை நிலைத்திருக்கக் கல் நடப்படுகிறது. கள்ளிச் செடியும் நடப் படுகிறது; அதற்கு முன் அவ்வெல்லைக் கோட்டில் பெண் யானை மீது ஏறிக்கொண்டு அதனை நடக்கச் செய்கிறான் யானைப் படைத்தலைவன். அவன் பெயரையும் பட்டயம் குறிப்பிடுகிறது.

**வேலங்குடி** என்ற பழைய பெயர் நீக்கப்படுகிறது. **ஸ்ரீவரமங்கலம்** என்ற புதுப்பெயர் சூட்டப்படுகிறது. இங்ஙனம் தமிழ் நாட்டில் பல ஊர்களின் தமிழ்ப் பெயர்கள் மாறி வடமொழிப் பெயர்களைப் பெற்ற வரலாற்றை இந்நூலின் மூலம் அறியலாம்.

முன்னாளில் கொடையாகக் கொடுக்கப்பட்ட ஊர் பிறரால் எடுத்துக் கொள்ளப்பட்ட பொழுது, அதனை மீண்டும் பெற்றுப் பழைய கொடைக்கே அளிக்கும் தன்மையையும் அறி கிறோம். திருமங்கலம், சோமாசிக்குறிச்சி ஆகியவற்றின் சாசனம் **பகைக் கேட்டால்** தொலைந்து போய் விட்டதென முறையிட்டுத் திரும்பப் பெறுவதைத் தளவாய்புரம் செப்பேடு கூறுகிறது.

''திருமலி சாசனம் இதற்குச் **செழுந்தமிழ் பாடினோன்** தாதை நிருபசேகரப் பெருங்கொல்லன் நிறைபுகழ் நக்கனே மூத்திவை'' என்ற வாசகத்தில் பட்டயம் எழுதிய கொல்லனின் தமிழ்ப் புலமை கூறப்படுவதும் காணலாம். சின்னமனூர்ப் பெரிய சாசனம் அதிகாரிகளைப் பற்றி கூறும் வாசகம் படித்து மகிழத்தக்கது. ''இதற்குக் களவழி நாட்டு வேம்பாற்றூர்க் கூற்றங்கோன் என்பானை ஆணை ஆளாகவும், கீழ் வேம்ப நாட்டுக்கூரக்குமானைக் குடிகாவல் நாயகனாகவும், திருக்கானப்பேர்க் கூற்றத்துச் சிறுசெவ்வூர் நக்கங்காடனும் மிழலைக் கூற்றத்து நடுவிற் கூற்றிற் றுஞ்சலூர்ப் படாரஞ் சோலையும், களத்திருக்கைப் பெருங்காக்கூர்க் கோன்வேளானுங்கணக்கராகவும் அழனா ட்டுனாட்டார் நின்றெல்லை காட்டப்பிடிசூழ்ந்த பெருநான்கெல்லை... ஆட்சித் தமிழின் நீரோட்டமான நடை, இன்றும் எளிதில் விளங்கும் வண்ணம் உள்ளது குறிப்பிடத்தக்கது.

தமிழ் வளர்ச்சிக் கழகம் அக்காலத்திலேயே மிக நேர்த்தியான முறையில் இந்நூலைப் பதிப்பித்துள்ளது. பட்டயத்தின் வாசகம் கொடுக்கப்பட்டுள்ளது. வடமொழிப் பகுதி தேவநாகரி எழுத்தில் உள்ளது குறிப்பிடத்தக்கது. பட்டயப் பகுதியை வழக்கம் போல வரிக்கு வரி பதிப்பித்த பின்னர்ப் பாடல் வரிகளாகவும் மாற்றிப் பதிப்பித்துள்ளமை குறிப்பிடத்தக்கது. மேலும் வட மொழிப் பகுதிக்குத் தமிழ் மொழிபெயர்ப்பும், தமிழ்ப் பகுதிக்குப் பொழிப்புரையும் வழங்கப் பட்டுள்ளன.

ஆங்கிலத்திலும், தமிழிலும் உள்ள ஆராய்ச்சி முன்னுரைகள் வரலாற்றுக்கு ஆதார மானவை; அவ்வறிஞர்களின் ஆய்வின் ஆழத்தைக் காட்டவல்லவை. ஒவ்வொரு செப்பேட்டிலும் அரசர்களின் குடிவழி மரபுக் கூறப்பட்டுள்ளது. தமிழக வரலாற்றின் முற்காலப் பாண்டியர் பற்றிய எல்லாச் செய்திகளும் ஆராயப்பட்டுள்ளன. இந்தக் கால கட்டத்துப் பட்டயங்கள் வேறு எதுவும் இன்னமும் கிடைக்கவில்லை. இவர்களுக்குப் பின்னர் வந்த பாண்டியர்களின் செப்பேடுகள் 10 கிடைத்துள்ளன. அவை இந்நூலில் இணைக்கப்படவில்லை.

இந்நூலில் வரும் பெருவழுதிப் பாண்டிய அரசர்களின் நாணயங்கள் தற்போது கிடைத் துள்ளன என்ற செய்தி இதனோடு சேர்த்து எண்ணத்தக்கது.

பெரும்பாலான பட்டயங்கள் வட்டெழுத்து வடிவின. தமிழ் எழுத்துகள் காலங்கள்தோறும் மாறி வந்துள்ளன. இதுகாறும் நமக்குக் கிடைத்துள்ள பட்டயங்கள், கல்வெட்டுகள் மூலம் தமிழ் எழுத்துகளின் வடிவ மாற்றங்களை அறியலாம்.

இந்நூலை 1967இல் தமிழ் வரலாற்றுக் கழகம் வெளியிட்டுள்ளது. இந்நூலை வெளியிட அனுமதி அளித்த தமிழ் வரலாற்றுக் கழகத்தின் தலைவர் **திருமிகு பொள்ளாச்சி நா. மகாலிங்கம்** அவர்களுக்கும், இந்நூலை மீண்டும் பதிப்பிக்க வேண்டும் என்ற எண்ணத்தைத் தூண்டிய **திருமிகு ஐராவதம் மகாதேவன்** அவர்களுக்கும் நன்றி.

நூலை வெளியிடுவதற்கு எனக்குத் துணை செய்த சீரிய சிந்தனையாளர் **முனைவர் கொடுமுடி சண்முகன்** அவர்களுக்கும், அச்சிடுவதற்காகத் தனது நூல்படியைத் தந்துதவிய தொல்லியல் துறை **ஆய்வாளர் திரு. இராசகோபால்** அவர்களுக்கும், முதுபெரும் கல்வெட்டு **ஆய்வாளர் கும்பகோணம் திரு. என். சேதுராமன்** அவர்களுக்கும், வரலாற்றுச் சான்றாதாரங்கள் கொண்ட இந்நூலை வெளியிட நிதி நல்கிய தமிழ் வளர்ச்சித் துறை இயக்குநர் **முனைவர் ச. நாகராசன்** அவர்களுக்கும் நன்றி.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் காட்டி வருகின்ற நிறுவனத் தலைவர் மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி - பண்பாடு மற்றும் இந்து சமய அறநிலையத்துறை அமைச்சர் **முனைவர் மு. தமிழ்க்குடிமகன்** அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத் துறைச் செயலாளர் **திருமிகு. த.இரா. சீனிவாசன் இ.ஆ.ப.,** அவர்களுக்கும் நன்றி.

நூலினை வனப்புற அச்சிட்டுத் தந்த பாவை அச்சகத்துக்கு நன்றி.

**இயக்குநர்.**

# பொருளடக்கம்

### ஆய்குல மன்னர் செப்பேடுகள்



### பிற்சேர்க்கை

# PANDYAN HISTORY THROUGH COPPERPLATE PROCLAMATIONS

The Tamil History Academy (Tamil Varalatru Kazhagam) has as its aim and scope the study and interpretation of the early Tamil inscriptions as source-material for South Indian History, particularly for a correct and complete history of the Tamil people and their culture. Scholars now agree that epigraphy is the life-blood of history, as other sources of information have to be regulated by archaeology, notably by inscriptional evidence, to become acceptable or reliable. Dr. B. C. Chhabra has observed that of all the varied archaeological data lending themselves to historical interpretation, epigraphs are by far the most effective, precise and trustworthy.

An epigraph or inscription is known as *sasanam* which in Sanskrit literally means a command or order. A majority of the inscriptions refer to the royal commands granting land or other privileges to temples and other institutions, besides learned Brahmins well-versed in vedic lore. There are also records registering gifts by ministers and other officers as also by private individuals. There are epigraphs recording deeds of public utility or private transactions. Some inscriptions are statements of historical facts or bear literary compositions. As a rule the inscriptions are engraved upon a hard material like copper or stone.

Tamil India has happily inherited a vast legacy of epigraphical material,—the number of ancient inscriptions in Tamil so far discovered running into several thousands.

A break-up of known inscriptions:

**Tamil Inscriptions:**

| | |
|---|---|
| Total collected up to date | 21,464 |
| Total published up to date | 4,171 |
| | 17,293 |
| Under publication | 2,158 |
| Under preparation | 2,150 |
| | 4,308 |
| Balance | 12,985 |

It is gratifying that this wealth of ours is being augmented by fresh discoveries from time to time. The bulk of the records still remains unpublished, and our historical studies can be complete only when the texts of all the inscriptions are examined chronologically, studied and interpreted.

From ancient literary evidence as from the accounts of the Greek and Roman writers, modern scholars judge that the Tamil people had built up a mighty civilization which flourished during the Sangam age, i.e. in the early centuries of the Christian era. Basing their conclusions on the fact that Tamil and Vatteluttu inscriptions did not go back beyond the 7th Century A. D, the belief was entertained until recently by scholars that there was no dependable evidence to confirm what appeared in the Sangam literary traditions and in the comments of the earliest foreign visitors to this part of the country.

Now, the discovery of Tamil inscripions in the Brahmi script seems to constitute a major breakthrough in South Indian history in general and Tamil history in particular. These Tamil Brahmi inscriptions have been dated from the 2nd century B.C.

to about the 3rd century A.D. Sri I. Mahadevan's system of decipherment has just begun to throw valuable light on the Sangam age. The bits of information gleaned from a variety of Tamil-Brahmi inscriptions and pieced together may perhaps authenticate a literary text or lend authority to some traditions mentioned by Sangam poets.

There are differences between the records on stone and those on copperplates. The early stone inscriptions in the Tamil country are generally in Tamil prose and occasionally in Sanskrit. But the copperplate grants are either in Sanskrit verse and Tamil prose as in the case of Pallava plates, or both in Sanskrit and Tamil verse as instanced by the Pandya plates. Inscriptions on stone may narrate particular gifts in the particular regnal year of the king ; they begin with *meykkirti*[1] of the king after the usual auspicious expression or symbol and end with the signatures of the officers drafting the sasanam or document followed by the usual imprecation, The copperplate grants, on the other hand, contain, after the introductory auspicious symbol and invocation, detailed information about the ancestry and genealogy of the king. Such information is also given about the donor if he happens to be some person other than the King. Then the plate tells us how on the petition of a named individual the king ordered the gift of the grant. An official or dignitary is named in the document (sâsanam) as its executor or *ānathi*. This sâsanam closes with imprecatory verses, after detailing the registry of the orders in the various registers of the state. Sometimes the person who drafted the deed as well as the scribe who incised the grant (who are also occasional beneficiaries) of the grant are named in the document. At times the royal sign-manual may also be found.

The inscriptions 'while narrating the donation' mention also the date when the gift was made. Then the date given may be the

[1] Meykkirti or prasasti of the kings narrates their victories or other deeds of glory.

regnal year coupled with the year of an era, like the Saka, kollam or kaliyuga. Often astronomical details are also given such as the month, day, thithi, asterism (nakshatra) and unusual phenomena like an eclipse. With the help of these, the date of the grant and the duration of the king's reign can be fixed. A study of the inscriptions can help us to follow the course of royal dynasties and the wars they waged, the pattern of administrative machinery, the state of commerce, the progress of education, the growth of language and literature apart from the economical condition of the people. In brief the inscriptions reveal the various aspects of the life and conditions of the society in those days. From the inscriptions we also learn that the lands donated were surveyed even up to small fractions and that elaborate accounts were kept of the several items of state revenue. In other words, inscriptions both on stone and copper may be relied upon to form the main source for the reconstruction of the history of our past.

The study and interpretation of the copperplates belonging to Pallavas, the Pandyas and the Cholas of the period prior to 1,000 A. D. and of other inscriptions relating to the same period cover the earlier part of the history of Tamilnadu, while they also trace the growth and development of the unique Bhakti-cult in its twin forms of Saivite and Vaishnavite religious revival in South India.

Our first volume, dealing with thirty Pallava copperplates is the first of a series of publications taken up by our Academy. Those plates are presented with full texts and the most acceptable interpretations. Our study of the texts has brought out some facts not hitherto known. Even though political unity may have been brief and spasmodic, cultural unity was much in evidence, providing a link between the past and the present and between the South and the North.

Since the publication of the Pallava copperplates we have been making a many-sided approach to the study of the ten copperplate grants of the Pandyas and their Ay subordinates. These

grants have been carefully and critically edited in this volume. Out of the ten, four well-known copperplate grants have already been utilized by historians and research scholars. The four are :

1. Velvikudi plates
2. Srivara mangalam plates
3. Sinnamanur smaller plates and
4. Sinnamanur larger plates.

The remaining six included in the volume are :

1. Dalavaipuram plates
2. Sivakasi plates and
3. Four Ây plates.

As supplementary to the material furnished by the copper plates in this volume, our third volume will deal with all the available stone-inscriptions of the early Pandyas. Both the publications are intended to help scholars to splice the strands of historical continuity in Pandya history. Of the Pandya kingdom there was nothing like a connected history before Prof. K. A. Nilakanta Sastri, the well-known historian of South India, delivered his lectures on the Pandyas in 1926 at the University of Madras.[1] His book on the "Pandya kingdom from the earliest times to the 16th century" published in the year 1929 is an amplification of those lectures. Some years later T. V. Sadasiva Pandarathar of the Annamalai University brought out his book on the Pandyas in Tamil with some new materials based upon inscriptional and literary sources for the reconstruction of the Pandya history. Though additional material is available today, we are still not in a position to get a correct and complete picture of the rise and decline of the Pandyan kingdom through the centuries. The

[1] Mention may also be made of Pandit Harihara Iyer's earlier account in Tamil of the Pandyas. Also please refer to H. R. Pate's Tinnevelly District Gazetter, Vol. I.

inscriptions, so far available, are only helping us to fill in the gaps here and there serving as valuable milestones on the path likely to lead us in time to the goal of a full and satisfactory account of the Pandya dynasty which is perhaps one of the longest-lived royal dynasties in the world. As Prof. K. A. Nilakanta Sastri has aptly put it, "a complete view of the story of South India cannot be obtained until the history of the Pandyas is fully worked out."

Both Prof. K. A. N. Sastri and Pandarathar have, with the help of the four well-known copperplates and other inscriptions on stone, available at the time, have outlined a picture waiting to be filled in and coloured by further discovery and decipherment of epigraphical material. The present volume is a publication which contains the full texts of the four copper-plates so far utilized as well as of additional texts from six copperplates including those of the Āy Chieftains, with a critical study and acceptable interpretation based upon internal and external evidence.

These inscriptions employ the script known as *Vatteluttu* in their Tamil portion and the Grantha script in their Sanskrit section. The lengthy records of the early Pandyas are of great literary merit and in good verse-form, the Velvikudi plates being the most outstanding. Both the Velvikudi and Srivaramangalam plates of Jatilavarman as those of Sinnamanur, large and small, are now better understood in the light of literary and other sources of information than they were at the time they were published. The dated stone inscriptions from Anamalai and Aivarmalai furnish the best starting point in the Pandya Chronology.[1] The Anamalai inscription is dated in the year 3871 of the Kaliyuga era, corresponding to A. D. 770. Here we get a definite date in the reign of Jatilavarman known as Parantaka I. Another datum equally definite is derived from the Aivarmalai record which gives *Saka* 792 corresponding to 870 A. D. being the 8th

[1] Attention is invited to the record of Sendan in Vatteluttu dated the 17th regnal year at Malayadi Kurichi, Sankara Nainar Koil Tq. Tin. Dt,

regnal year of a king Varaguna who should have come to the throne in A. D. 862-63. Rajasimha II the last king in our genealogical table was defeated by the Chola Parantaka I early in the 10th century A. D. Allowing 25 years on the average for each generation, we arrive at the beginning of the 7th century A. D. or even the end of the sixth century, say 570 A. D. for the accession of Kadungone with whom our genealogy begins. We thus see that the available epigraphs relate to the history of the Pandyas from the close of the 6th century A. D. to the beginning of the 10th. This period is known as the Age of the first Pandya Empire according to Prof. K A N. Sastri. The period begins immediately after the Kalabhra interregnum. The Restoration witnessed a wider extension of Pandya power at the expense of the Pallavas who had dispossesed the Cholas of their ancestral dominions even before the Pandya expansion began. It is marked by repeated contests with varying fortunes between the Pandyas and Pallavas through the centuries, until it ends with a revival of the Chola power.

The copperplate records of Velvikudi, Srivaramangalam and Sinnamanur (two sets) throw considerable light on the history of the Pandyas of the First Empire of the 7th to the 10th centuries A. D. The newly discovered plates of Dalavaipuram and Sivakasi may be looked upon as further rents in the veil of time allowing some fresh light to be thrown on this period of Pandya history.

The Velvikudi grant mentions as the original donor of Velvikudi a Pandyan king of the Sangam Age known as Palyaga Mudukudumi Peruvaludi, whose gift was enjoyed by the donee and his descendents even before the Kalabhra interregnum at the end of which came the restoration of the Pandyas under Kadungon. The larger Sinnamanur plates begin the genealogy with Arikesari Parankusa the king mentioned next to Kadungon's grandson called Sendan in the Velvikudi grant. The establishment of the Tamil Sangam and the translation of the Mahabharata are among

the achievements claimed, according to these plates, by the early Pandyas whose names are, however, not mentioned. The list of names in the Tamil portion of the Velvikudi grant extends over seven generations with Jatilavarma Parantaka as the last king known also as Parantaka Nedunjadayan, the actual donor who is believed to be a devoted disciple of Periyalvar, one of the celebrated Vaishnava hymnists. Both the smaller Sinnamanur and the Srivaramangalam plates are engraved by the same scribe.

The Velvikudi grant speaks of 'a Kali king (a cruel king) named Kalabhran' driving away *Adhirajas*. The Kalabhras are also referred to in the plural "as a military tribe rather than a dynasty of rulers" overcoming the Pandyas. Though some information is available about these people further research is necessary to give an authentic account of their interregnum. After the Pandya restoration we have little information about Kadungon and his son Maravarman Avanisulamani,—the little that we know of them coming from the Tamil portion of the Velvikudi grant. Kadungon's grandson was Sendan or Jayantavarman (A. D. 645-70) praised for the justice of his rule and his prowess in war. His successor was Arikesari Maravarman mentioned in the Velavikudi and smaller Sinnamanur plates, the lārger Sinnamanur grant mentioning the name of Arikesari Parankusa. About the middle of the seventh century A. D., according to the Valvikudi grant, Arikesari conquered the vast forces of the enemy, in many campaigns ; this statement is confirmed by the larger Sinnamanur plates. During the reign of the Pandya King, there should have been a great expansion of power, which came into collision for the first time with the Pallava neigbours on the north. This Pandyan is identified with the Kun Pandya of Saiva literature, a contemporary of the celebrated Saiva hymnist Tirugnana Sambandar. The king himself is included in the list of canonised Saiva saints known as Nayanmars.

The son of Arikesari Parankusa was Kochadayan Ranadhira who also waged aggresive wars against his neighbours and expanded

further the first Empire of the Pandyas.. His son and successor was Maravarman Rajasimha I, mentioned both by the Velvikudi and the larger Sinnamanur plates. A worthy son of a worthy father, he won important Victories againt the Pallavas, the Srivaramangalam or Madras Museum plates calling him Pallava-Bhanjana. According to the Velvikudi grant he defeated Pallavamalla; the Tamil portion of the same grant ascribes to him a series of victories in several battlefields. Here we get only "the Pandyan version of the campaigns which led to the seige of Nāndivarman Pallavamalla in Nandigrama by the Tamil princes. The siege was raised by the victorious general of the Pallava kings Udayendra by name, who won several successes against his foes as narrated in the Udayendram plates of Pallavamalla." (The Pandyan Kingdom: page 57). His successor is the famous Parantaka Nedunjadayan (Jatilavarma Parantaka) the donor of both the Velvikudi and Srivaramangalam or Madras Museum plates. He reigned for nearly half a century, say from A.D. 765 to 815. He won a victory against the Pallavas very early in his reign on the south bank of the Kaveri and suppressed a local rising by Ay vēl with a firm hand. His chief-minister (Uttaramantri) was Marangari figuring as the executor (ānathi or ajnapti) of the Velvikudi grant. We have plenty of information about the military and other transactions of this king's reign in the available inscriptions, discussed at some length in this volume. There is no doubt, that he was among the most powerful of the Pandya monarchs of this age, and that under him the Pandyan kingdom extended far beyond Trichinopoly into the districts of Tanjore, Salem and Coimbatore.

From the inscriptions we also get useful information about the successors of Parantaka Nedunjadayan. We attach here to the genealogical tables from the copperplate grants of velvikudi as well as from the smaller and larger Sinnamanur plates. We also list the partieulars of Pandya and Āy copperplates. All these inscriptions have furnished relevant source-material for an account of the efirste mpir of the Pandyas up to A.D. 925. Then we find the

Pandya kingdom ceasing to exist as an independent unit becoming part of the Chola empire; under Rajendra, Chola princes were appointed as Viceroys, with powers to issue charters in their name; but the Pandyas never fully reconciled themselves to Chola rule in their country.

We may now describe at some length the two newly discovered copperplates of Dalavoipuram and Sivakasi.

## THE TWO NEWLY DISCOVERED GRANTS :

### 1. Dalavaipuram Plates of Viranarayana :

These copperplates were unearthed from lands belonging to the Medai Dalavai family of Tirunelveli, on the out skirts of Dalavaipuram village in Kovilpatti taluq. Parantaka Viranarayana is the donor of this grant. This king is the grandson of Parantaka Nedunjadayan the donor of Velvikudi grant, who ascended the throne in 768 A.D. The date of accession of Viranarayana's elder brother Varaguna Pandya has been settled by scholars as 863 A.D. From the present record it is known that Viranarayana was ruling jointly with his brother atleast for a period of fortyfive years.

The scripts, both grantha and vattelethu, employed here resemble very closely those of the Larger Sinnamanur plates of Rajasimha, the son and successor of the donor of this grant. The Tamil portion begins with the expression, 'ஓங்குதிரை வியன் பரப்பில்' which is also the opening line of the sangam classic known as *Madurai Khanchi* dedicated to the famous Pandyan monarch Nedunchezian of the Sangam period. The name of Nedunchezian is also mentioned in the Velvikudi plates as that of a remote ancestor of Parantaka Nedunjadayan.

In this grant Maran is mentioned as the son of Parantaka Nedunjadayan and as the father of Parantaka Viranarayana. His elder brother Varaguna Pandya, is introduced as, "our king"

"meditating on Lord Siva". His younger brother Viranarayana is introduced as a great warrior who gave learned Brahmans many villages as gifts and erected many temples: This grant was made in his 45th regnal year. The previous history of the gift village, as narrated here, goes back to the days of Kadungon who freed the Pandyan Kingdom from the tyranny of the Kalabhras.

The copperplate charters of the two villages gifted by Kadungon are stated to have been lost in the "troublous times", and subsequently some influential man is said to have appropriated one village for himself while converting the remaining lands to "*kudinilam*" (farming by tenants). At this stage the king Viranarayana removed the status of kudinilam and issued a fresh charter clubbing the two villages into one.

This grant is important in being the fifth copperplate charter of the early Pandyas so far known, the other four being:

1. The Velvikudi Plates. 2. The Madras Museum Plates, both of Parantaka Nedunjadayan, and 3&4 the two incomplete plates of Sinnamanur, the smaller one having been issued by the same king, and the Larger one by Rajasimha the son of Parantaka Viranarayana. The present charter furnishes new information about the Pandyas and incidentally of some of the contemporary powers.

The father of Parantaka Viranarayana married the daughter of Srikantha Chola of the *Poottappi* line, who is stated to have been a powerful monarch holding sway over the Tondainadu, the homeland of the Pallavas. This would have been possible only if there had been a break in the Pallava rule. No inscription of the Pallava ruler Dantivarman is found for a period of more than 25 years, and probably this gap has to accomodate the rule of Srikānta Chola in the early part of the 9th Century A.D., as a result of the battle of Kumbakonam which was fought by Srimara (the father of Viranaryana).

Varaguna 'meditating on Lord Siva' must have been the nominal king at the time when the present grant was issued. But

the actual ruler was the younger brother Viranarayana the donor of this grant. Manikkavachaka one of the four Saiva Samayacharyas before he became a saint was a minister under this Varaguna Pandya whom he has enlogised in his work *Thirukkovaiyar*. On this evidence scholars have settled the date of Manikkavachaka conclusively as belonging to the lattier part of the 9th Century A. D.

The exploits of Parantaka are descrihed in detail in the grant. The first victory is stated to be one gained by him over his elder brother in the battle at Sennilam. Another victory is that over Viratunga (the heroic Tunga) whom Viranarayana is said to have bridled as a horse. This Tunga may be identified with Nripatunga the Rashtarakuta king. Thus we discover new material in the Dalavaipuram plates for the study and reconstruction of the Pandyan history.

## 2. Sivakasi Plates of Virapandya :

A set of copperplates containing an inscription of Virapandya was found in the possession of Sri Oragante Kanakayya Naidu of Sivakasi. The grant has since been purchased for the Government Museum, Madras. This plate also reveals some interesting material which has to be analysed and utilized for the study of the Pandyan kings. The set consists of five plates of which the third and the fifth are broken, The third plate is broken into two, both the pieces being available. The fifth and the last plate is in five pieces of which one is missing. A corner of the second plate is also in a broken condition, resulting in the loss of one or two letters at the end of a line.

This grant mentions a Pandya king known as Tivirakopa. From him was born Srivallabha an expert in polity and one of prowess. To Srivallabha was born Manakulachala ; his son was Manabharana who married the daughter of a king of Kerala known as Ravi, the issue of this union being Virapandya. The elder brother of Virapandya is Sundarapandya described as the 'refuge of the learned'. Virapandya himself is described in the grant as

'governing the earth with his powerful arms and with a crowd of kings bowing at his feet'.

This grant was made in the third regnal year of Virapandya as a *brahmadeya* gift. From the contents of both the Sanskrit and the Tamil portions of the grant, the following genealogical table may be prepared :




The last three names of the above genealogy Manabharana, Sundarapandya and Virapandya are mentioned in the *meykkirti* of the Chola monarch Rajadhiraja I. Manabharana was killed in the battle-field and Virapandya was ordered to be trampled upon by the royal elephant, while Sundarapandya had to escape, with 'his crown dropping down, hair dishevelled and feet tired'. According to this meykkirti, the donor of this grant becomes a contemporary of the Chola emperor Rajendra Chola I in the middle of the 11th century A. D.

Prof. K. A. Nilakanta Sastri accepts this identification, while Sri T. N. Subramanian expresses the view that this grant cannot, palaeographically, be assigned to such a late date. The latter observes that these three names are mentioned in some of the earlier Pandyan inscription. An inscription from Tiruppudaimarudur (Tirunelveli district) of the reign of Rājasimha, the donor of the Larger Sinnamanur plates, mentions a servant of Virapandya who may be identified with 'சோழன் தலைகொண்ட' Virapandya

(the Pandya who beheaded the Chola). Another inscription from Ambasamudram (Tirunelveli district) mentions Manabharana as the surname of its donor. Another inscription from the same place dated in the reign of Cholan-talaikonda-virapandya testifies according to Sri T. N. Subramanyan to the existence of the Pandya princes named Manabharana Vikrama Pandya and Sundara Pandya, as evidenced by the names of certain officers (figuring therein) designated after these princes. From a study of such records Sri T. N. Subramanian identifies the donor of the present grant with Virapandya who 'took the head' (தலைகொண்ட) of the Chola.

T. N. S. makes out the geneological and chronological position of the Pandyas of this period as follows :




From the Dalavaipuram plates, it can be inferred that Varaguna und his brother Viranarayana ruled jointly for not less than 45 years, their father and grandfather having ruled earlier for a period of about 95 years, A close examination of the events of the times as recorded in the plates would necessitate, according to Sri T. N. Subramanian, 'framing a revised chronology of the Pandyas in the period pushing back the date of accession of this Virapandya, atleast, by about half a eentury.'

We do not concur in this view, but hold that the donor of this grant can be none other than the Virapandya who is mentioned in

the Chola records as a contemporary of Rajendra Chola I in the middle of the 11th Century A. D. The view of Sri T. N. Subramanian fixing the date of accession of this Virapandya as 946 A.D. and his identification of this Virapandya with his name sake who took the head of the Chola and whom Aditya II Karikala is said to have subsequently captured and killed, need further evidence for their support. At present we can only set it down as a personal hypothesis of the scholar,

---

# HUZUR OFFICE PLATES AND THE AY KINGS

*Ay* originally seems to be a dynastic name borne by the rulers of the line as a prefix to their personal names like Ay Andiran. The antiquity and importance of the Ay kings are vouched for by separate mention in the statement of the Greek Geographer Ptolemy that one 'Aioi' (ஆயி) was ruling in the dominion which included Cape Comorin (Kanyakumari). These rulers meet us in the early Sangam poems as independent Sovereigns in the region round about the *Pothia* hill which is the Southernmost section of the Western Ghats. This region is described by a Sangam poet as fertile teeming with elephants, the ruler presenting these aniamls liberally to his favourites, After this dominion was annexed to the kingdom of Madurai the Ay rulers sank to the level of Pandya Feudataries.

The earliest known Ay king is *Ay Andiran* whose generosity forms the theme of a number of early poems. Though he won a great victory in a battle against some ruler of kongu, he was essentially a man of peace and came to be known as one of the seven great philonthropists of ancient times.

We find the early *Ays* holding a special position among the *velirs* (வேளிர்) or Vel (வேள்) chieftains ruling in several parts of the Tamil Country. There are legends of their connection with Lord Krishna and the sage Agastya. In Kerala which formed part of the ancient Tamil Nadu, there were some later kings ruling over the region known as *Venadu* (வேணாடு) or Velnadu—literally, the abode of the Vels. They claimed to belong to *Yadhukula* the family of Krishna and his Yadhavas, and also traced their descent from the Ay kings of the eighth century, who in turn linked their descent to Ay Andiran of the Sangam Literature.

T. A. Gopinatha Rao the great pioneer epigraphist and scholar in the first volume of Travancore Archaeological Series edited by

him, has discussed the subject matter of some inscriptions of *Kokkarunandakkan* (கோக்கருநந்தடக்கன்) and the Huzur office Plate of Vikramaditya-Varaguna ; the latter has strong suggestion to us of this Ay ruler's connection with the Pandyas of Madurai. There he has Stressed the fact that we get a peep into the cultural life of the country and that Ko-kkarunandakkan, according to the inscription, established a *Sālai* (corresponding to our boarding School) in which arrangements were made to feed ninetyfive *Sattars* (சட்டர்) devoted to higher studies. The rules of conduct were particularly laid down for the mode in which these Sattars had to proceed with their studies. This record is dated in the *Kalī* era corresponding to the fifteenth day of the ninth regnal year of the king, this day falling in the year 864-5 A. D. The date of accession of this king must, therefore, be 855-6 A. D. He belongs to the line of the Ays claiming to be the Yadhavas, Āyar (ஆயர்) in Tamil. His kingdom was in the hilly regions marking the boundary line between Kerala and the Pandya kingdom. This part of the country was known to the ancient Tamil Literature as the Ay dominion.

The discovery of the Huzur office plates, the stone inscription at Kalugumalai of the reign of the Pandya Maran-Sadaiyan and the Paliyam plates have given us some names of the Ay line of rulers who with the Pandyas played a conspicuous part in the Social life and cultural developments of the southern part of the Tamil country prior to 1000 A. D.

## GENEALOGICAL TABLES FROM

(From VELVIKUDI PLATES)

1 Kadungon

|

2 Maravarman
Avanisulamani

|

3 Seliyan Sendan

|

4 Arikesarin
Maravarman

|

5 Kochchadaiyan

|

6 Sri Maran
Raja Simhan

|

7 Jatila Parantakan
(Donor of Velvikudi grant)

(From Smaller
SINNAMANUR PLATES)

Jatilavarman

Arikesarin
Maravarman

(SRIVARAMANGALAM PLATES)

Maravarman

|

Nedunjadayan

(From DALAVAIPURAM Plates)

Parantaka Kochchadayan

|

Srivallabhan

|

Varagunan II | Parantakan Viranarayanan (Donor of Dalavaipuram Grant)

## THE PANDYA COPPER-PLATE GRANTS






## STATEMENT SHOWING THE PARTICULARS

| S.No | Name of the grant | By whom granted | The plates found at | Plates Preserved at |
|---|---|---|---|---|
| 1 | Velvikudi | Nedunjadayan | not-known | British Museum, London |
| 2 | Srivaramangalam | do | do | Madras Museum |
| 3 | Smaller Sinnamanur | Name missing | Sinnamanur Periyakulam Taluk, Madura Dt. | Central Archaeological Department, Mysore |
| 4 | Dalavaipuram | Paranthaka Veeranarayanan | Dalavaipuram Kovilpatti Tq. Tinnevelly Dt. | Sri T. N. Subramanian, Madras. |
| 5 | Larger Sinnamanur | Rajasimha | Sinnamanur Periyakluam Tq. Madura Dt. | Central Archeological Dept. Mysore |
| 6 | Sivakasi | Veerapandyan | Sivakasi, Tinnevelly Dt. | Madras Museum |
| 7 | Parthivasekharapuram | Karunandadakkan | not known | Travancore Archaeological Dept. |
| 8 | Tirupparappu | do | do | do |
| 9 | Paliem | do | do | do |
| 10 | Tirunandikkarai | Vikramaditya varaguna | do | do |

# OF PANDYA AND ĀY COPPER PLATES

| Details of Publication | No. of Plates | Script used | Condition of Plates | Remarks. |
|---|---|---|---|---|
| (1) Sentha-mizh Vol. 20 (2) Epigraphia Indica Vol. XVII of 1923 | 10 | Vatte-luttu | Complete | |
| The Indian Antiquary Vol. xxii of 1893 | 7 | do | do | |
| South Indian Inscription Vol. III. pt. IV. 1927 | 3 | do | Some plates are missing | |
| Published for the first time by this Ācademy | 7 | do | Complete | |
| S.I.I. Vol. III. part IV. 1927 | 7 | do | First and last plates are missing | |
| Published for the first time by this Academy | 5 | do | Second and fifth plates are broken | |
| Travancore Archaeological Series Vol. I. | 5 | Pallava Tamil | Incomplete | |
| do | 2 | do | do | |
| do | 2 | do | do | |
| do | 2 | do | do | |

## நன்றி

"பாண்டியர் செப்பேடுகள் பத்து" என்னும் இந்நூலில் வெளியிடப்பட்டுள்ள செப்பேடுகளில் பல எபிகிராபியா இண்டிகா, இந்தியன் ஆண்டிக்குவரி, தென்னிந்தியச் சாசனங்கள், திருவாங்கூர் ஆர்க்கியாலஜி சாசனங்கள், "செந்தமிழ்" முதலிய வெளியீடுகளில் ஏற்கெனவே வெளிவந்துள்ளவை. அந்த வெளியீடுகளை எல்லாம் நாங்கள் நன்ருகப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறேம். அந்த வெளியீடுகளின் உரிமையாளர்களாகிய பாரத அரசாங்கத்துப் பழம்பொருள் ஆராய்ச்சி இலாகாவைச் சேர்ந்த சாசனப் பகுதியினர் எல்லோருக்கும் தமிழ் வரலாற்றுக் கழகத்தின் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேம். அவ்வாறே மதுரைத் தமிழ்ச் சங்கத்தாருக்கும் எங்கள் நன்றி உரியதாகும்.

புதிதாகக் கிடைத்துள்ள தளவாய்புரச் செப்பேடுகளையும் சிவகாசிச் செப்பேடுகளையும் இந்நூலில் அச்சிடுவதற்கும் அவ்வேடுகளின் மசிப்படங்களை உபயோகித்துக் கொள்வதற்கும் எங்களுக்கு உதவிய திரு. தி. நா. சுப்பிரமணியன் அவர்களுக்கு எங்கள் கழகத்தின் நன்றி யுரியது.

—பதிப்பாசிரியர்

# குறியீடுகளின் விளக்கம்

இந்நூலில் வெளிவந்துள்ள சாசனங்களின் மூலபாடங்களில் பின்வரும் குறியீடுகள் கையாளப் பெற்றுள்ளன.

( ) இவ்விரு நகக்குறிகளுக்குள் காணும் எழுத்துகள் தவருகவோ அதிகப்படியாகவோ உள்ளவை என்று கருதப்படுபவை.

[ ] இவ்விருதலைப் பகரக் குறிகளுக்குள் காணும் எழுத்துகள் மூலபாடத்தில் சிதைந்து அல்லது தவருன வடிவத்தில் எழுதப்பட்டுள்ளவை. எனினும் அவ்வாறே வாசிக்கப்படவேண்டும் என்று கருதப்படுபவை.

[ * ] இவ்விதம் இருதலைப் பகரத்திற்குள் உடுக்குறி இடப்பட்டுக் காணும் எழுத்துகள் மூலத்தில் இல்லாதவை. எனினும் அவ்விடத்தில் இருக்க வேண்டியவை எனக் கருதப்பட்டவை.

.... சாசன வாசகத்தின் இடையே இவ்வாறு புள்ளியிடப்பட்டிருப்பது, எழுத்துகள் வாசிக்க முடியாமல் சிதைந்துபோன இடத்தைக் குறிக்கிறது. ஓர் எழுத்துக்கு ஒரு புள்ளி அமைப்பது மரபு. ஆனல், இந்நூலில் அந்த மரபுப்படி யில்லாமல், சில எழுத்துகள் மறைந்துள்ளன என்பதைக் காட்ட உபயோகப்படுத்தப்பட்டுள்ளன.

வேள்விக்குடி செப்பேடு, சீவரமங்கலச் செப்பேடுகளை முன்பு அச்சிட்ட அரசாங்க இலாகாவைச் சேர்ந்தவர் அச்செப்பேட்டு வாசகங்களைத் தமிழ் எழுத்தில் அச்சிடாமல் ஆங்கில எழுத்தினுல் அச்சுப்போட்டு வாசகங்களை வெளியிட்டனர். அதனுல் அவைகளைப் படிக்க முடியாமல் பெருந்துன்பப்பட்டனர். அந்தச் செப்பேட்டு வாசகங்கள் இந்த நூலில் தமிழ் எழுத்திலேயே அச்சிடப்பட்டுள்ளன. இது இந்நூலின் ஒரு சிறப்பாகும்.

எகர ஒகர மெய் புள்ளி பெறும் என்பது முற்காலத்துத் தமிழ்வரி வடிவ எழுத்துகளின் இலக்கணம். அந்த இலக்கணப்படி அக்காலத்து எகர ஒகர உயிர் எழுத்துக் குறில்களும் உயிர்-மெய்க் குறில்களும் புள்ளியிடப்பட்டு எழுத வேண்டும். ஆனல் நடைமுறையில் பெரும்பாலும் புள்ளியிடப் பெறுவது இல்லை. கல்வெட்டுச் சாசனங்களிலும் செப்பேட்டுச் சாசனங்களிலும் கூட இந்த இலக்கணம் பெரும்பாலும் கையாளப்படவில்லை. முன்பு சாசனங்களை வெளியிட்டவர்கள் அக்கால இலக்கணச் சூத்திரத்தை யறியாமல் தவருகவே அச்சிட்டுள்ளனர். உதாரணமாக திருவெதி, நால்வெலி, பெரால், உடும்பொடி கொத்திரம் என்றெல்லாம் அச்சிட்டிருக்கிருர்கள். இவை முறையே திருவேதி, நால்வேலி, பேரால், உடும்போடி, தோத்திரம் என்று அச்சிடப்படவேண்டும். பழைய இலக்கிய சூத்திரத்தை அறியாமல், இவ்வாறு பிழைப்பட அச்சிட்டுள்ளனர். இந்த "பாண்டியர் செப்பேடுகள் பத்து" என்னும் நூலில் அவ்விதத் தவறுகள் நேராமல் சாசனங்களை வெளியிட்டுள்ளோம். இது இந்நூலின் மற்றொரு வகை சிறப்பாகும்.

# முன்னுரை

---

பாண்டியர் வரலாறு, பல்லவர் சோழர் வரலாறுகளைப்போல் வரலாற்றுத்துறை ஆய்வார்களையோ மாணவர்களையோ இன்னும் கவர்ந்துவிடவில்லை. இதற்கு இரண்டு காரணங்களைக் குறிப்பிடலாம். ஒன்று, காஞ்சிப் பல்லவர்கள் தஞ்சைச் சோழர்கள் ஆகிய இரு பேரரச வம்சங்களின் வரலாற்றுச் செய்திகள் கிடைத்திருப்பதுபோல் அவ்வளவு விவரமாகவும் விரிவாகவும் பாண்டிய வம்சச் செய்திகள் கிடைக்கவில்லை. இந்த முதற்காரணம் முக்கிய காரணமாகும். மற்றது, பாண்டிய நாடு தெற்குக் கோடியில் ஒதுங்கியிருப்பதால் பாரத நாட்டின் வரலாற்றுப் போக்கைக் கணிசமான அளவிற்குப் பாதித்துவிட வில்லை என்ற ஒரு கொள்கையாகும். பாண்டிய நாடு என்ற ஒன்று இல்லாதது போலவே தென்னிந்திய ஆராய்ச்சி நடைபெற்று வந்த காலமும் உண்டு.

உண்மையில், பழைய தென்னிந்திய வரலாற்றை ஒரு முழுக் காட்சியாகக் காண்பதற்கும் இந்திய வரலாற்றின் இன்றியமையாத பகுதியாகக் கண்டு கொள்வதற்கும், சங்க காலத்திற்கு முன்பு தொடங்கி கி. பி. பதினேழாம் நூற்றுண்டின் தொடக்கம் வரையில் நீண்டு தொடர்ந்து வந்திருந்த பாண்டியர் ஆட்சி வரலாறும் இயன்றவரை ஆய்ந்து அறிந்து கொள்ளத் தக்கதுதான். (தென்னிந்தியப் பழைய வரலாறு கி. பி. பதினேழாம் நூற்றுண்டின் இடைப்பகுதியில் விஜயநகரப் பேரரசின் வீழ்ச்சியுடன் முடிவுறுவதையும், ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனியின் தோற்றத்துடன் ஒரு புதிய யுகம் பிறந்து விடுவதையும் காண்கிறோம்.) இந்தப் பாண்டிய வரலாற்றில் கி. பி. ஏழாம் நூற்றுண்டிலிருந்து பத்தாம் நூற்றுண்டு வரை நின்று நிலவிய பாண்டிய முதற்பேரரசின் சித்திரம், சிறப்பாய் மதிக்கத்தக்க ஒரு வரலாற்றுப் பகுதியாகும். இந்த வரலாற்றுச் சித்திரத்தைத் தெளிவாகத் தெரிந்து கொள்வதற்கு உரிய முழுவாய்ப்பு இன்னும் நமக்குக் கிடைத்திருப்பதாகச் சொல்ல முடியாது. எனினும், இதுவரை வெளியிடப் பெற்றுள்ள கல்வெட்டு, செப்பேட்டுச் சாசனங்களிலிருந்து கண்டுபிடித்து அறிந்து கொள்ளத்தக்க செய்திகளையும் பிறவற்றையும் தொகுத்துப் பார்ப்பது அவசியமாகும்.

1929 ஆம் ஆண்டில் வரலாற்றுப் பேராசிரியர் கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார் 'பாண்டிய இராச்சியம்' என்ற நூலை ஆங்கிலத்தில் வெளியிட்டார். தென்னிந்திய வரலாற்றுத் துறையில் அது ஒரு 'பெருஞ்சாதனை. முப்பத்தேழு ஆண்டுகளுக்கு முன்பு வரை ஆய்ந்து அறிந்திருந்த பாண்டியர் செய்திகளை வரலாற்றுக் கண்கொண்டு உற்று நோக்கியும் ஓரளவு ஊடுருவிப் பார்த்தும், மேலும் ஆராய்ச்சிகளைத் தூண்டிவிடும் போக்கில் பேராசியர் தம் நூலை உருவாக்கியுள்ளார்.

பாண்டியர் வரலாற்றின் சில அம்சங்களைப்பற்றிக் கருத்து வேறுபாடுகள் இருப்பதில் வியப்பில்லை. முடிவான கொள்கையோ கருத்தோ இன்னும் உருவாகாத நிலையிலுள்ள பகுதிகளும் இருக்கின்றன. இந்த நிலையில் கே ஏ. நீலகண்ட சாஸ்திரியாரின் கருத்துக்களையும் குறிப்புகளையும் பெரும்பாலும் ஒட்டியும் சில இடங்களில் வெட்டியும் ஆய்ந்து வரலாற்றுப் புலவர் சிலர் எழுதியிருப்பனவும் உண்டு. இத்தகைய முயற்சிகளில் குறிப்பிடத்தக்கது, ஆராய்ச்சி அறிஞர் திரு. டி. வி. சதாசிவ பண்டாரத்தார் தமது இடையருப் பேருழைப்பாலும் கூர்மையும் நேர்மையும் பொருந்திய ஆராய்ச்சித் திறனும் தமிழில் வெளியிட்டிருக்கும் 'பாண்டியர் வரலாறு' ஆகும். இதன் முதற் பதிப்பு 1940-லும் மூன்ரும் பதிப்பு 1956-லும் வெளிவந்தன.

இத்தகைய நன் முயற்சிகளின் பயனுகப் பாண்டியர் வரலாறு பற்றிய முடிந்த முடிவான சரித்திர ஓவியம் கிடைத்துவிடவில்லை யெனினும், வரிச்சித்திரம் ஒன்று கிடைத்திருக்கிறது. இது காலப்போக்கில் மேன் மேலும் ஆராய்ச்சி பெருகப் பெருகத் தனக்கு உரிய முழு உருவமும் பெற வேண்டும். இந்தக் குறிக்கோள் இனிது நிறை வெய்துவதற்கு ஒரு முன்னேடியாகவும் ஆதார நூலாகவும் வெளி வருகிறது 'பாண்டியர் செப்பேடுகள்' என்னும் இந்த வெளியீடு.

இது தமிழ் வரலாற்றுக் கழகத்தின் இரண்டாவது வெளியீடு. பத்துச் செப்பேட்டுச் சாசனங்களை ஒன்ருகச் சேர்த்து முதன் முதலாக இந்த நூல் தமிழ் மக்களுக்கு வெளியிடப்படுகிறது. இப்பாண்டியர்-செப்பேட்டுச் சாசனங்களெல்லாம் வட்டெழுத்தில் வரையப்பட்டுள்ளன [1]

1 சாசன இலாகாவால் அச்சிடப்பட்ட வேள்விக்குடி, சீவரமங்கலம், செப்பேட்டுச் சாசனங்கள் உள்ளது உள்ளபடியே தமிழ் எழுத்திலும் சமஸ்கிருதத்திலும அச்சிடப்படாமல் ஆங்கில எழுத்தில் அச்சிடப்பட்டிருப்பதால் அவை படிப்பதற்குச் சிரமமாக உள்ளன, எழுத்துப் பெயர்வு என்ற Transliteration முறையில் அமைந்தவை அல்ல.

இவற்றில், தளவாய்புரம் செப்பேடுகளும் சிவகாசிச் செப்பேடுகளும் புதிதாகக் கிடைத்தவை; இவை முதல் முதலாக இத்தமிழ் வெளியீட்டில் இடம் பெறுகின்றன. மேலும் அங்கும் இங்குமாக அச்சிடப்பட்டுச் சிதறிக் கிடந்தபாண்டியர் செப்பேடுகளெல்லாம் இந்த வெளியீட்டில் ஒருங்கே தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

ஒவ்வொரு செப்பேட்டுச் சாசனமும் வாசகருக்கு முன் கூட்டியே அது குறிக்கும் வரலாற்றுச் செய்திகளுடனும், அது கிடைத்த விவரம் முதலான குறிப்புகளுடனும் அறிமுகம் செய்யப்படுகிறது. அதன் பின், செப்பேடுகளின் வாசகமும் பொருள் விளக்கமும் நன்கு சோதிக்கப் பெற்றுக் கொடுக்கப்பட்டுள்ளன. வாசகத்தின் வடமொழிப் பகுதி மொழி பெயர்ப்புடனும், தமிழ்ப் பகுதி மொழிப்புரையுடனும் தரப்பட்டுள்ளன. தமிழ்ப் பகுதி அதற்குரிய செய்யுள் வடிவிலும் இயன்றவரை அமைத்துக்காட்டப் பெற்றிருக்கிறது. வட்டெழுத்தைத் தற்காலத்தமிழ் எழுத்திலும் வடமொழிக் கிரந்த எழுத்தைத் தேவநாகரி எழுத்திலும் அச்சிட்டிருக்கிறோம். கல் வெட்டுகள், பழந்தமிழ் நூல்கள், வேறு ஆராய்ச்சி வகைகளால் கிடைத்திருக்கும் செய்திகள் ஆகியவற்றின் சான்றுகளையும் ஆதாரமாகக்கொண்டு ஆராய்ச்சித் துறையில் புதியனவாகக்கண்ட கருத்துகளையும் தழுவி இந்நூல் தயாரிக்கப் பெற்றுள்ளது.

பல்லவர் சோழர்களைப் பற்றி நாம் விவரமாக அறிந்திருக்கும் அந்த வரலாற்று நிலை ஒரு புறம், 'கல் வெட்டுகளும் அதிகம் கிடைக்கவில்லை; கிடைத்த சாசனங்களால் வரலாற்றுத் துறை துலங்கவில்லை' என்று சொல்லத்தக்க சேரமன்னர் நிலை ஒருபுறம், இந்த இரண்டுக்கும் இடைப்பட்ட நிலையில் உள்ளது பாண்டிய மன்னர்களின் வரலாற்று நிலை. சற்றுப் பிற்காலத்தனவாகப் பாண்டிய சாசனங்கள் அதிகம் கிடைத்துள்ளன. அந்தச் சாசனங்களிலே வேள்விகுடிச் செப்பேடு தொடக்கமான பாண்டியர் செப்பேடுகள், பாண்டியரைப் பற்றிய செய்திகளைப் பல கோணங்களிலிருந்து நாம் பார்த்துக்கொள்ள உதவுகின்றன.

பாண்டியர் வரலாற்றை ஆராய்ந்து எழுதுவதற்கு இச்செப்பேட்டுச் செய்திகளுடன் கல் வெட்டுச் சாசனங்கள் வாயிலாகக் கிடைக்கும் செய்திகளும் சிறப்பாகப் பயன்படும். பாண்டியரின் கல் வெட்டுச் சாசனங்கள் இக்கழகத்தின் மூன்றும் வெளியீடாக வெளிவரும்.

சாசன ஆதாரங்களுடன் பண்டைத் தமிழ் இலக்கியச் சான்றுகளையும் தக்க முறையில் ஆய்ந்து உண்மைகாணவேண்டும். பிற ஆராய்ச்சி நூல்களையும் பயன்படுத்திக் கொள்ளலாம்.

ஏற்கெனவே அரசாங்கச் சாசன இலாகா வெளியிட்டிருக்கிற வேள்விக் குடிச் செப்பேடுகள், சீவரமங்கலச் செப்பேடுகள், சின்ன மனூர்ச் செப்பேடுகள் (பெரிதும் சிறிதும்), ஆகியவற்றையும் பயன் படுத்திக்கொண்டு புதியனவாகக் கிடைத்துள்ள தளவாய் புரத்துச் செப்பேடுகளும், சிவகாசிச் செப்பேடுகளும் ஆகிய இரண்டு சாசனங் களையும் இந்நூலில் சேர்த்திருக்கிறோம்.

மேலும் இந்தச் செப்பேட்டுச் சாசனங்களின் படங்களையும் இந்நூலில் சேர்த்திருக்கிறோம். இது, அச்சிடப்பட்டுள்ள சாசனங்களைச் செப்பேட்டு சாசனங்களுடன் ஒத்திட்டுப் பார்ப்போருக்கு பெரிய உதவி யாக இருக்கும்.

பாண்டிய அரசருக்குக் கீழடங்கி ஆய் நாட்டை அரசாண்டிருந்த ஆய் அரசர்களின் செப்பேட்டுகளும் இதனுடன் சேர்க்கப்பட்டுள்ளன. இவை பாண்டியர் வரலாற்றை அறிவதற்குப் பெரிதும் உதவுகின்றன.

இந்த வெளியீட்டை ஆராய்ச்சி யுலகம் வரவேற்றுப் பயன் படுத் திக்கொள்ளும் என்றும், இன்றைய வளரும் தமிழுக்கு இதுவும் ஒரு பணி யாக மதிக்கப்படு மென்றும் நம்புகிறோம்.

இந்த வெளியீட்டை எழுதி முடிப்பதற்குத் தக்கமுறையில் யோசனை கூறியும் வழி வகுத்தும் கொடுத்துதவிய ஆலோசனைக் குழுவுக்கு இக் கழகத்தின் சார்பில் நன்றி செலுத்துகிறோம்.

இந்நூலை அச்சிற் பதிப்பித்த மித்திரன் "அச்சகத்தாருக்கும்" ஹிந்த் அச்சகத்தாருக்கும் எங்கள் நன்றி உரியது.

இச் செப்பேடுகளுக்குச் சிறந்த முறையில் உரிய காலத்தே பிளாக்குகள் செய்து உதவிய கிளின் அண்டு பெய்ரல் (Klein and Peyerl) கம்பெனியார்க்கு எங்கள் நன்றி உரியதாகும்.

# பாண்டியரும் செப்பேடுகளும்

## (வரலாற்றுக் கண்ணோட்டம்)

## I. சங்ககாலமும் பின்னும்

நம் தமிழ் நாட்டிலே செந்தமிழ்நாடு என்று சிறப்பித்துப் பேசப் பட்டது பாண்டிநாடு, 'தண்ணார் தமிழ் அளிக்கும் தண்பாண்டிநாடு' என்பது மணிவாசகர் வாக்கு. 'முத்தும் முத்தமிழும் கொழித்த நாடு' எனக் கம்பன் முதலான புலவர்கள் பாண்டி நாட்டைப் பாராட்டுகின் றனர். இந்நாட்டை ஆண்டுவந்த பாண்டியர் குலத்தை 'ஆதி இன்னது என்று ஓதுதற்கு அரிய வழுதியின் தொழு குலம்' என்று திராவிட ஆராய்ச்சித் தந்தையாக மதிக்கப்படும் மனோன்மணீய ஆசிரியர் சுந்தரம் பிள்ளை கூறியுள்ளார். 'பாண்டியர்' என்ற சொல் பண்டு என்ற சொல்லுடன் தொடர்புடையது; இதைப் 'பண்டையோர்' என்பதன் மரூஉ முடிபு எனலாம். பாண்டிய அரசு சங்க காலத்துக்கு முன்பே தொடங்கி, கி. பி. 17-ம் நூற்றாண்டின் தொடக்கம் வரையில் நிலவியது.

தமிழக வரலாற்றுப் பாதையில், பண்டைப் பழந் தமிழர்களின் வாழ்க்கைக் குறிப்புகளை நமக்கு நன்கு புலப்படுத்தும் சங்க இலக்கியச் சான்றுகள் நிச்சயமான ஒரு மைல்-கல்லாகும்: இதைப் பலரும் இன்று அறிந்திருக்கிறார்கள். சங்க காலம் குறித்து வாதங்களும் எதிர் வாதங் களும் ஆராய்ச்சியாளரிடையே நிகழ்ந்ததுண்டு. நமக்குக் கிடைத் திருக்கும் பாட்டும் தொகையுமாகிய பழந் தமிழ் நூல்கள் கி. பி. முதல் மூன்று அல்லது நான்கு நூற்றாண்டுகளுக்கு உரியன என்பது வரலாற் றுப் பேராசிரியர் க அ. நீலகண்ட சாஸ்திரியாரின் கருத்து. [1]செம்மை யாக ஆராய்ந்து முடிவு செய்யவேண்டிய விஷயம் இது. பாண்டியர்கள் தங்கள் தலைநகரான மதுரையில் தமிழ்ச்சங்கம் நிறுவி யிருந்தனர் என்பதற்குப் பிற்காலச் சாசனச் சான்றுகளும் உண்டு.

தமிழ் மொழிச் சாசனங்கள்—கல்லிலும் செம்பிலும் பொறிக்கப் பட்டவை, கி. பி. ஆறும் நூற்றாண்டின் நடுப்பகுதியிலிருந்து தொடர்ச்சி யாகக் கிடைக்கின்றன. அதற்கு முன்னும் பிராமி எழுத்தில் சில கல்லெழுத்துச்சாசனங்கள் கிடைத்திருக்கின்றன. அவை கிறிஸ்து-அப் தத்தின் தொடக்கத்திற்கு முன்னும் பின்னுமான நூற்றாண்டுகளுக்கு

[1] A History of south India 110

உரியவை; ஒன்றிரண்டு வரிகளில் அமைந்த சிறிய சொற்ருெடர்களா யினும் சில பழைய வரலாற்றுக் குறிப்புகளை உடையன என்பது தெளிவு. இவை இன்னும் ஐயம் அறத்தெளிவாக ஆராயப்படவில்லை. இச்சாச னங்களையும், தொடர்ச்சியாகக் கிடைத்திருக்கும் மற்றச் சாசனங்களை யும் ஆராய்வது, பழைய வரலாற்றைப் பல துறைகளிலும் ஆராய்ந்து தேர்ந்து எழுதுவதற்கு இன்றியமையாதது. இலக்கியச் சான்றுகளைத் தக்க முறையில் பயன்படுத்திக் கொள்வதற்கும் சாசனங்கள் துணைபுரி கின்றன.

உதாரணமாக, கடைச் சங்க காலத்துப் பாண்டியருள் மிகச் சிறந்தவனுன தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனைச் சங்க இலக்கிய வாயிலாகக் காண்பது போல் செப்பேடுகள் வாயிலாக வும் காண்கிருேம், இவனது காலம் கி. பி. 2-ஆம் நூற்ருண்டு என்பர். ஏறத்தாழ கி. பி. 210-ஆம் ஆண்டை ஒட்டி அமைந்திருந்ததாக ஆசி ரியர் நீலகண்ட சாஸ்திரியார் கூறுவர்.[1]

இது நன்கு ஆராய்ந்து முடிவு செய்ய வேண்டிய விஷயம். நக் கீரர், மாங்குடி மருதனுர் என்ற இருபெருஞ் சங்கப் புலவர்கள் இவனைப் பாடியிருக்கின்றனர்; இவனைப் பற்றி வேறு சில சங்ககாலப் பாடல்களும் உண்டு. தான் ஒருவனுக நின்று பேரரசர் இருவரை—'தன்னெக்கும் இருவேந்தரை'—வென்றவன் இவன் என்பது செப்பேட்டு வாசகம். முடி வேந்தர் குடியினரான சோழன் ஒருவனும் சேரன் ஒருவனும் முன்னணி யில் நிற்கக் குறுநிலத்தரசர் ஐவரும் உடன் எழுந்து பாண்டி நாட்டில் படை யெடுத்தனர்; நெடுஞ்செழியன் ஆலங்கானப் போர்க்களத்தில் பெருவெற்றி பெற்ருன். இப்போரின் விவரங்களோடு, இவன் காலத்து மதுரைமா நகர், தாமரை மலர்ந்திருப்பது போன்ற வடிவில் அமைந்து, பல்வகைத் தொழிலிலும் சிறப்புற்று விளங்கியது. இந்த அரசன், வீரர் புலவர் பாணர் சூழ வீற்றிருந்து முத்தமிழையும் வளர்த்தவன்—என்பது போன்ற செய்திகளையும் சங்கப் புலவர் வாயிலாகத் தெரிந்து கொள் கிருேம்.

நெடியோன் என்ற வடிம்பலம்ப நின்ற பாண்டியனும்,' பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியும் தலையானங்காலத்துச் செருவென்ற நெடுஞ் செழியனுக்கு முற்பட்டவராவர். சின்னமனூர்ச் செப்பேடுகளிலும் வேள்விக்குடிச் செப்பேடுகளிலும் வடிம்பலம்ப நின்ற பாண்டியனைப்

1 A History of south India 121

பற்றிய மூன்றுகதைகள் குறிக்கப்படுகின்றன : இவை பாண்டியரது தொன்மை மாட்சியை நினைவூட்டுகின்றன. புறநானூற்றின் ஒன்பதாம் பாட்டிலிருந்து, இவன் பஃறுளி என்றதோர் ஆற்றை வெட்டுவித்தான் என்றும் கடல்தெய்வத்திற்கு விழா எடுத்தான் என்றும் தெரியவருகிறது.

சின்னமனூர்ச் செப்பேடுகளில் பாண்டியரின் முன்னோருள் ஒருவன் ஆயிரம் வேள்விகள் இயற்றியதாக ஒரு செய்தி கிடைக்கிறது. இவன் வடிம்பலம்ப நின்ற பாண்டியனின் வழி வந்தவன் எனலாம். இப்பாண்டியனை வேள்விக்குடிச் செப்பேடுகள் 'பல்யாக முதுகுடுமிப் பெருவழுதியெனும் பாண்டியாதிராசன்' எனக் குறிப்பிடுகிறது. சங்க இலக்கியமாகிய மதுரைக் காஞ்சி இம்மன்னனைப் 'பல்சாலை முதுகுடுமி' என்கிறது. சாலை, இங்கே வேள்விச்சாலை. இவனது இயற்பெயர் குடுமி அல்லது முதுகுடுமி என்று ஊகிக்கலாம். நெட்டிமையார் முதலான பல சான்றோர்களை இவன் ஆதரித்தான்; புலவர்களுக்கும் பாணர்களுக்கும் பொன்னும் பொருளும் வழங்கினான். இவன் பல்வேறு வகையான வேள்விகளைச் செய்தான் என்பது இவனது பெயரோடு இசைந்து அமைந்திருக்கும் அடைமொழியிலிருந்தே தெரிகிறது.

முதுகுடுமிப்பெருவழுதி ஆட்சிபுரிந்து வருகையில், தனது நாட்டுப் பாகனூர்க் கூற்றத்தில் (இப்பொழுதுள்ள சோழவந்தான் பகுதியில்) வையை ஆற்றங்கரையில் சோலைகள் சூழ்ந்த ஓர் இடத்தில் வேள்வியொன்றைச் செய்வித்தான். வேள்விக்குடிச் செப்பேடுகளில் இப்பிரதேசம் 'மலர்ச்சோலைப் பாகனூர்க் கூற்றம்' என்றும் 'மாமலர்ச்சோலை நளிர்சினைமிசை வண்டலம்பும் பாகனூர்க் கூற்றம்' என்றும் கூறப்படுகிறது. அந்த நாளில் நற்கொற்றன் என்னும் வேதியன் கொற்கையில் வேதவேள்வியில் சிறந்தவனாகப் பேர் பெற்றிருந்தான் அவனைக் கொற்கை கிழான் எனச் சிறப்பித்துப் பேசினர். முதுகுடுமிப் பெருவழுதி அவனை வரவழைத்துப் பாகனூர்க் கூற்றத்தில் ஓரிடத்தில் வேள்வி செய்வித்தான். அந்த வேள்வி வைதிக (வேத) முறையில் இனிது நிறைவெய்தியது என்பதைக் குறிப்பிடுகிறது 'சுருதிமார்க்கம் பிழையாது' என்று வரும் வேள்விக்குடிச் சாசனப்பகுதி. அவ்வேள்வி நிகழ்ந்த இடத்திற்கு முதுகுடுமிப் பெருவழுதியே 'வெள்விகுடி' எனப் பெயரிட்டான் என்பதும், அந்த வேள்விக்குடியை நற்கொற்றனுக்கு அப்பொழுதே நீரோடு அட்டிக் கொடுத்தான் என்பதும் சாசனச் செய்திகள். இச் சாசனப் பகுதி இப்பாண்டிய மன்னனைச் 'சீரோடு திருவளரச் செய்தார் வேந்தன்' எனச் சிறப்பாய்க் குறிப்பிடுகிறது. இப்பாண

டியனின் சிறப்பைப் புறநானூற்றுப் பாடல்கள் ஐந்து குறிப்பிடுவதையும் காண்கிறோம்.

மதுரைக் காஞ்சியில் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் என்ற வேறொரு நெடுஞ் செழியனும் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனின் முன்னோருள் ஒருவனாகக் குறிக்கப் பெற்றுள்ளான். இந்த நெடுஞ்செழியனைச் சிலப்பதிகாரத்திலும் சந்திக்கிறோம். இவன் பெயருடன் அமைந்திருக்கும் அடைமொழியிலிருந்து, வடநாட்டு மன்னருள் ஒருவனையோ அல்லது சிலரையோ இவன் புறங்கண்டு புகழ் எய்தியவன் என்று தெரியவருகின்றது. இந்த அரசன் பாடிய பாட்டொன்றில், சாதியைக் காட்டிலும் கல்வியே சிறப்பு வாய்ந்தது என்ற கருத்து வலியுறுத்தப்படுகின்றது. கோவலனைக் கள்வன் என்று எண்ணி வெட்டி வீழ்த்துமாறு கட்டளையிட்டு, உண்மை தெரிந்ததும் 'யானோ அரசன்? யானே கள்வன்!' என்று நெஞ்சு நடுங்கக் கூறி உயிர் துறந்தவன் இவன்தான்.

கடைச் சங்க காலத்து மன்னரில் கடைசியானவன் கானப் பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதி என்பர். இவன் தந்தைதான் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் என்றும் கூறுவர். கானப்பேர் என்னும் எயில் அல்லது அரணைக் கைக் கொண்டவன் என்பது இவ்வரசன் பெயரிலுள்ள அடைமொழியால் விளங்கும். கானப்பேர் என்பது தற்காலத்துக் காளையார் கோயில்.

இந்த அரசனுக்குப் பின்பு களப்பிரர் பாண்டி நாட்டைக் கைக் கொண்டதாகக் கருதலாம்.

சங்க காலத்தில் வாழ்ந்த சேர சோழர்களைப் பற்றிய செய்திகளையும் குறுநில மன்னர்களைப் பற்றிய செய்திகளையும் சங்க இலக்கியங்களில் காண்கிறோம். குறுநில மன்னர்களில் ஆய், பாரி என்பவர்கள் வீரர்களாகவும் வள்ளல்களாகவும் சிறப்பித்துப் பாடப்பெற்றிருக்கிறார்கள். சோழர்களில் கரிகாலனின் பெயர் பிரசித்தமாகக் கூறப்படுகிறது. பிரசித்தி பெற்ற சங்கப் புலவர் பரணரால் பாடப்பெற்றிருக்கும் சேரன் செங்குட்டுவன் சிலப்பதிகாரத்தால் பெரும் புகழ்பெற்றிருப்பதையும், இவன் இலங்கைக் கயவாகு I. (கஜபாகு I.) என்ற அரசனின் காலமாகிய கி. பி. 173—95ஐச் சேர்ந்தவன் என்பதையும் பல ஆராய்ச்சியாளர்கள் அறிந்திருக்கிறார்கள். இத்தகைய செய்திகள் பல கிடைப்பதற்குச் சங்க இலக்கியங்கள் வாய்ப்பு அளித்தபோதிலும், இவ்வரலாற்றுத்

துணுக்குகளைக் கோவையாக ஒழுங்குபடுத்திக் காலவரையறை செய்வது சாத்தியமில்லை.

எனினும், அக்காலத்துச் சமுதாய நிலையும் பொருளாதார நிலையும் கல்வி நிலையும் பொதுவாகப் பண்பாட்டு நிலையும் சங்க இலக்கியங்களிலிருந்து தெளிவாகின்றன. இவை குறித்த உண்மையான, முழுமையான ஒரு சித்திரமே கிடைத்து விடுகிறது எனலாம். இந்தச் சித்திரத்திலே தமிழுடன் ஆரியமும் இணைந்து கலப்பதைக் காண்கிறோம்; ஆனால் அடிப்படையும் உயிர் நிலையும் தமிழ்ப் பண்பாடுதான். தமிழர்களின் விருந்தோம்பும் பண்பும் இதய விசாலமும், பல் வகைச் சிந்தனைகளையும் இசைபித்துக்கொண்டு இயற்கைப் பாநலம் செறிந்த சங்க இலக்கியங்களை உருவாக்கியுள்ளன. இவையே பிற்காலத் தமிழ் வளர்ச்சிக்கெல்லாம் உயிரூட்டிய ஊற்றுக்கண்கள் எனக் கூறவேண்டும்.

அரசாங்க நெறியில் மாறுதல்கள்: களப்பிரர் படையெழுச்சியால் சங்க காலத்தின் இறுதியில் ஒரு நீண்ட சரித்திர இரவு குறுக்கிட்டு மூன்று நூற்றாண்டுகளுக்குமேல் நீடித்தது என்பதை வரலாற்றுப் புலவர்கள் ஒப்புக்கொள்கிறார்கள். 6-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இந்த இருள் மறைந்து மறுமலர்ச்சிப் பொழுது புலர்வதைக் காண்கிறோம். அரசர்களின் சாசனங்கள் அவற்றின் முதற்காலப் பகுதியில் பிராகிருத மொழியில் காணப்படுகின்றன. ஆதியில் (பல்லவரும் களப்பிரரும் பிராகிருதத்தை அரசு மொழியாகக் கொண்டிருந்தனர்) இடைக்காலப் பகுதியில் சாசனங்கள் வடமொழியிலும், கி. பி. 7-ம் நூற்றாண்டிலிருந்து தொடங்கும் பிற்காலப் பகுதியில் வடமொழி தமிழாகிய இருமொழிகளிலும் வரையப்பட்டுள்ளன.

பல்லவர்களின் ஆட்சி சுமார் 6-நூற்றாண்டுகள் நடைபெற்றது அவர்கள் தங்கள் தலைநகராகிய காஞ்சியில் வடமொழியிலுள்ள கலை நூல்களையும் பல்வகைச் சமய நூல்களையும், வடக்கிலுள்ள மக்களும் வந்து கற்குமாறு ஒரு பெருங்கல்லூரியாகிய கடிகையை நிறுவி அதை நன்கு நடத்தி வந்தனர். அதனால் வடமொழிக் கல்வி தமிழ் நாட்டில் வளம்பெற்றது. பல்லவ ஆட்சி தொடங்கியபோது பௌத்தமும் சைனமும் சிறந்து விளங்கின. பௌத்தம் தன் செல்வாக்கை இழந்தபின் சைனம் தமிழ்நாடு முழுதும் பரவிச் சிறப்புற்றிருந்ததைக் காண்கிறோம். பல்லவர் ஆட்சியின் இடைக்காலத்தில், தமிழகத்தில் தொன்று தொட்டு வழங்கிவந்த சைவ வைணவக் கொள்கைகள் வைதிகக் கொள்கைகளுடன் கலந்து வளர்ந்தோங்கவே, வேத நெறியாகிய வைதிகத்திற்கு

மாறுபட்டிருந்த பௌத்த சைனங்கள் வீழ்ச்சியுற்றன. இந்த நிலையில் பக்தி நெறி தமிழ் நாட்டில் சிறப்பாக வளர்ந்தோங்கிச் சைவ நாயன்மார் வாயிலாகவும் வைணவ ஆழ்வார்கள் வாயிலாகவும் இந்துசமயத்திற்கே மறு மலர்ச்சிப் புது வாழ்வை அளித்திருக்கிறது. வேத வேதாந்தக் கொள்கைகள் செந்தமிழ் மரபுகளை அடிப்படையாகக்கொண்டு கலை களாகி கோயில்களாகி மக்களின் பொது வாழ்வை வளமும் வனப்புமுறச் செய்தன. சங்ககால நாகரிகம் கோயில் நாகரிகமாகத் தொடர்ந்து வளர்ந்திருப்பதைக் காண்கிறோம்.

களப்பிரர் ஆட்சி பாண்டி நாட்டில் ஏறக்குறைய கி. பி. 575-வரை நடைபெற்றது. இது தமிழகம் முழுவதையும் தடுமாறச் செய்து பாண்டி நாட்டில் புரட்சிகரமான மாறுதல்களையும் உண்டாக்கி விட்டது என் பதைச் செப்பேடுகளிலிருந்து தெரிந்து கொள்ளலாம். பௌத்த சமயிக ளான களப்பிரர்கள் சோழ நாட்டையும் கைப்பற்றினர். பௌத்த சமய நூல்கள் பாலி மொழியில் எழுதப்பட்டன. சோழரின் தலை நகராயிருந்த உறையூரில் பிறந்து வளர்ந்த புத்ததத்தன் இருமுறை ஈழநாடு சென்று பௌத்த நூல் பயிற்சி பெற்றுச் சோழ நாட்டுக்குத் திரும்பி வந்து பாலி மொழியில் நூல்கள் எழுதி வெளியிட்டான். மேலும், இந்த ஆசி ரியன் எளிதில் பௌத்த பிட்சுகள் அறிந்து கொள்ளும்படி விநயவிநிச்ச யம் என்ற வேறொரு நூலையும் இயற்றினான். இந்த நூலையும் களப்பிர வேந்தனாகிய அச்சுதவிக்கந்தன் தமிழ் நாட்டில் ஆட்சி புரிந்து வந்த காலத்தில் தொடங்கி எழுதி முடிக்கப்பட்டதாக இந்நூலின் இறுதியில் ஆசிரியன் கூறியுள்ளான்.

பாண்டி நாட்டிலும் சோழ நாட்டிலும் அரசு புரிந்த களப்பிரர் சமண சமயத்தையும் தழுவினர். தமிழ் நாட்டில் சமணப் பள்ளிகளில் தங்கி யிருந்த முனிவர்கள் தமிழிலக்கிய இலக்கணங்களை நன்கு பயின்று தமி ழிலும் நூல்கள் இயற்றலாயினர். வஜ்ர நந்தி என்ற சமண முனிவர் மதுரையில் கி. பி. 470-இல் திராவிட சங்கத்தை நிறுவினர்.

களப்பிரரது கொடுமைகளிலிருந்து நாட்டை மீட்டுக்கொண்ட கடுங்கோனின் காலம் முதல் பாண்டியர் புத்துயிர் பெற்றனர் என்பதும், இவன் கடைச்சங்கப் பாண்டியரின் வழித்தோன்றலாக மறைந்து வாழ்ந்து வந்தான் என்பதும், இவனே பாண்டியரது முதலாவது ஏகாதி பத்தியத்திற்கு அடிப்படை அமைத்தான் என்பதும் செப்பேடுகள் தெரிவிக்கும் செய்திகள். இம்முதற்பேரரசு, சுமார் மூன்று நூற்றாண்டு கள் நிலவியது.

# கி. பி. 6-ம் நூற்ருண்டின் இறுதிப் பகுதி முதல், கி. பி. 10-ம் நூற்ருண்டு வரை ஆட்சி செலுத்திய பாண்டியர்கள்

## (1) கடுங்கோன் :

பாண்டிய நாட்டைக் களப்பிரரிடமிருந்து கைப்பற்றி மீண்டும் பாண்டியர் ஆட்சியை நிலைபெறச் செய்த கடுங்கோன் 6-ம் நூற்ருண்டின் இறுதிப் பகுதியில் வாழ்ந்தவன். 'களப்ரன்' என்னும் கலியரச'னை இப்பாண்டியன் வென்ற செய்தியை வேள்விக்குடிச் செப்பேடுகள் தெரிவிக்கின்றன. பாண்டியர் மீட்சிக்கும், பராந்தக சோழன் 10-ம் நூற்ருண்டின் தொடக்கத்தில் மதுரையை வசப்படுத்திக் கொண்டதற்கும் இடையே முதலாவது பாண்டியப் பேரரசின் வரலாற்றைக் காண்கிருேம். கடுங்கோனுடைய மகன் மாறவர்மன்அவனிசூளாமணி என்பதையும் வேள்விக்குடிச் செப்பேடுகளிலிருந்து தெரிந்துகொள்கிருேம். இச்செப்பேடுகள் இவனைப் 'படுகடல் முளைத்த பருதி (சூரியன்) போல்..........வெளிப்பட்டு' வந்தவன் என்றும், தரணி மங்கையை.......... தன் பால் உரிமை நன்கனம் அமைத்த, மானம் பேர்த்ததானை வேந்தன்' என்றும் குறிப்பிடுகின்றன,

## (2) மாறவர்மன் அவனிசூளாமணி :

இவன் 7-ம் நூற்ருண்டின் முற்பகுதியில் ஆட்சி புரிந்தவன். 'மாறவர்மன்' என்ற இயற்பெயருடையவர்களை 2. 4, 6, 8 ஆகிய எண்களில் காணலாம். ஏனைய பாண்டியரைப் பலபடியாகச் சிறப்பித்துக் கூறும் வேள்விக்குடிச் சாசனம், இம்மாறவர்மனது அரிய செய்தியாக ஒன்றையும் குறிப்பிடவில்லை. 'கதிர்வேல்-தென்னன்' என்று வேள்விக்குடிச்சாசனம் சுட்டிக் காட்டுமாறு வெற்றி வேந்தனுகத் திகழ்ந்த தன் தந்தை கடுங்கோனுக்குப் பின் இம்மாறவர்மன் தான் பெற்ற நாட்டைச் சில ஆண்டுகள் ஆட்சி புரிந்து சென்றவன்எனக் கருதுவதே பொருந்தும். இவன் மகனுன செழியன் சேந்தனைப் போர் விருப்பம் உள்ளவனுகவும் முறை வழுவாது அரசுபுரிந்தவனுகவும் வேள்விக்குடிச் சாசனம் குறிப்பிடுவதைக் காண்கிருேம்.

(3) செழியன் சேந்தன் :

இவனும் 7-ம் நூற்ருண்டின் முற்பாதியில் (சுமார் 625—640) ஆண்டவன். கடுங்கோனின் பேரஞன இவனைச் 'சிலைத்தடைக்கை கொலைக்களிற்றுச் செழியன்' எனக் குறிப்பிடுகிறது வேள்விக்குடிச் சாசனம். 'செங்கோல் வேந்தன்' என்று போற்றப்படுவதுடன் 'வானவன்' என்ற விருதும் உடையவன் இவன். இதனுல் இவன் சேரரை வென்றதாகக் கருதலாம். வானவன் என்பது சேரருக்கு உரிய விருது. இப்பாண்டியன் 'வேந்தர் வேந்தன்' என்றும் வேள்விக்குடிச் செப்பேடுகளில் புகழப் பெற்றிருக்கிருன். இவனைச் சடையவர்மன் எனக் குறிப்பிடுவதும் உண்டு.

இப்பாண்டியன் கி. பி. 640-ல் இறந்ததாக ஊகிப்பதற்குச் சீன தேசத்து யாத்திரிகஞன யுவாங்சுவாங் என்பவனது குறிப்பு ஒன்று இடம் தருகிறது. இந்த அரசனின் இறுதிக் காலத்தில் பல்லவர் தலைநக ராகிய காஞ்சிமாநகரில் வந்து தங்கியவன் மேலே குறித்த சீன யாத் திரிகன். அவன் காஞ்சியிலிருந்து பாண்டிய நாட்டுக்குப் புறப்படும் போது (கி,பி. 640ல்) பாண்டிய மன்னன் இறந்ததாகக் கேள்விப்பட்டான். இவனுக்கு அடுத்த அரசஞக அரிகேசரி பராங்குசனைக் குறிப்பிடுகிறது வேள்விக்குடிச் சாசனம். இந்த அரசன் முதல் தொடங்குகிறது சின்ன மனூர்ப் பெரிய செப்பேடுகளில் பாண்டிய வம்சாவளி.

(4) மாறவர்மன் அரிகேசரி :

இந்த அரசன் கி. பி. 640-ம் ஆண்டில் பட்டம் எய்தினன் எனலாம். இவனைத் தமிழ் நூல்கள் கூன்பாண்டியன் எனிறும் நெடு மாறன் என்றும் சுந்தரபாண்டியன் என்றும் குறிப்பிடுகின்றன. இவன் சமணஞக இருந்து, சைவன் ஆனவன் என்பதும், திருஞானசம்பந்தரே இவனைச் சைவஞக்கினுர் என்பதும் சைவ சமய வரலாற்றில் பிரசித்த மான செய்திகள். இந்த அரசனும் இவனுடைய மனைவி மங்கையர்க் கரசியாரும் அமைச்சரான குலச்சிறையாரும் 63 நாயன்மார் என்ற திருக்கூட்டத்தில் இடம் பெற்றுள்ளனர்.

இவ் அரசனின் மனைவியான மங்கையர்க்கரசி ஒரு சோழ அரசனின் புதல்வி. இவன் காலத்தில் பல்லவ அரசு தொண்டை நாட்டில் பரந்து திகழ்ந்தது: சோழர்கள் தம் பழம் பெருமையை இழந்து

சிற்றரசராகச் சிதறியிருந்தனர். உறையூரில் வாழ்ந்த சோழர் குடியினனான ஒருவன் மீது சீறிப் படை யெடுத்துச் சென்ற மாறவர்மன் அரிகேசரி ஒரு பகல் பொழுதிலே உறையூரைக் கைப்பற்றிக் கொண்டான் என்பது செப்பேட்டுச் செய்தி. 'பகல் நாழிகை இறவாமைக் கோழியுள் வென்று' என்பது சாசன வாசகம். 'கோழி' இங்கே உறையூரைக் குறிக்கும். இப்போரில், குறித்த சோழச் சிற்றரனது ஆண்மையையும் போக்க முடியாத மானச் சிறப்பையும் வெற்றி சூடிய பாண்டியன் வியந்து பாராட்டியதாகக் கருதலாம். சோழர்குலப் பாவையான மங்கையர்க்கரசியாருக்கு 'மானி' என்ற பெயரும் உண்டு. இந்த அம்மையின் தந்தையை மணிமுடிச் சோழன் எனக் குறிப்பிடுகிருர் திருஞான சம்பந்தர்.

அந்த நாளில் பாண்டிய நாட்டின் தென் பகுதியில் பரதவர் என்ற இனத்தவர் பாண்டியர் ஆட்சியில் குழப்பம் விளைக்க முயன்றனர். சங்க காலம் தொட்டு அவர்கள் பாண்டியர்க்கு அடங்காது குறும்பு செய்து வந்ததாகத் தெரிகிறது. சங்ககாலப் பாண்டியர் பரதவர் மீது பெற்ற வெற்றிகளை அக்காலப் புலவர்கள் பாராட்டிப் பாடியிருக்கிருர்கள். 'தென் பரதவர்கள்' என்று அப்புலவர்கள் பரதவர்களைக் குறிப்பிடுகிருர்கள், தென் பாண்டிக் கடற்கரைப் பகுதியில் குறும்பு விளைத்த பரதவரை அரிகேசரி மாறவர்மன் கடுஞ்செயல் முறைகளை மேற்கொண்டு அடக்கி வைத்தான். இச் செய்தியை வேள்விக்குடிச் செப்பேடுகள், 'விரவி வந்து அடையாத பரதவரைப் பாழ்படுத்'தான் எனக் கூறுகின்றன.

மேலைக் கடற்கரைப் பகுதியில் வாழ்ந்த கேரளரும் இப்பாண்டியனோடு போர் தொடுத்தனர். கேரளர் விற்குடியை வேலியாகக்கொண்டு இடை இடையே சிற்றரசர்கள் துணைபுரியப் பாண்டி நாட்டுள் புகுந்தனர். பாழி, நெல்வேலி, செந்நிலம் என்ற இடங்களில் இப்பகைவர்களை அரிகேசரி மாறவர்மன் தோற்கடித்தான். இச்செய்தியைச் 'சூழியானை செலவுந்திப் பாழிவாய் அமர் கடந்தும், வில்வேலிக் கடற்றானையை நெல்வேலிச் செருவென்றும்' எனவரும் வேள்விக்குடிச் செப்பேட்டுரைகள் தெரிவிக்கின்றன.

நெல்வேலியில் அரிகேசரி நெடுமாறன் அடைந்த வெற்றி மக்கள் உள்ளத்தில் நெடுங்காலம் பசுமையாக இருந்தது என்பதற்குத் திருத்தொண்டத் தொகை பாடிய சுந்தரமூர்த்தி சுவாமிகளும் 'நெல்வேலி வென்ற நின்ற சீர் நெடுமாறன் அடியார்க்கும் அடியேன்' என்ற தம்

வாக்கிலே சான்று தருகின்றூர். செங்நிலம் என்ற இடத்தில் பகைவர் களைப் பெரிய யானைப் படையைச் செலுத்தி வென்ருன் இந்நெடுமாறன் என்பதற்கு 'கைங்நலத்த களிறு உந்திச் செங்நிலத்துச் செருவென்றும்' எனவரும்' செப்பேட்டுச் சாசனம் சான்ருகும்.

கேரளனைப் பலமுறை வென்ருன் நெடுமாறன். கேரள அரசன் கொங்கு நாட்டின் வழியாகத் தமிழ்நாட்டினுள் புகுந்தான். உறையூர்ச் சோழரைத் துணைக்கொண்டு புலியூர் என்னும் இடத்தில் ஒரு போரை நடத்தித் தோல்வியுற்ருன். பிறகு உறையூருக்குச் சென்ருன். அந்தக் கேரளனையும் அவனுக்குத் துணைபுரிந்த சோழனையும் அரிகேசரி நெடு மாறன் வென்ருன் எனலாம்.

'பாரளவும் தனிச்செங்கோற் கேரளனைப் பலமுறையும்

உரிமைச் சுற்றமும் மாவும் யானையும்

புரிசை மாமதிற் புலியூர் அப்பகல்

நாழிகை இறவாமைக் கோழியுள் வென்று கொண்டும்'

என்பது செப்பேட்டு வாசகம்,

இவனது ஆட்சிக் காலத்தில் பாண்டி நாடு உயர்நிலை உற்றது. இவன் புரிந்த போர்களை இறையனுர் அகப் பொருளுரையிலுள்ள மேற் கோட்பாடல்களும் எடுத்துரைக்கின்றன (பாடல்கள் (22, 106, 235, 309) அவனது சிவபக்தியும் இறையனுர் அகப்பொருளுரையில் புகழப்படு கிறது (மேற்கோள் பாடல்கள் 256, 279). சேரரும் குறுநில மன்னர் களும் திறை செலுத்தவும், தொண்டர்கள் கொண்டாடவும் இவன் வேந்தர் வேந்தனுய்ச் சிறப்புற்று வாழ்ந்தான். இவன் இரணிய கர்ப்ப தானமும் துலாபார தானமும் பல செய்தான் என்றும் வேள்விக்குடிச் செப்பேடுகள் கூறுகின்றன.

இவனது ஆட்சியின் தொடக்கத்தில்தான் சீன யாத்திரிகனுன யுவான் சுவாங் பாண்டி நாட்டுக்கு வந்து சேர்ந்தான். இந் நாட்டை அந்த யாத்திரிகன், 'வெப்பம் மிகுந்துள்ள நாடு என்றும், மக்கள் கறுத்த மேனியர் என்றும், உறுதியும் போர்வலியும் மிக்கவர் என்றும், வாணி கத்தாலும் செல்வத்தாலும் சிறப்புற்று விளங்குபவர் என்றும் வருணித்திருக்கிருன், தன் வரலாற்றுக் குறிப்புகளினிடையே, பாண்டி

நாட்டில் முத்து மிகுதியாகக் கிடைக்கிறது என்றும், உப்பும் மிகுதியாக உள்ளது என்றும் கூறியுள்ளான். இக்காலம் முதல், முதலாவது பாண்டியப் பேரரசு தொடங்கியது எனலாம்.

அரிகேசரி மாறவர்மன் காலத்தில் மதுரை நகரைச் சூழவுள்ள ஆனைமலை நாகமலை ஆகிய பகுதிகளில் ஜெயின சமயச்சான்றோர் தங்கி ஜைனசங்கம் அமைத்துச் சமயப் பணி புரிந்து வந்தனர். அரசனும் குடிகளிற் மிகப்பலரும் சமண சமயத்தைத் தழுவிக் கொண்டதால் சேக்கிழார் கூறுவது போல்,

'பூழியர் தமிழ்நாட் டுள்ள பொருவில்சீர்ப் பதிக ளெல்லாம்
பாழியும் அருகர் மேவும் பள்ளிகள் பலவு மாகி'

ஞானசம்பந்தர் புராணம்—திருப்பாட்டு 601

இருந்தன. அந்த நிலைமாறிச் சைவமும் வைதிக சமயமும் வளருமாறு செய்து புகழ் மேம்பட்ட அரிகேசரியை 'அந்தணர்க்கும் அரசருக்கும் வந்தணைக என்று ஈத்தளித்த மகரிகை யணிமணி நெடுமுடி அரிகேசரி, அசமசமன் சிரீமாற வர்மன்' என்கிறது வேள்விக்குடிச் செப்பேட்டுச் சாசனம். கி.பி. 670-இல் அரிகேசரி மாறவர்மன் காலமானதும், இவன் புதல்வனான கோச்சடையன ரணதீரன் முடிசூடித் தந்தையின் இராச்சியத்தை மேலும் பெருக்கி உறுதிப்படுத்திக் கொண்டான்.

(5) கோச்சடையன் ரணதீரன் :

வேள்விக்குடிச் செப்பேடுகள் இந்த அரசனை மன்னர் மன்னன் என்றும் கொங்கர் கோமான் என்றும் வானவன் என்றும் செம்பியன் என்றும் மதுரகரு நாடகன் எனறும் புகழ்கின்றன. இப்புகழுரைகளான சிறப்புப் பெயர்களிலிருந்து இவன் கொங்கு நாட்டையும் சேர நாட்டையும் சோழ நாட்டையும் கரு நாடக தேசத்தையும் கைப்பற்றிக் கப்பம் பெற்றுக்கொண்ட சக்கரவர்த்தியாக விளங்கினான் எனத்தெரிய வருகிறது. வீரம்போல் நீதி யுணர்வும் இவன்பால் நிரம்பி இருந்தது என்பதைவேள்விக்குடிச் சாசனம் இவனைச் செங்கோல் தென்னன் எனக் குறிப்பிடுவதிலிருந்து ஊகித்துக் கொள்ளலாம்.

மங்கல புரத்தில் இவன் அடைந்த வெற்றி குறித்தும் வேள்விக்குடிச் செப்பேடுகள் கூறுகின்றன. மங்கலபுரம் எது? தென்னிந்திய வரலாற்றுப் பேராசிரியர் திரு நீலகண்டசாஸ்திரியார் மங்களூரே மங்கல

புரம் என்கிருர். மங்களூர் தென் கன்னடம் மாவட்டத்தில் இருக்கிறது. இது மேற்குத் தொடர்ச்சி மலைக்கு மேற்கே இருக்கிறது. இங்கே கோச்சடையன் ரணதீரன் கொங்கு மன்னனைப் போரில் கொன்ருன் என ஊகிக்கிருர். இந்த ஊகம் பொருந்தாது என்கிருர் டி. வி. சதாசிவ பண்டாரத்தார் என்ற வரலாற்று ஆராய்ச்சிப் பேரறிஞர். இவனுக்கு ரண தீரன் என்ற சிறப்புப் பெயரும் இருப்பதால், இவன் சாளுக்கியர்களை வென்றவன் எனக் கருதுவதே பொருந்தும் என்பர். ரண ரசிகன், ரண பராக்கிரமன், ரண ராகன் (ரணம்—என்ருல் போர்க்களம்) என்ற விருதுகளைச் சாளுக்கியர் தரித்து வந்திருக்கிருர்கள். ரண தீரன் என்ற விருதிஞல் இக் கோச்சடையன் சாளுக்கியர்களை வென்றவன் எனலாம். சாளுக்கிய விக்கிரமாதித்தனுக்கு ரண ரசிகன் என்ற ஒரு சிறப்புப் பெயரும் உண்டு; அந்த ரண ரசிகனை வென்றவன் இந்த ரண தீரன் என்று ஊகிப்பது பொருத்தமே. ஆராய்ச்சி அறிஞர் சதாசிவ பண்டாரத்தாரின் அபிப்பிராயத்தில், மங்கலபுரம் திருச்சி மாவட்டத்தில் கொள்ளிடத்தின் வட கரையிலுள்ள மங்கலம் என்ற ஊர்தான். இவ்வூரில் கி. பி. 674-ல் மேலைச் சாளுக்கிய அரசனுன முதல் விக்கிரமாதித்தனை ரண தீரன் போரில் முறியடித்ததாகக் கருதுவது சரிதான். வரலாற்று ஆராய்ச்சிப் பேரறிவாளர் துப்ரே என்பவரும், மங்கல புரத்தில் ரண தீரன் மாரதரை வென்றதாக வேள்விக்குடிச் சாசனம் கூறுவதற்கு இப்படியே பொருள் கொண்டிருக்கிருர்.

ரண தீரனின் ஆட்சி கொங்கு நாட்டின் மீது பரவியிருந்ததுடன், சாளுக்கிய ராஜ்யம் கங்க ராஜ்யம் ஆகிய இரண்டும் கொண்ட கர்நாடக ராஜ்யம் முழுமையும் பரவி யிருந்தது. மேலைக் கடற்கரைப் பட்டினமான மங்களூர் என்ற மங்கல புரத்தைத் தலை நகராகக்கொண்டு பாண்டியர்களிலும் ஒரு கிளையினர் கர்நாடகத் தேசத்தை ஆண்டு வந்திருக்கிருர்கள். அவர்களில் மாறஞ் சேந்தனுடைய கல் வெட்டுகளும் கிடைத்திருக்கின்றன. ரண தீரனின் ஆட்சிக் காலத்தில் பாண்டியப் பேரரசு விசாலித்து வந்தது. இவன் மகனும் மேற்குக் கரையில் கொங்கு நாட்டுப் பகுதிகளை வென்றதாதக் கூறப்படுவதால், தந்தை அடைந்த வெற்றிகளை அவன் நிலைத்த வெற்றிகளாக்கிக் கொண்டான் எனக் கருதலாம்.

ஆய்வேளிரால் ஏற்பட்ட உள் நாட்டுக்கலக மொன்றையும் ரண தீரன் அடக்கிப் பேரரசை உறுதியான அடிப்படையில் நிலை நிறுத்த வேண்டியதாயிற்று. கடல் போன்ற பெரும்படையுடன் ஆய்வேள்

என்ற பொதியில் மலைத் தலைவன் எதிர்த்ததாகவும், அக்குறுநில மன்னனை மருதூரில் (திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள திருப்புடை மருதூரில்) ரண தீரன் முறியடித்ததாகவும் வேள்விக்குடிச் செப்பேட்டுச் சாசனம் அறிவிக்கிறது. இப்படி உட்பகையையும் புறப்பகையையும் வென்று பேரரசைப் பாதுகாத்து வளர்த்த கோச்சடையன் கி. பி 710-இல் காலமானான். இவன் காலத்தில் சுந்தரமூர்த்தி சுவாமிகள் சேரமான் பெருமாள் நாயனாருடன் மதுரைக்கு வந்து இவனால் உபசரிக் கப்பட்டார் என்பது சைவசமய வரலாற்றில் ஒரு நற்செய்தியாகும்.

(6) அரிகேசரி பராங்குச மாறவர்மன் :

கோச்சடையன் ரணதீரன் தன் மகனுக்கு ராஜசிம்மன் என்று பெயரிட்டிருந்தான். அவன் பல்லவ ராஜசிம்மனுடைய மகளை மணந்து அவள் வயிற்றில் பிறந்தவனுக்கு அந்தத் தாய்வழி பாட்டனின் பெயரை இட்டிருக்கவேண்டும் என்கிறார் டாக்டர் துப்ராய். இவனை முதலாம் இராசசிம்மன் என்பர். இவனுக்குத் தன் தந்தை வழி பாட்டனாகிய அரி கேசரியின் பெயரும் உண்டு; ஆகவே அரிகேசரி பராங்குச மாறவர்மன் என்றும் இவனை வழங்குவர்; மாறவர்மன் என்பது இவன் புனைந்து கொண்ட பட்டப்பெயர். மாறன் என்ற பெயரை மாறவர்மன் என்றும் நெடுமாறன் என்றும் கூறுவதுண்டு. இவன் பாட்டனும் ஞான சம்பந்தர் காலத்தவனுமாகிய 4-ம் எண்ணுக்குரிய பாண்டியனை இம் மூவகை யாகவும் கூறுவது கவனிக்கத்தக்கது.

இவனைத் 'தேர் மாறன்' என்று வழங்குவதையும் காண்கிறோம். ஆனால் 'மான் தேர்' எனபது விசேடணமாகக் கொள்ளற்குரியதே என்பர் ஆராய்ச்சி அறிஞர் மு. இராகவையங்கார். மாறவர்மனான இராச சிம் மனும் தந்தைவழிப் பாட்டனான மாறவர்மன் அரிகேசரியைப்போல் நெடு மாறன் எனப் பட்டான். இவன் தன் முன்னோரைப்போலவே சைவ சம யத்தவனாயினும் பெரியாழ்வாரின் சீடனாகி வைணவன் ஆனான் என்பது மு. இராகவையங்காரின் கருத்து. இவன் கி. பி. 710-முதல் 765-வரை ஆட்சி புரிந்தான் எனலாம்.

இப்பாண்டியன் பல்லவ மல்லனோடும் மற்றும் பலருடனும் போர் புரிந்து வெற்றி பெற்ற பெருவீரன் என்று வேள்விக்குடிச் சாசனம் புகழ் கிறது. இச்சாசனத்தின் சம்ஸ்கிருதப்பகுதி பல்லவ மன்னன் போர்க் களத்திலிருந்து ஓட்டம் பிடித்ததாகத் தெரிவிக்கிறது. உயர்ந்த அலங் கார நடையில் தமிழ்ப்பகுதி, இந்த அரசன் நெடு வயல் குறுமடை மண்

ணிக்குறிச்சி, திருமங்கை, பூவாளூர், கொடும்பாளூர் முதலான இடங்களில் வெற்றிமேல் வெற்றி பெற்றதை ஒரே நிகழ்ச்சித் தொடராக வருணித்திருக்கிறது; பிறகு, குழும்பூரில் பல்லவன் தன் மாட்சியை இழந்ததாகக் கூறுகிறது. பல்லவ மல்லனின் சேனபதி உதய சந்திரன் தமிழரசர்களின் முற்றுகையிலிருந்து பல்லவ மல்லனை விடுவித்துப் பல வெற்றிகள் பெற்றதாக உதயேந்திரம் செப்பேடுகள் கூறுகின்றன.

மாறவர்மன் இராச சிம்மன்-I பல்லவமல்லனின் காலத்தவன்; எதிரியும் கூட என்பது நிச்சயம். இப்பாண்டிய மன்னனுக்கும் பல்லவ மன்னனுக்கும் இடையே நிகழ்ந்த பல போர்களும் புதுக்கோட்டைப் பிரதேசத்தில் உள்ள பல ஊர்களிலும் நடந்தன. அதனால், பாண்டி நாட்டைக் கைப்பற்றி தெற்கே படையெடுத்து வந்த பல்லவனைப் பாண்டியன் தனது நாட்டின் வட எல்லையிலே சந்தித்துத் தோற்றோடச் செய்தான் என்று ஊகிக்கலாம்.

இப்போதைய திருச்சி தஞ்சை மாவட்டங்களின் எல்லை நிலத்தில் இருந்த மழகொங்க நாட்டைக் கைப்பற்றிக் கப்பம் பெற்றுக்கொண்டதுடன், அந்த மழவராசனின் மகளையும் மணந்து கொண்டான். இம் மாறவர்மனின் வெற்றி மழ நாட்டிலிருந்து கொங்கு நாட்டுப் பாண்டிக் கொடுமுடிவரை எட்டியது.

இப்பாண்டியன் கங்க அரசனின் மகளான பூசுந்தரியை மணம் புரிய விரும்பியபோது வட அரசர் திரண்டு எதிர்த்தனர். அவர்களை இவனது மகாசாமந்தனான மாறங்காரி ஒரு பெரும்படையுடன் போய் வென்று வலியழித்தான். பிறகு பாண்டிய மன்னன் பூசுந்தரியை மணந்து கொண்டான். இப்படி இவன் கங்க அரசனுடன் உறவுகொண்டதை வேள்விக்குடிச் செப்பேடுகள் கூறுகின்றன. இம்மாறவர்மனுக்குப் பூசுந்தரியிடம் பிறந்த மூத்தமகன் நெடுஞ்சடையன் பராந்தகன்.

### (7) நெடுஞ்சடையன் பராந்தகன் :

'நின்றிலங்கு மணி நீள்முடி நிலமன்னவன் நெடுஞ்சடையன்' என்று வேள்விக்குடிச் சாசனம் புகழும் இவ்வேந்தன்தான் இச்சாசனத்தை வழங்கியவன். இவனது முன்னோனான பல்யாக முதுகுடுமிப் பெருவழுதி தன் காலத்தில் கொற்கை கிழான் நற்கொற்றனுக்கு வழங்கியிருந்த வேள்விக்குடி ஊரைக் களப்பிரர் கவர்ந்துகொள்ளவே, அந்தக் கொற்கைகிழான் வழி வந்த நற்சிங்கனுக்கு மறுபடியும் வேள்விக்குடியை

இப்பராந்தகன் நெடுஞ்சடையன் வழங்கினுன் என்பதை உணர்த்துவது தான் வேள்விக்குடிச் செப்பேட்டுச் சாசனம்.

இவனது 17-ஆம் ஆட்சி ஆண்டைச் சேர்ந்தது சென்னைப் பொருட்காட்சிச் சாலையிலுள்ள சீவர மங்கலச் செப்பேட்டுச் சாசனம். வேள்விக்குடிச் சாசனம், லண்டன் பிரிட்டிஷ் பொருட்காட்சிச் சாலையில் இருக்கிறது; இவ்வரசனின் 3-ம் ஆட்சி ஆண்டைச் சேர்ந்தது. இச்சாசனம் பொதுவாகச் சமயப் பெரும்பற்றுள்ளவன் நெடுஞ்சடையன் என்பதை அறிவிக்கிறது; இவ்வேந்தன் தென் களவழி நாட்டு வேலங்குடி என்ற ஊரைச் சீவரமங்கலம் என்று தன் பெயரால் பிரமதேயமாக வழங்கியதைக் கூறும்.

சீவரமங்கலச் செப்பேடுகளோ இவனைப் 'பரம வைஷ்ணவ'னுக அறிமுகப்படுத்துகின்றன. இவ் அரசன் 25-ஆண்டுகள் (கி. பி 765 முதல் 790 வரை) ஆட்சி புரிந்தான்.

தந்தை மாறவர்மனது ஆட்சி முடிந்ததும் நெடுஞ்சடையன் தக்க பருவத்தில் பட்டம் பெற்ருன் என்பது இவனது முதல் மூன்று ஆண்டுகளின் ஆட்சிச் செயல்களாக வேள்விக்குடிச் சாசனம் கூறும் வரலாறுகளிலிருந்து புலப்படுகிறது. இவன் காலத்தில் பாண்டியப் பேரரசு நன்கு நிலையிடப்பெற்றது. இவனுடைய வெற்றி இவன் தந்தையின் வெற்றியைக் காட்டிலும் உறுதியானது, நீடித்த பலன் தந்தது. வேள்விக்குடிச் சாசனத்தின்படி இவன் தன் ஆட்சியின் தொடக்கத்தில் காவிரிக் கரைகளில் போர்கள் புரிந்து வெற்றி பெற்ருன். பல்லவ அரசனைக் காவிரியின் தென் கரையிலுள்ள பெண்ணுகடத்தில் நிகழ்ந்த போரில் புறங்காட்டி ஓடச் செய்தான் என்றும், ஆய்வேளை வென்ருன் என்றும் வேள்விக்குடிச் செப்பேடுகள் கூறுகின்றன. இப்போர் நிகழ்ச்சிகள் இரண்டும் இவனது மூன்ரும் ஆட்சி ஆண்டிற்கு முன்னர் நடைபெற்றிருத்தல் வேண்டும்.

பெண்ணுகடப் போரில் இவனிடம் தோல்வியுற்றவன் பல்லவ நந்தி வர்மன். பெண்ணுகடம் தஞ்சாவூர்க் கூற்றத்தில் உள்ளதோர் ஊர் எனக் கல்வெட்டு ஒன்று உணர்த்துகிறது; ஆகவே பெண்ணுகடப் போர் தஞ்சைக்கு அருகில் நிகழ்ந்திருக்க வேண்டும். அக்காலத்திலே நந்தி வர்ம பல்லவ மன்னன் தொண்டை நாட்டையும் சோழ நாட்டையும் ஆண்டு வந்தான். ஓங்கி வளர்ந்து வந்த பாண்டிய அரசை ஒடுக்க வேண்டும் என்று அவன் பெரும்படையுடன் தென்னுடு நோக்கி வரலா

னன். காவிரியாற்றின்வடகரையிலுள்ள ஆயிரவேலி அயிரூர், புகழியூர் என்ற இடங்களில் இப்பாண்டியனால் வெல்லப்பட்ட அதியமானுக்கு உதவியாக வந்த பல்லவனையும் அவன் வென்று துரத்தியதாகச் சீவரமங்கலச் செப்பேடுகள் அறிவிக்கின்றன.

வடக்கில் பல்லவரையும் தெற்கில் வேணாட்டவரையும் வென்ற நெடுஞ்சடையனால் வெல்லப்பட்ட அதியமான் குறுநில மன்னர்களில் ஒருவன். அவன் சேலம் மாவட்டத்திலுள்ள தகடூரில் (இப்போது உள்ள தருமபுரியில்) இருந்து ஆட்சி செலுத்தியவன். அவனது குலம் சங்க காலத்திலேயே புகழ் பெற்றிருந்தது. நாளடைவில் அதியமான் வலி மிகுந்து தகடூர் நாட்டின் தெற்கில் உள்ள கொங்கு நாட்டையும் கைப்பற்றினான். அந்த அதியமானை அவன் துணைவர்களாக மேற்கிலும் கிழக்கிலும் பெரும்படைகளுடன் வந்த சேர பல்லவர்களுடன் முறியடித்துக் கொங்கு நாட்டைத் தன்னடிப்படுத்திக் கொண்டான் பராந்தகன் நெடுஞ்சடையன். அதியமான் மதுரையில் சிறையிடப்பட்டான்.

சேரனுக்கு உரிய அரணுடைப் பெருநகராய் மேலைக் கடற்கரையில் இருந்தது விழிஞம். இக்கடற்கரைப்பகுதியில் கொல்லத்துக்கும் திருவிதங்கோட்டுக்கும் இடையில் உள்ள நிலப்பகுதிக்குச் சங்க காலத்தில் வேணாடு என்று பெயர். வேணாட்டை வேள் ஆய் ஆண்டுவந்தான். சங்க இலக்கியத்தில் வரும் ஆய் அண்டிரனும் அவன் வழி வந்தோரும் வேணாட்டை ஆண்டு வந்தனர். இந்த ஆய் நாடு மேலை நாட்டார் குறிப்புகளிலும் காணப்படுகிறது. பொதியில் மலையின் அடியில் இப்போதுள்ள செங்கோட்டைப் பகுதியில் இருக்கும் ஆய் குடியைத் தலைமைப்பேறாகக் கொண்டிருந்தது ஆய் நாடு என்ற வேணாடு. இது மலை வளத்திற்குப் பேர் போனது; யானைகள் நிறைந்தது. ஆய் குடியை அரசியல் தலைமைப் பகுதியாகக் கொண்டிருந்த வேணாட்டுக்குக் கடற்கரை நகரமாகத் திகழ்ந்தது விழிஞம், நெடுஞ்செழியனின் 17-ஆம் ஆட்சி யாண்டிற்கு முன்பே வேணாடு முதன் முதலாக வெல்லப்பட்டது.

வேணாட்டுத் தலைவனான ஆய்வேள் குறு நில மன்னனாக இருந்தும் பாண்டியப் பேரரசனான பராந்தகனை எதிர்க்கத் துணிந்தான். அதியமானுக்கும் உதவி புரிந்தான். கொங்கு மன்னன் சிறைப்பட்டபின் சேர நாட்டிலுள்ள வேணாட்டாரை அடக்குவதற்காகப் பராந்தகன் நெடுஞ்சடையன் விழிஞத்தை முற்றுகை யிட்டான். முடிவில் விழிஞம் சிறப்பிழந்தது. இவ்விழிஞத்தைச் சீவரமங்கலச் செப்பேடுகள்,

'ஆழி முந்நீர் அகழாக அகல் வானத்து அகடு உரிஞ்சும்
பாழி நீண்மதில் பரந்தோங்கிப் பகலவனும் அகல ஓடும்
அணி இலங்கையின் அரணிதாகி
மணி யிலங்கு நெடுமாட மதில்விழிஞம்'

என்று வருணிக்கின்றன.

பராந்தகன் நெடுஞ்சடையன், தென் திசையில் தான் வென்ற நாடுகளைப் பாதுகாக்கவும், குறுநில மன்னர்களைக் கண்காணிக்கவும், அவர்கள் பாண்டியப் பேரரசுக்கு எதிராகக் கிளம்பிக் குறும்பு செய்யா மலிருக்கவும், திருநெல்வேலிப் பகுதியில் இப்போது உக்கிரன் கோட்டை' என வழங்கும் பழைய கரவந்தபுரம் என்ற நகரில் சிறந்த அகழும் மதிலும் (ஆழ்ந்த அகழியையும் உயர்ந்த மதிலையும்) உடைய பெருங் கோட்டை கட்டி அங்கே ஒரு பெருங் காவற்படையையும் அமைத்து வைத்தான்.

அதங்கோடு[1] என்றும் திருவிதாங்கோடு என்றும் அந்நாளில் கூறப்பட்ட திருவிதாங்கூர் வேணாட்டில் இருப்பதாலும், திருவாங்கூரில் இருந்து ஆட்சி புரிந்த பிற்கால மன்னர்கள் ஆய்வேளிருடன் தொடர்பு கொண்டிருந்ததாலும் அவர்கள் தங்களை வேணாட்டு அடிகள் எனச் சொல்லிக் கொண்டார்கள்.

### இவன் காலத்து அரசியல் தலைவர்கள்:

மாறங்காரி :—பராந்தகன் நெடுஞ்சடையனின் காலத்தவராகச் செப்பேடுகளிலும் கல்வெட்டுகளிலும் குறிக்கப் பெற்றுள்ள அரசியல் தலைவர்களின் இந்த அரசனது ஆட்சித் தொடக்கத்தில் உத்தர மந்திரி என்ற முதல் அமைச்சனாக இருந்த மாறன்காரியை முதன் முதலாகக் குறிப்பிடவேண்டும். இவனது இயற்பெயர் காரி. மாறன் என்பவனுக்கு மகனாதலின் மாறன் காரி எனக் கூறப்படுகிறான். மதுரகவி என்னும் சிறப்புப் பெயரும் இவனுக்கு உண்டு. கரவந்த புரமாகிய களக்குடியில் தோன்றியவன் இவன். நெடுஞ்சடையனது மூன்றாம் ஆட்சியாண்டில் இம்மந்திரி இறந்து விட்டதாகச் சாசனங்களிலிருந்து தெரியவரு கின்றது. நெடுஞ்சடையனது ஆட்சியில் மிகச்சில ஆண்டுகளே இவன் உயர்பதவியை வகித்தவன்.

1. தொல்காப்பியப் பாயிரத்தில் குறிக்கப்படும் அதங்கோட்டாசான் இவ்வூரைச் சேர்ந்தவன் என்பர்.

'கொங்கரவ நறுங்கண்ணிக் கங்கராசனொடு சம்பந்தஞ்செய்தும்' என வரும் வேள்விக்குடிச் சாசனத் தொடரிலிருந்து, கங்க சம்பந்தஞ் செய்து கொண்டவன் நெடுஞ்சடையனின் தந்தையான மாறவர்மன் என்று தெறியலாம். இச்சம்பந்தம் செய்து வைத்த மாறங்காரி, பூசுந்தரியின் புதல்வனான நெடுஞ்சடையன் பிறப்பதற்கு முன்பே தந்தை யாகிய நெடுமாறன் கீழ்ப் பல்லாண்டுகளாக முதல் அமைச்சன் என்ற பதவியை வகித்து வந்தவன் என்று கொள்ளத் தடையில்லை என்கிறார் ஆராய்ச்சி அறிஞர் மு. இராகவையங்கார்.

மாறங்காரி வைத்ய குலத்தினன். மதுரையிலிருந்து சுமார் ஆறுமைல் தொலைவிலுள்ள ஆனைமலையில் திருமாலுக்கு ஒரு கற்றளி யமைத்து அதில் நரசிங்கப் பெருமாளை எழுந்தருளுவித்தவன். இது கி. பி. 770 ஆம் ஆண்டில் நிகழ்ந்தது. பாண்டி வேந்தன் வழங்கிய மூவேந்த மங்கலப் பேரரையன் என்ற பட்டத்தை இவன் பெற்றிருந்தான்.

"கோமாறஞ்சடையற்கு உத்தரமந்திரி களக்குடி வைத்திய மூவேந்த மங்கலப் பேரரையனாகிய மாறங்காரி இக்கற்றளிசெய்து நீர்த்தெளியாதேய் சொர்க்காரோகணம் செய்தபின்னை" என்பது ஆனை மலை நரசிங்கப் பெருமாள் கோயிலிலுள்ள கல்வெட்டுப்பகுதி வேள்விக் குடிச் செப்பேடுகளில் இவன் ஆணத்தியாகக் கூறப்படுகிறான்.

**மாறன் எயினன் :**

மாறங்காரியின் தம்பி இவன். அண்ணனுக்குப்பின் முதல் அமைச்சர் பதவியை இவன் பெற்றான். இவனை 'மாறங்காரிக்குப்பின் உத்தர மந்த்ர பதமெய்தின பாண்டி மங்கல விசையரையன் ஆகிய மாறன்னெயினன்', எனக்குறிப்பிடுகிறது நரசிங்கப்பெருமாள் கோயில் கல்வெட்டு. அண்ணனும் தம்பியும் பரமவைணவர்கள். மாறன் எயினனின் இயற்பெயர் எயினன். பாண்டிமங்கல விசையரையன் என்பது இவனுக்குப் பாண்டியன் அளித்த பட்டம்.

**சாத்தன் கணபதி**

இவனைத் திருப்பரங்குன்றம் குடவரைக் கோயிலுள்ள கல்வெட்டு "ஸ்ரீ கோமாறஞ் சடையற்க்கு ராஜ்ய வர்ஷம் ஆருவது செல்லா நிற்ப மற்றவற்கு மகாசாமந்தனாகிய கரவந்த புர நிவாஸி (வைத்யன்) 'பாண்டி அமிர்த மங்கல' அரையனாயின சாத்தன் கணபதி" என்று குறிப்

பிடுகிறது. இவனும் மேலே கூறிய சகோதரர்களைப் போலவே கரவந்த புரவாசியும் வைத்ய குலத்தினனும் ஆவன். கணபதி என்பது இயற் பெயர், சாத்தன் என்பது தந்தையின் பெயர். பாண்டி' அமிர்த மங்கல அரையன் என்பது அரசன் கொடுத்த பட்டப் பெயர். இவன் திருப்பரங் குன்றத்துக் கோயிலில் திருப்பணிகள் புரிந்தான் என்று நெடுஞ்சடை யன் பராந்தகனது ஆறும் ஆண்டுக் கல்வெட்டிலிருந்து தெரியவரு கிறது. இவனது மனைவி நக்கன் கொற்றி என்பதும், இவ்வம்மை திருப் பரங்குன்றத்தில் துர்க்காதேவிக்கும், சேட்டைக்கும் (ஜேஷ்டை என்ற மூதைக்கும்) கோயில்கள் அமைத்தாள் என்றும் மேலே கூறிய கல் வெட்டின் பிற்பகுதி தெரிவிக்கிறது.

சாத்தன் கணபதியின் சகோதரனான ஏனாதி சாத்தஞ் சாத்தன் என்பவன் வேள்விக்குடிச் செப்பேட்டின் தமிழ்ப் பகுதியைப் பாடியவன். இவனது 'ஏனாதி' பட்டம், இவனை ஒரு முக்கியமான படைத்தலைவனாகவும் அறிமுகப்படுத்துகிறது. சீவரமங்கலச் செப்பேடுகளின் ஆணத்தியாக தீரதரன் மூர்த்தி எயினன் என்பவன் குறிக்கப் பெற்றுள்ளான். இவன் நெடுஞ்சடையனது ஆட்சியின் முற்பகுதியில் பாண்டிப் படைகளுக்கு மகாசாமந்தனாக இருந்தான். இவனுக்கு வீரமங்கலப் பேரரையன் என்ற பட்டம் அரசனால் அளிக்கப்பட்டது.

பராந்தகன் நெடுஞ்சடையனது யானைப்படைக்குத் தலைவன் சங்கரன் சீதரன். பாண்டி இளங்கோ மங்கலப் பேரரையன் என்னும் பட்டம் இவனுக்குக் கொடுக்கப்பட்டது.

### பாண்டியரும் பெரியாழ்வாரும் :

'பரம வைஷ்ணவன் தானாகி நின்றிலங்கு மணிநீள்முடி நிலமன்ன வன்' என்று சென்னை மியூஸியம் (சீவரமங்கலச்) சாசனம் குறிப்பிடும் பராந்தகன் நெடுஞ்சடையன் 'குருசரிதம் கொண்டாடிய' செய்தியையும் அதே சாசனம் தெரிவிக்கிறது. இப்பாண்டியன் கொண்டாடிய குரு யார்? 'பாண்டியன் கொண்டாடப் பட்டர்பிரான் வந்தான்....' என்று பெரியாழ்வார் திருமொழித்தனியன் கூறுகிறதே, அந்தப் பட்டர் பிரானாகிய பெரியாழ்வார்தாம் எனக் கருதலாம்.

சைவநாயன்மார்களும் வைணவ ஆழ்வார்களும் ஆன்மீக ஆற்றலை விளைத்துப் பொது மக்களுக்கு அறிவு புகட்டி வந்த காலம்

அது. இந்த மன்னன் கொங்கு நாட்டைத் தன் ஆட்சிக்கு உட்படுத்திய பின் நொய்யலாறு என வழங்கும் காஞ்சிமா நதியின் பக்கத்திலுள்ள மேலைச் சிதம்பரம் எனப் புகழப்பெறும் பேரூர் என்ற சிவஸ்தலத்தில் திருமாலுக்கு ஒரு பெரிய கோயில் எடுப்பித்தான் என்று வேள்விக்குடிச் சாசனம் கூறுகிறது. 'காஞ்சிவாய்ப் பேரூர்புக்குத் திருமாலுக்கு அமர்ந் துறையக் குன்றம் அன்னதோர் கோயில் ஆக்கி' என்பது சாசன வாசகம். கொங்கு நாட்டில் இப்பாண்டியன் புரிந்த இச்சமயப் பணியை நினைவூட்டுகிறது.

'கொங்கும் குடந்தையும் கோட்டியூரும் பேரும்
எங்குந் திரிந்து விளையாடும் என்மகன்,

(பெரியாழ்வார் திருமொழி, இரண்டாம் பத்து,
ஆருந்திருமொழி, பாசுரம்-2)

என்ற பெரியாழ்வார் திருவாக்கு.

ஆனால் பெரியாழ்வார் தம் காலத்துப் பாண்டிய அரசனைக் 'கோன் நெடுமாறன' எனக் கூறியுள்ளார். இதுவும் கூர்ந்து நோக்கத்தக்கது. கோன் நெடுமாறன்-கோநெடுமாறன்.

'கொன்னவில் கூர்வேற்
கோன்நெடுமாறன் தென்கூடற்கோன்
தென்னன் கொண்டாடும்
தென்திரு மாலிருஞ் சோலையே'

(பெரியாழ்வார் திருமொழி : இரண்டாம் பத்து, பாசுரம்-7.)

என்று இந்த ஆழ்வார் அறிமுகப்படுத்தும் பாண்டிய சக்கரவர்த்தி நெடுஞ் சடையன் பராந்தகனின் தந்தையான அரிகேசரி பராங்குச மாறவர் மனே எனலாம்.

இப்பாண்டிய மன்னனுக்கும் உத்தர மந்திரியாக இருந்தவன் 'மதுரகவி' எனற சிறப்புப் பெயருள்ளமாறங்காரி. வைணவப் பற்று மிகுதியாக உள்ள இம் மந்திரி அதிக அளவில் அரிகேசரி பராங்குச மாறவர்மனுக்கே முதல் அமைச்சனுகப் பணிபுரிந்தவன். இம் மந்திரியால் பாண்டியன் மாறவர்மனின் சமயக் கோட்பாட்டில் மாறுதல் ஏற்பட்டிருக் கக்கூடும். இம் மந்திரியின் ஊரான கரவந்தபுரம் என்ற களக்குடி பெரி யாழ்வாரின் ஊராகிய ஸ்ரீ வில்லிபுத்தூருக்கு நெடுந்தூரத்தில் இருப்ப தன்று. பெரியாழ்வாரின் தொடர்பு முதல் முதல் இம்மந்திரிக்கு ஏற்

பட்டுப் பிறகு அரிகேசரி பராங்குச நெடுமாறனுக்கும், அப்பால் மகனுன நெடுஞ்சடையனுக்கும் ஏற்பட்டிருக்க வேண்டும் என்பது ஆராய்ச்சி யறிஞர் மு. இராகவையங்காரின் தேர்ந்த கருத்து.

பெரும்பாலும் சிவபக்தர்களாயிருந்த பாண்டிய வம்சத்திலே பராந்தகன் நெடுஞ்சடையனும் இவன் தந்தையும் வைணவர்களாக இருந்தனர். அரிகேசரி பராங்குச மாறவர்மன் தன் வாழ்க்கையின் பிற் பகுதியில் திருமாலிருஞ்சோலைத் திருமாலிடம் பக்தி பூண்டிருந்ததுடன் அத்தலத்தை மூன்று பதிகங்களால் சிறப்பித்துப் பாடியிருக்கும் பெரியாழ் வாரை ஞானகுருவாகக் கொண்டு வைணவன் ஆனுன் என்றும், அவன் மகனுன நெடுஞ்சடையன் பரம வைணவனுகப் பரிணமித்திருக்க வேண்டும் என்றும் கருதுவது பொருத்தம் தான். நெடுஞ்சடையன் பரம வைணவனுக இருந்தும், காஞ்சிவாய்ப் பேரூரில் திருமாலுக்குப் பெரிய கோயில் கட்டியிருந்தும், சிவன் கோயிலுக்கும் வாரி வழங்கினுன். இப்படிச் சைவ வைணவ சமரச நன்னிலை கண்ட பரம வைணவனுன பராந்தகன் நெடுஞ்சடையன் பிரமன், மால், சிவன் ஆகிய மூவருக்கும் வணக்கம் செலுத்தும் சீவரமங்கலச் செப்பேட்டுச் சாசனத்தை வழங்கியிருப்பதும் நோக்கத்தக்கது.

**நெடுஞ்சடையனுக்குப் பின் வந்தவர்கள் :**

நெடுஞ்சடையன் பராந்தகனின் மகனுன இராச சிம்மனின் பெய ரைக் குறிப்பிடும் சின்னமனூர்ச் செப்பேடுகள் இவனது செயல்களைப் பற்றிக் கூறவில்லை. இதிலிருந்து இருவகை ஊகங்கள் செய்யப்படு கின்றன. குறிப்பிடத்தக்க வரலாற்று நிகழ்ச்சிகளுக்கு இடம் இல்லாத காலம் இவனது ஆட்சிக்காலம் என்பது ஒன்று, இந்த ஆட்சிக்காலம் மிகச் சுருக்கமாக—கி. பி. 790-முதல் 792 வரை-சுமார் இரண்டு ஆண்டு களாகவே இருந்திருக்கலாம் என்பது வேருெரு ஊகம். இவனை இரண் டாம் இராசசிம்மன் என்பர். முதலாம் இராச சிம்மன் என்று கூறப்படு பவன் அரிகேசரி பராங்குச மாறவர்மன். தன் பாட்டனைப்போல் இரண் டாம் இராசசிம்மனும் மாறவர்மன் என்ற பட்டத்துடன் ஆட்சி செலுத் தியவன்.

இவனுடைய மகனுன வரகுண மகாராசனைச் சின்னமனூர்ச் செப்பேடுகள் 'கொற்றவர்கள் தொழுகழற்கால் கோவரகுண மகாராசன்' எனப் புகழ்கின்றன. சோழநாடு முழுவதும் இவன் ஆட்சிக்குள் இருந்ததாகப் பல கல்வெட்டுகளின் செய்திகளிலிருந்து ஊகிக்கலாம். தொண்டை மண்டலத்தின் தென்பகுதியும் இம் மன்னனுக்கு உட்பட்

டிருந்தது என்பதற்கும் கல் வெட்டுச்சான்று உண்டு. இக்காலத்துப் பல்லவ வேந்தன் நந்தி வர்மன். இதே காலத்தில் மாணிக்கவாசகர் வாழ்ந்ததாகச் சதாசிவ பண்டாரத்தார் முதலான ஆராய்ச்சி நிபுணர்கள் கருதுகிருர்கள்.

திருக்கோவையாரில் இரண்டு பாடல்களில் (306, 327) குறிக்கப் பெற்றிருக்கும் வரகுணன் முதலாம் வரகுணஞ, இரண்டாம் வரகுணஞ என்பது குறித்து ஆராய்ச்சி அறிஞர்களுக்கிடையே கருத்து வேற்றுமை உண்டு. பத்தாம் நூற்ருண்டினரான பட்டினத்து அடிகள் திருவிடை மருதூர் மும்மணிக்கோவையில் 'பெரிய அன்பின் வரகுண தேவர்' என்று குறித்திருக்கும் வரகுணன் யார் என்பதும் ஆராய்ச்சிக்கு உரியதுதான். திருமுறைகளைத் தொகுத்திருக்கும் நம்பியாண்டார் நம்பி குறிப்பிடும் வரகுணன் யார் என்பதும் இன்னும் முடிவு செய்யப்பட்டிருப்பதாகத் தோன்றவில்லை. முதலாம் வரகுணன் நீண்டகாலம்—கி.பி. 792 முதல் 835-வரை ஆண்டிருக்கக்கூடும். பராந்தகன் நெடுஞ்சடையன் பரம வைணவன் என்ருல், அவனுடைய பேரஞன வரகுணன் பரமசைவஞக வாழ்ந்தான் என்பர்.

சீமாறன் சீவல்லபன்:

முதல் வரகுண பாண்டியனுக்குப் பின் மகஞகிய சீமாறன் சீவல்லபன் பட்டத்திற்கு வந்தான். கி. பி. 835 ல்-தந்தை இறந்த அதே ஆண்டில்-இவன் முடி சூட்டப் பெற்ருன். இவனைச் 'சீர்கெழு செங்கோல் சீவல்லபன்' எனக் கல்வெட்டு ஒன்று புகழ்ந்து கூறுகிறது. தன் குடிகளின் பேரன்பிற்குப் பாத்திரமானவன் என்றும் இவன் கொண்டாடப் படுகிருன் (ப்ரேம பாத்ரம் ப்ரஜாநாம்). இவன் சிறந்த நீதிமான்என்றுமக்களிடையே பேர் பெற்றிருந்தான் என்று ஊகிக்கலாம். பார் முழுதாண்டவன் என்று புகழப் படுவதற் கிசைந்தவாறு, பாண்டியப் பேரரசு இவன் காலத்தில் சிறப்புற்றிருந்தது என்று ஊகிப்பது மிகையாகாது. 'அவனிப சேகரன்' 'ஏகவீரன்' முதலான சிறப்புப் பெயர்கள் இவ்வரசன் காலத்தில் வட மொழியின் செல்வாக்கு ஓங்கியிருந்தது என்பதையும் புலப்படுத்துகிறது.

சின்னமனூர்ப் பெரிய சாசனத்திலிருந்து இவனைப் பற்றிய முக்கியமான செய்திகள் தெரிய வருகின்றன, இவன் வரலாறு சில கல்வெட்டுகளாலும் தெரிகிறது. குண்ணூர், சிங்களம், விழிஞம் ஆகிய இடங்களில் இவன் போர் புரிந்து வெற்றி பெற்ற செய்தியைச் சின்னமனூர்ச் செப்பேடுகளிலிருந்து அறிகிருேம். கேரளத்து விழிஞத்தில்

இவன் போரிட்டு வெற்றி சூடினன் என்ற செய்தியை, 'இலங்கையைப் போல் அரணால் சிறந்து விளங்கிய விழிஞத்தை அழித்து வேணாட்டரசனை வென்று' நெடுஞ்சடையன் பராந்தகன் அவனதுநாட்டையும் கைப்பற்றினன் என்ற சீவர மங்கலச் செப்பேட்டுச் சாசனச் செய்தியுடன் ஒப்பிட்டு நோக்கவேண்டும். மேற்கு நாடு பாண்டியர் பிடிக்குள் அமைதி பெற்று விடாமல் மீறிச் சுதந்திரம் பெற முயன்ற வண்ணமாயிருந்தது என்பது இங்கே உறுதிப்படுகிறது.

சிங்களத்திலும் (இலங்கைத் தீவிலும்) இவன் பாண்டிய அதிகாரத்தைப் பரப்பினன் என்பது சின்னமனூர்ச் செப்பேட்டுச் செய்தியிலிருந்து ஊகிக்கப்படும். முதலாம் சேனன் (ஸேன I) சிங்களத்தில் ஆண்டு வந்த காலத்தில் சீமாறன் சீவல்லபன் படை யெடுத்து வந்ததாகவும், அதன் விளைவாக சிங்கள நாடு செல்வமிழந்து தளர்ந்து தவித்ததாகவும், சிங்கள மன்னன் மலேயாவுக்கு ஓடிப்போய் விட்டதாகவும், அதன் பின் பாண்டியன் தன்னைப் பணிந்து சமாதான உடன்படிக்கை செய்து கொண்ட முதலாம் சேனனுக்குச் சிங்களத்தை அளித்ததாகவும் மகாவம்சம் என்ற இலங்கை வரலாற்றுக் காவியம் தெரிவிக்கிறது. இவ்வாறு 'மகாவம்ச'ச் சான்று சிங்களத்தில் பாண்டியன் வெற்றி கொண்ட சின்னமனூர்ச் செப்பேட்டுச் செய்தியை உறுதிப் படுத்துகிறது.

இலங்கையின் எதிர்ப் படையெடுப்பு ஒன்று பாண்டி நாட்டில் நிகழ்ந்ததையும் மகாவம்சம் குறிப்பிடுகிறது. கி.பி. 842-முதல் 877-வரை இலங்கையில் ஆண்ட இரண்டாம் சேனன் (ஸேன II) காலத்தில் நிகழ்ந்தது இப் படையெடுப்பு. சீமாறன் சீவல்லபனுக்குத் தாயத்தினன் (தாயாதிக்காரன்) என்று தன்னை அறிவித்து முரண்பட்டிருந்த மாயாபாண்டியனைச் சேர்த்துக்கொண்டு இரண்டாம் சேனன் பாண்டி நாட்டில் படையெடுத்து வந்தான். அதனால் பாண்டியப் பேரரசுக்குப் பேராபத்து நேர்ந்துவிட்டதாக மகாவம்சம் கூறுவது உண்மைச்செய்தியாக இருக்க முடியாது. ஆட்சி செய்து கொண்டிருந்த பாண்டியன் ஒரு மாயா பாண்டியன் மீது வெற்றி கொண்டு தொடர்ந்து அரசு புரிந்தான் என்பதே சரியான செய்தியாக இருக்கவேண்டும்.

சீமாறன் சீ வல்லபனின் ஆட்சியில் பாண்டிய அரசுக்குப் பேராபத்து ஏற்பட்டதைச் சின்னமனூர்ச் செப்பேடுகள் மறைத்து இந்த ஆட்சியைப்பற்றி பொய்க்கதை புனைந்திருப்பதாகக் கருதுவது சிறிதும் பொருந்தாது. இலங்கை வரலாற்றை மிக அலங்காரப்படுத்திக் காவியத்திற்கு உரிய மனோபாவத்துடன் எழுதியது மகாவம்சம் என்பது. ஆய்

வுரையாளர்கள் வெளியிட்டிருக்கும் கொள்கை. மகா வம்சத்தின் இந்த அத்தியாயத்திலே, பிற்காலத்தில்—அதாவது பன்னிரண்டாம் நூற்ருண்டில்—நிகழ்ந்த சில செய்திகளை முன் கூட்டிச் சொல்லியிருக்கக் கூடும் என்றும், பாண்டிய மன்னனின் இலங்கைவெற்றிச் சிறப்பைக் குறைப்பதற்காக இப்படிக் கூறியிருக்கலாம் என்றும் ஊகிப்பது பொருத்தம் தான். கி. பி. பன்னிரண்டாம் நூற்ருண்டில் பாண்டியர்களின் உள்நாட்டுச் சச்சரவுகளிலே இலங்கை அரசர்கள் அடிக்கடி தலையிட்டுக் கொண்டனர். அக்காலச் செய்திகளை இலங்கை அரசர்களுக்கும் படைத்தலைவர்களுக்கும் அனுகூலமாக வருணிப்பதில் மகாவம்சம் பிடிவாதமாக இருக்கிறது. எனவே, சீமாறன் சீவல்லபன் தன் இலங்கைப் படையெடுப்பு ஒன்றை வெற்றி மயமாக முடித்துக் கொண்டான் என்பதும், இலங்கையர் போலிப் பாண்டியன் ஒருவனது சதிகளை ஆதரித்துப் பழிவாங்கும் முறையில் மேற்கொண்ட முயற்சி பழுதாகிச் சீமாறன் சீவல்லபனுல் முறியடிக்கப்பட்டது என்பதும் உண்மைச்செய்திகளே என்கிருர் வரலாற்றுப் பேராசிரியர் க. அ நீலகண்ட சாஸ்திரியார். இக்கருத்தை முற்றும் ஆதரிக்கிருர் வரலாற்று ஆராய்ச்சியாளர் சதாசிவப் பண்டாரத்தாரும். போலிப்பாண்டியன் யார் என்பது குறித்து விளக்கமாக ஒன்றும் தெரியவில்லை.

குடமூக்கு என்ற கும்பகோணத்தில் எதிர்த்த பல்லவர், சோழர், கங்கர் முதலானவர்களையும் சீமாறன் சீவல்லபன் வென்றதாகச் சின்னமனூர்ச் சாசனம் தெரிவிக்கிறது இந்தக் கூட்டுப்படை மீது வெற்றியும் இலங்கை வெற்றியும் இப்பாண்டியருக்குப் பரசக்ர கோலாகலன் என்ற விருது கிடைக்க உதவியிருக்க வேண்டும். பல்லவருடன் இப்பாண்டியன் நிகழ்த்திய போர்களில் தெள்ளாற்றுப் போர் ஒன்ருகும். வட ஆர்க்காடு மாவட்டத்தில் வந்தவாசித் தாலூகாவில் உள்ளது தெள்ளாறு என்ற ஊர். கி. பி. 854-இல் சீவல்லபன் மூன்ரும் நந்திவர்மனுடன் நிகழ்த்திய போரில் வெற்றி பெற்றவன் 'தெள்ளாறெறிந்த நந்திவர்மன்' என்றும், 'தெள்ளாற் றெறிந்து ராஜ்யமும் கொண்ட நந்திபோத்தரையர்' என்றும், கல்வெட்டுச் சாசனங்கள் குறிப்பிடும் மூன்ரும் நந்திவர்மன் தான். இப்பல்லவன்தன் தந்தையான தந்திவர்மன் முதலாம் வரகுண பாண்டியனுக்குத் தோற்று இழந்திருந்த தொண்டை மண்டலப் பகுதியை மீட்டுக் கொண்டான்.

---

* அக்காலத்திலே தஞ்சை மாவட்டத்தில் பல இடங்களிலும் பாண்டியரின் கல்வெட்டுகள், காணப்படுவதால், இப்பகுதி அன்று பாண்டியர் ஆட்சிக்கு நிலையாக அடங்கியிருந்தது என்னலாம்.

ஆனல் குடமூக்கு என்ற கும்பகோணத்துப் போரில் தெள்ளா றெறிந்த நந்திவர்மனையும் அவனுக்குப் படைத்துணைவனுக வந்த கங்கர், சோழர் முதலானவர்களையும் சீமாறன் சீவல்லபன் புறங்காட்டி ஓடச் செய்தான். இக்காலத்திலே பாண்டியாதிக்கம் தஞ்சை ஜில்லாவின் மத்தியப் பிரதேசத்திலே ஊன்றியிருந்தாலும்,* எல்லைப்புறம் உறுதி யாக இல்லாதிருந்தாலும், பாண்டியர்க்குப் பல்லவரோடு அடிக்கடி சண்டைகள் நிகழ்ந்திருக்கின்றன. கும்பகோணத்திற்குத் தென்புற மாக ஓடும் அரிசிலாற்றங்கரையில் சீவல்லபனுக்கும் பல்லவனுக்கும் மூன்றும் போராட்டம் நடைபெற்றது. இதில் மூன்றும் நந்திவர்மனது மகனுகிய நிருபதுங்கன் சீவல்லபனை முறியடித்தான். பாண்டியர்— பல்லவர் போராட்டத்தில் வெற்றி தோல்விகள் மாறி மாறி நிகழ்ந்த பின், நிருபதுங்கனின் வெற்றியால் சோழ நாட்டின் வட பகுதி மறுபடியும் பல்லவர் ஆட்சிக்கு உட்படலாயிற்று எனினும் சீமாறன் சீவல்லபன் பேரபாயங்களுக் கிடையே பாண்டியப் பேரரசைப் பாதுகாத்து, கி. பி. 862-இல் காலமானுன்.

சீவல்லபனின் மகனுன இரண்டாம் வரகுண பாண்டியன் தந்தை யிறந்த அதே கி. பி. 862 இல் முடிசூட்டப் பெற்றான். இம்மன்னனைச் சின்னமனூர்ச் செப்பேடுகள்,

"குரைகழற்கால் அரைசுஇறைஞ்சக் குவலயதலம் தனதாக்கின

வரைபுரையும் மணிநெடுந்தோள் மன்னர்கோன் வரகுணவர்மன்"

எனக் குறிப்பிடுகின்றன (பெரிய சின்னமனூர்ச் செப்பேடு வரி 113-114) பல்லவ நிருபதுங்க வர்மனது கல்வெட்டொன்றால் அப்பல்ல வனும் இப்பாண்டியனும் நண்பராயினர் எனத் தெரிய வருகிறது. நிருப துங்கன் இறந்தபின் அவனுடைய மகன் அபராஜித வர்மன் ஆட்சி செலுத்திய காலத்தில் இவ்வரகுணவர்மன் தன் தந்தை இழந்த சோழ நாட்டையும், தொண்டை நாட்டுப் பகுதியையும் கைப்பற்ற எண்ணினுன். கி. பி. 880-ஆம் ஆண்டுத் தொடக்கத்தில் இப்பாண்டியன் காவிரியாற் றுக்கு வடக்கேயுள்ள இடைவை என்ற நகரையும் அதைச் சூழ்த்திருந்த நிலப்பகுதியையும் கைப்பற்றிக் கொண்டான். பல்லவ அபராஜித வர்மன் ஆதித்த சோழனேடு பாண்டியனை எதிர்த்தான். அக்காலத்து கங்க அரசனும் பல்லவனுக்கு உதவி புரிந்தான். இடவையிலும், பக்கத்து ஊர்களிலும் போர்கள் நடைபெற்றன. முடிவில் கும்பகோணத்திற்கு வட மேற்கே 5½ மைல் தொலைவில் மண்ணியாற்றின் வடகரையிலுள்ள திருப் புறம்பயத்தில் கி.பி. 880-இல் வரகுண பாண்டியன் தோல்வியுற்றான்.

பல்லலவ அபராஜிதனும் ஆதித்த சோழனும் வெற்றி பெற்றனர். இதன் விளைவாக ஆதித்த சோழனுக்குச் சோழநாடு முழுமையும் ஆள உரிமை கிடைத்தது. பாண்டியரது முதற் பேரரசு வலியிழந்தது. பல்லவப் பேரரசும் வலிகுன்றிப் போயிற்று. சோழப் பேரரசு தலைதூக்குவதற்கு இப்பெரும் போர் ஒரு வாய்ப்பாக அமைந்ததால், தமிழ் நாட்டின் வரலாற்றிலே இது ஒரு முக்கியமான போராக மதிக்கத் தக்கது.

இரண்டாம் வரகுணன் திருச்செந்தூர் முருகக் கடவுளிடம் பெரும் பக்தியுள்ளவன். இவனே மணிவாசகப் பெருமான் காலத்தவன் என்று கருதுவோரும் உண்டு. அப்படியானல் மணிவாசகப் பெருமான் கி பி. 862-க்குப் பின் வாழ்ந்திருத்தல் வேண்டும். முதலாம் வரகுணன் காலத்தவர் மாணிக்கவாசகர் என்ருல் ஒன்பதாம் நூற்ருண்டின் முற்பகுதி இவரது காலமாகும். எப்படியும் இந்தச் சைவசமயாச்சாரியார் ஒன்பதாம் நூற்ருண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவர் என்பது திண்ணம்.

வைணவ ஆழ்வார்களுக்குத் தலைவரான நம்மாழ்வாரும் இந்த நூற்ருண்டினரே. இப்பெருந் தொண்டர்களின் பெரு நூல்கள் திருவாய்மொழி என்றும் திருவாசகம் என்றும் பெயர் பெற்றிருப்பது கூர்ந்து நோக்கத்தக்கது.

இரண்டாம் வரகுண வர்மனுக்குப் புதல்வர் இல்லாததால் இவன் தம்பியும் சீமாறன் சீவல்லபனின் இரண்டாம் புதல்வனுமாகிய பராந்தக பாண்டியன் சடையவர்மன் என்ற பட்டத்துடன் கி. பி. 880-ஆம் ஆண்டிற்குப் பின் அரசு கட்டில் ஏறியதாகக் கருதலாம். சின்னமனூர்ப் பெரிய செப்பேடுகளிலிருந்து இவன் கரகிரியில் உக்கிரனை வென்ற செய்தியும், பெண்ணுகட நகரை அழித்த செய்தியும், கொங்கரை வென்ற செய்தியும், தேவதானங்களும், பிரமதேயங்களும், பள்ளிச் சந்தங்களும் அளித்த செய்தியும் தெரிய வருகின்றன. கரகிரிதான் இன்றும் உக்கிரன் கோட்டை என்று வழங்கும் கரவந்தபுரமாகும். நெடுஞ்சடையன் பராந்தகன் காலத்தில் அமைச்சர்களும் மகா சாமந்தர்களும் அந்த ஊரிலிருந்து வந்து பாண்டியப் பேரரசுக்கு அரணுகத் திகழ்ந்தனர். நாளடைவில் அந்த நிலைமை மாறி இப்பராந்தகன் காலத்தில் கரவந்தபுரத் தலைவன் இப்பாண்டியருடன் முரண்பட்டிருக்க வேண்டும்.

இப்பாண்டியனுக்கு வீரநாராயணன் என்ற சிறப்புப் பெயரும் உண்டு. வானவன் மாதேவி இவனுடைய பட்டத்தரசி. இவவம்மை சேரர்குலத்தினர் என்பதைப் பெயரிலிருந்தே அறிந்து கொள்ளலாம். இபபட்டத்தரசியின் புதல்வன்தான் மூன்ரும் இராச சிம்ம பாண்டியன்.

# கி. பி. 900-க்குப்பின் ஆண்ட பாண்டியர்கள்

கி. பி. 900-ல் பட்டத்திற்கு வந்தவன் மூன்றும் இராசசிம்ம பாண்டியன். சடையவர்மன் பராந்தகனுடைய மகன் இவன்.

எண்ணிறந்த பிரம தேயமும்

எண்ணிறந்த தேவ தானமும்

எண்ணிறந்த பள்ளிச் சந்தமும்'

இனிது இயற்றியவன் என்று செப்பேடுகள் இவனைப் புகழ்கின்றன இவனது பதினும் ஆட்சியாண்டில் அளிக்கப்பெற்றவை சின்னமனூர்ச் செப்பேடுகள்.சின்னமனூர் இப்போது நற்செய்கைப் புத்தூர் என வழங்கப்படுகிறது. இவ்வூருக்கு இவ் அரசன் மந்தர கௌரவ மங்கலம் எனப் பெயரிட்டு இதைப் பிரமதேயமாக வழங்கினன். அதனுல் இவனுக்கு மந்தர கௌரவமேரு என்ற பட்டம் கிடைத்தது. இச் செப்பேடுகளில் இப்பிரமதேயம் குறித்தும், இவ் வரசனுக்கு முன் ஆண்ட பாண்டியர் குறித்தும், இப் பண்டைக் குடியின் சில பழம்பெருமைகள் குறித்தும் செய்திகள் காணப்படுகின்றன. எனவே, கி. பி. 8,9-ஆம் நூற்ருண்டுகளில் ஆண்ட பாண்டியர்களின் வரலாற்றுச் செய்திகளை அறிய இச் செப்பேடுகளை ஒரு சிறந்த ஆதாரச் சாசனமாகக் கொள்ளலாம்.

இச் செப்பேடுகளால் இந்த அரசன் நிகழ்த்திய சில போர்களும் அடைந்த வெற்றிகளும் தெரிய வருகின்றன. ஆனல் சோழர் கல்வெட்டுகளிலிருந்து இப்பாண்டியன் கி பி. 916-ல் முதற் பராந்தக சோழனிடம் தோல்வியுற்றதாகத் தெரிய வருகிறது. பிறகு இவன் இலங்கை மன்னனின் உதவி பெற்று மறுபடியும் சோழனேடு போர் புரிந்து தோல்வி அடைந்தான். பாண்டி நாடு சுதந்திரம் இழந்து கி. பி. 919-ல் சோழர் ஆட்சிக்குட்பட்டது. சின்ன மனூர்ச் செப்பேடுகளிலிருந்து பாண்டியனுக்கும் சோழனுக்கும் இடையே அடிக்கடி போர்கள் நிகழ்ந்தன என்றும் சில போர்களில் பாண்டியன் வெற்றி பெற்ருன். என்றும், வேறு சில போர்களில் சோழன் வெற்றி பெற்ருன் என்றும் அறிகிறோம். இறுதியில் பாண்டி நாட்டின் வட எல்லையிலோ சோழ நாட்டின் தென் எல்லையிலோ இருந்த வெள்ளூர் என்னும் இடத்தில் நடைபெற்ற பெரும்போரில் இராசசிம்மன் நாடிழந்து இலங்கைக்குச் சென்ருன். இலங்கை அரசனிடம் தன் முடியையும் அரச சின்னங்களையும் வைத்து விட்டுத் தன் தாய்

பிறந்த நாடாகிய சேர நாட்டுக்குச் சென்றுன. இவன் காலத்திலே பாண்டியர் ஆட்சி வீழ்ச்சியுற்றது.

மூன்ரும் இராசசிம்ம பாண்டியனின் மகனுன வீர பாண்டியனுக்குச் சோழாந்தகன் என்ற ஒரு சிறப்புப் பெயர் உண்டு. இவன் சோழனிடமிருந்து தன் நாட்டை மீட்டுக்கொண்டிருக்க வேண்டும் என்று தெரிகிறது. இந்த வீழ்ச்சி முதற் பராந்தக சோழனின் மகனுன முதற்கண்டராதித்த சோழனின் ஆட்சித் தொடக்கத்தில் ஏற்பட்டிருக்கலாம். தன் கல்வெட்டுகளில் இவ் வீரபாண்டியன் தன்னைச் 'சோழன் தலை கொண்ட கோவீர பாண்டியன்' எனக் குறிப்பிடுவதையும் காண்கிருேம். இவன், சோழ வம்சத்தினருள் ஒருவனைக் கொன்றிருக்கவேண்டும் என்பது உறுதி. 'வீரபாண்டியன் தலை கொண்ட கோப்பர கேசரி வர்மன்' என்று கல்வெட்டுகளில் ஆதித்த கரிகால சோழன் குறிக்கப்படுவதையும் காண்கிருேம். இப்படிச் சோழன் பழிவாங்கியது கி. பி. 966-ஆம் ஆண்டில் எனக் கருதலாம். வீரபாண்டியனுக்குப்பின் 13-ஆம் ஆண்டுத் தொடக்கம் வரையில் பாண்டியர்கள் சுதந்திரம் இழந்த சிற்றரசர்களாகச் சோழப் பேரரசுக்கு உட்பட்டிருந்தனர். எனினும், முதல் இராசாதிராச சோழன் காலத்தில் மானுபரணன், வீரகேரளன் என்ற பாண்டியர்கள் சுதந்திரம் பெற முயன்று கொலை யுண்டனர். கி. பி. 1048-ல் வீர பாண்டியன் என்ற வேருெரு பாண்டியனும் கொல்லப்பட்டான். முதற் குலோத்துங்க சோழன் காலத்திலும் சில பாண்டியர்களின் மெய்க் கீர்த்திகளைக் காண்கிருேம். எனவே பாண்டியநாடு அமைதியாகச் சோழப் பேரரசுக்கு அடங்கியிருக்கவில்லை.

கி. பி. 12-ஆம் நூற்ருண்டின் இறுதியில் மீண்டும் உயர்நிலை அடையத் தொடங்கியது இந் நாடு. சோழப் பேரரசு வீழ்ச்சியுறவே, பாண்டியரின் இரண்டாம் பேரரசு பட்டமரம் பால் சொரிந்தது போல் மீண்டும் தழைத்தோங்கி நெல்லூர், கடப்பை மாவட்டங்கள் வரை பரவி நின்றது.

# பாண்டியர் செப்பேடுகள் 1

## நெடுஞ்சடையனின் *வேள்விகுடிச் சாசனம்

## அறிமுகம்

பத்து ஏடுகளைக் கொண்ட இந்தச் செப்பேட்டுச் சாசனத்தின் மூலப் பிரதி, லண்டனில் பிரிட்டிஷ் மியூசியத்தில் பாதுகாக்கப்பட்டு வருகிறது. அது எப்போது எவ்விதம் அங்கே சென்றது என்ற விவரம் ஏதும் தெரியவில்லை. சென்ற நூற்றாண்டில் ஸர் வால்ட்டர் எலியட் திரட்டிய மூல ஏட்டுச்சாசனங்களிலே இதுவும் ஒன்று போலும்.

1893–ல் டாக்டர் ப்ளீட் (Dr. Fleet) இந்தச் சாசனத்தினுடைய மசிப்படங்களில் இரண்டு பிரதிகளை இந்தியச் சாசன இலாகாவுக்கு அனுப்பிவைத்தார். அப்போதுதான் திரு. வெங்கையா ஸ்ரீவரமங்கலச் செப்பேட்டுச் சாசனத்தை இந்தியன் ஆண்டிக்வரியில் (Indian Antiquary vol. xxii of 1893 pp. 57—75) வெளியிட்டிருந்தார். அம்மாதிரியே இச்சாசனத்தையும் அந்தப் பத்திரிகையிலே இவர் வெளியிட வேண்டுமென்று டாக்டர் ப்ளீட் விரும்பியிருக்கலாம். எனினும், அந்தச் சாசனமும் அதைப் பற்றிய விவரங்களும் வெளியாகவில்லை. அதற்குப் பதினைந்து ஆண்டுகளுக்குப் பிறகு சின்னமனூரர்ச் செப்பேட்டுச் சாசனங்கள் இரண்டும் கிடைத்தன. இவற்றை 1907–ஆம் ஆண்டு அறிக்கையில் திரு. வெங்கையா விமரிசனம் செய்துவிட்டு, அடுத்த ஆண்டு அறிக்கையில்

* வேள்விக்குடி என்பது வேள்விகுடி என்றே சாசனத்தில் எழுதப்பட்டுள்ளது.

(Epigraphical Report 1908, part II, page 63) இந்தச் சாசனத்தை விரிவாக ஆய்வு செய்தார். அப்போதும் மூலப்பிரதி எவ்விடம் இருந்ததென்பது அவருக்குத் தெரியாது.

அதுபோலவே இந்தச் செப்பேட்டை வைத்திருக்கும் பிரிட்டிஷ் மியூசியத்து அதிகாரிகளுக்கும் அந்தச் சாசனம் யார் வழங்கியது, எதைக் கூறுவது, முன்னதாகவே அது வெளியாகியுள்ளதா? – என்பன போன்ற விவரங்கள் தெரியவில்லை. அதனுல் சாசனத்தின் மசிப்படத்தை இந்தியச் சாசன இலாகாவுக்கு அனுப்பி விசாரித்தார்கள். அதற்குப் பிறகு இந்தச் சாசனம் 1923–ஆம் வருஷத்து எபிகிராபியா இந்திகா 17–ஆம் தொகுதியில், (Epigraphia Indica vol. xvii) 291—309 பக்கங்களில் திரு. எச். கிருஷ்ண சாஸ்திரியால் வெளியிடப்பட்டது.

திருவாங்கூர்ச் சமஸ்தானத்திலே புதைபொருள் ஆராய்ச்சித் துறையில் இருந்த திரு. து. அ. கோபிநாத ராயருக்கும் இந்த மசிப்படம் ஒன்று கிடைத்திருந்தது. அதைத் திரு. கே. ஜி. சங்கரன் வாசித்து, "செந்தமிழ்" 20–ஆம் தொகுதியில் 205–216 பக்கங்களில் வெளியிட்டார். அந்தப் பாடமே முதலில் வெளியானதாகும். இவ்விரண்டு பாடங்களுக்கு மிடையே ஒன்றிரண்டு இடங்களில் பேதமும் உண்டு.

இந்தச் சாசனம் பாண்டியர் செப்பேடுகள் எல்லாவற்றிலும் மிகவும் முக்கியமானது. தொன்றுதொட்டுப் பாண்டியர்களின் ஆட்சியில் இருந்து வந்த அந்த நாட்டை இடையிலே களப்பிரர்கள் கவர்ந்து கொண்டார்கள். அவர்களைக் கடுங்கோன் வென்று மறுபடியும் பாண்டிய அரசை நிலைநிறுத்திய பிறகு ஆட்சி புரிந்த ஏழாம் வேந்தனுடைய காலத்தில் இந்தச் சாசனம் வழங்கப்படுகிறது. இந்தச் சாசனத்தை அளித்த பராந்தக நெடுஞ்சடையனுக்கு முன், நாட்டை ஆண்ட ஆறு மன்னர்களைப் பற்றிய விரைங்கள் முதன் முதலாகவும் விரிவாகவும் இந்தச் சாசனத்தி லிருந்தே தெரியவருகின்றன.

இச் சாசனம் கிடைக்காமலிருந்தால் அவர்களைப் பற்றிய செய்திகளில் பல நமக்குத் தெரியாமலே போயிருக்கும். மேலும் பாண்டியர்கள் வழங்கியனவாகக் கல்லிலும் செம்பிலும் கிடைக்கும் சாசனங்களுள் இதுவே காலத்தால் முற்பட்டது. இந்தச் சாசனம் முதன் முதலாக வெளி யிடப்பட்ட காலத்தில் பாண்டியர்களைப் பற்றிய விவரங்கள், வரலாற்று முறையில் நமக்கு அதிகமாகத் தெரிந்திருக்கவில்லை. அதனுல் பாண்டிய

மன்னர்கள் அடைந்தனவாகச் சாசனத்திலே குறிக்கப்படும் வெற்றிகள் பலவற்றை நாம் சரியாக அறிந்துகொள்ள முடியவில்லை. அந்தப் போர்கள் நடந்த இடங்கள் எங்கேயுள்ளன என்பதையோ, அவ்விடங்களில் பாண்டியரோடு போர் புரிந்தவர் யார் என்பதையோ சரியாகப் பெரும் பாலும் நிச்சயிக்க முடியவில்லை. இன்றைக்கும் அந்த நிலையில் பெரு மாறுதல் ஏதும் ஏற்பட்டுவிடவில்லை.

பத்து ஏடுகளைக் கொண்ட இந்தச் சாசனத்தில் முதல் ஏடும் கடைசி ஏடும் உட்புறம் மட்டுமே எழுதப்பட்டிருக்கின்றன. மற்ற எட்டு ஏடுகளும் இருபுறமும் எழுதப்பட்டுள்ளன. இவ்விதம் 18 பக்கங்களில் பொறிக்கப்பட்டுள்ள இந்தச் சாசனம் மொத்தம் 155 வரிகளைக் கொண்டது.

முதல் ஏழு ஏடுகள் பின்புறத்திலே இடது பக்கத்து விளிம்பில் வரிசையாக ஒன்று முதல் ஏழு வரை முறையே எண்கள் இடப்பட்டுள்ளன. பின் மூன்று ஏடுகளில் எண் எதுவும் காணப்படவில்லை.

வளையத்தில் கோக்கப்படுவதற்காக இந்த ஏடுகள், மற்றச் சாசன ஏடுகளைப் போலவே இடது புறத்தில் நடுவிலே துளையிடப்படாமல், தலைப்பில் இடது புறமாகத் துளையிடப்பட்டுள்ளன. அதனால் இந்தச் செப் பேடுகளைச் சாதாரண ஓலைச் சுவடிகளைப் போல் மேலும் கீழுமாகப் புரட்டிப் பார்க்கவேண்டி வரும்.

தென்னாட்டில் கிடைக்கும் பழைய காலத்தைச் சார்ந்த மற்றச் செப்பேடுகளைப் போலவே இந்தச் சாசனத்திலும் தமிழ், சம்ஸ்கிருதம் ஆகிய இரு பகுதிகளும் உள்ளன. சம்ஸ்கிருதப் பகுதி கிரந்த எழுத்திலும், தமிழ்ப் பகுதி வட்டெழுத்திலும் உள்ளன. தமிழ்ப் பகுதியிலே விரவி வரும் சம்ஸ்கிருதச் சொற்கள் பெரும்பாலும் கிரந்த எழுத்திலேயே காணப்படுகின்றன.

கிரந்த எழுத்துக்களுள் 'க்ஷ'காரம் இப்பொழுது கொண்டுள்ள வடிவத்தையே பெற்றிருக்கக் காணலாம். ஆராய்ச்சியாளர்கள் அதை முதலில் 'த்ஷ' என்று வாசித்துப் பிறகு 'க்ஷ'காரமாகத் திருத்துவது வழக்கம். அது தேவையில்லை என்பதையும் அந்த வடிவம் 'க்ஷ'காரத் திற்கென ஏற்பட்ட தனி வடிவமாகும் என்பதையும் முன்னரே பல்லவர்

* பல்லவர் செப்பேடுகள் முப்பது (பக்கம்–34) தமிழ் வரலாற்றுக் கழக வேளியீடு.

செப்பேடுகளின் தொகுப்பில் எடுத்துக் காட்டியுள்ளோம். இந்தத் தொகுப்பிலும் அந்த எழுத்து அதேமாதிரி 'க்ஷ'காரமாகவே வாசிக்கப் பட்டுள்ளது.

*ஜிஹ்வாமூலியம், உபத்மாநீயம் ஆகியவை உரிய இடங்களில் முறைப்படி எழுதப்பட்டுள்ளன.

அநுஸ்வாரம் வரவேண்டிய சில இடங்களில் அது மகர மெய் யெழுத்தாகவும், மகரமெய்யெழுத்து வரவேண்டிய சில இடங்களில் அது அநுஸ்வாரமாகவும் ஏட்டில் மாறுபாடு காணப்படுகிறது.

சம்ஸ்கிருதக் கூட்டெழுத்துகளை எழுதும்போது மேலேயுள்ள மெய்யெழுத்துக்கு ஏட்டிலே புள்ளியிடப்பட்டிருப்பது கவனிக்கத்தக்கது. இது தமிழ் முறையைப் பின்பற்றியது எனலாம்.

சுலோகங்களின் முடிவிலே ஒவ்வொரு இடத்திலும் பிள்ளையார் சுழி (உ) போன்ற ஓர் உருவம் காட்டப்பட்டுள்ளது.

தமிழ்ப் பகுதியிலே மெய்யெழுத்துகள் பெரும்பாலும் புள்ளியிடப் பட்டுள்ளன. அன்றியும் எகர ஒகரக் குறில்கள்—தனி உயிரெழுத்திலும் சரி, உயிர்மெய்யெழுத்திலும் சரி புள்ளியிடப்பட்டுள்ளன. அவை எல்லா இடங்களிலும் இருக்கின்றனவா என்பதை மசிப்படத்திலிருந்து நிச்சயிக்க முடியவில்லை. ஆயினும் நெடிலாக அமையத்தக்க இடங்களில் அவ் வெழுத்துகள் நெடிலாகவே இப்பகுதியில் காட்டப்பட்டுள்ளன.

'கொளீஇய' (வரி—97) என்று அளபெடை எழுதப்பட்டிருப்பதும் கவனிக்கத்தக்கது. எகரத்துடன் முடிவடையும் சொற்களின் இறுதியில் யகர ஒற்று சேர்க்கப்படும் முன்னுள் வழக்கம் இந்தச் சாசனத்திலே காணப்படுகிறது. 'இன்' 'உம்' 'ஒடு' என்பன போன்ற வேற்றுமை உருபுகளும், சாரியைகளும், முதல்நிலைச் சொற்களோடு சேரும்போது, யகர உடம்படு மெய் சேர்க்கப்பட வேண்டிய இடங்களில் அது சேர்க்கப் படாமல், அத்தகைய விகுதிகள் உயிரெழுத்துடனேயே ஆரம்பமாவ தாகக் கொடுக்கப்பட்டுள்ளன. 'இது' என்பது ஓரிடத்திலே 'ய்து' என்று கொடுக்கப்பட்டுள்ளது. 'இஃது' என்ற சொல்லின் மாற்று வடிவமே அது.

* சம்ஸ்கிருதத்தில் 'க' காரத்துடன் தொடங்கும் சொல்லுக்கு முன்வரும் பாதி விஸர்க்கம் ஜிஹ்வாமூலியம் என்றும், 'ப' காரத்திற்கு முன்வரும் பாதி விஸர்க்கம் உபத்மாநீயம் என்றும் சொல்லப்படும்.

சம்ஸ்கிருதம், தமிழ் ஆகிய இரு பகுதிகளும் செய்யுள் நடையிலே அமைந்துள்ளன. தமிழ்ப் பகுதியிலே காணும் தான விவரம், தான நிலத்தின் நான்கெல்லே, அதனே நிறைவேற்றி வைத்த அதிகாரிகள் பெயர் முதலிய விவரங்கள் எல்லாம் செய்யுள் அமைப்பிலேயே அடங்கியுள்ளன.

மேலும், இப்பிரசஸ்திபாடின' (வரி–139) என்று காணப்படுவதும் இச்சாசனம் செய்யுள் நடையிலே எழுதப்பட்டதென்பதை உறுதிப் படுத்தும். இச் செப்பேடுகளிலீ காணும் தமிழ்ப் பிரசஸ்திபெரும்பாலும் கலி முதலிய பாக்களின் ஓசைகளாலும், சொற்சீரடிகளாலும் அமைந் துள்ளது. யாப்பிலக்கண அமைதிப்படி இது முற்றும் அமையவில்லே யென்றும், பிழைகள் உள்ளனவென்றும், அதனுல் இதைச் செய்யுளாகக் கொள்ளாமல் உரைநடையாகக் கொள்ளவேண்டுமென்றும் கூறுவோர் உண்டு. இது பற்றிய விவாதம் இங்கே தேவையில்லே.

சம்ஸ்கிருதம், தமிழ் ஆகிய இரு பகுதிகளும் கொண்ட சாசனங்களிலே பெரும்பாலும் தான விவரங்களேக் கொண்டு இரு பகுதி களும் நிறைவு பெற்றிருக்கும். ஒன்றில் காணப்படாத விஷயங்கள் மற்ருென்றிலிருந்து அறிந்துகொள்ள முடியும். ஆனுல், இந்தச் சாசனத்தில் அந்த முறை காணப்படவில்லே. இந்தச் சாசனத்திற்கு மங்கலராஜன் ஆணத்தியாவான் என்ற ஒரு செய்தி மட்டுமே சம்ஸ்கிருதம், தமிழ் ஆகிய இரு பகுதிகளிலும் பொதுவாகக் காணப்படுகிறது. மற்றப்படி இரண்டும் தனித்தனியாக அமைந்தவை.

மங்கலத்துடன் ஆரம்பிக்கும் சம்ஸ்கிருதப் பகுதி, பாண்டிய வம்சத்தின் பழம்பெருமையைக் கூறி, தானம் வழங்கிய அரசனுடைய முன்னேர்களில் மூவர் பெயரை மட்டும் எடுத்துரைத்து சாசனத்தை வழங்கிய ஜடில பராந்தகனேக் கூறுவதோடு நின்றுவிடுகிறது. யாருக்கு எதற்காக இச்சாசனம் வழங்குப்பட்டதென்ற விவரம் சம்ஸ்கிருதப் பகுதியில் காணப்படவில்லே.

சிவபெருமானுக்கு வணக்கம் கூறும் முதல் சுலோகத்துடன் ஆரம்பிக்கிறது சம்ஸ்கிருதப் பகுதி. அந்த இரண்டு சுலோகங்கள் பாண்டிய வம்சத்தின் புகழைக் கூறுபவை. இந்த வம்சத்தவர் பூ பாரத்தைத் தாங்குவதால் ஆதிசேஷனுக்கு ஒய்வு ஏற்படுகிறது என்று தெரிவிக்கிறது ஒரு சுலோகம். அகத்திய முனிவரைப் புரோகிதராகக் கொண்டது என்பதை எடுத்துரைப்பது வேருெரு சுலோகம். பிரளய

காலத்திலும் பாண்டிய வம்சம் அழிவதில்லை யென்றும், சென்ற கல்பத்தின் கடைசியிலே இருந்த அரசன் இந்தக் கல்பத்தின் துவக்கத்தில் சந்திர னுக்குப் புதன் என்ற மகனாகப் பிறந்தானென்றும் அவனுக்குப் புரூரவஸ் பிறந்தானென்றும் ஒரு சுலோகம் கூறுகிறது.

அப்பால் பாண்டிய வம்சத்தின் பழைய அரசர்கள் நிகழ்த்தியன வாகச் சில சாதனைகள் புராண தோரணையில் குறிப்பிடப்பட்டுள்ளன. அவை வருமாறு:-

1. மேருவின் உச்சியில் இரு மீன் உருவங்களைப் பொறித்தது.
2. இந்திரனுடைய சிம்மாசனத்தில் ஒரு பாதியையும் அவனுடைய மாலையையும் அடைந்தது.
3. உலக மக்களுக்குப் புகலிடமானது.
4. பூமிதேவிக்குக் கணவனாக அமைந்தது.
5. அரக்கர் தலைவர்களை வென்றது.
6. தேவர்களைத் தூதராகக் கொண்டது.
7. பாற்கடலைக் கடைந்தது.
8. அகத்தியரால் முடி சூட்டப்பெற்றது.
9. குடிமக்கள் அனைவரும் விரும்பியதை அளித்தது.

இத்தகைய வம்சத்திலே மூவுலகம் போற்றும் குணங்களையுடைய மாறவர்மன் தோன்றினான் என்றும், போரில் எதிரிகள் பலரை வென்று தோள் வலியால் உலகைக் காத்துவந்த அவ்வரசன் சந்திர வம்சத்திலே தோன்றியவன் என்றும், துலாபாரம் நடத்தி அந்தப் பொன்னை அறிஞர்கள் பலருக்கும் வழங்கினான் என்றும் 7–ஆவது, 8–ஆவது சுலோ கங்கள் புகழ்கின்றன.

இவன் மகனான ரணதீரன் இளஞ்சூரியனோடு ஒப்பிடப்பெற்றிருக்கிறான். ரணதீரன் மகன், ராஜசிம்மன் என்று மறு பெயர் கொண்ட மாறவர்மன். இவன் புகழ் நான்கு சுலோகங்களில் விவரிக்கப்பட்டிருக்கிறது. போரிலே பல்லவ மல்லன் இவனுக்குத் தோற்று அஞ்சி ஓடினான் என்பது ஒன்றைத் தவிர இவனைப் பற்றிய வேறு வரலாற்றுச் செய்தி கிடைக்கவில்லை.

இவன் மளவேந்திரன் மகள்—அதாவது மழவ மன்னன் மகள் ஒருத்தியை மணந்தான் என்றும், அவளிடம் பிறந்தவனே இச் சாசனத்தை வழங்கிய ஜடிலவர்மன் என்றும் ஒரு சுலோகம் (14)

கூறுகிறது. இவனுக்குப் பராந்தகன் என்று வேறு பெயரும் உண்டு. (சு. 17)

ஸர்வக்கிரது யாஜியான வரோதயபட்டன் இந்தப் பிரசஸ்தியை எழுதினான் என்ற விவரத்துடன் இப்பகுதி முடிவுறுகின்றது.

இந்தச் சாசனத்தின் தமிழ்ப் பகுதி தனிச்சிறப்பு வாய்ந்தது. ஆரம்பத்தில் மங்கலச் சொல் ஏதும் இல்லை. "கொல்யானை" என்றே ஆரம்பிக்கிறது. கடவுள் வணக்கமோ பாண்டிய வம்சத்தின் புகழோ ஏதும் தனியாகத் தமிழில் குறிக்கப்படவில்லை. தானம் வழங்கப்பெற்ற கிராமத்தின் பழைய வரலாற்றுடனே சாசனப்பகுதி ஆரம்பிக்கிறது.

தானம் பெற்றவனுடைய முன்னோன் ஒருவனுக்கு, அந்த ஊர் பழைய காலத்திலே பல்யாக முதுகுடுமிப் பெருவழுதி என்ற ஓர் அரசனால் வழங்கப்பட்டது. நடுவிலே, நாட்டின் ஆட்சி களப்பிரரிடம் மாறியிருந்தது. அந்நாளிலே தானக் கிராமத்தை அந்த வேற்று அரசாங்கம் கைப்பற்றிவிட்டது. மீண்டும் பாண்டிய வம்சத்தின் அரசு நிறுவப்பட்ட பிறகும் அந்த ஊர் முதலில் தானம் பெற்றவனுடைய வம்சத்தாருக்குக் கிடைக்கவில்லை.

பாண்டியர் ஆட்சி மீண்டும் நிறுவப்பட்டு, ஆறு அரசர்களின் காலம் முடிந்து ஏழாம் அரசனான பராந்தக நெடுஞ்சடையன் ஆட்சியில் ஒரு நாள், முதலில் தானம் பெற்ற கொற்கை கிழான் வழி வந்தோரில் ஒருவன், மதுரை மாநகரில் மனங்கொதித்துக் கூச்சலிட்டான். அதைக் கேட்ட அரசன் அவனை அழைத்து விசாரித்தான். விவரத்தை அறிந்த மன்னன் அவன் கூறியதை ஆதாரங்களோடு நிரூபித்துக் காட்டுமாறு கட்டளையிட்டான். நற்சிங்கன் என்னும் அவனும் அவ்விதமே எடுத்துக் காட்ட, அரசன் தன் முன்னோரால் வழங்கப்பட்டதைத் தானும் வழங்குவதாக அப்பொழுதே உத்தரவிட்டான்.

இந்த நற்சிங்கன் மீண்டும் தானம் பெற்ற அந்தத் தானம் முழுவதையும் தனக்கே வைத்துக்கொள்ளாமல், அதில் ஒரு பகுதியை மட்டும் தனக்கு வைத்துக்கொண்டு, மற்றப் பாகத்தைப் பிறர்க்குப் பகிர்ந்து கொடுத்தான்.

இந்தத் தானத்தை நிறைவேற்றுவதற்குக் கரவந்தபுரத்து வாசியான மூவேந்த மங்கலப் பேரரையன் என்பான் நியமிக்கப்பட்ட செய்தியும் காணப்படுகிறது.

தமிழ்ப் பகுதியின் நடை சற்றுக் கடினமானது. சொற்செட்டும் பொருட்செறிவும் கொண்டது. அதனுல் இதிலே கூறப்பட்டிருக்கும் விஷயங்கள் பலவற்றை நாம் சரியாக உணர்ந்துகொள்ள முடியவில்லை. உதாரணமா, இதிலே 'கடற்ருனை' என்ற தொடர் பல இடங்களில் காணப்படுகிறது. ஒவ்வோரிடத்திலும் அதற்குக் "கடல் போல் பரந்த சேனை" என்றே பொருள் கண்டிருக்கிருர்கள். இந்தச் சாசனத்திலே இது ஒன்பது இடங்களில் வருகிறது. பத்தாவதாகப் 'பரவைத்தானை' என்ற தொடரும் காணப்படுகிறது. அதுவும் 'கடல்தானை' என்றே பொருள் படும். இப் பாண்டிய மன்னர்கள் வலிமை மிகுந்த கடற்படை ஒன்றையும் வைத்திருந்தார்கள் போலும். அதனுல் சில இடங்களிலாவது 'கடற்ருனை' என்னும் தொடருக்குக் கடற்படை என்ற பொருள் கொள்ளலாம்.

அதேபோல, கொற்கை கிழான் நற்கொற்றனுக்கு "வேள்விகுடி" என்ற அந்த ஊரைப் பல்யாக முதுகுடுமிப்பெருவழுதி என்ற பாண்டியன் முன்னுளிலே எந்தச் சூழ்நிலையில் வழங்கினுன் என்ற செய்தியை எடுத்துரைக்கும் ஆரம்பப் பகுதிக்கும் ஆராய்ச்சியாளர்கள் இதுவரையில் சரியான விளக்கம் கூறவில்லை. வேள்வி ஒ றை நடத்த விரும்பிய நற்கொற்றன், அதற்கு அரசனுடைய உதவி பெற எண்ணி, திருவாய்க் கேள்வி என்ற அதிகாரிகள் மூலம் அரசனிடம் விண்ணப்பித்து, அந்த அதிகாரிகளால் "வேள்விகுடி" என்று பெயர் சூட்டப்பெற்ற ஊரைப் பெற்ருன் என்று இந்தச் சாசனத்தை விரிவான முன்னுரையுடன் பதிப்பித்த திரு. எச். கிருஷ்ண சாஸ்திரி கருதினுர்.

டாக்டர் எஸ். கிருஷ்ணசாமி ஐயங்கார் அதை ஏற்றுக்கொள்ளவில்லை. யாகம் செய்ய ஆரம்பித்த நற்கொற்றன் அதனை முடிக்க வகையில்லாமல் அரசன் உதவியைப் பெறவேண்டி, வேதவித்துக்களான பிராமணர்கள் மூலம் அரசனுக்கு விண்ணப்பஞ் செய்து, அந்த ஊரைப் பெற்ருன் என்று இவர் கூறினுர்.

நற்கொற்றனைத் தலைவனுகக் கொண்ட வேதியர்கள் உதவியுடன் அரசனே யாகத்தை நடத்தி, அந்த யாக தக்ஷிணையாக "வேள்விகுடி"யைத் தானஞ் செய்தான். தானம் பெற்ற ஊரை நற்கொற்றன் வழிவந்தோர் நீண்ட காலம் அநுபவித்து வந்தார்கள். பிறகு களப்பிரன் என்னும் கலியரசன் நாட்டைக் கைப்பற்றி, அந்தத் தானத்தை நீக்கி விட்டான். அப்பால் பாண்டிய மன்னனுகிய கடுங்கோன் களப்பிரர்

ஆட்சியை அகல நீக்கி, நாட்டைக் கைக்கொண்டு, பாண்டிய குல ஆட்சியை மீண்டும் நிலைநிறுத்தினன். இந்தச் செய்தி 39—46 வரிகளில் விவரிக்கப்பட்டுள்ளது.

இந்தக் கடுங்கோன் "மானம் பேர்த்த தானை வேந்தன்" என்று புகழப்பட்டிருக்கிறான். பேர்த்த என்ற சொல்லைப் போர்த்த என்று கொண்டு, மானத்தைப் போர்வையாக அடைந்த சேனையை உடைய அரசன் என்று ஆராய்ச்சிப் பேரறிஞர்களான திருவாளர்கள் மு. இராகவையங்கார், சதாசிவபண்டாரத்தார் ஆகியவர்கள் பொருள் கொண்டனர். 'பேர்த்த' என்ற சொல்லை அவ்வாறு மாற்றிப் பொருள் கொள்ள வேண்டிய அவசியம் இல்லை.

இச் சொல்லுக்கு அக்காலத்துப் பாண்டி நாட்டுத் தமிழில் குறைத்த, போக்கிய, அழித்த, சிதைத்த – என்னும் பொருள்கள் உள்ளன. எதிரிகளாகிய களப்பிரரின் பெருமையைச் சிதைத்த சேனையை உடையவன் என்றே இதற்குப் பொருள் கொள்ளவேண்டும். தளவாய்புரம் செப்பேட்டுச் சாசனத்திலும் இவ்வரசன் மானம் பேர்த்த கடுங்கோன் என்று சுட்டிக் காட்டப்படுவது இதை உறுதிப்படுத்துகிறது.

தமிழ் நாட்டு வரலாற்றிலே களப்பிரர்கள் ஆட்சியைப் பற்றிய அத்தியாயம் இன்னும் சரியாக எழுதப்படவில்லை. அவர்கள் யார்? எங்கிருந்தார்கள்? எவ்விதம் தமிழ் நாட்டுக்கு வந்தார்கள்? என்பன போன்ற விவரங்கள் இன்னும் சரியாக ஆராய்ந்து தரப்படவில்லை.

பிற்காலத்தில் காஞ்சிபுரத்துப் பல்லவர்களும் வாதாபிச் சளுக்கியர்களும் களப்பிரர்களை வெற்றி கொண்டதாகக் கூறிக்கொள்வர். வனவாசிக் கதம்பர்களும் அந்தப் பெருமைக்கு உரியவராவர். கடுங்கோனின் வெற்றிக்குப் பின் களப்பிரர்கள் சிற்றரசர்களாகித் தமிழ் நாட்டில் இருந்ததாக ஊகிக்கலாம். இத்தகைய களப்பிரர்களின் சரித்திரம் விரிவாகத் தெரியாமலிருப்பது வியப்பை உண்டாக்குகிறது.

பாண்டியர் ஆட்சியைக் கைப்பற்றிய களப்பிரரை வென்று மீண்டும் பாண்டிய ஆட்சியை நிறுவியவன் கடுங்கோன் என்று இச் சாசனம் தெளிவாகக் கூறுகிறது. இந்தக் கடுங்கோனைத் தலைச் சங்க காலத்தின் இறுதியில் இருந்தவனென்று திரு. வெங்கையாவும், (Epigraphical report, 1908) இந்தச் சாசனத்தை விரிவாக வெளியிட்ட திரு. எச். கிருஷ்ண சாஸ்திரியும் (Epigraphica Indica Vol. xxii page 295)

கூறியுள்ளனர். திரு. கே. வி.சுப்பிரமணிய ஐயர் (The Indian antiquary Vol. 40 1911, pp. 224-229) இதே கருத்தைக் கூறியுள்ளார். இக் கருத்து முற்றும் தவறானது.

தலைச்சங்க காலத்தின் இறுதியில் இருந்த அந்தப் பழைய கடுங்கோன் வேறு என்பதை இறையனார் அகப்பொருள் உரைப் பாயிரத்திலிருந்தே அறிந்துகொள்ளலாம்.

இந்தச் செப்பேட்டில் குறிக்கப்படும் கடுங்கோன் 3–ஆம் சங்க காலத்திற்குப் பிறகு கி–பி. ஏழாம் நூற்றாண்டின் முற்பகுதியில் இருந்தவன் என்று* திரு. மயிலை சீனி வேங்கடசாமி கருதுகிறார்.

இந்தச் சாசனத்திற்குப் பிறகு தோன்றிய தளவாய்புரம் செப்பேடுகளிலும் இந்தக் கடுங்கோன் குறிப்பிடப்படுகிறான்.

கடுங்கோனுக்குப் பிறகு அவன் மகன் **அவனிசூளாமணி** என்ற மறு பெயர் கொண்ட **மாறவர்மன்** அரசுரிமை எய்தினான். அவன் மலர் மகளை மணம் புரிந்து கொண்டான் என்றும், எவ்வகைப்பட்ட எதிரிகளையும் அழித்தான் என்றும் சம்பிரதாயமாகப் புகழப்பட்டிருக்கின்றானேயல்லாமல், குறிப்பாக அவனைப் பற்றிய எந்த நிகழ்ச்சியும் இச் சாசனத்தில் விவரிக்கப்படவில்லை.

அவனுக்குச் **சேந்தன்** மகனானான். இவனுக்குச் **செழியன், வானவன்** என்ற சிறப்புப் பெயர்கள் காணப்படுவதால் இவன் சேரரையும் வெற்றிகொண்டான் என்பது ஊகிக்கப்படும். செழியன் என்பது பாண்டியருக்கு மறுபெயராகும்.

நான்காவதாக **அரிகேசரி** என்ற பெயரால் சிறப்பிக்கப்பட்ட நெல்வேலி வென்ற **நெடுமாறன்** பெயர் காணப்படுகிறது. அவன் தனக்கு முன்னால் அரசு புரிந்தவனுக்குப் "பழிப்பின்றி வழித் தோன்றியவன்" என்றும், உதயகிரிமத்தியத்து உறுசுடர் போலத் தெற்றென்று திசை நடுங்க வெளிப்பட்டவன் என்றும் புகழப்பட்டிருக்கிறான்.

இம்மன்னன் வெற்றி கொண்டனவாக ஐந்தாறு போர்களைப் பற்றிச் சாசனம் குறிப்பிடுகிறது. அவை நடந்த ஊர்கள் எங்கேயுள்ளன?

* பேராசிரியர் டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை வெள்ளிவிழா மலர் பக்கம் 233–242 'மதுரைக் காஞ்சியின் காலம்' என்றும் கட்டுரை காண்க.

அவ்விடங்களிலே பாண்டியனிடம் போர் செய்து தோல்வியுற்றவர் யார்? என்பன போன்ற விவரங்கள் எவையும் கிடைக்கவில்லை.

சூழியானை செலவுந்திப்
பாழிவாயமர் கடந்து
வில்வேலிக் கடற்றானை
நெல்வேலிச் செருவென்றும்

என்று ஆரம்பிக்கிறது இவனுடைய வெற்றிகளைக் கூறும் பகுதி. பாழிப் போர், நெல்வேலிப் போர் ஆகிய இரண்டும் இங்கே குறிப்பிடப்பட்டுள்ளன என்றே ஆராய்ச்சியாளர் பொதுவாகக் கருதுவர். அவை இரண்டும் ஒன்றுக்கொன்று தொடர்பில்லாத இரு தனிப் போர்கள் என்றே அவர்கள் பொதுவாகக் கருதுவர். பாழிப் போரைப் பற்றி பாண்டிக் கோவையில் பல பாடல்கள் உள்ளன. எனினும், அது எங்கே இருந்தது என்பதைப் பற்றி விவரம் ஏதும் தெரியவில்லை.

சாசனம் அடுத்தபடியாக இவ்வரசனைப்பற்றி,
விரவி வந்தடையாத்
பரவரைப் பாழ்படுத்தும்
அறுகாலினம் புடைதிளைக்குங்
குறு நாட்டவர் குலங்கெடுத்தும்

என்று கூறுகிறது. பரவர், குறு நாட்டவர் ஆகிய இருவரையும் வென்ற இரு வேறு செய்திகள் இதிலே குறிக்கப்பட்டுள்ளனவென்று ஆராய்ச்சி யாளர்கள் கருதுவர். பரவர் திருநெல்வேலிப் பக்கத்தில் கீழைக் கடற் கரையில் இருந்த நெய்தல் நிலமக்கள்.

பரவரைத் தலையானங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்சடையன் அடக்கினான் என்ற செய்தியைப் பத்துப் பாட்டு மதுரைக் காஞ்சியும் கூறுகிறது. இதனால் பாண்டிய நாட்டைச் சேர்ந்த பரவர்கள் அடிக்கடி கலகம் செய்துவந்தார்களென்பதும், அக்கலகத்தைப் பாண்டியர்கள் அடக்கி வந்தார்களென்பதும் தெரிகிறது.

குறு நாடு என்பது எது, எவ்விடம் உள்ளது என்பது விளங்கவில்லை.

அடுத்தபடியாக அவன் செந்நிலத்துப் போரில் வென்றான் என்ற செய்தி கூறப்பட்டுள்ளது. அரிகேசரி மாறவர்மன் மட்டுமேயல்லாமல், இவனுக்கு ஐந்து தலைமுறைக்குப் பின் வநத பராந்தக வீர நாராயண

பாண்டியனும் செந்நிலத்தில் போர் நடத்தி வெற்றி கொண்டிருக்கிறான் என்பதை தளவாய்புரம் செப்பேடு (115–117 வரி)களில் காணலாம். அரிகேசரியின் செந்நிலப் போரைப் புகழ்ந்துரைக்கும் பாடல்கள் பாண்டிக்கோவையிலே பல உள்ளன. இவைகளைக் கவனித்தால், செந்நிலம் ஒரு முக்கியமான பிரதேசமாக இருந்திருத்தல் வேண்டு மென்பது தெரிகிறது.

அடுத்தபடியாக இம்மன்னன் கேரளனை வென்று புலியூரைக் கைப் பற்றிய செய்தி, "பாரளவும் தனிச்செங்கோல் கேரளன்" என்று கேரளனைப் புகழ்ந்திருப்பதைக் கவனித்தால் அவனுடைய நாடு நீண்ட தூரம் பரவியிருந்ததென்பதும் அவன் மிக்க வலிமை வாய்ந்தவன் என்பதும் ஊகிக்கப்படும். அந்த வருணனை மேலைக் கடற்கரையோரமாக அரசு புரிந்த சேரனை மட்டுமே குறிப்பதாக ஆகாது. கேரளனை அவனது மனைவி மக்களோடும் யானை முதலிய குலதனங்களோடும் பாண்டியன் பல முறையும் கைப்பற்றினான் என்று சாசனம் கூறுகிறது. இன்னும், அவ னுடைய முக்கிய நகரமான புலியூரை ஒரே நாளில் பொழுது சாய்வதற்குள்ளாகக் கடற்போரில் இவன் வென்று கைப்பற்றினான். இதிலிருந்து புலியூர் என்பது கடற்கரையை ஒட்டிய பட்டினம் என்று தெரியவருகிறது. இன்னும் அது அரண்வலி கொண்ட கோட்டை போல் மதில்களுடன் விளங்கியது என்பதும் தெரியவரும். புலியூர் என்று பெயர் கொண்ட ஊர்கள் பல நம் நாட்டில் உள்ளன. அவற்றுள் பெரும்பற்றப் புலியூர், எருக்கத்தம் புலியூர் என்பனபோல அடைமொழியுடன் கூடினவைகளும் உண்டு. எனினும், சேர நாட்டின் தலைநகராக விளங்கிய புலியூர் எது என்பது தெரியவில்லை.

கடைசியாக இவன்,

"வேலாழியும் வியன்பரப்பும்
ஏலாமைசென்று எறிந்து அழித்தும்"

என்றும் புகழ்கொண்ட செய்தி காணப்படுகிறது.

அரசாங்க சாசன இலாகாவின் தலைவர், இதனை மேலே குறிப் பிட்ட கேரளனோடு நடத்திய போரின் ஒரு பகுதியாகவே கொண்டு (அவன் நாட்டிலே) எதிர்ப்பு இல்லாமல் முன்னேறிச் சென்று தாக்கி, உயர்ந்த மலைகளையும், கடல் போல் பெருகி அதிகமாயிருந்த வேல் களையும் அழித்தான் என்று இவனுடைய கேரள வெற்றியோடு சேர்த்தே

இதற்குப் பொருள் கொண்டிருக்கிறார். ஆகவே, அவர், "வேலாழி" என்பதை வேல்களால் ஆகிய கடல் (வேல் + ஆழி) என்று விரித்துப் பொருள் கொண்டது தெரியவரும்.

இவ்வரசன் அநேக ஹிரண்யகர்ப்பம், துலாபாரம் என்ற மஹா தானங்களைப் பலமுறை நடத்தி அந்தப் பொன்னை அந்தணர்க்கும் அசக்தர்களுக்கும் வாரி வழங்கினான் என்று இச்சாசனம் கூறுகிறது.

இவனுக்குச் சடையன் என்ற மகன் இருந்தான். அவன் மருதூரில் அடைந்த வெற்றியையே முதலாவதாகச் சாசனம் கூறுகிறது. அந்த வெற்றியின் பயனாக அவன் அம்பு எய்யாமலே ஆய்வேளைக் கைப்பற்றினானாம்.

இன்னும் செங்கொடி, புதான்கோடு ஆகிய இரண்டு இடங்களிலும் வெற்றிகொண்டு ஆய்வேளும் சிறிதும் கோபம் கொள்வதற்கு வழியில்லாத பெருவெற்றியை அடைந்தானாம். மருதூர் என்பதைத் திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள திருப்புடைமருதூர் என்றே ஆராய்ச்சியாளர் கருதுவர். ஆய்வேளிர் என்பார் மேலைக்கடற்கரையிலே பழைய திருவாங்கூர் சமஸ்தானத்தின் தென் பகுதியான வேணாட்டை ஆண்டு வந்தவர்கள்.

கி. பி. இரண்டாம் நூற்றாண்டின் மத்தியில் யவன ஆசிரியன் தாலமி என்பான் எழுதிய பூமிவர்ணனையிலும் அந்தப் பிரதேசம் ஆய் நாடு என்று குறிக்கப்பட்டிருக்கிறது. சங்க நூல்களிலும் ஆய்மன்னர்களைப் பற்றிய பாடல்கள் பல உள்ளன.

இம்மன்னன் கொங்கர் கோன் என்றும், மதுரகருநாடகன் என்றும் வருணிக்கப்பட்டிருக்கிறான். கொங்குநாடு, கர்நாடகதேசம் ஆகியவை இவனுடைய ஆட்சியில் அடங்கியிருந்தனவென்பது தெளிவாகும்.

இன்னும் இவன், தென்னவானவன், செம்பியன் சோழன் என்றும் புகழப்பட்டிருக்கிறான். முதல் பெயரைத் தென்னன்வானவன் என்று இரு சொற்களாகவே ஆராய்ச்சியாளர்கள் கொள்வர். சேர சோழ பாண்டிய நாடுகள் மூன்றையும் ஒரு குடைக்கீழ் கொணர்ந்து அவன் அரசு புரிந்தான் என்பதையே இந்த விருதுகள் உணர்த்துமென்று அவர் கருதுவர். தென்னவானவன் என்பதை ஒரே பெயராகக் கொண்டு சோழ பாண்டியன், சோழ

கங்கன், சோழகேரளன் என்று பிற்காலத்தில் வழங்கிய பட்டப் பெயர்களைப்போலவே பொருள் கொள்ள வேண்டும். அதன்படி தென்ன வானவன் என்பதில் தென்னவனாகிய வானவன் அதாவது, பாண்டியனாயி னும் சேரநாட்டை ஆள்பவன் என்றே உணர்த்தும். இவன் ஆட்சி கொங்கு கர்நாடகப் பிரதேசங்களில் பரவியிருந்தது என்று கூறப்படுவதை நோக் கினால் இதுவும் சாத்தியமே என்னலாம்.

இவன் மகன் **மாறன்** என்பான் பல இடங்களில் வெற்றி கொண் டான் என்ற செய்தி காணப்படுகிறது. அவன், கையில் வேலேந்தி மிகவும் வேகத்தோடு வந்து, எதிர்த்தவர்களை நெடுவயல் என்னும் இடத்தில் அழித்தான். அவனோடு போரிட்ட எதிரி யார் என்பது அதிலே குறிக்கப் படவில்லை. அதேபோல, குறுமடை, மன்னிக்குறிச்சி, திருமங்கை பூவலூர், கொடும்பாளூர் ஆகிய இடங்களில் வெற்றிகொண்டு யானை, குதிரை பல வற்றைக் கைப்பற்றினான். அவ்விடங்களில் தோல்வியுற்றவர்கள் யார் யார் என்ற விவரம் தெரியவில்லை. குழும்பூர் என்னுமிடத்தில் பல்லவனைத் தோற் கடித்தான். பெரியலூரார் என்னுமிடத்தில் எதிரிகளை வெற்றிகொண்டான். அவர்கள் பெயர்கள் குறிக்கப்படவில்லை. அப்பால் இவன் காவிரியைத் தாண்டி மழகொங்கத்தை அடிப்படுத்தினான். கொங்கு நாட்டுப் பாண்டிக் கொடுமுடியை அடைந்து பசுபதியான சிவபெருமானை வணங்கினான். கங்கராஜனோடு சம்பந்தம் செய்துகொண்டான். எண்ணிறந்த கோஸ ஹஸ்ரம், ஹிரண்ய கர்ப்பம், துலாபாரம் என்ற மஹாதானங்களைப் பலமுறை செய்து, அந்தப் பொருள்களை வேதம் வல்லார்க்கு வழங்கினான்.

இச்சாசனத்துத் தமிழ்ப் பகுதியிலே இம்மன்னன் பல்லவனைக் குழும் பூர் என்னுமிடத்திலே தோல்வியுறச் செய்து அவனுடைய யானை குதிரை களைக் கைப்பற்றினான் என்று கூறப்படுகிறது. சம்ஸ்கிருதப் பகுதியிலே இவனுக்கு ராஜசிம்மன் என்ற பெயர் உண்டு என்பதும், போர்க் களத் திலே இவனைக் கண்ட பல்லவ மல்லன் 'இவன் நரனோ (அர்ச்சுனனோ) அரக் கனோ' என்று பயந்து போர்க்களத்தை விட்டு ஓடினான் என்பதும் காணப் படுகின்றன. தமிழ்ப் பகுதியில் பொதுவாகப் பல்லவன் என்று வருகிறது. சம்ஸ்கிருதப் பகுதி, அந்தப் பல்லவன் பல்லவ மல்லன் என்று சுட்டிக்காட்டு கிறது.

பல்லவமல்லன் நேர் முறையிலே அரசை அடைந்தவனல்லன் என்ப தும், இளைய பரம்பரையைச் சேர்ந்தவன் என்பதும், நாட்டு மக்களில் ஒரு பகுதியினரால் அவனுடைய பன்னிரண்டாம் வயதிலே அரசனாக முடி

சூட்டுவிக்கப் பெற்றவன் என்பதும் பல்லவ சாசனங்களின் தொகுப்பிலே விளக்கப்பெற்றுள்ளன. பல்லவ மல்லனுக்கு எதிரியாக நின்ற பாண்டியன், பல்லவமல்லனுக்கு எதிரியான சித்திரமாயனுக்கு உதவியாக வந்தவன் என்று ஆராய்ச்சியாளர்கள் ஊகிக்கிறார்கள். இப்பாண்டியன்* இரண்டாம் நரசிம்ம வர்மனுடைய பெண் வயிற்றுப் பெயரன் என்று சிலர் கருதுவர்.

பல்லவன், குழும்பூர் என்னுமிடத்திலே தோல்வியுற்றான் என்று சாசனம் கூறுகிறது. குழும்பூர் என்பது எவ்விடம் உள்ளது என்ற விவரம் தெரியவில்லை. அது பூழி நாட்டின் தலைநகர் என்று காலஞ்சென்ற எம். வெங்கடராமய்யா கருதுவர். ஆனால், இப்பொழுதுள்ள நிலையில் எந்த ஊர் என்று நிச்சயமாகச் சொல்லமுடியாது.

இம்மன்னன் கூடல், வஞ்சி, கோழி என்னும் ஊர்களின் கோட்டை மதில்களைப் புதுப்பித்தான் என்று சாசனம் கூறுகிறது. கோழி என்பது உறையூர், சோழர்களின் தலைநகர். வஞ்சி சேரர்களின் தலைநகராகும். கூடல் என்பதை மதுரையாக ஆராய்ச்சியாளர்கள் கொள்வர். மதுரை பாண்டியனின் தலைநகரே ஆனதால், அதன் மதில்களை அவன் புதுப்பித்தான் என்று சொல்வது பொருத்தமாக இல்லை. அதனால், ஓர் ஆசிரியர் அம்மூன்று பெயர்களும் ஒரே கோட்டையின் வெவ்வேறு மதில்களைக் குறிப்பனவாகும் என்று கருதினார். கூடல் என்பது மதுரையை அல்லாமல் வேறு ஓர் ஊரைக் குறிப்பதாக இருக்கலாம் என்றும், அது மைசூர் ராஜ்யத்தில் பெங்களூர் மாவட்டத்தில் உள்ள கூடலூரே என்றும் சிலர் கருதுவர்.

இம்மன்னன் கங்கராஜனோடு சம்பந்தம் செய்தானென்று தானத்தின் விவரத்தைக் குறிக்கும் சாசனத்தின் இறுதிப் பகுதியில் கூறப்பட்டுள்ளது. 'கங்கராஜன்' என்பது மைசூர் ராஜ்யத்திலே தழைக்காடு என்றும் தலவனபுரம் என்றும் அழைக்கப்பட்டு வந்த இடத்தைத் தலைநகராகக் கொண்டு அரசுபுரிந்த மேலைக் கங்க மன்னர்களைக் குறிப்பதாகும். சம்ஸ்கிருதப் பகுதியிலே இவன் மழவ அரசன் மகளை மணந்திருந்தான் என்றும், அவள் வயிற்றில் பிறந்தவனே இச்சாசனத்தை வழங்கிய பராந்தக நெடுஞ்சடையன் என்றும் கூறப்பட்டுள்ளது. ஆராய்ச்சியாளர்களில் சிலர், இவ்

* பல்லவர் செப்பேடுகள் முப்பது, முன்னுரை பக்கம் XIX

மற்றும் The Pallavas by G. Jouveaw Dubreuil, page 68

விரு நிகழ்ச்சிகளையும் ஒன்றாகவே கொண்டு, மழவேந்திரனும் கங்கராஜனும் ஒருவனே என்று கருதுவர்.

இது தவறு. இவ்விரண்டும் வெவ்வேறு நாடுகளாகும். மழகொங்கம் தமிழ் நாட்டிலே காவிரியின் வடகரையில் உள்ளது. கங்க ராஜ்யம் கர்நாடகப் பிரதேசத்தில் அடங்கியது. அன்றியும், இம்மன்னன் கங்கராஜனோடு சம்பந்தம் செய்தானென்றே சாசனம் கூறுகிறது. மற்றும், கங்க ராஜன் மகளை அவன் தன் மகன் பராந்தக நெடுஞ்சடையனுக்குத் திருமணம் செய்வித்தான் என்பது இச்சாசனத்திலேயே, பின்னால் ஆணத்தியாக நியமிக்கப்பட்டவனின் புகழைக் கூறுமிடத்தில் காணப்படுகிறது. ஆகவே, இவன் கங்கராஜன் மகளை மணந்தவன் என்று சந்தேகிக்க இடமில்லை.

இவனுக்குப் பின் இவன் மகன் **நெடுஞ்சடையன்** அரசனானான். அவனே இச்சாசனத்தை வழங்கிய **பராந்தகன்.** இவனுடைய இரண்டு வெற்றிகளைப் பற்றி இச்சாசனம் கூறுகிறது.

பெண்ணாகடம் என்ற ஊரில் இவன் காடவனை (அதாவது, பல்லவனை)த் தோல்வியுறச் செய்தது ஒன்று. அந்த ஊர் நீர்வளம் நிறைந்ததென்றும், காவிரியின் தென் கரையில் உள்ளதென்றும் சாசனம் கூறுகிறது. பெண்ணாகடம் என்று இப்பொழுது பிரசித்தமாக வழங்கப்படும் ஊர் காவிரிக்கு வடக்கே உள்ளது. அதனால் இந்த ஊராக இருத்தற்கில்லை. தஞ்சை மாவட்டத்திலே தஞ்சாவூருக்குப் பக்கத்தில் பெண்ணாடம் என்ற பெயரில் இப்பொழுது ஒரு சிற்றூர் இருப்பதாகவும், அதுவே பாண்டியன் வெற்றிகொண்ட ஊராக இருத்தல் வேண்டுமென்றும் சிலர் கூறுவர். அது காவேரிக்குத் தென் கரையில் உள்ளதுதான். எனினும், சாசனம் குறிப்பது அந்த இடந்தானா என்பதை நிச்சயிக்கப் போதிய ஆதாரம் இப்போது கிடைக்கவில்லை.

அடுத்தபடியாக, இவன் ஆய்வேளையும், குறும்பரையும் வெற்றி கொண்ட செய்தி காணப்படுகிறது.

இச்சாசனம் ஜடில பராந்தகனுடைய ஆட்சியின் மூன்றாம் ஆண்டிலே வழங்கப்பட்டது. அம்மன்னன் கி. பி. 768–ஆம் ஆண்டில் சிங்காதனம் ஏறினான் என்றசெய்தி திருப்பரங்குன்றத்திலே கிடைக்கும் அவனுடைய சம்ஸ்கிருதக் கல்வெட்டு, தமிழ்க் கல்வெட்டு ஆகிய இரண்டையும் ஒப்பிட்டுப் பார்த்தால் தெரியவரும்.

இவனுடைய மூன்றும் ஆண்டு கி. பி. 770 ஆகும். இந்தச் சாசனத்திற்கு ஆணத்தியான மாறங்காரி என்பான் ஆனைமலையில் நரசிங்கப் பெருமாளுக்குக் குடைவரைக் கோயிலை அமைத்தான். அவன் அதற்குக் கும்பாபிஷேகம் செய்யாமல் காலமாகிவிட்டபடியால், அவனுக்குப் பின் மந்திரிப் பதவி ஏற்ற அவனுடைய தம்பி மாறன் எயினன் அதை முற்றுவித்தான். இதனைத் தெரிவிக்கும் *ஆனைமலைக் கல்வெட்டு கி. பி. 770-ஆம் ஆண்டின் இறுதியில் பொறிக்கப்பட்டதென்பது இந்தக் கல்வெட்டிலிருந்தே தெரியவருகிறது. இதனைக் கொண்டு இதற்கு முன்னதாக, அதாவது கி. பி. 770-ஆம் ஆண்டின் முற்பகுதியிலே இந்தச் சாசனம் வழங்கப்பட்டதெனக் கொள்ளவேண்டும்.

இதற்குப் பிறகு, இந்த வேள்விகுடி தானம் செய்யப்படுவதற்குமுன் நடந்த விவரங்கள் இச்சாசனத்தின் முற்பகுதியில் கூறப்பட்டதைவிட இங்கு நன்கு விளக்கமாகக் கூறப்பட்டுள்ளன.

பிறகு, இந்தத் தானத்தை நற்சிங்கன் பெற்றதையும், அவன் அது முழுவதும் தனக்கே வைத்துக்கொள்ளாமல் தனக்கு ஒரு பகுதியை வைத்துக்கொண்டு மற்றப் பகுதிகளைப் பிறர்க்கு அளித்த செய்தியும் காணப்படுகிறது.

தானம் கொடுக்கப்பட்ட ஊரின் நான்கெல்லைகளும் நன்கு குறிக்கப்பட்டுள்ளன.

இதற்கு ஆணத்தி, மூவேந்தமங்கலப் பேரரையனாகிய வைத்திய சிகாமணி மாறங்காரி ஆவான்.

இந்த மாறங்காரிகங்கராஜன் மகளைப் பாண்டியனுக்கு மணம் செய்விக்க முயன்றபோது வல்லப (சாளுக்கிய) அரசன் அதைத் தடுத்துப் போர் செய்தான். அந்தச் சமயத்தில் இந்த மாறங்காரிக்குப் பூர்வராஜர்கள் உதவியாக வந்து சாளுக்கியர்களுடன் போரிட்டு வெற்றிகொண்டு திருமணத்தை நடத்திவைத்தார்கள் என்று இச்சாஸனம் கூறுகிறது. இந்தப் பூர்வராஜர்களைப் பற்றிய விவரங்களை வரலாற்றுக் குறிப்புகள் என்ற பகுதியில் காணலாம்.

இப்பிரசஸ்தி பாடினவன் சேனபதி ஏனதி ஆயின சாத்தஞ் சாத்தன் ஆவான் என்று சாசனம் கூறுகிறது.

இச்சாசனத்தைச் செப்பேட்டில் பொறித்தவன் சுத்தகேசரிப் பெரும்பணைகாரன் என்று கூறிச் சாசனம் முடிவு பெறுகின்றது.

* South Indian Inscriptions XIV (The Pandyas) No. I & 3 respectively.

## வேள்விகுடிச் செப்பேட்டில் கூறப்பட்ட பாண்டியர் வழிமுறை



# வேள்விக்குடிச் சாசனம்

## [1]சாசன வாசகம்

### [2]முதல் ஏடு பின்புறம்

[3]स्वस्ति [॥*]

1. श्रियश्चिरं वरिशशिरांशुशेखरश्शिव [:*] श्रितार्त्ति प्रतिबन्धकारणम् [।*] तनोतु सौवर्ण्ण कप-

2. र्द्द सुन्दरः कुदर्प्पकन्दर्प्पमदप्रमर्द्दनः ॥ [१*] विश्वम्भराभरश्रान्त शेषविश्रम कारणम् [।*]आ-

3. कल्पान्तम्भुवि स्थेयादन्वयः पाण्ड्यभूभृताम् ॥[२*] अस्तम्भयत्क्षिति-धरम्प्रविजृम्भमाणमम्भ-

4. स्सनस्त सपित्र्व्ज्जलधेश्च यस्सः [।*] कुम्भोद्भवो भवति यस्य मुनिः पुरोधास्स श्रीनिधि

5. र्ज्जयति पाण्ड्यनरेन्द्रवंशः ॥ [३*] अस्थादप्रतिमप्रभावमहितः पाण्ड्याभिधानो निधे-

6. [4]र्वाराध्वारि महीपतिस्त्रिभुवने लीनेऽपि कल्पक्षयात् [।*] धात्रा सृष्टवता पुनस्स

7. जगतां रक्षार्त्थमभ्यर्त्थितस्तेजस्वी तनयत्वमेत्य शशिनो नाम्ना बुधाख्यो भवत् ॥ [४*]

### இரண்டாம் ஏடு—முன்புறம்

8. पुत्रस्तस्य पुरूरवा भुजबलप्रध्वस्तदैत्यःप्रभुस्तद्वंशे शिखरीन्द्रमस्तकशि-

9. ला विन्यस्तमत्स्यद्वये [।*] शक्रार्द्धासन हारभाजि शरणे विश्वस्य विश्वम्भरागेह-

1. எபிகிராபியா இந்திகா 17–ஆம் தொகுதியில் வெளியான மசிப்படத்தின் பிரதியிலிருந்து வாசிக்கப்பட்டது.

2. இடது பக்கத்து விளிம்பின் தலைப்பில் 'க' என்று எண்ணிடப்பட்டுள்ளது.

3. இந்த இரண்டு எழுத்துகளும் ஏட்டின் இடதுபுறம் தலைப்பிலே காணப்படுகின்றன.

4. वारान्द्धारि என்று வாசிக்கவும்.

குறிப்பு :— சுலோகங்களின் முடிவைக் குறிக்கப் பின்னையாள் கிற்போன்றது ஏட்டில் உபயோகிக்கப்பட்டுள்ளது.

10. स्वामिनि शाश्वते युधिजिताशेषामरारिप्रभौ ॥ [५*] दूतीभूत[1]दिवोकसि
क्षितिधर क्षु-

11. ण्याभिसंक्षोभित क्षीरोदन्वति कुम्भसम्भवकरप्राप्ताभिषेकक्रिये [।*] इष्टार्त्थार्प्पण-

12. तर्प्पितार्त्थिजनतापूर्णीक्षतामण्डले जन्त्वावाप[2]जगत्रयार्च्चितगुण[:*]श्रीमारवर्म्मा नृ-

13. पः ॥ [६*] धरणीवलयं समस्त मेतन्निजदोर्द्दण्डमहारगेण [3]विभृत [।*]
अहरत्स भु-

14. जगाधिभर्तुश्चिरकालोद्वहनक्लमन्धरायाः ॥ [७*] अधिरुह्य तुला ममित्रवर्ग्गं युधि जि

[4]இரண்டாம் ஏடு—பின்புறம்

15. त्वामृतगर्ब्भतो जनित्वा [।*] सुधियामथिरस्सुवर्ग्णराशिं विधिवत्स प्रतिपाद-
यांबभूव ॥ [८*] तस्या-

16. [5]त्मजस्तरुण भास्करतुल्यतेजा राजा बभूव रणधीर इति प्रतीतः [।*] यो
लीलयैव भुवन-

17. स्य बभार भारं हारं यथास्य गुरवस्सुरनायकस्य ॥ [९*] पुत्रस्तस्य पुरन्दर-
प्रतिकृतिर्भू-

18. सुन्दरीवल्लभो नम्राशेष नरेन्द्रवेष्टनमणिव्राताब्वृतांघ्रिद्वयः [।*] आसीत्सत्यसखप्र-

19. राक्रमधनः[6]पद्मासनायाः प्रतिर्व्विद्याचार विभूषण[:*] श्रुत[ध]र[:*] श्रीमार-
वर्म्माभिधः ॥ [१०*] स राज-

20. सिंहस्सरसीरुहाक्षो भयम्भुवि प्राणभृतामपास्य [।*] ररक्ष दक्षः क्षपितारिपक्ष-

1. दिवौकसि என்று வாசிக்கவும்.
2. जगत्त्र என்று வாசிக்கவும்.
3. बिभ्रत् என்று வாசிக்கவும்.
4. ஏட்டின் இடதுபுறம் விளிம்பில் 2 என்று எண்ணிடப்பட்டிருக்கிறது.
5. त्मज என்று வாசிக்கவும்.
6. पद्मा என்று வாசிக்கவும்.

21. : क्षमानलं क्ष्मापतिरक्षनाज्ञः ॥ [११*] नगो नु रक्षो नु हरो नु पुरुषप्रवरो नु शक्रो नु

முன் பக்கம் மூன்றாம் ஏடு

22. सरोषमागतः [।*] इति [स्म] मत्वा युधि यम्भयाद्दिनः [प]लायते [पल्लव] मल्लभूप-

23. ति ॥ [१२*] कनकगर्भमिक्कनप्रसवः पुनस्समधिरुह्य तुलामतुलामपि [।*] अकिर[ना]-

24. र्थिजनपाकृतकल्मषो द्विजदरिद्रसुरायतनेषु यः ॥ [१३*] मा[रो]दाकुलीनाम्भ-

25. [तो] स मारवर्मा [1]सद्रशीमुवाह [।*] अजायनाम्ना हरसूनुकल्पो जगद्धितार्थक्षिति

26. लाभिधानः ॥ [१४*] अशिथिलस धरामहीनसारः क्षितिपः क्षालितकल्मषानुषंगम [।*] नत रा-

27. जकमौलि [2]रत्नरश्मिप्रकराभ्यर्चितपाद [3]पद्मपीठः ॥ [१५*] कलये स गुणा-नदात्कृतस्य

28. स्वभुजाभ्यां सुरपादपस्वभावम [।*] अभयं शरणागतप्रजाभ्यस्स दिवं संयति श-

[4]மூன்றாம் ஏடு—இரண்டாம் பக்கம்

29. त्रु पार्थिवेभ्यः ॥ [१६*] राजतां स महीपाल किरीटार्पितशासनः [।*] राजसिंहसुतो रा-

30. जा चिरमुर्व्यामपरान्तकः ॥ [१७*] इप्रशस्ति सर्व्वक्रतुयाजि ஆக்கிய वरोदय भट्टஞற்செ

1. सदृशी என்று வாசிக்கவும்.

2. रत्न என்று வாசிக்கவும்.

3. पद्म என்று வாசிக்கவும்.

4. ஏட்டின் இடதுபுறம் 3 என்று எண்ணிடப்பட்டுள்ளது.

31. ய்யப்பட்டது. [ ॥* ] கொல்யானை பலவோட்டிக் கூடாமன்னர் குழாந்தவி

32. ர்த்த பல்யாக முதுகுடுமிப் பெருவழுதி என்னும் पाण्ड्याधिराज ஞ

33. ஞகமா மலர்ச்சோலை நளிர்சினைமிசை வண்டலம்பும் பாகனூர்

34. க் கூற்றமென்னும் பழனக்கிடக்கை நீர்நாட்டுச் சொற்கண்ணா ளர் சொ

35. லப்பட்ட श्रुतिमार्ग्गम् பிழையாத கொற்கை கிழானற்கொற்றன் கொண்

36. ட்வேள்வி முற்றுவிக்க கேள்வி அந்தணாளர் முன்பு கேட்க என்றெடுத்

## நான்காம் ஏடு—முன்புறம்

37. துரைத்து வேள்வி சாலை முன்பு நின்று வேள்வி குடி என்றப் பதியைச் சீ

38. ரொடு திருவளரச் செய்தார் [ ॥* ] வேந்தனப் பொழுதேய் நீரோடட்டிக் கொடுத்தமை

39. யானீடு भुक्ति துத்தபின் னளவரிய आधिराजरै அகலநீக்கி அகலிடத்தை

40. க் कळभ्र னென்னுங் கலி அரைசன் கைக்கொண்டதனை இறக்கிய பின் [ ॥* ] படுகடன் முளை

41. த்த பருதிபோல पाण्ड्याधिराजன் வெளிற்பட்டு விடுகதி ரவி ரொளி விலக வீற்றி

1. துய்த்தபின் என்று படிக்க

வரி 32. பாண்ட்யாதிராஜ

,, 35. ச்ருதி மார்க்கம்

,, 39. புக்தி அதிராஜரை

,, 40. களப்ர

,, 41. பாண்ட்யாதிராஜன்

42. ருந்து வேலை சூழ்ந்த வியலிடத்துக் கோவும் குறும்பும் பாவுடன் முருக்கிச் செ

43. ங்கோ லோச்சி வெண்குடை நீழற்றங்கொளி நிறைந்த தரணி மங்கையைப் பிறர்

44. பாலுரிமை திறவிதி னீக்கித் தன்பாலுரிமை நன்கன மமைத்த மானம்பே

45. ர்த்த தானை வேந்தன் ஞெடுங்காமன்னரொளி நகரழித்த கடுங்கோனென்னுங் கதி

46. ர் வேற்றென்னன் [ ॥ * ] மற்றவற்கு மகனாகி மஹீதலம் பொது நீக்கி மலர் மங்கை ஒ

[1] நான்காம் ஏடு—பின்புறம்

47. டு மண னயர்ந்த அற்றமி லடர் வேற்றானை ஆधिராஜன் அவனி சூளாமணி எத்தி

48. றத்து மிகலழிக்கு மத்தயானை மாரவர்ம்மன் [ ॥ * ] மற்றவற்கு மருவினிய ஒருமகனா

49. கி மண்மகளை மறுக்கடிந்து விக்ரம த்தின் வெளிற்பட்டு விலங்கல் வேல்பொ

50. றி வேந்தர் வேந்தன் சிலைத் தடக்கைக் கொலைக் களிற்றுச் செழியன் வானவன்

51. செங்கோற் சேந்தன் [॥*] மற்றவற்குப் பழிப்பின்றி வழித்தோன்றி உதயகிரிமத்யம

1. ஏட்டின் இடதுபுறம் 4 என்று எண்ணிடப்பட்டுள்ளது.

வரி 46 மஹீதலம்
,, 47. ஆதிராஜன்
,, 48. மாறவர்ம்மன்
,, 49. விக்ரம
,, 51. உதயகிரி மத்ய

52. த்துறுசுடர்போலத் தெற்றென்று திசை நடுங்க மற்றவன் வெளிற் பட்டுச் சூ

53. ழியானை செலவுந்திப் பாழிவாயமர்கடந்து வில்வேலிக் கடற்குனையை

54. நெல்வேலிச் செருவென்றும் விரவிவந்தடையாத பரவரைப் பாழ்படுத்

55. து மறுகாலினம் புடை திளைக்குங் குறுநாட்டவர் குலங்கெடுத்து

56. ங் கைந்நலத்த களிறுந்திச் செந்நிலத்துச் செருவென்றும் பாரளவுந்

## ஐந்தாம் ஏடு—முன்புறம்

57. [த]னிச் செங்கோற் केरள னைப் பலமு[றையுமுரிமை]ச் சுற்ற [மோடவர்யா]னை

58. உம் புரிசைம் மதிற்புலி ஊர்ப்பகனுழிகை இறவாமை இக[லா]

59. ழி உள்வென்று கொண்டும் வேலாழிஉம் வியன்பறம்பு மேலாமை சென்

60. றெறிந்தழித்தும் हिरण्यगर्भमுந் துலाभारமுந் தரணி மிசைப் பலசெய்[து]

61. अन्तणர்க்கும் अशक्तர்க்கும் வந்தணைக என்றீத்தளித்த मकरिकै அணிமணி

62. நெடுமுடி अरिकेसरि असमसमन श्री मारम्मन [॥*] மற்றவற்கு மகனாகிக் கொற்றவே

வரி 52. திசை
,, 57. கேரள
,, 60. ஹிரண்யகர்ப்ப பார
,, 61. அந்தண அசக்த மகரிகை
62. அரிகேஸரி அஸமஸமன் ஸ்ரீ மாறவர்ம்மன்.

63. ல் வலனேந்திப் பொருதூருங் கடற்றுனையை மருதூருண் மாண்பழித் தாய்வே

64. லே அகப்பட ஏயென்னுமை எறிந்தழித்துச் செங்கொடிஉம் புதான் [கோ]ட்

65. டுஞ் செருவென்றவர் சிலந்நவிர்த்துக் கொங்கலருந் நறும் பொழில்வாய்க் கு

66. இ[லொ]டு மஇலகவு மங்கலபுரமென்னும் மஹாநகரூண் மஹாரதர் எ

[1]ஐந்தாம் ஏடு—பின்புறம்

67. றிந்தழித் தறைகடல் வளாகம் பொதுமொழி அகற்றிச் சிலைஉம் புலிஉங்

68. கயலுஞ்சென்று நிலையமை நெடுவரை இடவஇற் கிடாய் மண்ணினி தாண்ட

69. தண்ணளிச் செங்கோற் றென்னவானவன் செம்பியன் சோழன் மன்னர் மன்ன[ன்*]மது

70. ர கருநாடகன் கொன்னவின்ற நெடுஞ்சுடர் வேற் கொங்கர் கோமான் கோச் சடையன்

71. மற்றவற்கு புத்ர ஞய் மண்மகளது பொருட்டாக மத்த யானை செலவுந்தி மான

72. வேல் வலனேந்திக் கடுவிசையாலெதிர்ந்தவரை நெடுவயல் வாய் நிகரழி

73. த்துக் கறுவடைந்த மனத்தவரைக் குறுமடைவாய்க் கூர்ப் பழித்தும

74. ன்னி குறிச்சிஉந் திருமங்கைஉ முன்னின்றவர் முரணழித்து மேவலோ

1. ஏட்டின் இடதுபுறம் 5 என்று எண்ணிடப்பட்டுள்ளது.

வரி 66. மஹாநகரு மஹாரதரை.

„ 71. புத்ர

75. ர்கடற்றூனை ஒடேற்றெதிரேய் வந்தவரைப் பூவலூர்ப் புறங்கண்டுங்

76. கொடும்புரிசைந் நெடுங்கிடங்கிற் கொடும்பாளூர்க் கூடார் கடும்பரி

ஆறாம் ஏடு—முன்புறம்

77. உங் கடுங்களிறுங் கதிர்வேலிற் கைக்கொண்டுஞ் செ[ழும் புரவிப்] பல்லவனைக்

78. குழூம்பூருட் டேசழிய எண்ணிறந்த மால்களிறு மிவு[ளிக]ளும் பலகவர்ந்

79. தும் தரியலராய்த் தரித்தவரைப் பெரியலூர்ப் பீடழித்தும் பூவிரிஉ

80. ம் பொழிற் சோலைக்காவிரியைக் கடந்திட்டழகமைந்த வார்சிலை இன் மழகொ

81. ங்கமடிப்படுத்து மீண்டொளிய மணிஇமைக்கு மெழிலமைந்த நெடுப்பு

82. ர்சைப்பாண்டிக் கொடுமுடி சென்றெய்திப் पशुपति यतु पद्मपादम् பணிந்தே

83. த்திக் कनकराशिஉங் ச நிர்மணிஉம் மன மகுழக் குடுத்திட்டுங் கொங்க

84. ர்வந் நறுங்கன்னிக் गङ्ग ராஜனோடு सम्बन्धஞ் செய்தும் எண்ணிறந்தன ர்

85. सहस्रமும் हिरण्यगर्भ முந் துலா भार மும் மண்ணின்மிசைப் பல செய்து ம

86. றை நாவினோர் குறைதீர்த்துங் கூடல்வஞ்சி கோழி என்னுமாட மாமதி

வரி 82. பசுபதி பந்மபாதம்
„ 83. கநகராசி
„ 84. கங்க ஸம்பந்த கோ
„ 85. ஸஹஸ்ர ஹிரண்யகர்ப்ப பார

[1]ஆறாம் ஏடு—பின்புறம்

87. ல் புதுக்கிஉ மறைகடல் வளாகங் குறையா தாண்ட மன்னர் மன்ன[ன்*]றென்னவர் மருக

88. ன் மானவெண்குடை மான்றேர்மாறன்[॥*] மற்றவற்கு மகனாகி மாலுருவின் வெளிர்ப்ப

89. ட்டுக் கொற்றமூன்றுடனியம்பக் குளிர்வெண் குடைமண்காப்ப பூமகளும் பு

90. லமகளும் நாமகளும் நலனேத்தக் கலிஅரைசன் வலிதளரப் பொலிவி னெடுவீற்

91. றிருந்து கருங்கடல் உடுத்த பெருங்கண் ஞாலத்து நாற்பெரும் படைஉம் பா

92. ற்படப் பரப்பிக் கருதாது வந்தெதிர் மலைந்த காடவனைக் காட டையப் பூவி

93. ரிஉம் புனற்கழனிக் காவிரிஇன் றென்கரைமேற் றண்ணுகம் மலர்ச் சோலை

94. ப் பெண்ணைகடத்தமர் வென்றுந் தீவாய்அஇலேந்தித் திளைத் தெதிரேய் வந்

95. திறுத்த ஆய்வேளைஉங் குறும்பரையு மடல்அமருளழித் தோட்டிக் காட்டு

96. க்குறும்பு சென்றடைய நாட்டுக் குறும்பிற் செருவென்று மறை கடல் வளா

ஏழாம் ஏடு முன்புறம்

97. கமொரு மொழிக் கொளீஇய சிலைமலி தடக்கைத்தென்னவான வன் அவனே

1. ஏட்டின் இடதுபுறம் 6 என்று எண்ணிடப்பட்டுள்ளது.

98. ய் श्रीवरन् श्रीमनोहरन् சினச்சோழன் புனப்பூழியன் [1]वीतकल्मषन्

99. विनयविश्रुतन् विक्रमपारकन् वीरपुरोगन् मरुद्बलन् मान्यशासनन् मनूपमन्

100. मर्द्दितवीरन् गिरिस्थिरन् गीतिकिन्नरन् क्रिपालयन् कृतापदानन् கலிப்பகை [2]कण्ठ-

101. कनिष्ठुरन् कार्यदक्षिणन् [3]कार्मुखपार्थन् परान्तकन् पण्डितवत्सलन् परिपूर्णन् पा

102. पभीरु குரை உறு கடற்படைத் தானை गुणगृह्यन् [4]गूढनृर्ण्णयन् நிரை உறுமல

103. ர்மணி நீண்முடி நேரிய [ர்] கோச்செடுஞ்சடைய[ன்*] [।।*] மற்றவன்றன் [5]राज्यवत्सलम् மூன்று

[6]ஏழாம் ஏடு — பின்புறம்

104. வது செலாநிற்ப ஆங்கொருநாண் மாட மாமதிற்கூடற்பாடு நின்றவர் ஆ

105. க்ரிக்கக் கொற்றவனேய் மற்றவரைத் தெற்றென நன்கு கூவி என்னேய் நுங்குறை

106. என்று முன்னுகப் பணித்தருள மேனுணின் குரவராற் பான்முறை இன் வ

107. ழுவாமை மாகந்தோய் மலர்ச்சோலைப் பாகனூர்க் கூற்றத்துப் படுவது

1. वीतकल्मषन् | என்று படிக்க
2. कण्ट என்று படிக்க
3. कार्मुक என்று படிக்க
4. गूढनिर्णयन् என்று படிக்க
5. राज्यवत्सरं என்று படிக்க
6. ஏட்டின் இடதுபுறம் "6" என்று எண்ணிடப்பட்டுள்ளது.

வரி 98. ஸ்ரீவரன் ஸ்ரீமநோஹரன் வீதகந்மஷந்
,, 99. விநயவிச்ருதன் விக்ரமபாரகன் வீரபுரோகன் மருத்பலன் மாந்யசாஸனன் மநூபமன்
,, 100. மர்த்தித் வீரன் கிரிஸ்திரன் கிதிகிந்நரன் க்ரிபாலயன் க்ருதாபதானன் கண்ட
,, 101. கநிஷ்டுரன் கார்யதக்ஷிணன் கார்முகபார்த்தன் பராந்தகன் பண்டிதவத்ஸலன் பரிபூர்ண்ணன் பா
,, 102. பபீரு குணக்ருஹ்யன் கூடந்ருர்ணயன்
,, 103. ராஜ்யவத்ஸலம்
,, 104. ஆ
,, 105. க்ரோதி

108. ஆள்வதானை யடல் வேந்தேய் வேள்விகுடி என்னும்பியர் உடையது ஒ

109. ல்காத வேற்றானை ஒடோதவேலி உடன் காத்த பல்யாக முதுகுடுமி

110. ப் பெருவழுதிஎன்னும்பரமேச்வரனற் வேள்விகுடி என்னப்பட்டது

111. கேள்வியிற்றரப்பட்ட தனைத் துளக்கமில்லாக் கடற்றானையாய் கலப்ர

112. ரா லிறக்கப்பட்டது என்று நின்றவன் விஜ்ஞாப்ய ஞ் செய்ய நன்று நன்றென்று

113. முறுவலித்து நாட்டானின் பழமையாதல் காட்டி நீ [கொள்க வென்]ன நாட்ட[ா]ற்றன்

எட்டாம் ஏடு—முன்புறம

114. பழமையாதல் காட்டின னங்கப்பொழுதேய் காட்ட மேனளெ[ங்]குர

115. வராற் பான்முறைஇற் றரப்பட்டதை எம்மாலுந் தரப்பட்ட தென்று செ

116. ம் மாந்தவ னெடுத்தருளி விற்கைத் தடக்கை விறல் வேந்தன் கொற்கை கிழா

117. ன் காமக்காணி நற்சிங்கற்குத் தேரோடுங்கடற்றானையான் நீரோடட்டிக் கொ

118. டுத்தமைஇன் மற்றிதற்குப் பெருநான் கெல்லை தெற்றென விரித் துரைப்

119. பிற் புகரறு பொழின் மருங்குடுத்த நகரூர் எல்லைக்கும் மேக்கும் மற்றிதற்கு

வரி 110. பரமேச்வர
„ 111. களப்ர
„ 112. விஜ்ஞாப்ய

120. த் தென்எல்லை குளந்தை வங்கூழ் வந்தெசெக்குங்களந்தைக் குளத்திலாலுக்கு

121. வடக்கும் மற்றிதற்கு மேலெல்லை அற்றம் இல்லாக் கொற்றன் புத்தூ(ர்) ரொடு மைஇ

122. ருப்பைச் செய் இடைமேற்றலைப் பெருப்பிற்குக் கிழக்கும் மற்றி தற்கு. வடபா

### [1]எட்டாம் ஏடு—பின்புறம்

123. லெல் [லைகாய]லுட் கமலம் மலரும் பாயலுள் வடபாலைப் பெருப்பிற்குத்

124. தெற்கும் இவ்வியைத் [த*] பெருநான் கெல்லையிற்பட்ட பூமி காராண்மை மீயாட்சி

125. உள்ளடங்க மேலெங் குரவராற்குடுக்கப்பட்ட பரிசேய் எம்மா லுங் குடுக்

126. கப்பட்டது [||*] மற்றிதற்காணத்தி குற்றமின்றிக் கூறுங் காலைக் கொங்கர்வந் ந

127. றுங்கண்ணிக் गंगराजनது कन्यारत्नं கொங்கர் கோற்குக்குணர்ந்து கொடுப்ப ஆர்ப்

128. பருஅடற்ருனைப் பூर्वராजர் புகன் றெழுந்து வில்விர வுங் கடற்ருனை वल्लभ னை

129. வெண்பைவாய் ஆளமருள்ளழிந்தோட வாளமருளுடன் வவ் விய ஏனப் பொறி

130. இகலமருளிடிஉறுமென வலனேந்த [மலை]த்ததானை [2]मदवीकल ன் மன்னர்கோ

1. ஏட்டின் இடதுபுறம் 8 என்று எண்ணிடப்பட்டுள்ளது.
2. मदविकलன் என்று படிக்க

வரி 127. கங்கராஜன் கந்யாரத்நம்
,, 128. பூர்வ்வராஜ வல்லப
,, 130. மதவீகல

131. னருளிற்பெற்றும் கோல்வளைக்கும் வேற்றூனே பல்வளைக்கோன் குணர

### ஒன்பதாம் ஏடு—முன்புறம்

132. ப் பட்டுப் பொரவந்தவர் மதந்தவிர்க்கும் கரவந்த புரத்தவர் கு[லத்] தோன்றல் மாவேந்

133. துங்கடற்றூனே மூவேந்தமங்கலப் பேரரை [ய]ஞகியவைத்யशिखामणि மாறங்கா

134. ரி [॥*] இப்பிரமதேயமுடைய கொற்கைகிழான் காமக்காணி சுவரஞ்சிங்கன் இ

135. தனுள் மூன்றிலொன்றும் தனக்கு வைத்திரண்டு கூறும் ஐம்பதின் வர் பிராம

136. ணர்க்கு நீரோடட்டிக் கொடுத்தான் [।*] இதனுள் மூர்த்தி எயினன் சவைஓடொ

137. த்தது நான்கரை படாகாரமுடையன் [।*] இதனுட்டனக்கு வைத்த ஒரு கூற்றிலு

138. ந்தம்பிமார்க்கு நான்குந்தஞ் சிற்றப்பனூர் மக்களுக்கு ஆறும் ஸ

139. பை ஓடொத்த படாகாரங் கொடுத்தான். இப் प्रशस्ति பாடின சேஞப

140. தி ஏஞதி ஆஇின சாத்தஞ் சாத்தற்கு மூன்று கூற்றூருமாய்த்

141. தங்களோ டொத்த நான்கு படாகாரங் கொடுத்தார்.

### [1]ஒன்பதாம் ஏடு—பின்புறம்

142. आसीत्रङ्गरुराजो मधुरतरः शास्त्रवित्कविःवाग्मी [।*] आज्ञप्तिरस्य वैद्यः करवन्दपुरा-

1. ஏட்டின் இடதுபுறம் 9 என்று எண்ணிடப்பட்டுள்ளது.
2. आसीन्मङ्गल என்று படிக்க
வரி 133. வைத்யசிகாமணி
,, 138–139. ஸபை ப்ரசஸ்தி

143. धिवास्तव्यः ५[१८*] रक्षान्नरः परकृतौ विदधीत विद्वान् पादा हिधर्मयशसःपर-

144. मस्य लब्धा [।*] धात्रैव [1]स्रष्टमखिलं भुवनन्तथापि [2]रक्षन्त्रि पुण्यरतयः [3]प्रथिवीन्नरेन्द्राः ५ [१९*]

145. न हि भूमिप्रदानाद्धि दानमन्यद्विशिष्यते [।*] न चापि भूमिहरणात् पाप-

146. मन्यद्विधीयते ५ [२०*] दाता दशा[4]नुग्रह्णाति यो हरेद्दश हन्ति च [।*] अतीतानागता

147. नीह कुलानि कुलनन्दन ५ [२१*] स्वदत्तां परदत्तां वा यो हरेत वसुन्धरा-

148. म् [।*] न तस्य [न] रकात् घोराद् विद्यते निष्कृतिः क्वचित् ५ [२२*] बहुभिर्वसुधा

**பத்தாம் ஏடு—முன்புறம்**

149. दत्ता भुज्यते हि [5]तराधिपैः [।] यस्य यस्य यदा भूमिस्तस्य तस्य त-

150. दा फलम् ५[२३*] चत्वारः इमे वैष्णवे धर्मे श्लोकाः [॥*]

151. மற்றிதனைக் காத்தார் மலரடி என்முடிமேல் என்று கொற்றவனேய்ப் பணி

152. த்தருளித் தெற்றெனத் தாம்ரசாஸனஞ் செய்வித்தான் [॥*] இய்தெழுத்து

153. ன சுத்த கேசரிப் பெரும்பணைகாரனுக்கு பெருமக்கள் அருளாற் பெற்ற

154. து ஒரு இல்லவளாவும் இரண்டுமாச் செய்உம் ஒரு புஞ்சைஉ

155. ம் பெற்றுன் இவை யுத்தகேசரிப் பெரும்பணைகாரனெழுத்து.

1. सृष्टं என்று வாசிக்கவும்
2. रक्षन्ति என்று வாசிக்கவும்
3. पृथिवीं என்று வாசிக்கவும்
4. नुगृ என்று வாசிக்கவும்
5. धरा என்று வாசிக்கவும்

வரி 152. தாம்ரசாஸந
155. யுத்தகேஸரி

# வேள்விகுடிச் சாசனம்

### சம்ஸ்கிருதப் பகுதியின்

## மொழிபெயர்ப்பு

மங்களம் உண்டாகட்டும்.

**சுலோகம்—1**

குளிர்ந்த கிரணங்களையுடைய சந்திரனை முடியில் சூடியவரும், புகலடைந்தவர்களின் துன்பங்களைத் தடுப்பதற்குக் காரணமாயுள்ளவரும், பொன்மயமான சடைகளால் அழகுபெற்றவரும், விஷமத்தனமான மதங் கொண்ட மன்மதனின் கர்வத்தை அழித்தவருமான பரமசிவன் உங்களுக்கு நிலையான செல்வத்தை வளர்ந்தோங்கச் செய்வாராக.

**சுலோகம்—2**

பூமி பாரத்தால் இளைப்புற்ற ஆதிசேஷனுக்கு ஓய்வு (அளிக்கும்) காரணமான பாண்டிய மன்னர்களின் குலம் ஊழிக்காலம்வரை இப்பூவுலகில் நிலைத்திருப்பதாகுக.

**சுலோகம்—3**

உயர்ந்து வளர்ந்து கொண்டிருக்கும் (விந்திய) மலையை (வளராமல்) தடுத்து நிறுத்தியவரும், கடல்நீர் முழுவதையும் குடித்தவருமான குடமுனி (அகஸ்தியர்)யைப் புரோகிதராகக்கொண்டதும், செல்வத்திற்கு உறைவிடமானதுமான பாண்டிய மன்னர்களின் குலம் வெற்றி பெறுவதாகுக.

**சுலோகம்—4**

பிரளய காலத்தில் மூவுலகமும் அழிந்தபோதும், நிகரில்லாப் பெருமையால் புகழ் பெற்றிருந்த பாண்டியன் (அழியாமல்) கடலின் வாயிலில் நிலையாக நின்றான். பிறகு, உலகைப் படைத்த பிரமன், அதைக் காப்பதற்காக ஒளிமிக்க அவ்வரசனை வேண்ட, (அவன்) சந்திரனின் புத்திரனாகப் பிறந்து புதன் என்ற பெயரையடைந்தான்.

**சுலோகம்—5**

தன்னுடைய தோள் வலியால் அசுர மன்னர்களை அழித்த புரூரவஸ் என்பான் அவனுடைய மகன். உயர்ந்த (மேரு) மலையின் உச்சியிலுள்ள பாறைமீது இரு மீன்களைப் பொறித்ததும், தேவேந்திரனுடைய சிங்காதனத்தில் பாதியையும் மாலையையும் அடைந்ததும், உலகின் புகலிடமானதும், பூமி தேவிக்குக் கணவனாக இருப்பதும், அசுர அரசர்களனைவரையும் போரில் வென்றதும்,

**சுலோகம்—6**

தேவர்களைத் தூதராகக்கொண்டதும், (மந்தர)மலையால் பாற்கடலைக் கடைந்ததும், கும்பமுனியான அகஸ்தியரின் கைகளால் முடிசூடுதலை அடைந்ததும் பூமண்டலத்திலுள்ள இரவலர் அனைவர்க்கும் விரும்பிய பொருள்களை அளித்துத் திருப்தி செய்விப்பதுமான அந்த (பாண்டிய) க் குலத்தில் மூவுலகும் போற்றும் நற்குணங்களையுடைய ஸ்ரீ மாறவர்மன் என்ற அரசன் தோன்றினன்.

**சுலோகம்—7**

இப்பூவுலகம் முழுவதையும் தன் தோள்களாகிய பெரிய சர்ப்பத்தினால் தாங்கி, பூமியை வெகுகாலமாகத் தாங்குவதால் ஏற்பட்ட ஆதிசேஷனுடைய களைப்பை இவன் நீக்கினான்.

**சுலோகம்—8**

போரில் பகைவர் கூட்டத்தை வென்று [1] அமிர்தகர்ப்பத்திலிருந்து தோன்றிய அவ்வரசன், துலாபாரம் ஏறி, பொன்குவியல்களைப் புலவர்களுக்கு முறைப்படி தானம் செய்தான்.

**சுலோகம்—9**

இளஞ்சூரியன் போன்று ஒளிபெற்றவனான இரணதீரன் என்னும் புகழ் பெற்ற அவனுடைய மகன் அரசனாக இருந்தான். அவன், தன்னுடைய முன்னோர்கள் தேவேந்திரன் அளித்த மாலையைத் தாங்கியதேபோல், மிக எளிதாகப் பூமியின் பாரத்தைத் தாங்கினான்.

1. ஹிரண்யகர்ப்பம் என்றே கொள்ள வேண்டும் போலும்.

சுலோகம்—10

அவனுடைய மகன் இந்திரனின் மாற்றுருவம் போன்றவன்; பூசுந்தரி (பூமியாகிய அழகி)யின் கணவன்; (தன்னை) வணங்கிய அரசர்களனைவரின் மகுடங்களிலுள்ள மணிகளின் கூட்டத்தால் சூழப்பட்ட பாதங்களையுடையவன்; உண்மையின் தோழன்; வீரத்தைச் செல்வமாகக் கொண்டவன்; தாமரையாள் கேள்வன்; கல்வி ஒழுக்கங்களை அணிகலன்களாகக்கொண்டவன்; கேள்வி (ச்செல்வங்)களுக்கு இருப்பிடமானவன்; இவன் ஸ்ரீ மாறவர்மன் என்னும் பெயர் கொண்டவன்.

சுலோகம்—11

இவ்வரசனும்இராஜசிம்மன் தாமரைக் கண்ணன்;(இவன்)பூவுலகில் உயிரினங்களின் அச்சத்தை அகற்றி, பராக்கிரமத்தால் எதிரி வர்க்கத்தவரை வெற்றிகொண்டு, எதிர்ப்பில்லாத ஆணையுடன் பூமண்டலத்தை அரசாண்டான்.

சுலோகம்—12

"கோபத்துடன் (போர்க்களத்திற்கு) வந்த இவ்வரசன் மனிதனா? அரக்கனா? சிவனா? பரமபுருஷனான நாராயணனா? இந்திரனா?" என்று நினைத்து, பல்லவமல்லன் என்னும் அரசன் போர்க்களத்தில் துன்பமடைந்து பயத்தால் ஓடினான்.

சுலோகம்—13

இரண்ய கர்ப்பத்திலிருந்து பிறந்த அரசன், தன்னை எடைபோடும் தகுதியற்றதாக இருப்பினும் தராசின் மீதேறி (எடை போட்ட) செல்வத்தைக் குற்றமற்றவனாய், இரு பிறப்பாளருக்கும் ஏழைகளுக்கும் கோயில்களுக்கும் வழங்கினான்.

சுலோகம்—14

உயர்ந்த குலத்தில் பிறந்தவளும், தனக்கொப்பானவளுமான மளவ (மழவ) அரசனின் மகளை அந்த மாறவர்மன் மணந்தான். அவளிடம் சிவபெருமான் மகன் (முருகன்) போன்ற ஜடிலன் என்னும் மகன் உலக நன்மைக்காகத் தோன்றினான்.

**சுலோகம்—15**

குறைவற்ற வலிமை வாய்ந்தவனும், அரசர் கூட்டத்தின் முடிமீதுள்ள மணிகளின் ஒளிகளால் பூசிக்கப்பட்ட திருவடித் தாமரைப் பீடத்தையுடையவனுமான அவ்வரசன், குற்றங்களில்லாமல் உலகை ஆண்டு வந்தான்.

**சுலோகம்—16**

அவன் (தன் ஆட்சியால்) கலியுகத்திற்குக் கிருதயுகத்தின் குணத்தைத் தந்தான். (தன்) இரு கைகளுக்குத் தேவ விருட்சமான கற்பகத் தருவின் சுபாவத்தை ஈந்தான். (தன்னைப்) புகலிடமாக அடைந்தவர்களுக்கு அபயத்தையும், பகை அரசர்களுக்குப் போரில் சொர்க்கத்தையும் அளித்தான்.

**சுலோகம்—17**

தன் ஆணையை முடிகளால் தாங்கும் பிற அரசர்களையுடையவனும், ராஜசிம்மனுடைய மகனுமான **பராந்தகன்** என்னும் அரசன் இப்பூவுலகில் வெகுகாலம் விளங்குவானாக.

## சாசனத் தமிழ்ப் பகுதியின் இறுதியிலுள்ள சுலோகங்கள்

**சுலோகம்—18**

மதுரதரனும், சாஸ்திரங்களை அறிந்தவனும், கவிஞனும், வாக்கில் வல்லவனும், கரவந்தபுரத்தில் வசிக்கும் வைத்ய (வேதிய)னுமான மங்களராஜன் இதற்கு ஆணத்தியாவன்.

**சுலோகம்—19**

பிறருக்கு உதவி செய்யும் அறிஞன் இந்தத் தர்மத்தைக் காப்பானாக. (இவ்வாறு காத்தலென்ற) உயர்ந்த தர்மத்தினால் ஏற்பட்ட கீர்த்தி, நிலை பெற்றுவிடுமன்றோ! இந்த உலகம் முழுவதும் பிரமனால் ஆக்கப்பட்டதாக இருப்பினும் புண்ணியத்தில் விருப்பமுள்ள அரசர்கள் பூமியைக் காக்கின்றார்கள்.

**சுலோகம்—20**

பூமிதானத்தைக் காட்டிலும் மற்றொரு உயர்ந்த தானம் இல்லை. பூமியை அபகரிப்பதைக் காட்டிலும் மற்றொரு பாவமும் இல்லை.

**சுலோகம்—21**

குலத்தை மகிழ்விப்பவனே ! தானமளிப்பவன், கடந்து போனதும் வரப்போவதுமான பத்துத் தலைமுறைகளைப் போற்றுகிறான். அதை அப கரிப்பவன் பத்துத் தலைமுறைகளை அழியச் செய்தவனாகிறான்.

**சுலோகம்—22**

தான் செய்த தானத்தையும் பிறர் செய்த தானத்தையும் எவன் அப கரிக்கிறானோ அவனுக்குக் கோரமான நரகமல்லாமல் வேறு கழுவாய் கிடையாது.

**சுலோகம்—23**

பலரால் பூமிதானம் செய்யப்பட்டது. அவ்வாறே அதைக்கொண்ட வர்களால் அது அநுபவிக்கப்படுகிறது. யார் யாருக்கு எவ்வளவெவ்வளவு நிலமோ அவரவருக்கு அவ்வளவவ்வளவு பலன் உண்டு.

**வசனம்**

வைஷ்ணவ தர்மத்தில் மேற்கண்ட நான்கு சுலோகங்கள் உள்ளன.

---

# வேள்விக்குடிச் சாசனம்

## தமிழ்ப் பகுதியின்

# செய்யுளுருவம்

கொல்யானை பலவோட்டிக் கூடாமன்னர் குழாந்தவிர்த்த
பல்யாக முதுகுடுமிப் பெருவழுதியெனும் பாண்டியாதிராசனால்
நாகமா மலர்ச்சோலை நளிர்சினைமிசை வண்டலம்பும்
பாகனூர்க் கூற்றமென்னும் பழனக்கிடக்கை நீர்நாட்டுச்
சொற்கணாளர் சொலப்பட்ட சுருதிமார்க்கம் பிழையாத
கொற்கைகிழா னற்கொற்றன் கொண்டவேள்வி முற்றுவிக்கக்
கேள்வியந்த ணாளர்முன்பு கேட்கவென் றெடுத்துரைத்து
வேள்விச்சாலை முன்புநின்று வேள்விகுடியென் றப்பதியைச்
சீரோடு திருவளரச் செய்தார்வேந்த னப்பொழுதே
நீரோடட்டிக் கொடுத்தமையா னீடுபுக்தி துய்த்தபின்
அளவரிய ஆதிராசரை யகலநீக்கி யகலிடத்தைக்
களப்ரனென்னும் கலியரசன் கைக்கொண்டதனை யிறக்கியபின்
படுகடன்முளைத்த பருதிபோற் பாண்டியாதிராசன் வெளிப்பட்டு
விடுகதி ரவிரொளி விலகவீற் றிருந்து
வேலைசூழ்ந்த வியலிடத்துக்
கோவுங் குறும்பும் பாவுடன் முருக்கிச்
செங்கோ லோச்சி வெண்குடை நீழற்
றங்கொளி நிறைந்த தரணி மங்கையைப்
பிறர்பா லுரிமை திறவிதி னீக்கித்
தன்பா லுரிமை நன்கன மமைத்த
மானம் பேர்த்த தானை வேந்தன்
ஒடுங்கா மன்ன ரொளிநக ரழித்த
கடுங்கோ னென்னுங் கதிர்வேற் றென்னன்

மற்றவற்கு மகனாகி மகிதலம் பொதுநீக்கி
மலர்மங்கையொடு மணனயர்ந்த
அற்றமிலடர் வேற்றானை யாதிராச னவனிசூளாமணி
எத்திறத்து மிகலழிக்கும் மத்தயானை மாறவர்மன் மற்றவற்கு
மருவினிய வொருமகனாகி மண்மகளை மறுக்கடிந்து
விக்ரமத்தின் வெளிப்பட்டு விலங்கல்வெல்பொறி வேந்தர்வேந்தன்
சிலைத்தடக்கைக் கொலைக்களிற்றுச் செழியன்வானவன்
செங்கோற்சேந்தன்

மற்றவற்குப் பழிப்பின்றி வழித்தோன்றி
உதயகிரி மத்யமத் துறுசுடர்போலத்
தெற்றென்று திசைநடுங்க மற்றவன் வெளிப்பட்டுச்
சூழியானை செலவுந்திப் பாழிவா யமர்கடந்து
வில்வேலிக் கடற்றானையை நெல்வேலிச் செருவென்றும்
விரவிவந் தடையாத பரவரைப் பாழ்படுத்தும்
அறுகாலினம் புடைதிளைக்குங் குறுநாட்டவர் குலங்கெடுத்தும்
கைந்நலத்த களிறுந்திச் செந்நிலத்துச் செருவென்றும்
பாரளவுந் தனிச்செங்கோற் கேரளனைப் பலமுறையும்
உரிமைச் சுற்றமோ டவர்யானையும்
புரிசைம் மதிற்புலியூ ரப்பகல்
நாழிகை யிறவாமை இகலாழியுள் வென்றுகொண்டும்
வேலாழியும் வியன்பறம்பு மேலாமைசென் றெறிந்தழித்தும்
இரண்யகர்ப்பமுந் துலாபாரமுந் தரணிமிசைப் பலசெய்தும்
அந்தணர்க்கு மசக்தர்க்கும் வந்தணைகென் றீத்தளித்த
மகரிகையணி மணிநெடுமுடி
அரிகேசரி யசமசமன் சிரீமாறவர்மன்
மற்றவற்கு மகனாகிக் கொற்றவேல் வலனேந்திப்
பொருதூருங் கடற்றானையை மருதூருண் மாண்பழித்
தாய்வேளை யகப்பட எய்யென்னாமை யெறிந்தழித்துச்
செங்கொடியும் புதான்கோட்டுஞ் செருவென்றவர் சினந்தவிர்த்துக்
கொங்கலரு நறும்பொழில்வாய்க் குயிலோடு மயிலகவும்

மங்கலபுரமெனு மாநகருண் மகாரதரை யெறிந்தழித்து
அறைகடல் வளாகம் பொதுமொழி யகற்றிச்
சிலையும் புலியுங் கயலுஞ் சென்று
நிலையமை நெடுவரை யிடவயிற் கிடாஅய்
மண்ணினி தாண்ட தண்ணளிச் செங்கோற்
றென்ன வானவன் செம்பியன் சோழன்
மன்னர் மன்னன் மதுரகரு நாடகன்
கொன்னவின்ற நெடுஞ்சுடர்வேற் கொங்கர்கோமான் கோச்சடையன்
மற்றவர்க்குப் புத்திரனுய் மண்மகளது பொருட்டாக
மத்தயானை செலவுந்தி மானவேல் வலனேந்திக்
கடுவிசையா லெதிர்ந்தவரை நெடுவயல்வாய் நிகரழித்துக்
கறுவடைந்த மனத்தவரைக் குறுமடைவாய்க் கூர்ப்பழித்து
மன்னிகுறிச்சியுந் திருமங்கையு முன்னின்றவர் முரணழித்து
மேவலோர் கடற்றுனையோ டேற்றெதிரே வந்தவரைப்
பூவலூர்ப் புறங்கண்டும்
கொடும்புரிசை நெடுங்கிடங்கிற் கொடும்பா ளூர்க்கூடார்
கடும்பரியுங் கடுங்களிறுங் கதிர்வேலிற் கைக்கொண்டும்
சேவ......கூடாத பல்லவனைக் குழும்பூருட் டேசழிய
எண்ணிறந்த மால்களிறு மிவுளிகளும் பலகவர்ந்தும்
தரியலராய்த் தனித்தவரைப் பெரியலூர்ப் பீடழித்தும்
பூவிரியும் பொழிற்சோலைக் காவிரியைக் கடந்திட்
டழகமைந்த வார்சிலையின் மழகொங்க மடிப்படுத்தும்
ஈண்டொளிய மணியிமைக்கு மெழிலமைந்த நெடும்புரிசைப்
பாண்டிக் கொடுமுடி சென்றெய்திப் பசுபதியது
பதும பாதம் பணிந்தேத்திக்
கனகராசியும் கதிர்மணியும் மனமகிழக் கொடுத்திட்டுங்
கொங்கர்வன் நறுங்கண்ணிக் கங்கராசனொடு சம்பந்தஞ்செய்தும்
எண்ணிறந்தன கோசகசிரமும் இரணியகர்ப்பமுந் துலாபாரமும்
மண்ணின்மிசைப் பலசெய்து மறைநாவினோர் குறைதீர்த்துங்
கூடல்வஞ்சி கோழியென்னு மாடமா மதில்புதுக்கியும்

அறைகடல் வளாகங் குறையா தாண்ட
மன்னர் மன்னன் றென்னவர் மருகன்
மான வெண்குடை மான்றேர் மாறன்
மற்றவற்கு மகனாகி மாலுருவின் வெளிப்பட்டுக்
கொற்றமூன் றுடனியம்பக் குளிர்வெண்குடை மண்காப்ப
பூமகளும் புலமகளு நாமகளு நலனேத்தக்
கலியரைசன் வலிதளரப் பொலிவினொடு வீற்றிருந்து
கருங்கட லுடுத்த பெருங்கண் ஞாலத்து
நாற்பெரும் படையும் பாற்படப் பரப்பிக்
கருதாதுவந் தெதிர்மலைந்த காடவனைக் காடடையப்
பூவிரியும் புனற்கழனிக் காவிரியின் றென்கரைமேல்
தண்ணாக மலர்ச்சோலைப் பெண்ணாகடத் தமர்வென்றும்
தீவா யயிலேந்தித் திளைத்தெதிரே வந்திறுத்த
ஆய்வேளையுங் குறும்பரையு மடலமரு ளழித்தோட்டிக்
காட்டுக்குறும்பு சென்றடைய நாட்டுக்குறும்பிற் செருவென்றும்
அறைகடல் வளாக மொருமொழிக் கொளீஇய
சிலைமலி தடக்கைத் தென்ன வானவன்
அவனே
சிரீவரன் சிரீமனோகரன் சினச்சோழன் புனப்பூழியன்
வீதகன்மஷன் விநயவிச்ருதன் விக்ரமபாரகன் வீரபுரோகன்
மருத்பலன் மான்யசாசனன் மநூபமன் மர்த்திதவீரன்
கிரிஸ்திரன் கீதிகிந்நரன் கிருபாலயன் கிருதாபதானன்
கலிப்பகை கண்டகநிஷ்டுரன் கார்யதக்ஷிணன் கார்முகபார்த்தன்
பராந்தகன் பண்டிதவத்ஸலன் பரிபூர்ணன் பாபபீரு
குரையுறு கடற்படைத்தானைக் குணக்ராகியன் கூடநிர்ணயன்
நிரையுறுமலர் மணிநீண்முடி நேரியர்கோ னெடுஞ்சடையன்
மற்றவன்றன் ராஜ்யவற்சரம் மூன்றாவது செலாநிற்ப
ஆங்கொருநாண்,
மாடமா மதிற்கூடற் பாடுநீத்தவ ராக்ரோதிக்கக்
கொற்றவனே மற்றவரைத் தெற்றென நன்குகூவி
என்னேநுங் குறையென்று முன்னாகப் பணித்தருள

மேனுணின் குரவராற் பான்முறையின் வழுவாமை
மாகந்தோய் மலர்ச்சோலைப் பாகனூர்க் கூற்றத்துப்படுவது
ஆள்வதானை யடல்வேந்தே வேள்விகுடியென்னும் பெயருடையது
ஒல்காத வேற்றானையொ டோதவேலி யுடன்காத்த
பல்யாக முதுகுடுமிப் பெருவழுதியென்னும் பரமேச்வரனால்
வேள்விகுடி யென்னப்பட்டது கேள்வியிற் றரப்பட்டதனைத்
துளக்கமில்லாக் கடற்றானையாய் களப்பிரரா லிறக்கப்பட்டது
என்றுநின்றவன் விஞ்ஞாப்யஞ்செய்ய நன்றுநன்றென்று முறுவலித்து
நாட்டானின் பழமையாதல் காட்டிநீ கொள்கவென்ன
நாட்டாற்றன் பழமையாதல் காட்டினனங் கப்பொழுதே
காட்டமேனு ளெங்குரவராற் பான்முறையிற் றரப்பட்டதை
எம்மாலுந் தரப்பட்டதென்று செம்மாந்தவ னெடுத்தருளி
விற்கைத்தடக்கை விறல்வேந்தன் கொற்கைகிழான் காமக்காணி
நற்சிங்கற்குத்
தேரோடுங் கடற்றானையா லீரோட்டிக் கொடுத்தமையில்
மற்றிதற்குப் பெருநான்கெல்லை தெற்றென விரித்துரைப்பிற்
புகரறுபொழின் மருங்குடுத்த நகரூரெல்லைக்குமேற்கும்

* மற்றிதற்குத் தென்னெல்லை குளந்தைவங்கூழ் வந்தெசைக்குங் களந்தைக் குளத்தி னாலுக்குவடக்கும் மற்றிதற்கு மேலெல்லை யற்றமில்லாக் கொற்றன்புத்தூரொடு மையிருப்பைச்செய்யிடை மேற்றலைப் பெருப்பிற்குக் கிழக்கும் மற்றிதற்கு வடபாலெல்லை காயலுட்கமல மலரும் பாயலுள் வடபாலைப்பெருப்பிற்குத் தெற்கும் இவ்வியைந்த பெருநான் கெல்லையிற் பட்ட பூமி காராண்மை மீயாட்சியுள்ளடங்க மேலென் குரவராற் கொடுக்கப் பட்டபரிசே யெம்மாலும் கொடுக்கப்பட்டது மற்றிதற் காணத்தி குற்றமின்றிக் கூறுங்காலைக் கொங்கர்வன் நறுங்கண்ணிக் கங்கராசனது கந்யாரத்நம் கொங்கர் கோற்குக் கொணர்ந்து கொடுப்ப ஆர்ப்பரு வடற்றானைப் பூர்வராசர் புகன்றெழுந்து வில்விரவுங் கடற்றானை வல்லபனை வெண்பைவாய் ஆளமரு ளழிந்தோட வாளமரு ளுடன்வவ்விய ஏனப்பொறி யிகலமருளிடியுருமென வலனேந்த மலைத்ததானை மதவிகலன் மன்னர்கோ னருளிற்

* இதற்குப் பின்னுள்ள பகுதி அசவமாகவே வாசிக்கத்தக்கது.

பெற்றுங் கோல்வளேக்குப் வேற்றனேப் பல்வளேக்கோன் கொணரப்பட்டுப் பொரவந்தவர் மதந்தவிர்க்கும் கரவந்தபுரத்தவர் குலத்தோன்றல் மாவேந்தும் கடற்றுனே மூவேந்தமங்கலப் பேரரையனுகிய வைத்யசிகா மணி மாறங்காரி இப்பிரம தேயம்உடைய கொற்கைகிழான் காமக்காணி சுவரஞ்சிங்கன் இதனுள் மூன்றிலொன்றும் தனக்குவைத் திரண்டுகூறும் ஐம்பதின்மர் பிராமணர்க்கு நீரோ டட்டிக் கொடுத்தான். இதனுள் மூர்த்தி எயினன் சவையோ டொத்தது நான்கரை படாகாரம் உடையன் இதனுள் தனக்குவைத்த ஒரு கூற்றிலுந் தம்பிமார்க்கு நான்குந்தஞ் சிற்றப் பனர் மக்களுக்கு ஆறுஞ் சபையோ டொத்த படாகாரங் கொடுத்தான் இப்பிரசஸ்தி பாடின சேனபதி ஏனதி ஆயின சாத்தஞ்சாத்தற்கு மூன்று கூற்றுருமாய்த் தங்களோ டொத்த நான்கு படாகாரங் கொடுத்தார் மற்றிதனேக் காத்தார் மலரடியென் முடிமேல் என்று கொற்றவனே பணித் தருளித் தெற்றெனத் தாம்ர சாசனஞ் செய்வித்தான் இஃதெழுதின சுத்த கேசரிப் பெரும்பணேக் காரனுக்கு பெருமக்கள் அருளாற் பெற்றது ஒரு இல்லவளாவும் இரண்டுமாச் செய்யும் ஒருபுஞ்சையும் பெற்றான் இவை யுத்தகேசரிப் பெருப்பணேகாரன் எழுத்து.

## வேள்விகுடிச் சாசனம்

### தமிழ்ப் பகுதியின்

# பொழிப்புரை

கொல்யானைகள் பலவற்றைச் செலுத்தி, பகை மன்னர்களுடைய கூட்டங்களைத் தவிர்த்த பல்யாக முதுகுடுமிப் பெருவழுதி என்னும் பாண்டியாதிராஜன், ஆகாயத்தை யளாவும் மலர் முதலியவற்றையுடைய சோலைகளில் குளிர்ந்த மலர்க்கொம்புகளின்மீது வண்டுகள் ஒலிக்கப் பெற்றுள்ள பாகனூர்க் கூற்றமென்னும் வயல்கள் நிறைந்த நீர் நாட்டில், அறிவுடையவர்களில் வேதமார்க்கத்தினின்று வழுவாத கொற்கை கிழான் நற்கொற்றன், அநேக செய்திகளைக் கேட்டறிந்த கல்வியுடைய அந்தணர் களைக் கொண்டு ஒரு வேள்வியை முற்றுவித்தான். அந்த வேள்வி நடந்த இடத்துக்கு வேள்விகுடி என்று அந்தணர்கள் பெயரிட்டனர். அரசன் அந்த ஊரைத் தாரை வார்த்துக் கொடுத்தான். தானம் பெற்ற நற் கொற்றனும் அவனுடைய சந்ததியாரும் அவ்வூரின் செல்வ வளங்களை நீண்ட காலம் அநுபவித்து வந்தனர்.

பிறகு, களப்பிரன் என்னும் கொடுமையுடைய அரசன் அளவிடுதற் கரிதான அவ்வப்பிரதேசங்களின் அதிபர்களை அவ்வவர் நாட்டைவிட்டு நீக்கி அகன்ற பாண்டி நாட்டைக் கைப்பற்றி, தானம் கொடுக்கப்பட்ட வேள்விக் குடியையும் இறக்கினான்.

அதன்பின் உலகிலுள்ள இருளை நீக்கக் கதிரவன் உதித்ததுபோல, உலகிலுள்ள அநீதியை நீக்கும்பொருட்டு, பாண்டியாதிராஜன் தோன்றி னான். அப்பாண்டியாதிராஜன் வீசுகின்ற கிரணங்களில் விளங்குகின்ற ஒளி நாற்றிசையிலும் பிரகாசிக்க, கடல் சூழ்ந்த அகன்ற உலகத்துப் பேரரசர்களையும் சிற்றரசர்களையும் அவரவர்களின் சேனையோடு அழித் தும், வெண்கொற்றக் குடை நிழலில் அமர்ந்து நீதியொடு அரசாண்டும், பூமிதேவி பலர்க்கும் பொது என்பதை அகற்றித் தனக்கே உரிமையாகச் செய்தும், ஒடுங்கா மன்னர்களின் பெருமையுடைய நகரத்தை அழித்தும், அம்மன்னர்களுடைய மானத்தைக் குலைத்தும் வந்த சேனையையுடைய கடுங் கோன் என்னும் பெயரையுடைய பாண்டியன் ஆவன்,

அவனுக்கு மகன் பூமியைப் பொதுக்கடிந்துப், மிக்க செல்வத்தை அடைந்தும், எந்தக்காலத்தில் அழைத்தாலும் ஓடிவரக்கூடிய கடல் போன்ற சேனையைப் பெற்றும் இருந்த ஆதிராஜன் அவனி சூளாமணி என்பான், போரை அழிக்கும் மதங்கொண்ட யானையை உடையவன், மாற வர்மன் என்னும் பெயரையுடையவன்.

அவனுக்கு ஒப்பற்ற மகன், மண்மகளைக் குற்றமின்றி ஆண்டும், வீரத் தோடு சென்று, தான் வென்ற வெற்றியை மலையில் பொறித்தும், அரசர் களுக்கு அரசனுகிக் கையில் வில்லேந்தியும், யானைப் படையைக் கொண்டும் அரசாண்டவன் செழியன், வானவன் செங்கோற்சேந்தன் என்று சொல்லப் படுபவன்.

அவனுடைய வழியில் வந்த அவன் மகன் உதயகிரி மத்தியத்து முளைத்து வருகின்ற சூரியன்போல வெளிப்பட்டு, முகபடாம் அணிந்த யானையைச் செலுத்திப் பாழி என்ற இடத்தில் போர் செய்தும் வில்லேந்திய படைஞர் வேலியாகச் சூழ்ந்துநின்ற கடல் தானையை நெல்வேலிப் போரில் வென்றும், பொருந்தி வந்து அடையாத பரவர் என்பவரைப் பாழ்படுத்தி யும், வண்டுகள் சூழ்ந்த சோலைகளையுடைய குறுநாட்டவரது குலங் கெடுத்தும், களிறுகளைச் செலுத்திச் செந்நிலம் என்னும் இடத்தில் போர் வென்றும், கேரளனைப் பலமுறை அவன் சுற்றம் யானை இவைகளைக் கைப் பற்றியும், மதில்களையுடைய புலியூரைக் கடற்போரில் ஒரே நாழிகையில் வென்றும், வேலாழியையும், பறம்பையும் அழித்துப், இரணிய கர்ப்பம், துலாபாரம் என்னும் தானங்களைச் செய்தும் அந்தணர்களுக்கும் அசக்தர்களுக்கும் பொருளைக் கொடுத்தும், மகர வடிவமாகச் செய்யப் பட்ட மணிமுடியை அணிந்தும், அரிகேசரி, அசமசமன் என்னும் பட்டங் களைத் தரித்தும் புகழ் பெற்றவன் மாறவர்மன் என்பவன்.

அவனுக்கு மகன் வெற்றிவேலைக் கையில் ஏந்தி அவனது கடல் போன்ற சேனையுடன் மருதூர்ப் போரில் எளிதில் வென்றும், செங்கொடி, புதான்கோடு என்னுமிடங்களில் பகைவரை வென்று அவருடைய கோபத்தை அடக்கியும் கொங்கு அலரும் நறுஞ் சோலையினிடத்துள்ள மங்கலபுரம் என்னும் ஊரில் மகாரதரை எறிந்தழித்தும், கடலால் சூழப் பட்ட நாட்டில், சிலை, புலி, கயல் இவைகள் பொறிக்கப்பட்ட கொடிகளை நெடுவரையில் செதுக்குவித்தும், தென்னவன், செம்பியன், சோழன், மன்னர் மன்னன், மதுர கருநாடகன், கொங்கர்கோமான் என்னும் பட்டங் களைப் புனைந்தும் ஆண்டவன் கோச்சடையன் ஆவன்.

அவனுடைய புத்திரன் பூமிதேவியின் பொருட்டாக, மதங்கொண்ட யானையைச் செலுத்திப் பெருமை பொருந்திய வேலை ஏந்தி, மிக்க விரைவாக வந்து எதிர்த்தவர்களை நெடுவயல் என்னும் ஊரில் அழித்தும், கோபம் கொண்டுள்ள மனத்தவர்களைக் குறுமடை என்னுமிடத்தில் அவர்களுடைய பெருமை, வீரம் முதலியவற்றை அழித்தும், மன்னிகுறிச்சி, திருமங்கை என்னும் ஊர்களில் எதிர்த்தவர்களின் வலியை அழித்தும், பகைவருடைய கடல்தானையோடு எதிர்த்து, எதிரே வந்தவர்களைப் பூவலூரில் தோற்றோடச் செய்தும், வளைந்துள்ள மதில் உறுப்புக்களையும், ஆழமான அகழிகளையுமுடைய கொடும்பாளூரில் பகைவர்களுடைய விரைந்து செல்லும் குதிரைகளையும், விரைந்து செல்லும் யானைகளையும் ஒளிவிடுகின்ற வேலினால் கைக்கொண்டும், தன்னோடு கூடாத பல்லவனைக் குழும்பூர் என்னுமிடத்தில் அவனுடைய ஒளி குன்றும்படிச் செய்து அளவிறந்த பெரிய களிறுகளையும் குதிரைகளையும் கவர்ந்தும், பகைவர்களாய் உள்ளவர்களைப் பெரியலூரில் அவர்களுடைய பெருமையைக் குன்றச் செய்தும், பூக்கள் விரிகின்ற சோலைகளையுடைய காவிரியைக் கடந்து அழகமைந்த வில்லினால் மழகொங்கம் என்னும் நாட்டை அடிமைப்படுத்தியும், இரத்தின மணிகள் வைத்துக் கட்டப்பட்டதனால் ஒளிவிடுகின்ற அழகுபொருந்திய பெரிய மதில் உறுப்புகளையுடைய பாண்டிக்கொடிமுடி என்னும் பதிக்குச் சென்று பசுபதி என்னும் சிவபிரானது தாமரை மலரை ஒத்த திருவடிகளைப் பணிந்து ஏத்தி அப்பெருமானுக்குப் பொற்குவியல்களையும் ஒளிவிடுகின்ற இரத்தினங்களையும் உள்ளம் உவப்பக் கொடுத்தும் கொங்கு நாட்டு அரசனும், சிறந்த வாசனையுடைய மாலையை அணிந்தவனும் ஆகிய கங்கராஜனோடு சம்பந்தஞ் செய்தும், ஆயிரக் கணக்கில் பசுக்களைக் கொடுத்தும், இரணிய கர்ப்பம், துலாபாரம் இவைகள் பலவற்றைச் செய்தும், மறையை நாவிலுடைய அந்தணர்களின் குறைகள் பலவற்றைத் தீர்த்தும், கூடல், வஞ்சி, கோழி என்னும் ஊர்களில் உள்ள மாடம் மதில் இவைகளைப் புதுக்கியும், ஒலிக்கின்ற கடல்சூழ்ந்த பூமியைக் குறையாது ஆண்ட தென்னவர் வழியில் வந்த அரசர்க் கரசனாகிய தேர்மாறன் என்னும் பாண்டியன் ஆவன்.

அவனுக்கு மகனாகப் பிறந்து திருமால் போல விளங்கியவன் மூன்று கொற்ற முரசுகளும் ஒலிக்க, குளிர்ந்த வெண்குடை பூமியைக் காப்ப, திருமகளும் நிலமகளும், கலைமகளும் நலனை ஏத்த கலியரசன் வலிமை குன்ற மிகச் சிறப்போடு வீற்றிருந்தும், நாற்பெரும் படைகளையும் வகை வகையாகப் பரப்பி, எண்ணாமல் வந்து எதிர்த்த காடவனை (பல்லவனை)க் காட்டில் ஓடச் செய்தும், பின் காவிரியின் தென் கரையில் இருந்த பெண்ணை

கடத்தில் போர் செய்து வென்றும் வேலே ஏந்தித் தன்னே எதிர்த்த ஆய் வேளேயும் குறும்பரையும் வலிமை மிகுந்த போரில் அழித்தோட்டியும் குறுநில மன்னர்களேக் காட்டில் போய் ஒளித்துக்கொள்ளச் செய்தும், ஒலிக்கின்ற கடல் சூழ்ந்த உலகமுழுவதும் தன்னுடைய ஆணே ஒன்றே செல்லும்படி அமைத்தும் ஆட்சி செய்தவன் தென்னவானவன். அவனே சிரீவரன், சிரீமனேகரன், சினச்சோழன், புனப்பூழியன், வீதகன்மஷன், விநயவிச்சுருதன், விக்ரம பாரகன், வீர புரோகன், மருத்பலன் மான்ய சாசனன், மனுரபமன், மர்த்திதவீரன், கிரிஸ்திரன், கீதிகிந்நரன், கிருபால யன், கிருதாபதானன், கலிப்பகை கண்டக நிஷ்டுரன், கார்யதக்ஷிணன், கார்முகபார்த்தன், பராந்தகன், பண்டித வத்சலன், பரிபூர்ணன், பாபபீரு, கடற்படைத்தானே குணக்கிருகியன், கூடநிர்ணயன், நேரி யர்கோன், நெடுஞ்சடையன் என்னும் பெயர்களே உடையவன்.

இவனுடைய இராச்சிய ஆண்டு மூன்ருவதில் ஒருநாள், மாடங்களேயும் பெரிய மதில்களேயும் உடைய மதுரைமாநகரில் வந்து ஒருவன், 'கொற்ற வனே!' என விளித்து முறையிட அரசனும் அவனே உடனே அழைத்து 'என்ன உன் குறை' என்று கேட்டருள அதற்கு அவன் "முன்னுளில் உமது முன்னேரால் முறைப்படி ஆகாயம் அளாவிய சோலே சூழ்ந்த பாகனூர்க் கூற்றத்தைச் சேர்ந்ததும், வேள்விகுடி என்னும் பெயரை உடையதும், பெருஞ் சேனேயோடு கடல் சூழ்ந்த உலகத்தை ஆண்ட பல்யாக முது குடுமிப் பெருவழுதி என்னும் பரமேசுவரனுல் வேள்விகுடி என்று பெய ரிடப்பட்டதும், வேதங்களேக் கேட்டுத் தானமாகக் கொடுக்கப்பட்டதும் ஆன இந்த ஊர் களப்பிரனுல் கைக்கொள்ளப்பட்டது" என்று விண்ணப்பஞ் செய்தான்.

அரசனும் அதனேக் கேட்டு நன்று நன்றெனக் கூறிப் புன்முறுவல் பூத்து, "உன் உரிமையைக் காட்டிப் பெற்றுக்கொள்க" என்று கூற அவனும் உரிமையைக் காட்ட, அரசனும் அதனே ஏற்றுத் தம் முன்னேரால் தரப் பட்டது என்று பெருமைகொண்டு அந்தக் கொற்கை கிழான் காமக்காணி நற்சிங்கனுக்கு நீர் வார்த்துக் கொடுத்தான்.

அதற்குப் பெரு நான்கெல்லே சரியாகக கூறுமிடத்து குற்றமில்லாப் பொழில்கள் பக்கத்தில் உள்ள நகரூர் எல்லேக்கு மேற்கு, இளந்தென்றற் காற்று வந்தசைக்கும் களந்தைக் குளத்திலுள்ள ஆலுக்கு வடக்கு, கொற்றன்புத்தூர் அதற்கு அருகிலுள்ள இருப்பைத் தோப்பு இவைகளின் மேற்றலேப் பெருப்பிற்குக் கிழக்கு, நீர் தேங்கியிருக்கும் குளத்தில் தாமரை

மலரும் பரந்த இடத்தில் வடபாலைப் பெருப்பிற்குத் தெற்கு, இவைகளுக்கு உட்பட்ட பூமி காராண்மை மீயாட்சி உட்படத் தம் முன்னோரால் அளிக்கப்பட்ட முறைப்படியே தாமும் அளித்ததாக அரசன் மொழிந்தருளினான்.

அதற்கு ஆணத்தி தந்தவனைக் கூறுமிடத்து கங்கராஜனுடைய குமாரத்தியைக் கொங்க அரசனுக்குக் கொண்டுவந்து கொடுத்தபொழுது, வலிமை மிக்க சேனைகளையுடைய பூர்வராசசரையும், (அவருக்கு உதவியாக வந்த) வலிமைமிக்க கடல் போன்ற சேனையையுடைய வல்லபனையும், வெண்பை என்ற ஊரில் போர் செய்து அப்போரில் பன்றிப் பொறியைக் கவர்ந்துகொண்டு வெற்றிபெற்ற சேனையையுடைய மதவிகலனும், பல்லவனை வென்றவனும், கரவந்தபுரத்தவர் குலத்தோன்றலும் யானைப்படை, குதிரைப்படை இவைகளையுடைய மூவேந்த மங்கலப் பேரரையனாகிய வைத்ய சிகாமணி மாறங்காரி என்பவன்.

இந்தப் பிரமதேயத்தைப் பெற்ற கொற்கை கிழான் காமக்காணி சுவரஞ்சிங்கன் இவ்வேள்விக்குடியில் மூன்று பாகத்தில் ஒரு பாகத்தைத் தனக்கு வைத்துக்கொண்டு எஞ்சிய இரண்டு பாகத்தை அந்தணர் ஐம்பது பேர்களுக்கு நீர் வார்த்துக் கொடுத்தான். மூர்த்தி எயினன் சபையோடு சேர்ந்த நான்கரை படாகாரம் உடையவன். இதில் இவன் தனக்கு விட்ட ஒரு கூற்றில் தம்பிமார்க்கு நான்கு பங்கும் தன் சிற்றப்பனார் மக்களுக்கு ஆறு பங்கும் சபையோடொத்துக் கொடுத்தான்.

ஏனாதி என்னும் பட்டமுடைய சேனாதிபதியாகிய சாத்தஞ் சாத்தனுக்கு மூன்று கூற்றுருஞ் சேர்ந்து தங்களோடு ஒத்த நான்கு படாகாரம் கொடுத்தனர்.

இதனைக் காத்தவர் அடிகள் என் முடிமேலன எனக்கூறி, இதனைத் தாம்பிரசாசனத்தில் எழுதச் செய்வித்தான் அரசன்.

இதனை எழுதிய சுத்தகேசரி பெரும்பணைக்காரனுக்குப் பெருமக்கள் ஒரு இல்லத்தையும் இரண்டு மா நன்செய் நிலத்தையும் ஒரு மா புன்செய் நிலத்தையும் அளித்தனர். இவை யுத்தகேசரிப் பெரும்பணைக்காரன் எழுத்து.

---

பாண்டியர் செப்பேடுகள் 2

நெடுஞ்சடையனின் ஸ்ரீவரமங்கலச் சாசனம்

# அறிமுகம்

இந்தச் செப்பேட்டுச் சாசனம் பாண்டியன் ஜடிலவர்மனல் அளிக்கப் பட்டது. வேள்விகுடிச் சாசனத்தை அளித்த பாண்டியனும் இவனே. சூவல் துரை எழுதிய "பழம்பொருள்களின் பட்டியல்" (The list of Antiquities) என்னும் நூலின் இரண்டாம் பாகத்தில் இந்தச் செப்பேட்டுச் சாசனம் "சென்னை மியூசியம் செப்பேடு—15" (The Madras Museum Plate No.—15) என்று குறிக்கப்பட்டிருக்கிறது.

ஸ்ரீவரமங்கலம் தானமாக வழங்கப்பட்ட ஊரின் பெயர். எனவே, இதற்கு ஸ்ரீவரமங்கலச் செப்பேட்டுச் சாசனம் என்றும் பெயருண்டு. இச் செப்பேடுகள் எவ்விடத்தில் எவ்வாறு கிடைத்தன என்பதை அறிய முடிய வில்லை.

இந்தச் சாசனம் ஏழு செப்பேடுகளைக் கொண்டது. ஒவ்வொரு ஏடும் $11\frac{1}{4}$ அங்குல நீளமும் $4\frac{1}{8}$ அங்குல அகலமும் கொண்டு ஒரு வளையத்தில் கோக்கப்பட்டுள்ளது. ஏடுகள் $328\frac{1}{2}$ தோலா எடையும், வளையம் $11\frac{1}{4}$ தோலா எடையும், இரண்டும் சேர்ந்து $339\frac{3}{4}$ தோலா எடை யும் உள்ளன. வளையத்திலே அரசன் முத்திரை பொறிக்கப்படவில்லை. இந்த ஏடுகளும் வேள்விகுடிச் செப்பேடுகளைப் போலவே இடதுபுறத்துத் தலைப் பக்கத்தில் தொளையிடப்பட்டுள்ளன.

ஏடுகள் உராய்ந்து தேய்ந்து போகாதபடி ஒவ்வொரு ஏட்டின் விளிம்புகளும் சற்றுத் தடிப்பாக இருக்கின்றன. முதல் ஏடும் கடைசி ஏடும் ஒருபுறத்தில் மட்டும் எழுதப்பட்டுள்ளன. ஏனைய ஏடுகள் இரு புறமும் பொறிக்கப்பட்டுள்ளன.

இந்த ஏடுகளின் முதல் 19 வரிகளில் ஆறு வடமொழிச் சுலோகங்கள் கிரந்த எழுத்தில் எழுதப்பட்டுள்ளன. இவற்றைத் தொடர்ந்துள்ள வாசகங்கள் தமிழ் மொழியில் வட்டெழுத்தில் வரையப்பட்டுள்ளன. அதன் பிறகு, சாசனத்தின் இறுதியில் மற்றச் சாசனங்களில் காண்பது போன்ற பலச்ருதி சுலோகங்கள் நான்கு உள்ளன. தமிழ் வாசகத்தினிடையே வரும் வடமொழிச் சொற்கள் கிரந்த எழுத்தில் காணப்படுகின்றன. தமிழ்ப் பகுதியிலுள்ள மெய்க்கீர்த்தி, செய்யுள் நடையில் அமைந்துள்ளது. இந்த நடை கம்பீரமாக ஓசைப் பொலிவுடன் மோனைச் சிறப்பு நிரம்பப் பெற்றிருக்கிறது.

இந்தச் சாசனத்தை ஸ்ரீ வி. வெங்கையா 1893-ஆம் ஆண்டின் **இந்தியப்பழம்பொருள் ஆராய்ச்சி** (The Indian Antiquary Vol.No. xxii 1893) என்னும் ஆங்கில வெளியீட்டில் வெளியிட்டார். இதில் இச்செப்பேட்டு வாசகங்களை ஆங்கில எழுத்தில் பெயர்த்து ஆராய்ச்சிக் குறிப்புகளுடன் வெளியிட்டார். ஆகவே, இத்தகைய மாற்றுமுறையில் செப்பேட்டுவாசகம் ஆங்கிலம் அறிந்தவர்களுக்கு மட்டும் பயன்படுவதாயிற்று. இச்செப்பேட்டின் தமிழ் வாசகம் "செந்தமிழ்" நான்காம் தொகுதியில் தமிழ் எழுத்தில் அச்சிடப்பட்டுள்ளது. [1]

இந்தச் செப்பேடுகளின் தொடக்கத்தில் ஆறு வடமொழிச் சுலோகங்கள் இருக்கின்றன என்று கூறினோம். இந்தச் சுலோகங்களில் முதலாவது பிரமனுக்கும், இரண்டாவது விஷ்ணுவுக்கும், மூன்றுவது சிவனுக்கும் வணக்கம் கூறப்படுகிறது. நான்காவது சுலோகம் பாண்டியகுலத்தின் மூல புருஷனை சந்திரனையும், அவன் வழியில் பாண்டிய மன்னர் தோன்றியதையும் கூறுகின்றது. ஐந்தாவது சுலோகம் மாறவர்மன் என்னும் பாண்டியனையும் இவனுடைய முன்னோர்களையும் கூறுவதோடு மாறவர்மனைப் "பல்லவ பஞ்சநன்" (பல்லவ அரசனை முறித்தவன்) என்றும் குறிப்பிடு

1. செந்தமிழ் நான்காம் தொகுதி 1905-1906 மாறஞ்சடையன்-1 என்னும் கட்டுரை 335 - 385-ஆம் பக்கம்.

கிறது. ஆருவது சுலோகம் மாறவர்மனுடைய மகனுன ஜடிலவர்மனைக் குறிப்பிடுகிறது.

இந்தச் சாசனத்தின் தமிழ்ப் பகுதி நெடுஞ்சடையன் என்னும் பாண்டியனைக் கூறுகிறது. வடமொழிச் சுலோகத்தில் கூறப்பட்ட ஜடில வர்மனே இந்த நெடுஞ்சடையன் ஆவன். (ஜடிலன் என்பது வடசொல்; நெடுஞ்சடையன் என்பது தமிழ்.) மேலும் தமிழ்ப் பகுதி இவ்வரசனைப் "பரம வைஷ்ணவன்" என்றும், காஞ்சிவாய்ப் பேரூரில் திருமாலுக்குக் "குன்றம் அன்னதோர் கோயில்" அமைத்தான் என்றும் கூறுகிறது. இன்னும் சாசனத்தின் தமிழ்ப் பகுதி இவ்வரசனைத் தென்னன், வானவன், செம்பியன் என்று கூறுகிறது. தென்னன் என்பது பாண்டியனையும், வான வன் என்பது சேரனையும், செம்பியன் என்பது சோழனையும் குறிக்கின்றன. எனவே, இவ்வரசன் சேர சோழர்களையும் வென்று அவர்களின் நாட்டுப் பகுதிகளை ஆண்டிருக்கவேண்டும் என்பது தெரிகின்றது.

இச் சாசனத்தின் தமிழ்ப் பகுதியில் இவ்வரசனைப்பற்றி மேலும் காணப்படும் செய்திகளாவன:— வெள்ளூர், விண்ணம் செழியக்குடி என்னும் ஊர்களில் இவ்வரசன் போர் புரிந்து பகைவரை வென்றுன். ஆனுல், இவனுடன் போர் செய்த பகைவர்களின் பெயர் கூறப்படவில்லை. பிறகு இவ்வரசன் அதியன் என்னும் அரசனுடன் ஆயிரவேலி அயிரூர், புகழியூர் என்னும் ஊர்களில் போரிட்டு அவனைத் தோற்றோடச் செய்தான். பல்லவ அரசனையும் போரில் வென்றுன். குடகொங்கு நாட்டு அரசனை வென்று அவனுடைய யானைகளையும் கொடியையும் கவர்ந்துகொண்டான். மேலும், கொங்கு நாட்டைத் தான் கைப்பற்றியதற்கு அறிகுறியாக அங்கே தன் வெற்றி முரசறைந்தான். பிறகு இவ்வரசன் காஞ்சி (நொய்யல்) ஆறு பாய்கிற இடத்தில் உள்ள பேரூரில் திருமாலுக்குப் பெரியதோர் கோயில் கட்டினுன். இவன் "பரம வைஷ்ணவன்" என்று குறிக்கப்பெற்றிருப்பதை முன்னரே கூறினேம். ஆயினும் இவன் பிற மதங்களைச் சமரச நோக்குடன் கண்டான் என்பது இந்தச் சாசனத்திலுள்ள வட மொழிப் பகுதியில் வரும் மும்மூர்த்தி வணக்கத்தால் தெரிய வருகிறது.

இவன் வேணுட்டு மன்னனுடன் போர் செய்து வென்று அவனுக்கு உரியதாக இருந்த இலங்கை போன்று அரணுடைய கடற்கரைப் பட்டின மாகிய விழிஞம் என்னும் ஊரை அழித்து, அந்த வேணுட்டு மன்னனுடைய யானை, குதிரை குலதனம், நன்னுடு ஆகியவற்றைக் கைப்பற்றினுன். பிறகு

இவன் கரவந்தபுரத்திலே ஒரு கோட்டை கட்டினன். இத்தகைய பராக்கிர மங்கள் பல செய்து அப்பால் மதுரையில் அரசு வீற்றிருந்தான்.

இந்தச் சாசனத்தில் இச்செப்பேடு அளிக்கப்பட்ட சக ஆண்டு குறிக் கப்படவில்லை; ஆட்சி ஆண்டு பதினேழு என்று காணப்படுகிறது. தென் கள வழிநாட்டைச் சேர்ந்த வேலங்குடி என்னும் ஊரின் பெயரை ஸ்ரீவரமங் கலம் என்று மாற்றியமைத்து அதைத் தானமாக வழங்கினன் என்று இச் செப்பேடு கூறுகிறது. இவ்வூரைத் தானமாகப் பெற்றவன் ஸீஹூமிச்ர னின் மகனன ஸூஜ்ஜதபட்டன்.

இத்தானத்திற்கு ஆணத்தியாக இருந்தவன் வண்களந்தையூரில் பிறந்தவனும் வீரமங்கலப் பேரரையனுமாகிய மூர்த்தி எயினன் என்பவன். இச்சாசனத்தை எழுதியவன் பாண்டியனுடைய பெரும்பணைக்காரனகிய அரிகேசரி.

இந்தச் சாசனத்தில், ஏனைய சாசனங்களிற் போலவே, மெய் யெழுத்துகளும் எகர ஒகரக் குறிலும், சில இடங்களில் புள்ளியிட்டும் சில இடங்களில் புள்ளி இடாமலும் உள்ளன. மேற்கு என்பது மேக்கு என்று எழுதப்பட்டிருக்கிறது. இது போன்ற சில பிழைகள் பட்டயம் எழுதின வன் பிழையினல் ஏற்பட்டுள்ளன.

**அதியன், அயிரூர்.**

இந்தச் செப்பேட்டுச் சாசனத்தில், பாண்டியன் அயிரூரிலும் புகழி யூரிலும் அதியனை வென்ற செய்தி கூறப்படுகிறது. "மாயிரும் பெரும்புனற் காவிரி வடகரை ஆயிரவேலி அயிரூர் தன்னிலும் புகழியூரும் திகழ்வே லதியனை ஓடு புறங்கண்டுப்" என்பது சாசன வாசகம்.

இச் சாசனத்தை 1893–ஆம் ஆண்டில் வெளியிட்ட திரு. வி. வெங்கையா, அதியனைச் சோழ அரசன் என்றும் அவன் சோழ நாட்டுக் காவிரிக் கரையில் இருந்த ஆயிரவேலி அயிரூரில் இருந்தான் என்றும் இச் சாசன முன்னுரையில் கூறுகிறர். *

* Indian Antiquary Vol. XXII P. 66

ஆயிரவேலி அயிரூர் சோழநாட்டில் பாய்கிற காவிரியாற்றின் வட கரையில் இருந்ததென்றும், அவ்வூரில் பாண்டியனுடன் போர் செய்த அதியன் சோழ அரசன் என்றும் வெங்கையா கூறுவது தவறு. ஆயிர வேலி அயிரூர் சோழநாட்டுக் காவிரிக் கரையில் இருந்ததன்று; அது கொங்கு நாட்டில் பாய்கிற காவிரியாற்றின் வடகரையில் இருந்தது என்பதே பொருத்தமாகும். ஏனென்றால், ஆயிரவேலி அயிரூர்ப் போரையடுத்துப் புகழியூரிலும் இவ்விரு அரசருக்கிடையே மற்றொரு போர் நிகழ்ந்திருக்கிறது. இப்போது, அயிரூரும் புகழியூரும் ஒன்றுக்கொன்று அருகில் இருந்தன என்பது தெரிகின்றது.

அதியனைச் சோழ அரசன் என்று வெங்கையா கூறுவது தவறு என்பதற்குக் காரணம் வருமாறு. அதியன் அல்லது அதிகமான் என்னும் பெயருள்ளவர் சோழ அரசர் பரம்பரையில் இருந்ததில்லை. அதியன் அல்லது அதிகமான் என்னும் பெயருள்ள அரச பரம்பரையினர் கொங்கு நாட்டின் ஒரு பகுதியில் தகடூரைத் தலைநகரமாகக்கொண்டு பண்டைக்காலம் முதல் அரசாண்டார்கள். இந்த அதிகமான் குலத்து அரசர் பரம்பரையைச் சேர்ந்தவனே இச்சாசனத்தில் கூறப்படுகிற அதியன்.

அதியன் அல்லது அதிகமான் என்னும் அரச பரம்பரையினர் கி.பி. முதலாம் இரண்டாம் நூற்றாண்டுகளில் தகடூர் நாட்டை யரசாண்ட செய்தி புறநானூறு * என்னும் நூலில் கூறப்பட்டுள்ளது.

இந்த அதிகமான் அரசர் பரம்பரை பிற்காலத்தில் ஜடிலவர்மன் காலத்திலும் அதற்குப் பிறகு 12-ம் நூற்றாண்டிலும் இருந்தது என்பது சாசனங்களிலிருந்து அறியப்படுகின்றது.

இந்த அதியனுடன் பாண்டியன் போர் செய்தபோது அதியனுக்கு உதவியாகக் கேரளனும் பல்லவனும் சேனையுடன் வந்தார்கள் என்றும், இம்மூவரையும் பாண்டியன் வென்றான் என்றும் சாசனம் கூறுகிறது. கொங்கு நாட்டைக் கைப்பற்றுவதற்குப் பாண்டியன் முயற்சி செய்தபோது பாண்டியனை எதிர்த்துக் கொங்கு நாட்டவனாகிய அதியன் போர் செய்தான் என்றும், அவனுக்கு உதவியாகக் கேரளனும் பல்லவனும் வந்த போது அம்மூவரையும் பாண்டியன் வென்றான் என்றும் இச்சாசனத்தினால் அறிகிறோம்.

(*புறம் 87, 88, 89, 90, 91, 92, 93, 94, 95, 96, 97, 98, 99, 100, 101, 102, 103, 104, 230, 231, 232, 235, 315, 390, 392. செய்யுள்களையும் இவற்றின் அடிக் குறிப்புகளையும் காண்க.)

**காஞ்சிவாய்ப் பேரூர்**

இப்பாண்டியன் காஞ்சிவாய்ப் பேரூரில் திருமாலுக்குக் கோயில் கட்டினான் என்று சாசனம் கூறுகிறது. "பூஞ்சோலை அணிபுறவிற் காஞ்சி வாய்ப் பேரூர் புக்குத் திருமாலுக்குக் குன்றமன்னதோர் கோயிலாக்கியும்" என்பது சாசன வாசகம்.

இதில் கூறப்படுகிற காஞ்சிவாய்ப் பேரூர் தொண்டை நாட்டிலுள்ள காஞ்சீபுரம் என்று திரு வி. வெங்கையா கூறுகிறார். (Indian Antiquary Vol. XXII P. 66) இதுவும் தவறானது, காஞ்சிவாய்ப்பேரூர் என்பதற்குக் காஞ்சி என்னும் இடத்தில் உள்ள பேரூர் என்பது பொருளாகும். காஞ்சி என்பது காஞ்சியாறு. இது கொங்கு நாட்டில் பாய்கிறது.

காஞ்சியாறு, "பதிற்றுப் பத்து" என்னும் சங்க இலக்கியத்திலும் குறிக்கப்படுகிறது. இக்காஞ்சியாறு இக்காலத்தில் நொய்யல் ஆறு என்று கூறப்படுகிறது. காஞ்சியாறாகிய நொய்யல் ஆற்றங்கரையருகில் பேரூர் என்னும் ஊர் இப்போதும் இருக்கிறது. இந்தப் பேரூருக்கு மேலைச்சிதம்பரம் என்றும் பெயர் வழங்குகிறது. பெரியபுராணத்தில் ஏயர்கோன் கலிக் காமநாயனார் புராணம் 88–ஆம் செய்யுள் "கொங்கிற் காஞ்சிவாய்ப் பேரூர்" என்று இவ்வூரைக் குறிப்பிடுவது காண்க. கொங்கு நாட்டில் அதியனை வென்ற பாண்டியன் கொங்கு நாட்டுக் காஞ்சிவாய்ப் பேரூரில் திருமாலுக்குக் கோயில் கட்டினான் என்று சாசனம் கூறுவது பொருத்தமே. எனவே, காஞ்சிவாய்ப்பேரூர் என்பதற்குக் காஞ்சீபுரம் என்று கருதுவது தவறாகும். பாண்டியன் * பேரூரில் கட்டிய திருமால் கோயில் இப்போது காணப்படவில்லை. அது பிற்காலத்தில் அழிந்துவிட்டது போலும்.

* பேரூர்ப் பட்டீசர் கோயிலின் தெற்குப் பிராகாரத்தில் திருமாலின் திருமேனி ஒன்று வைக்கப்பட்டிருக்கிறது. இத்திருமேனி பாண்டியன் சடிலவர்மன் எடுப்பித்த திருமால்கோயில் அழிந்த பின்னர் அங்கிருந்து கொண்டுவந்து வைக்கப்பட்டிருப்பதாக முதியோர் கூறுகின்றனர்.

# ஸ்ரீவரமங்கலச் செப்பேட்டில் கூறப்பட்ட

# பாண்டியர் வழிமுறை

**(சம்ஸ்கிருதப் பகுதி)** **(தமிழ்ப் பகுதி)**

**ஸ்ரீமாறவர்மன்**
(பல்லவ அரசனை முறியடித்தவன்)



**ஜடிலவர்மன்**



**நெடுஞ்சடையன்**

[வெள்ளூர், விண்ணம், செழியக்குடி என்ற ஊர்களில் பகைவர்களைப் போரில் வென்றான். ஆயிரவேலி அயிரூர், புகழியூர்ப் போர்களில் அதியனை வென்று துரத்தினான். பல்லவனும் கேரளனும் குட கொங்க மன்னனுக்கு உதவியாக வந்த போது அவர்களை ஓட்டிக் குடகொங்க மன்னனைப் பிடித்துக் கொண்டுவந்து மதுரையில் சிறை வைத்தான். காஞ்சி ஆற்றங்கரையிலுள்ள பேரூரில் திருமாலுக்குக் 'குன்றமன்னதோர்' கோயிலைக் கட்டினான். விழிஞத்துக் கோட்டையை அழித்து ஆய்வேள் அரசனை வென்றான். கரவந்தபுரத்தைச் சூழ ஆழமான அகழியையும் உயரமான மதிலையும் அமைத்தான்.

பாண்டியநாதன், பண்டிதவத்சலன், வீரபுரோகன், விக்ரமபாரகன், பராந்தகன், பரமவைஷ்ணவன் என்னும் சிறப்புப் பெயர்களுடையவன். இவன் தனது 17-ம் ஆட்சியாண்டில் ஸ்ரீவரமங்கலச் சாசனத்தை வழங்கினான்.]

# ஸ்ரீவரமங்கலச் சாசனம்

# சாசன வாசகம்

## முதல் ஏடு—பின்புறம்

स्वस्ति [।*]

1. ब्रह्म व्यञ्जित विश्वतन्त्रमनघं वक्त्रैश्चतुर्भिर्गृणन् बिभ्रद्बालपतंग पिंग

2. लतरच्छायज्जटामण्डरूम् [।*] आद्यन्नाभिसरःप्रसूतिकमलं विष्णोरधि[1]ष्ठायु

3. कः पुष्णातु प्रमदश्चिराय भवताम् पुण्यः पुराणो मुनिः॥ [१*] यस्मादाविर्भवति पर

4. माश्चर्यभूताद्युगादौ यस्मिन्नेव प्रविशति पुनर्व्विश्वमेतद्युगा

5. न्ते [।*] तद्वश्च्छन्दोमयतनुवयोवाहनन्दैत्यघाति ज्योतिः पातु द्यु

6. तिजितनवाम्भोदमम्भोजनेत्रम्॥ [२*]अंह[2]स्संघतिहारिणोरतिदृढ

7. म्भक्तिं ययोः कुर्वतामत्रामुत्र च सम्भवन्त्यविकलास्सम्प

## இரண்டாம் ஏடு—முன்புறம்

8. त्तयो देहिनाम् [।*] उत्तंसाम्बुरुहश्रियं कलयतो [3]यापुत्तमां

9. गे लसन्मौलौ नाकसदां पिनाकिचरणौ तौ वश्चिरं रक्ष-

10. ताम्॥ [३*] आहुर्म्मूलप्रकृतिममृतज्योतिषं यस्य देवं यस्या

11. गस्त्यो विजितनहुषाम्भोधि विन्ध्यः पुरोधाः [।*] शश्वद्धोम्या

12. जलधिरशना येन विश्वम्भरेयं सोयन्दीर्घञ्जयति यश

1. ष्ठाय என்று வாசிக்கவும்.
2. संहति என்று வாசிக்கவும்
3. यावुत्त என்று வாசிக்கவும்

13. सा पाण्डर: पाण्ड्यवंश:॥ [४*] अस्मिन् वासवहारहारिषु महाक

14. ल्पापदुत्तारिषु स्वर्गाधीश जलेश भारत जय ख्यातेषु यातेष्व

15. त: [।*] जात: पल्लवभञ्जनोपि समरे सर्व्वक्षमाभृद्बलोन्मर्द्दानीत मदेभ भीमक

இரண்டாம் ஏடு—பின்புறம்

16. टक: श्रीमारवर्म्मा नृप:॥ [५*] तस्मात्ताराधिनाथाद्बुध इव विबुध: [1]पद्मनाभा दिवाद्या

17. त्प्रद्युम्नो द्युम्नधाम्नस्त्रिपुरभिद इवोद्युक्तशक्ति: कुमार: [।*]जातो जम्भारिकल्पो

18. जगति जटिलवर्म्मेति विख्यातकीर्ति: सर्व्वोर्वीशोरुगर्व्वग्रहदहन विधानाप्र

19. तीपप्रताप: [६*] அன்னனுகிய அலர்கதிர் நெடுவேற் றென்னன் வானவன் செ

20. ம்பியன் வடவரையிருங் கயலாணை ஒருங்குடனடா ஒலிகெழு முந்நீருலகு மு

21. ழுதளிக்கும் வலிகெழு திணிதோண் மன்னவர் பெருமான் றென்ன லராடி தேம்பு

22. னற்குறட்டிப் பொன்மலர் புறவில் வெள்ளூர் விண்ணஞ்செ

23. ழியக்குடி என்றிவற்றுட் டெவ்வரழியக்கொடிஞ்சிலே அன்

24. று கால் வளைத்தும் மாஇரும்பெரும் புனற்காவிரி வடகரை ஆ

25. இரவேலி அயிரூர் தன்னிலும் புகழியூரும் திகழ்வேலதிய

மூன்றாம் ஏடு—முன்புறம்

26. ளை ஒடு புறங்கண்டவ னெலி உடைமணித்தேராடல் வெம்மா அவை

27. உடன் கவர்ந்தும் பல்லவனுங் கேரளனு மாங்கவற்குப் பாங்

1. पद्म என்று படிக்க

28. காகிப் பல்படை ஒடு பார் ஞெளியப் பவ்வம் மெனப் பரந்தெழு

29. ந்து குடபாலும் குணபாலும் மணுகவந்து விட்டிருப்ப வெல்

30. படை ஒடு மேற்சென்றங் கிருவரைஉ மிருபாலும் மிடரெய்த

31. ப் படைவிடுத்துக் குடகொங்கத் தடன்மன்னனைக் கொல்களி

32. ற்றெடுங் கொண்டு போந்து கொடி அணிமணி நெடுமாடக் கூடன் மதிலக

33. த்து வைத்துக் கங்க பூமி அதனளவுங் கடிமுரைசு தன்பியரறையக்

34. கொங்க பூமி அடிப்படுத்துக் கொடுஞ்சிலை பூட்டிழிவித்துப் பூஞ்சோ

35. லை அணி புறவிற் காஞ்சிவாய்ப் பேரூர் புக்குத் திருமாலுக் கமர்ந்

மூன்றும் ஏடு—பின்புறம்

36. துறையக் குன்ற மன்னதோர் கோஇலாக்கிஉம் ஆழி முந்நீரகழா

37. க அகல்வானத் தகடுருஞ்சும் பாழிநீண்மதில் பரந்தோங்கிப்

38. பகலவனு மகலவோடும் அணியிலங்கையிலரணிதாகி மணி

39. யிலங்கும் நெடுமாட மதில் விழிஞமது வழியக்கொற்ற

40. வேலை உறை நீக்கி வெற்றத் தானைவேண்மன்னனை வென்றழித்

41. தவன் விழுநிதி ஒடு குன்றமன்ன குலைக்களிறுங்கூந்த

42. ன் மாவுங்குல धन முமம் நன்நாடும் அவைகொண்டும் अरविन्दमुख த்

43. திளையவ ரரி நெடுங்கண்ணம்புகளாற் பொரமைந்தர் புலம்பெய்

வரி 33. பூமி
,, 34. பூமி
,, 42. தன அரவிந்தமுக

44. தும் பொன்மாட நெடுவீதிக் கரவன்தபுரம் பொலி வெய்தக் கண்ணகன்

45. ற தோர் கல்லகமொடு விசும்பு தோய்ந்து முகிறுஞ்சலில் அ

**நான்காம் ஏடு—முன்புறம்**

46. சும்பருத வகன் சென்னிந் நெடுமதிலே வடிவமைத்தும் ஏவ

47. मादिविक्रम ங்க ளெத்துணையோ பல செய்து மணிமாடக் கூட

48 ல் புக்கு மலர் மகளொடு வீற்றிருந்து मनुदर्शितमार्ग த்திறல்

49. गुरुचरितं கொண்டாடிக் कण्डकशोधनं தான்செய்து கடன்ஞா

50. லம் முழுதளிக்கும் पाण्डयनाथन् पण्डितवत्सलन् वीरपुरोगन् वि

51. क्रमपारगन् परान्तकन् परमवैष्णवन் ருஞ கிந் நின் றிலங்கு

52. ம் மணி நீண்முடி நிலமன்னவ நெடுஞ்சடையற்கு राज्यवर्षम् ப

53. தினேழாவது பாற்பட்டுச் செல்லாநிற்கப் பின்னையு न्धर्म्म மேய் தனக்கெ

54. ன்றுங் कर्म्म மாகத்தான் கருதி मगध மென்னுந் நன்னாட்டுண் महीदेव

55. ர்க்கு வகுக்கப்பட்ட शब्दालि என்னுங் ग्राम த்துள் विद्यादेवतै யா

**நான்காம் ஏடு—பின்புறம்**

56. ல் விரும்பப்படும் भार्गव गोत्रसम्भूतन् आश्वलायन सूत्र

57. த்து बह्वृजन् सीहुमिश्र ற்கு மகனாகி यज्ञ वि द्यै ஒடெஞ்

வரி 44. கரவந்தபு
,, 46. ஏவ
,, 47. மாதிவிக்ரம
,, 48. மநுதர்சிதமார்க்க
,, 49. குருசரிதம் கண்டகசோதனே
,, 50. பாண்ட்யநாதன், பண்டித வத்ஸலன் வீரபுரோகன் வி
,, 51. க்ரமபாரகன் பராந்தகன் பரமவைஷ்ணவ
,, 52. ராஜ்யவர்ஷம்
,, 53. ந்தர்ம
,, 54. கர்ம மகத மஹீதேவ
,, 55. சப்தாளி க்ராம வித்யாதேவதை
,, 56. பார்க்கவ கோத்ரஸம்பூதன் ஆச்வலாயநஸூத்ர
,, 57. பஹ்வ்ருஜன் ஸீஹுமிச்ர யஜ்ஞ த்யை

58. சாதஶாஸ்த்ரங் களைக் கரைகண்ட ஸுஜ்ஜதபட்டற்குத் தென் கள

59. வழிநாட்டு வேலங்குடியைப் பண்டைத் தன் பழம்பே

60. ர் நீக்கி ஸ்ரீவரமங்கல மெனப் பியரிட்டு ப்ரஹ்மதேயமா

61. கக் காராண்மையும் மீயாட்சியும் உள்ளடங்க ஸர்வ்வ

62. பரிஹாரமாகந் நீரோட்டட்டிக் குடுக்கப்பட்டது மற்

63. றிதன் பெருநான்கெல்லை கீழெல்லை நிலைகாணிம

### ஐந்தாம் ஏடு—முன்புறம்

64. ங்கலத் தெல்லைக்கும் மிளந்தியன்குடி எல்லைக்கும்

65. மேக்குந் தென்னெல்லை பெருமகற்றா ரெல்லைக்குங் கள்ளி

66. க்குடி எல்லைக்கும் வடக்கு மன்னிய சீர்ம்மே

67. லெல்லை கடம்பங்குடி எல்லைக்கும் குரங்குடி

68. எல்லைக்குங் கிழக்கும் வடவெல்லை காராள

69. வய லெல்லைக்குத் தெற்கும் மிவ்விசைத்த பெ

70. ரு நான்கெல்லை அகத்துக் கல்லுங் கள்ளியு நா

### ஐந்தாம் ஏடு—பின்புறம்

71. ட்டி மன்னவனது பணியினுல் வடிவமை

72. ய பிடி சூழ்ந்தான் பாண்ட்யற்கு மதங்கஜாத்யக்ஷ

73. பாண்டி இளங்கோ மங்கலப் பேரரைசனு

வரி 58. சாஸ்த்ர ஸுஜ்ஜதபட்ட
,, 60. ஸ்ரீவரமங்கல ப்ரஹ்மதேய
,, 61 ஸர்வ்வ.
,, 62. பரிஹார
,, 72. பாண்ட்ய மதங்கஜாத்யக்ஷ

74. கிய கொழுவூர்க் கூற்றத்துக் கொழுவூர்ச்ச
75. ங்கஞ் சிரீதரன் ஈங்கிதனுக் காணத்தியா
76. ய்த்தா म्रशासनஞ்செய்வித்தான் वाद्यगे
77. यसंगीत ங்களான் மலிவெய்திய வண்க

### ஆறும் ஏடு—முன்புறம்

78. ளந்தை वैद्यकुल ம்விளங்கத் தோன்றிம
79. ன்னவற்கு महासामन्त னாய் மாற்றரைசரை
80. வலி துலைக்கும் वीर மங்கலப் பேரரைச
81. னாகிய धीरतरन् मूर्त्ति எயினன் மற்றிதனை
82. க் காத்தாரென் மலரடி என் முடிமேலன எ
83. ன்று கொற்றவனேய் பணித் தருளித் தெற்றென

### ஆறும் ஏடு—பின்புறம்

84. தாम्रशासनஞ்செய்வித்தான் ॥ ब्रह्मदेयपरिपा
85. लनाद्दते नान्यदस्ति भुवि धर्म्मसाधनम् [।*] तस्य चापह
86. रणाद्दते तथा नान्यदस्ति भुवि पापसाधनम् [॥*] बहुभि
87. र्व्वसुधा दत्ता राजभिस्सगरादिभिः [।*] यस्य यस्य यदा भू
88. मिस्तस्य तस्य तदा फलम् [॥*] न विषं विषमित्याहुर्ब्रह्मस्वं वि
89. ष मुच्यते [।*] विषमेकाकिनं हन्ति ब्रह्मस्वम् पुत्र पौत्रि

வரி 76. ம்ரசாஸந வாத்யகே
,, 77. யஸங்கீத
,, 78. வைத்யகுல
,, 79. மஹாஸாமந்த
,, 80. வீர
,, 81. தீரதரன் மூர்த்தி
,, 84. ப்ரசாஸந

## ஏழாம் ஏடு—முன்புறம்

90. कम् [।।*] ब्रह्मस्वरक्षणादन्यत्पुण्यमूलन्न विद्यते [।*] तस्यातिलंघ

91. नादन्यत्पापमूलन्न विद्यते [।।*] பாண்டிப் பெரும்பணைகாரன் ம

92. கன் பாண்டிப் பெரும்பணைகாரனாகிய अरिकेस

93. रि எழுத்து [।।*]

---

வரி 92. அரிகேஸ
,, 93. ரீ

# ஸ்ரீவரமங்கலச் சாசனம்

## சம்ஸ்கிருதப் பகுதியின்

# மொழிபெயர்ப்பு

மங்களம் உண்டாகட்டும்.

**சுலோகம்—1**

உலகியலனைத்தும் புலப்படுத்திய குற்றமற்ற மறையைத் தனது நான்கு முகங்களினால் வெளிப்படுத்தியவனும், இளஞ்சூரியனைப் போன்று செந்நிறமான சடைமுடிகளை யுடையவனும் திருமாலின் கொப்பூழாகிய குளததிலே தோன்றிய ஆதிதாமரைப் பூவில் அமர்ந்தவனும், புண்ணியனும், புராதன முனிவனுமான பிரமதேவன் உங்களுடைய மகிழ்ச்சியை நெடுங்காலம் வளர்ப்பானாகுக.

**சுலோகம்—2**

பெருவியப்பானதும், ஊழிக் காலத்தின் தொடக்கத்தில் இந்த உலகத்தைத் தோற்றுவிப்பதும், மீண்டும் ஊழியின் இறுதியில் இவ்வுலகத்தை ஒடுங்கச் செய்வதும், வேத மயனான கருடனை ஊர்தியாகக் கொண்டதும், அரக்கர்களை அழிப்பதும், கார்மேக வண்ணத்தை வென்றதும், தாமரை போன்ற கண்களையுடையதுமான அந்தப் (விஷ்ணுவென்ற) பேரொளி உங்களைக் காப்பாற்றுவதாகுக.

**சுலோகம்—3**

பாவக் கூட்டத்தைப் போக்குவனவும், பக்தி செலுத்துவோர்க்கு இம்மை மறுமைகளில் அழிவற்ற செல்வத்தை அளிப்பனவும், விண்ணவர் தலைகளில் விளங்கும் மகுடங்களில் தாமரைப் பூவின் செவ்வி போன்று ஒளி வீசுவனவும் ஆகிய பிநாகபாணியின் (சிவபெருமானின்) திருவடிகள் உங்களை என்றும் காத்தருள்வனவாகுக.

**சுலோகம்—4**

அமுத கிரணனை (சந்திரனை) மூல புருஷனாக உடையதும், நகுஷன் கடல் விந்தியமலைகளை வெற்றிகொண்ட அகத்தியனைப் புரோகிதனாகக்

கொண்டதும், கடலை மேகலையாக உடுத்த உலகை அநுபவிக்கத்தக்கதும் புகழினால் வெண்மையுற்றதுமான பாண்டிய குலம் நெடுங்காலம் வெற்றியுடன் விளங்குவதாகுக.

சுலோகம்—5

இந்திரனுடைய ஆரத்தைக் கவர்ந்தும், ஊழிக்காலத்தின் விபத்தைக் கடந்தும், இந்திரனையும் வருணனையும் பாரதப் போரையும் வெற்றி கொண்டும் புகழ்பெற்ற (பாண்டிய) அரசர்கள் மறைந்துபோன பிறகு, போரிலே [1] பல்லவனை முறியடித்தவனும் மாற்றரசரனைவரின் சேனைகளை வென்று அவர்களின் யானைகளைப் போர்க் களத்தில் கவர்ந்துகொண்டவனுமான ஸ்ரீ மாறவர்மன் என்னும் அரசன் (பாண்டிய குலத்தில்) தோன்றினான்.

சுலோகம்—6

விண்மீன்களுக்குத் தலைவனாகிய சந்திரனுக்கு அறிவுள்ள புதன் தோன்றியது போலவும், பத்மநாப (கண்ண)னிடத்திலிருந்து பிரத்யும்நன் தோன்றியது போலவும், முப்புரத்தையழித்தவனி (சிவனி)டமிருந்து வேலேந்திய குமரன் தோன்றியது போலவும், அவனிடமிருந்து (மாறவர்மனிடமிருந்து) இந்திரன் போன்ற ஜடிலவர்மன் தோன்றினான். இவன் எல்லா அரசர்களின் செருக்காகிய கிரகங்களைக் கொளுத்துகிற நிகரற்ற பிரதாபம் கொண்டவனாக விளங்கினான்.

---

1. இங்கு "பல்லவ" என்ற சொல்லுக்கு தளிர், பல்லவஅரசன் என்ற சிலேடையைக் கொண்டு விரோதாபாஸம் என்ற அலங்காரம் கவியால் கையாளப்பட்டிருக்கிறது.

# ஸ்ரீவரமங்கலச் சாசனம்

## தமிழ்ப் பகுதியின்

# செய்யுளுருவம்

அன்ன ளுகிய அலர்கதிர் நெடுவேற்
றென்னன் வானவன் செம்பியன் வடவரை
யிருங்கய லாணை ஒருங்குட னடாஅய்
ஒலிகெழு முந்நீ ருலகமுழு தளிக்கும்
வலிகெழு திணிதோண் மன்னவர் பெருமான்
றென்னல ராடி தேம்புனற் குறட்டிப்
பொன்மலர்ப் புறவில் வெள்ளூர் விண்ணஞ்
செழியக் குடியென் றிவட்டுட் டெவ்வ
ரழியக் கொடுஞ்சிலை அன்றுகால் வளைத்தும்
மாயிரும் பெரும்புனற் காவிரி வடகரை
ஆயிர வேலி அயிரூர் தன்னிலும்
புகழி யூரிலுந் திகழ்வே லதியனை
ஓடுபுறங் கண்டவ ளெலியுடை மணித்தே
ராடல் வெம்மா அவைஉடன் கவர்ந்தும்
பல்லவனுங் கேரளனு மாங்கவற்குப் பாங்காகிப்
பல்படையொடு பார்ஞெளியப் †பவ்வம்மெனப் பரந்தெழுந்து
குடபாலும் *குணபாலும் மணுகவந்து விட்டிருப்ப
வெல்படையொடு மேற்சென்றங்
கிருவரையு மிருபாலும் மிடரெய்தப் படைவிடுத்துக்
குடகொங்கத் தடன்மன்னனைக் கொல்களிற்றொடுங் கொண்டுபோந்து
கொடியணிமணி நெடுமாடக் கூடன்மதி லகத்துவைத்துக்
கங்கபூமி யதனளவுங் கடிமுரைசுதன் பெயரறையக்
கொங்கபூமி யடிப்படுத்துக் கொடுஞ்சிலைபூட் டிழிவித்துப்
பூஞ்சோலை அணிபுறவிற் காஞ்சிவாய்ப்பே ரூர்புக்குத்
திருமாலுக் கமர்ந்துறையக்
குன்ற மன்னதோர் கோயி லாக்கியும்

† "பவ்வமென" என்று பொருந்தும்.
* "குணபாலுமணுக" என்பது பொருந்தும்.

ஆழிமுந்நீ ரகழாக அகல்வானத் தகடுரிஞ்சும்
பாழிநீண்மதில் பரந்தோங்கிப் பகலவனு மகலவோடும்
அணியிலங்கையி லரணிதாகி
மணியிலங்கும் நெடுமாட மதில்விழிரு மதுவழியக்
கொற்றவேலே உறைநீக்கி வெற்றத்தானே வேண்மன்னனே
வென்றழித்தவன் விழுநிதியொடு குன்றமன்ன கொலைக்களிறுங்
கூந்தன்மாவுங் குலதனமும் நன்னுடும் அவைகொண்டும்
அரவிந்த * முகத்திளையவ ரரிநெடுங்கண் ணம்புகளாற்
பொரமைந்தர் புலம்பெய்தும் பொன்மாட நெடுவீதிக்
கரவந்தபுரம் பொலிவெய்தக் கண்ணகன்றதோர் கல்லகழொடு
விசும்புதோய்ந்து † முகிறுஞ்சலில் அசும்பருத வகன்சென்னி
நெடுமதிலே வடிவமைத்தும்
ஏவமாதி விக்ரமங்க ளெத்துணையோ பலசெய்து
மணிமாடக் கூடல்புக்கு மலர்மகளொடு வீற்றிருந்து
மநுதர்சித மார்க்கத்திஞல் குருசரிதப் கொண்டாடிக்
கண்டகசோதனே தான்செய்து கடன்ஞாலம் முழுதளிக்கும்
பாண்டியநாதன் பண்டிதவத்சலன்
வீரபுரோகன் விக்ரமபாரகன்
பராந்தகன் பரம வைஷ்ணவன் ருஞகி
நின்றிலங்கும் மணிநீண்முடி நிலமன்னவனெடுஞ்சடையற்கு

ராஜ்ய வர்ஷம் பதினேழாவது பாற்பட்டுச் செல்லாநிற்கப் பின்னேயுந் தர்ம்மமேய் தனக்கென்றுங் கர்ம்மமாகத் தான்கருதி மகதமென்னுந் நன்ஞட்டுண் மஹீதேவர்க்கு வகுக்கப்பட்ட சப்தாளி என்னுங் கிராமத்துள் வித்யாதேவதையால் விரும்பப்படும் பார்க்கவகோத்ர ஸம்பூதன் ஆச்வலாயன சூத்ரத்து பஹ்வ்ருஜன் ஸீஹூமிச்ரற்கு மகஞகிய யஜ்ஞவித்யையொடெஞ்சாத சாஸ்த்ரங்களேக் கரைகண்ட ஸூஜ்ஜதபட்டற்குத் தென்கள வழிநாட்டு வேலங்குடியைப் பண்டைத் தன் பழம்பேர் நீக்கி ஸ்ரீவரமங்கலமெனப் பெயரிட்டு ப்ரம்மதேயமாகக் காராண்மையும் மீயாட்சியும் உள்ளடங்க ஸர்வபரிகாரமாக நீரோடட்டிக் கொடுக்கப்பட்டது.$

* "முகத்திளேயரரிநெ" என்று வாசிப்பது பொருந்தும்.

† "முகிறுஞ்சலில்" என்பதை "முகிறுஞ்சலின்" என்று வாசிப்பது பொருந்தும்.

$ இதற்குப் பிறகு தானக்கிராமத்தின் பெருநான்கெல்லே முதலிய விவரங்களேச் சாசன வாசகத்தில் காண்க.

## ஸ்ரீவரமங்கலச் சாசனம்

### தமிழ்ப் பகுதியின்

# பொழிப்புரை

*(அவ்வாறு வடமொழிச் சுலோகங்களில் புகழப்பட்ட பெருமையையுடைய)*

அத்தகையனுகியவன்; ஒளிமிக்கு விளங்குகின்ற பெரிய வேலாயுதத்தையுடைய பாண்டியன்; வானவன், செம்பியன் என்ற பட்டங்களைப் பூண்டவன்; இமயமலை வரையில் பெரிய கயல் மீன் ஆணையை ஒருசேர உடன் நடக்குமாறு செய்தவன்; ஒலிமிக்குள்ள கடல் சூழ்ந்த உலக முழுவதும் காத்து வருகின்ற வலிமைமிக்குள்ள பருத்த தோள்களையுடைய மன்னவர் பெருமான்; *'தென்னலர் ஆடித் † தேம்புனல் குறட்டிப் பொன்மலர்ப் புறவினையுடைய வெள்ளூர், விண்ணம், செழியக்குடி என்னும் ஊர்களில் பகைவர் அழியும்படி வில்லினால் வென்றான்.

மிக்க வெள்ளத்தையுடைய காவிரியின் வடகரையிலுள்ள ஆயிரவேலி அயிரூர், புகழியூர் என்னுமிடங்களில் போரில் ஒளிவிடுகின்ற வேலாயுதத்தையுடைய அதியனைத் தோல்வியுறச் செய்து அவனுடைய ஒலிக்கின்ற மணிகளையுடைய தேர்களை விரைவுடைய குதிரைகளுடன் கவர்ந்து கொண்டான். அதியனுக்கு நட்பாகி வந்த பல்லவன், கேரளன் ஆகிய இருவரும் பூமி நெளியும்படித் தங்களுடைய கடல்போலப் பரந்தெழுந்த பலவகைப் படைகளைக் கொண்டுவந்து, மேற்குப் பக்கமும் கிழக்குப் பக்கமும் நெருங்கவிட்டிருந்தபொழுது, இப்பாண்டியன் தன்னுடைய வெல்லும் படையுடன் அவர்கள் மேற்சென்று அவ்விருஅரசரும் இருபுறத்தும் துன்புறும்படி போர் செய்து வென்றான்.

கொங்கு நாட்டின் வலிமிக்க அரசனை அவன் ஏறிவந்த கொல் யானையுடன் (பட்டத்து யானையுடன்) பிடித்துக்கொண்டுவந்து, கொடி

* தென் கடலோடு போர் செய்தவன் fought against the ocean என்பர் கல்வெட்டுத் துறையினர்.

† தேம்புனற்குறட்டிப் பொன்மலர் என்பதற்கு The golden flowers of the beautiful Punal-kuratti plant என்பர் கல்வெட்டுத்துறையினர்.

பறக்கும் மணிநெடு மாடங்கள் நிரம்பிய கூடலில் மதில் அரணுள் சிறை வைத்தான்.

பிறகு கங்கநாடுவரையில் வென்று தன் வீரமுரசறைந்து அங்குத் தன் புகழை நிலைநிறுத்தினன்.

கொங்கு நாட்டைத் தன்னடிப்படுத்தி வளைந்த வில்லின் நாணை இறக்கினன். பூஞ்சோலை அழகு செய்கின்ற காடுகளையுடைய காஞ்சி நதிக் கரையில் உள்ள பேரூர் என்னும் ஊருக்குப்போய் அங்குத் திருமால் விரும்பி எழுந்தருளக் குன்றை ஒப்ப ஒரு கோயில் கட்டினன். ஆழ்கடலையே அகழியாகவும் அகன்ற வானத்தை உராயும் உயர்ந்த மதில்களை அரணாக வும் கொண்டு, சூரியனும் அகல ஓடும்படியான அழகிய இலங்கையின் அரண்களை ஒப்ப, அழகால் சிறந்து விளங்குகின்ற பெரிய மாடங்களையும் மதில்களையுமுடைய விழிஞம் என்னும் (கடற்றுறைப்) பட்டினம் அழிய, வெற்றிவேலை உறையினின்று நீக்கினன். வெற்றிப் படைகளையுடைய வேள் மன்னனை வென்று அவனுடைய சிறந்த செல்வத்தோடு குன்றை ஒத்த கூட்டமுள்ள களிறுகளையும் பிடரிமயிரையுடைய குதிரைகளையும் சிறந்த தனங்களையும் நல்ல நாட்டையும் கைக்கொண்டான்.

செந்தாமரை மலரை ஒத்த முகத்தினரான இளம்பெண்கள் சிவந்த ரேகைகளையுடைய பெரிய கண்களாகிய அம்புகளால் போர்புரிய (அதனால்) வலிமையுடைய வீரர்கள் வருந்தும் அழகிய மாடங்களும் பெரிய வீதிகளுமுள்ள கரவந்தபுரம் அழகு எய்த, இடமகன்ற கருங்கல்லினால் கட்டப் பட்ட அகழியோடு ஆகாயத்தை அளாவிய, முகில் துஞ்சுதலினால் நீர்ப் பொசிவு நீங்காத, அகன்ற உச்சியினையுடைய பெரிய மதிலை உருவாக்கினன்.

இவ்விதமான பராக்கிரமச் செயல்கள் எத்துணையோ பல செய்தும் அழகிய மாடங்களையுடைய மதுரைக்குப் போய்ச் செல்வத்தோடு வீற்றிருந்தும் மனு காட்டிய நெறியில் நின்றான். குரு சரிதை கொண்டாடினன். தொந்தரவிற்குரிய ஒவ்வொரு காரணத்தையும் அறவே களைந்தான். கடல் சூழ்ந்த பூமி முழுவதையும் காப்பாற்றும் பாண்டிநாதன் என்னும் பெயர் பெற்றான். பண்டித வத்சலன், வீரபுரோகன், விக்கிரமபாரகன், பராந்தகன் என்னும் விருதுப் பெயர்களைப் பெற்றான். பரம வைஷ்ணவன் ஆனான். ஒளிவிடுகின்ற இரத்தினங்களைப் பதிப்பித்த பெரிய மகுடத்தை அணிந்த நெடுஞ்சடையனின் இராச்சிய ஆண்டு பதினேழாவதில் தருமமே தனக்குக் கருமமாகக் கொண்ட அவ்வரசன் மகதமென்னும் தன் நாட்டில் அந்த

ணர்க்கு வகுக்கப்பட்ட சப்தாளி என்னும் ஊரில், விதயா தேவதையால் விரும்பப்படுபவனும், பார்க்கவ கோத்திரத்து ஆச்வலாயன சூத்திரத்தவனும், ஆகிய * பஹ்வ்ருசனுன ஸீஹூமிச்ரற்கு மகனும், யக்ஞவித்தையோடு (வேள்வி செய்யும் வித்தை) எஞ்சாத சாஸ்திரங்களைக் கரை கண்டவனுமான ஸூஜ்ஜத பட்டனுக்குத் தென்களவழிநாட்டு வேலங்குடியை அதன் பண்டைப் பெயரை நீக்கி, அதற்குச் சீவரமங்கலம் எனப் பெயரிட்டு, பிரமதேயமாகக் காராண்மை மீயாட்சி உள்ளடங்க சர்வபரிகாரங்களுடன் நீர் வார்த்துக் கொடுத்தான்.

இதற்குப் பெருநான்கு எல்லையாவது:—கிழக்கெல்லை நிலைக்காணி மங்கலத்தெல்லைக்கும் இளந்தியன்குடி எல்லைக்கும் மேற்கு, தென் எல்லை:— பெருமகற்றூ ரெல்லைக்கும் கள்ளிக்குடி எல்லைக்கும் வடக்கு, மேற்கெல்லை: கடம்பங்குடி எல்லைக்கும் குரங்குடி எல்லைக்கும் கிழக்கு, வடவெல்லை:கள்ள வயல் எல்லைக்குத் தெற்கு ஆகும். இவ்வாறு குறிக்கப்பட்ட பெருநான் கெல்லைக்குள் அரசனுடைய கட்டளையினுல் கல்லும் கள்ளியும் நாட்டிப் பெண் யானையினுல் எல்லையைச் சூழ்ந்துவரச் செய்தவன் யானைப் படைத் தலைவனும், பாண்டி இளங்கோ மங்கலப் பேரரசனும் ஆகிய கொழுவூர்க் கூற்றத்துக் கொழுவூர்ச் சங்கஞ் சிரீதரன் என்பவன்.

இதற்கு ஆணத்தியாகத் தாம்பிர சாசனஞ் செய்வித்தவன் இசைப் பயிற்சியுடைய வண்களந்தை (களக்காடு) வைத்ய குலம் விளங்கத் தோன்றி அரசனுக்கு மகாசாமந்தனுய் இருந்த, பகையரசரின் வலி தொலைத்த, வீரமங்கலப் பேரரசனுகிய தீரதரன் மூர்த்தி எயினன் ஆவன்.

இதனைக் காத்தவர்களின் அடி என் முடிமேலன என்று அரசன் பணித்தருள உடனே தாம்பிரசாசனஞ் செய்வித்தான்.

---

* பஹ்வ்ருசம்—ருக் வேதத்தைக் குறிக்கும் ஒரு சொல்.

## சாசனத்தின் இறுதியிலுள்ள 'சுலோகங்களின் மொழிபெயர்ப்பு

பிராமணர்களுக்குத் தானஞ் செய்ததைக் காப்பதைக் காட்டிலும் புண்ணியத்திற்குக் காரணமானது வேறெதுவும் இப்பூமியில் இல்லே. அதை அபகரிப்பதைக் காட்டிலும் பாவத்திற்குக் காரணமானது வேறெதுவும் இப்பூவுலகிலில்லே.

சகரன் முதலான பல அரசர்களால் பூமிதானஞ் செய்யப்பட்டது. பூமியானது எவ்வெப்பொழுது யார் யாருடையதோ அவ்வப்பொழுது அவரவர்களுக்கு அதன் பலன் உண்டு.

விஷமென்று சொல்லப்படுவது விஷமல்ல. பிராமணன் சொத்துத் தான் விஷம். விஷம் ஒருவனே மட்டும் கொல்லும். பிராமணன் சொத்து (அபகரிப்பவனுடைய) புத்திர பௌத்திரர்களே அழிக்கும்.

பிராமணன் சொத்தைக் காப்பதைக் காட்டிலும் புண்ணியத்திற்குக் காரணம் வேறு இல்லே. அதை அபகரிப்பதைக் காட்டிலும் பாவத்திற்குக் காரணம் வேறு இல்லே.

பாண்டிப் பெரும்பணைக்காரன் மகன் பாண்டிப் பெரும்பணைகாரனாகிய அரிகேசரி எழுத்து.

---

பாண்டியர் செப்பேடுகள் 3

நெடுஞ்சடையனின் சின்னமனூர்ச் (சிறிய) சாசனம்

---

# அறிமுகம்

சின்னமனூரிலிருந்து இரண்டு செப்பேட்டுச் சாசனங்கள் கிடைத்துள்ளன. சின்னமனூரிலிருந்து கிடைத்தபடியால் இச் சாசனங்களுக்குச் சின்னமனூர்ச் செப்பேடுகள் என்று பெயர் வழங்குகிறது. இச் செப்பேடுகளில் ஒன்று சிறியது; மற்றது பெரியது. பாண்டி நாட்டிலே மதுரை மாவட்டத்தில் பெரியகுளம் தாலூகாவில் உள்ளது சின்னமனூர்க் கிராமம். இவ்வூர்ப் பெருமாள் கோவிலில் மடைப்பள்ளி கட்டுவதற்காகக் கடைக்கால் தோண்டியபோது இச்செப்பேடுகள் கண்டெடுக்கப்பட்டன. ஏறத்தாழ இற்றைக்கு 80 ஆண்டுகளுக்கு முன்பு கிடைத்தன.

சூவல் துரை தாம் ஆங்கிலத்தில் எழுதிய "பழம்பொருள் பட்டியல்" என்னும் நூலில் இச் செப்பேடுகளைக் குறிப்பிட்டிருக்கிறார். * சென்னை நகரப் பொருட்காட்சிச் சாலையில் இருந்த இச் செப்பேடுகள் இப்பொழுது மைசூரில் உள்ள சாசன இலாகாவில் இருப்பதாகத் தெரிகிறது. இச் செப்பேட்டுச் சாசனங்கள் இரண்டும் முதன் முதலில் 1927 ஆம் ஆண்டில் "தென் இந்தியச் சாசனங்கள்" என்னும் தொகுப்பின்

* List of Antiquities Vol. I p. 290 by Mr. Sewell.

மூன்றும் பகுதியில் 206ஆம் எண்ணில் அச்சிடப்பட்டிருக்கின்றன.* இந்தச் செப்பேடுகளைப் பற்றிய செய்திகள் 1907 ஆம் ஆண்டு வெளிவந்த சாசன இலாகா அறிக்கையில் காணப்படுகின்றன.$

சின்னமனூர்ச் செப்பேடுகளில் சிறிய செப்பேடு இங்கு அச்சிடப் படுகிறது. இச்செப்பேட்டுச் சாசனத்தின் இடையே சில ஏடுகள் காணப் படவில்லை. காணாமற்போனது ஒன்று அல்லது இரண்டு ஏடாக இருக்கலாம். ஆகையால் சாசனத்தின் முழு வாசகமும் கிடைக்கவில்லை. கிடைக்காத பகுதியில் பாண்டிய அரசர்களின் பெயர்கள் எழுதப்பட் டிருக்க வேண்டும். அப்பெயர்கள் மறைந்துபோனது பாண்டிய சரித்திரம் எழுதுவதற்குப் பெரு நஷ்டமாகும்.

சின்னமனூர்ச் சிறிய சாசனத்தில் இப்போது உள்ளவை மூன்று ஏடுகளே. முதல் இரண்டு ஏடுகளில் சாசன வாசகம் தொடர்ச்சியாக உள்ளது. மூன்றுவது ஏட்டின் வாசகம், காணாமற்போன ஏடுகளின் வாசகத்தைத் தொடர்ந்ததாக இருக்கிறது. இந்த ஏடுகள் ஒவ்வொன்றும் $8\frac{11}{12}$ அங்குலம் நீளமும் 3 அங்குலம் அகலமுமாக உள்ளன. மூன்று ஏடுகளும் சேர்ந்து 51 தோலா எடையுள்ளன. இவ்வேடுகளை இணைத்துக் கோத்துக் கட்டியிருந்த வளையம் காணப்படவில்லை.

இந்தச் சின்னமனூர்ச் சிறிய செப்பேடுகளின் எழுத்தைச் செதுக்கியவன் பாண்டிப்பெரும் பணைக்காரன் மகனான அரிகேசரி என்பவன். இவனே ஸ்ரீவரமங்கலச் செப்பேடுகளை (மதராஸ் மியூசியம் செப்பேடுகளை)யும் வரைந்தவன். அப்படியானால் ஸ்ரீவரமங்கலச் செப்பேடுகளை வழங்கிய பராந்தக நெடுஞ்சடையன் (ஜடிலவர்மன்) என்னும் பாண்டியனே சின்னமனூர்ச் சிறிய செப்பேடுகளையும் வழங்கியிருக்க வேண்டும்.

இந்தச் சாசனத்தின் முதல் இரண்டு ஏடுகளில் சம்ஸ்கிருத மொழிச் சுலோகங்கள் கிரந்த எழுத்தில் எழுதப்பட்டுள்ளன. முதல் சுலோகம் விஷ்ணுவுக்குத் தோத்திரம் கூறுகிறது. இரண்டாவது சுலோகம் பாண்டிய குலம் நீடூழி வாழவேண்டுமென்று பிரார்த்திக்கிறது.

* South Indian Inscriptions Vol. iii part iv No. 206

$ Epigraphical Report 1907 G. O 503, 27th June 1907 part ii pp 62–69.

இதன் பிறகு வட்டெழுத்தினுல் எழுதப்பட்ட சாசனத்தின் தமிழ்ப் பகுதி தொடங்குகிறது. இச்சாசனம் தொடக்கத்தில் பழங்காலப் பாண்டிய மன்னர்களின் பெயர்களையும் அவர்கள் செய்த பராக்கிரமச் செயல்களையும் கூறுகிறது. மேரு மலையில் கயல் மீன் உருவத்தைப் பொறித்ததும், இந்திரனுடைய ஆரத்தையணிந்ததும் அவனுடைய சிம்மாசனத்தில் அமர்ந்ததும் கடல் வற்றும்படி வேல் எறிந்ததும் ஆயிரம் வேள்விகளைச் செய்ததும் ஆகிய பராக்கிரமச் செயல்கள் கூறப் படுகின்றன.

பிறகு ஜயந்தவர்மன் என்னும் பாண்டியன் பெயர் கூறப்படுகிறது. பின்னர் இவன் மகனுன அரிகேசரியின் பெயர் காணப்படுகிறது. இவன் அசமசமன் அலங்கிய விக்கிரமன் அகாலகாலன் மாறவர்மன் என்றும் கூறப்படுகிறுன். இவ்வரசனுடைய மகன் மருதூர்ப் போரரை வென்றவன். இவனுடைய பெயர் மறைந்துபோன ஏட்டில் எழுதப்பட்டிருக்க வேண்டும்.

எஞ்சியுள்ள கடைசி ஏட்டிலே நிலம் தானம் கொடுக்கப்பட்ட செய்தியும் இதற்கு ஆணத்தியாக இருந்தவன் அண்ட நாட்டுக் குண்டூர்க் கூற்றத்துக் குண்டூரில் இருந்த உத்தர மந்திரியாகிய தாயஞ்சிங்கன் என்பதும் இந்தச் சாசன எழுத்தை எழுதியவன் பாண்டிப் பெரும்பணை காரன் மகன் அரிகேசரி என்பதும் கூறப்படுகின்றன.

இந்தச் சாசனத்திலே கூறப்படுகிற பாண்டிய அரசர்கள் ஜயந்த வர்மன் என்றும் மாறவர்மன் என்றும் பெயர் சூட்டிக்கொண்டிருப்பது கவனத்திற்குரியது. வர்மன் என்பது க்ஷத்திரியர் (அரசர்)களைக் குறிக்கும் வடமொழிச் சொல். வர்மன் என்னும் குலப்பெயரைத் தமிழ் நாட்டு அர சர்களில் பல்லவ அரசர்களே முதன் முதலாகச் சூட்டிக்கொண்டார்கள். வர்மன் என்னும் அப்பெயரை இடைக்காலப் பாண்டியர் சூட்டிக் கொண்டது இச்சாசனத்திலும் கூறப்படுகிறது. இக்குலப் பெயர்களைச் சங்க காலத்துப் பாண்டியர்களிடையே காண முடியாது. இச் செப்பேடுகளை எழுதினவன் பாண்டிப் பெரும்பணைகாரன் அரிகேசரி என்று கூறப்பட்டதை முன்னமே குறிப்பிட்டோம். பாண்டிப் பெரும்பணைகாரன் என்றுல் பாண்டியனுடைய முரசு கொட்டுகிறவன் என்று சாசன இலாகாவின் 1907 ஆம் ஆண்டு அறிக்கை 66 ஆம் பக்கம் 19 ஆம் பாராவில் எழுதப்பட்டிருக்கிறது* இது தவறு. பெரும்பணைகாரன் ஏன்பதற்குப் பெருந்தச்சன் என்று பொருள் கொள்வதே சரி எனத் தோன்றுகிறது.

* Arikesarin son of the chief drummor of the Pandya king. p. 66 paragraph 19 Epigraphy report 1907

# சின்னமனூர்ச் (சிறிய) சாசனத்தில் காணப்படுகிற பாண்டியர் வழிமுறை

ஜயந்தவர்மன்



அரிகேசரி

(அசமசமன், அகாலகாலன், மாறவர்மன்)



?

(மருதூர், குவளைமலைப் போர்களை வென்றவன். இவன் பெயர், காணமற்போன செப்பேட்டில் இருந்திருக்கவேண்டும்.)

## சின்னமனூர்ச் சிறிய சாசனம்

## சாசன வாசகம்

### முதல் ஏடு—பின்புறம்

स्वस्ति [।।*]

1. [1]पत्माभुज परिष्वंग प्रमदोत्पुळकायुधः [।*] विद्यायशोविभूती

2. र्न्नः पुष्णातु पुरुषोत्त [म*]: ।। [1*] अन्वयस्सुचिरं स्थेयादमृतां

3. शुसमुद्भवः [।*] सुरारिदर्प्पहन्तारो नरेन्द्रा यत्र जज्ञिरे ।। [2*] अमृत

4. किरण ன்னன்வயத்தி லாखण्डल ஊதழிவகல समरमुख த்த

5. सुरगणन्तலை அழியச்சிலை குனித்து வடவரையது வலா

6. ரகுளிகை மணிக்கெண்டைப் பொறி சூட்டியுந் தென்வரைமி

7. சைக் कुम्भोद्भवनது தீந்தமிழிற் செவிகழுவியும் हरिहय

8. நது हार ம் பூண்டு मद्धासन மவஞேடேறிஉஞ் சுரிவளையவன்

9. றிரு முடி மிசைத்துணி பலபடத் தோளோச்சிஉமோதமீ

### இரண்டாம் ஏடு—முன்புறம்

10. ள வேலெறிந்தும் மோரா இரங் क्रतु ச் செய்தும் भूतगणம்

11. பணியாண்டும் भुवनतल ம் பொதுநீக்கியும் யானையாயி

12. ரமைய்யமிட்டு (ம்) மபரிமிதமதிशயங்கள் செய்தா

வரி 3. 4. அம்ருத கிரண
4. லாகண்டல ஸமரமுக
6. ஸுரகண்ந்த
7. ம்போத்பவனது. ஹரிஹய
8. ஹார மர்த்தாஸந
10 க்ரது பூதகண
11. புவநதல
12. ச

13. னமில்புகழ்ப் पाण्ड्यवंश த் தொலோக நா थ र् பலர் கழி

14. ந்தபின் जगद्गीतयशोराशिर्ज्जयन्तवर्म्म ன் மகனாகிப்ப

15. கைப் भूपர் தலைபணிப்பப் परमेश्वरன் [1] வெளிற்பட்டுअरिकेस

16. रि असमसमன் अलंघ्यविक्रमन् अकालकालன் னெனத்தன

17. க்குரியன பல गुणनामம்முலகுமுழுதுகந் தேத்தப்பரா

18. வணிபகுல[2] மிறஞ்சப் பாரகலம் பொதுநீக்கி धरासुरர

19. திடரகல दनवर्ष பொழிதற்கு वलाह கத்தின் व्रतंகொண்

## இரண்டாம் ஏடு—பின்புறம்

20. டு तुलाभारமினிதேறி शरण्यனையுலகளித்து हिरण्य

21. गर्भமிருகால் புக்கு गोसहस्र த்துடக்கத்துக் गुरु[दा]

22. னம் பலசெய்து वासवன்போல வீற்றிருந்தனன் वसु

23. धापतिमारवर्म्मன் [।*] மற்றவற்கு மகனாகி மதிபுரையுங்கு

24. டை நீழல் லற்றமின்றி அவனிमण्डलமுடனேம்

25. பி அருள் பயந்து कल्पकத்தின் व्रतं கொண்டு कलिकलु

1. ஏட்டில் முதலில் 'ச' கரம் எழுதி 'ற'கரமாகத் திருத்தப்பட்டுள்ளது.
2. மிறைஞ்ச என்று படிக்க.

வரி 13. பாண்ட்ய வம்ச த
14. ஜகத்கீதயசோராசிர் ஜயந்தவர்ம்ம
15. பூப பரமேச்வர அரிகேஸ
16. ரி அஸமஸம அலங்க்யவிக்ரமன் அகாலகால
17. குணநா
18. தராஸுர
19. தனவர்ஷம் வலாஹ வ்ரதம்
20. துலாபார சரண்ய ஹிரண்ய
21 கர்ப்ப கோஸஹஸ்ர குருதா
22. வாஸவ வஸு
23. தாபதி மாறவர்ம்ம
24. மண்டல
25. கல்பக வ்ரதம் கலிகலு

26. षமறநீக்கி அற்பமல்லா द्रव्यं கொடுத்தவனிसुरரி

27. டர் நீக்கிக் கருதாது வந்தெதிர்ந்த கழல் வேந்தருட

28. னவிய மருதூரொடு குவளைமலையுமத்தவேழஞ் செலவுந்திச்*

**கடைசி ஏடு**

29. க்குக் கிழக்கும் வடவெல்லை கொற்றன் புத்தூர் பகவதி கோஇலு

30. க்குத் தெற் [கு*] [1]மிவ்விறைத்த பெருநான்கெல்லையுட்பட்டது सर्व्वपरि

31. हारஞ் செய்து [2]குடுத்து மிதற்காணத்தி [ப்] பட்டானண்டனூட்டுக்

32. குண்டூர்க் கூற்றத்துக் குண்டூ ருத்தரமந்திரி யாயின **தாயன்**

33. **சிங்கன்** இதன் புறங்காவலெண்பத்தைங் கலங்குடுக்க [3]பது

34. து [4]மாற்றிதனைக் காத்தார் [5][த*]ன் மலரடி என்முடிமேலன என்று கொற்

35. றவனேய் பணித்தருளித் தெற்றெனத்தா म्रशासनஞ் செயவித்தான் [1*]

36. स्वदत्तां परदत्तां वा यो हरेत वसु [न्ध] राम् [।*] षष्ठी वर्षसहस्राणि

37. विष्ठायां जायते कृमी [।।*] ब्रह्मस्व [6]रत्पणादन्यत्पुण्यमूलन्न विद्यते [।*] तस्याति

38. [क्रमणादन्यत्पा] पमूलन्न विद्यते [।।*]

பாண்டிப் பெரும்பணைகாரன் மகன் अरिकेसरि எழுத்து.

* இதற்குப் பிறகு இடையில் ஓரிரண்டு ஏடுகள் கிடைக்கவில்லை.

1. மிவ்விசைத்த என்று படிக்க. 2. குடுத் தோமிதற்காணத்தி என்று படிக்க.

3. ப் பட்டது என்று படிக்க 4. மற்றிதனை என்று படிக்க.

5. தம் என்று படிக்க 6. रक्ष என்று படிக்க.

வரி 26. ஷ த்ரவ்யம் ஸுர
30. ஸர்வ பரி
31. ஹார
35. ம்ரசாஸன
38. அரிகேஸரி

# சின்னமனூர்ச் (சிறிய) சாசனம்

## சம்ஸ்கிருதப் பகுதியின்

# மொழிபெயர்ப்பு

மங்களம் உண்டாகட்டும்.

**சுலோகம்—1**

மலர்மகளின் புயங்களால் அணைக்கப்படுதலாகிய மகிழ்ச்சியால் மயிர்க்கூச்செறியப் பெற்றவனான புருஷோத்தமன் (விஷ்ணு) நமக்குக் கல்வி, புகழ், செல்வங்களை வளர்ப்பானாகுக.

**சுலோகம்—2**

தேவர்களுடைய பகைவர்களின் செருக்கை அழித்தவர்களான அரசர்கள் எந்த வம்சத்தில் பிறந்தனரோ, அமிருதகிரண (சந்திர)னிடமிருந்து தோன்றிய அந்த வம்சம் வெகுகாலம் நிலைபெறுவதாகுக.

**ஏட்டின் இறுதி**

**சுலோகம்—3**

தான் அளித்ததும் பிறர் அளித்ததுமான தான பூமியை எவன் அபகரிக்கிறானோ அவன் அறுபதினாயிரம் ஆண்டுகள் மலப் புழுவாகப் பிறப்பான்.

**சுலோகம்—4**

பிராமணனின் சொத்துக்களைக் காப்பதைக் காட்டிலும் புண்ணியத்துக்குக் காரணம் வேறொன்றும் இல்லை. அதை மீறுவதைக் காட்டிலும் பாவத்திற்குக் காரணம் வேறு இல்லை.

---

# சின்னமனூர்ச் (சிறிய) சாசனம்

## தமிழ்ப் பகுதியின்

# செய்யுளுருவம்

அமிர்தகிரணன் அன்வயத்தி லாகண்டலன தழிவகல
சமரமுகத் தசுரகணந் தலைஅழியச் சிலைகுனித்து
வடவரையது வலாரசூளிகை மணிக்கெண்டைப் பொறிசூட்டியுந்
தென்வரைமிசைக் கும்போத்பவனது தீந்தமிழிற் செவிகழுவியும்
ஹரிஹயன தாரம்பூண்டும் அர்த்தாசன மவனொடேறியும்
சுரிவளையவன் றிருமுடிமிசைத் தூணிபலபடத் தோளோச்சியும்
ஓதமீள வேலெறிந்து மோராயிரங் கிரதுச்செய்தும்
பூதகணம் பணியாண்டும் புவனதலம் பொதுநீக்கியும்
யானையாயிர மையமிட்டும் அபரிமித மதிசயங்கள்செய்து
ஊனமில்புகழ்ப் பாண்டியவம்சத் துலோகநாதர் பலர்கழிந்தபின்
ஜகத்கீத யசோராசிர் ஜயந்தவர்மன் மகனாகிப்
பகைப்பூபர் தலைபனிப்பப் பரமேச்வரன் வெளிப்பட்டு
அரிகேசரி அசமசமன் அலங்கியவிக்கிரமன் அகாலகாலனெனத்
தனக்குரியன பலகுணநாம முலகுமுழு துகந்தேத்தப்
பராவனிப குலமிறைஞ்சப் பாரகலம் பொதுநீக்கி
தராசுரர திடர்கலத் தனவருஷம் பொழிதற்கு
வலாஹகத்தின் விரதம்பூண்டு துலாபார மினிதேறிச்
சரணியனா யுலகளித் திரணியகர்ப்ப மிருகால்புக்கு
கோசகசிரத் தொடக்கத்துக் குருதானம் பலசெய்து
வாசவன்போல் வீற்றிருந்தனன் வசுதாபதி மாறவர்மன்
மற்றவற்கு மகனாகி மதிபுரையுங் குடைநீழல்
அற்றமின்றி அவனிமண்டல முடனோம்பி அருள்பயந்து
கற்பகத்தின் விரதங்கொண்டு கலிகலுஷ மறநீக்கி
அற்பமல்லாத் திரவியங்கொடுத் தவனிசுர ரிடர்நீக்கிக்

கருதாது வந்தெதிர்ந்த கழல்வேந்த ருடனவிய
மருதூரொடு குவளைமலையு மத்தவேழஞ் செலவுந்திச்*
க்குக் கிழக்கும் வடவெல்லை கொற்றன்புத்தூர் பகவதி கோயிலு க்குத் தெற்கு மிவ்விசைத்த பெருநான் கெல்லையுட்பட்டது. சர்வ பரிஹாரஞ் செய்து கொடுத்து மிதற்காணத்திப் பட்டா னண்டனுட்டுக் குண்டூர்க் கூற்றத்துக் குண்டூருத்தர மந்திரியாயின தாயன்சிங்கன் இதன்புறங்காவலெண் பத்தைங்கலங் கொடுக்கப்பட்டது. மற்றிதனைக் காத்தார் தம் மலரடி என் முடி மேலன என்று கொற்றவனே பணித்தருளித் தெற்றெனத் தாம்ர சாஸநஞ் செய்வித்தான்.$
பாண்டிப் பெரும்பணைகாரன் மகன் அரிகேசரி எழுத்து

---

* இந்த இடத்தில் சில ஏடுகள் கிடைக்காதபடியால் சாசனவாசகம் தொடர்ச்சியாக இல்லை.

$ இந்த இடத்தில் இரண்டு ஸம்ஸ்கிருதச் சுலோகங்கள் உள்ளன.

## சின்னமனூர்ச் (சிறிய) சாசனம்

### தமிழ்ப் பகுதியின்

# பொழிப்புரை

சந்திர வம்சத்தில் தோன்றி இந்திரன் அழிவு நீங்குமாறு, போர் முனையில் அசுரர் கூட்டம் முதலோடு அழியும்படி வில்லைவளைத்தும். இமய மலையுச்சியில் அழகிய கயற்சின்னம் பொறித்தும், தெற்குத் திக்கிலுள்ள (பொதிய) மலைமீது உறையும் குடமுனியின் இனிய தமிழால் தங்கள் செவி களைக் கழுவியும், (செவிகளைத் தூய்மை செய்தும்) இந்திரனது ஆரத்தை அணிந்தும் அவனோடு ஒக்க ஆசனம் அமர்ந்தும், அவனுடைய திருமுடியில் வளை உடைத்தும், கடல் பின்வாங்க வேலை எறிந்தும், ஓராயிரம் வேள்வி களைச் செய்தும், பூதகணங்களைக் கொண்டு பணிகளைச் செய்வித்தும், பூமி எல்லா அரசர்களுக்கும் பொது என்பதை நீக்கியும், (பாவலர்களுக்கு) ஆயிரம் யானைகளை வழங்கியும், இத்தகைய எண்ணிறந்த அதிசயங்களைச் செய்து குறைவற்ற புகழையுடைய பாண்டிய வம்சத்து அரசர் பலர் மறைந் தனர். பின்னர், உலகம் பாடிப்பரவும் பெரும்புகழ் படைத்த ஜயந்தவர்ம னுடைய மகனாகி பகையரசர் தலைநடுங்கும்படி பரமேச்வரனாக வெளிப் பட்டான்.

அவன் அரிகேசரி (பகைவர்களுக்குச் சிங்கம் போன்றவன்); அஸமஸமன் (தனக்கு இணையில்லாதவருடனும் சமமாகப் பழகுகிறவன்) அலங்க்ய விக்ரமன் (கடத்தற்கரிய வல்லமையுள்ளவன்); அகால காலன் (காலமில் லாக் காலத்தில் பகைவர்களுக்கு யமன் போன்றவன்); என்னும் பல குணங் களை உணர்த்தும் பெயர்களை உடையவன்; இப்பெயர்களையும் குணங்களை யும் உலகம் முழுதும் உகந்து ஏத்தவும் பிற மன்னர்கூட்டம் தன்னை வணங்கவும் பரந்த பூமியைத் தனக்கேயுரியதாக்கிக் கொண்டான். இம்மன் னன் அந்தணர்களது இடர்நீங்க அவர்களுக்கு முகில்போல் பொன்மழை பெய்வதையே நோன்பாகக் கொண்டும், துலாபாரம் ஏறியும், ரக்ஷகனாக உலகத்தைக் காத்தும், இருமுறை இரணிய கர்ப்பம் புகுந்தும், கோஸஹஸ் ரம் முதலான பெரிய தானங்களைச் செய்தும் இந்திரன்போல வீற்றிருந் தான்.

இவனுடைய மகன் பூமண்டலத்தைத் திங்களையொத்த வெண்கொற்றக்குடைக் கீழ்க் கொணர்ந்து யாதொரு குற்றமின்றி அருள்கொண்டு கற்பகம்போல் வரையாது கொடுக்கும் விரதம் பூண்டவன். இவன், கலியுகத்தின் மாசை அறவே நீக்கிப் பெருஞ் செல்வத்தைக் கொடுத்து அந்தணர் இடர்நீக்கித் தன் வலிமையைக் கருதாமல் தன்னை வந்து எதிர்த்த வீரக்கழலையணிந்த மன்னர்களை அவர்கள் ஒருங்கே அழியும்படி, மருதூர் குவளைமலை என்னும் இடங்களில் யானைகளைச் செலுத்தி

*............

(இதன் நான்கெல்லை)

...க்குக் கிழக்கு, வடவெல்லை கொற்றன்புத்தூர் பகவதி கோயிலுக்குத் தெற்கு இவ்வாறு சொல்லப்பட்ட பெரு நான்கெல்லைக் குட்பட்டதாகும். இதற்கு ஆணத்தியாக இருந்தவன் அண்டநாட்டுக் குண்டூர்க் கூற்றத்துக் குண்டூர் உத்தர மந்திரியாகிய தாயன் சிங்கன் ஆவன்; இந்நிலத்திற்குரிய புறங்காவல் எண்பத்தைந்துகலமாகும். இதனைக் காத்தார் அடி தன் முடி மேலன எனக் கொற்றவனே பணித்தருளி அதனைத் தாம்பிர சாசனஞ் செய்வித்தான்............பாண்டிப்பெரும் பணைகாரன் மகன் அரிகேஸரி எழுத்து.

* இந்த இடத்தில் சில ஏடுகள் கிடைக்காத படியால் சாசன வாசகம் தொடர்ச்சியாக இல்லை.

பாண்டியர் செப்பேடுகள் 4

# பராந்தக வீரநாராயணனின் தளவாய்புரச் சாசனம்

## அறிமுகம்

திருநெல்வேலி மாவட்டம் கோவில்பட்டித் தாலூக்காவிலுள்ள தளவாய்புரம் என்னும் கிராமத்தின் புறவெளியில் சில ஆண்டுகளுக்கு முன்பு பூமிக்கடியிலிருந்து இந்தச் சாசனம் கிடைத்ததென்று கூறப்படு கிறது. மண்வெட்டி கொண்டு வெட்டும்போது கடினமான பொருள் ஏதோ ஒன்று தட்டுப்பட்டது. தோண்டி எடுத்தபோது அது ஒரு மரப் பெட்டியாக இருக்கக் கண்டனர். ஆணிகளைப் பெயர்த்து மேல்மூடியை எடுத்ததும் அதனுள்ளே இந்தச் சாசனம் இருந்தது. அவ்விதம் அது பூமிக்கடியில் பத்திரப்படுத்தப்பட்டது சமீபகால நிகழ்ச்சியாகவே இருத்தல் கூடும். அது கிடைத்த நிலம் மேடைத் தளவாய்க் குடும்பத்தாருக் குச் சொந்தமானது. அது எப்போது எவ்விதம் பூமிக்கடியில் புதைக்கப் பட்டது என்ற விவரம் தெரியவில்லை.

ஏழு செப்பேடுகளைக் கொண்டது இச்சாசனம். ஒவ்வொரு ஏடும் பதினெட்டு அங்குல நீளம் ஐந்தரை அங்குலம் அகலம் உள்ளது. அவை ஒரு செப்பு வளையத்தில் கோக்கப்பட்டிருந்தன. மற்றச் சாசனங்களில் காண்பதுபோல அந்த வளையததின் இரு முனைகளும் முத்திரையில் பொருத்தப்பட்டனவாக இல்லை; இரு முனைகளையும் தட்டிச் சமன்செய்து ஒன்றன்மேல் ஒன்ருக வைத்து இரண்டு செப்பு ஆணிகளை அடித்துப் பிணைத்துள்ளது. மணி போன்ற உருவத்தில் உள்ள முத்திரை ஒன்றும் தனி யாக அதன் தலையிலுள்ள துவாரத்தின் மூலம் அந்த வளையத்தில் கோக்கப்

பட்டிருந்தது. முத்திரையின் முகப்பிலே புடைப்புச் சித்திரங்களாக இரட்டை மீன், புலி, இவை இரண்டுக்கும் கீழே ஒரு வில் ஆகிய உருவங் கள் காணப்படுகின்றன. அவைகளைச் சுற்றி விளிம்பிலே வட்டமாகக் கிரந்த எழுத்தில் அநுஷ்டுப்–சுலோகம் ஒன்று எழுதப்பட்டுள்ளது.

அந்த ஏழு ஏடுகளில் முதல் ஏடும் கடைசி ஏடும் உட்புறம் மட்டுமே எழுதப்பட்டுள்ளன. வெளிப்புறம் காலியாக உள்ளது. மற்ற ஐந்து ஏடு களும் இருபுறங்களிலும் எழுதப்பட்டவை. முதல் ஏடும் கடைஏடும் தவிர மற்ற ஐந்து ஏடுகளும் முன் பக்கத்திலேயே துவாரத்தின் இடதுபுறத்தில் முறையே இரண்டு முதல் ஆறுவரை தொடர்ச்சியாக எண்ணிடப்பட்டுள் ளன.

வழக்கம்போலவே இந்தச் சாசனத்திலும் சம்ஸ்கிருதம் தமிழ் ஆகிய இரண்டு பகுதிகள் உண்டு. சம்ஸ்கிருதப் பகுதி கிரந்த எழுத்திலும் தமிழ்ப் பகுதி வட்டெழுத்திலும் உள்ளன. இந்த இருவகை எழுத்துகளும் சின்னமனூர்ச் செப்பேடுகளில் பெரிய சாசனத்தில் காண்பவற்றையே ஒத்திருக்கின்றன. அதை வழங்கிய இராஜசிம்மன் இந்தச் சாசனத்தை அளித்த பராந்தக வீரநாராயணனுடைய மகன் என்பது குறிப்பிடத்தக் கது. சம்ஸ்கிருதப்பகுதியுடனே தான், சாசனம் ஆரம்பிக்கிறது. அறுபத் தைந்து வரிகள் கொண்ட அது 'ஸ்வஸ்திஸ்ரீ' என்று ஆரம்பித்து "நமச்சி வாய" என்று முடிகிறது. அதன் நடுவே சில இடங்களில் தமிழ்ச் சொற் கள் உள்ளன. அவை கிரந்த எழுத்தில் இல்லாமல் வட்டெழுத்திலே குறிக்கப்பட்டுள்ளன. சின்னமனூர்ச் செப்பேடுகளிலும் இதேமுறை பின் பற்றப்பட்டிருப்பதைக் காணலாம். 'க்ஷ' என்ற எழுத்து 'த்ஷ' என்ற கூட்டெழுத்தின் வடிவம்போல் காணப்படுவதாயினும், அதை க்ஷகர மாகவே வாசிக்கவேண்டுமென்பதைப் 'பல்லவர் செப்பேடுகள்—முப்பது' என்ற தொகுதியில் விளக்கியிருக்கிறோம்.

சம்ஸ்கிருதம் தமிழ் ஆகிய இரண்டு பகுதிகளும் செய்யுள் வடிவில் அமைந்துள்ளன. அந்தச் செய்யுள்களை இயற்றிய கவிஞர்கள் தங்கள் துறையிலே நிரம்பிய புலமையும் திறனும் வாய்ந்தவர்களாக விளங்கினர் என்று தெரிகிறது. நடை இனிமையாக உள்ளது. தமிழ்ப்பகுதி கம்பீரமான நடை கொண்டுள்ளது. 'ஓங்கு திரை வியன் பரப்பில்' என்ற அதன் தொடக்கம் பத்துப் பாட்டிலே ஆறுவதான மதுரைக் காஞ்சியின் தொடக் கமே. அந்த நூல் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ் செழியன் மீது மாங்குடி மருதனார் பாடியது என்பது கவனிக்கத் தக்கது.

விஷ்ணுவின் வணக்கத்தோடு ஆரம்பிக்கிறது சம்ஸ்கிருதப் பகுதி. அவருடைய உந்திக்கமலத்திலிருந்து பிரமன் தோன்றினன். பிரமன் சந்திரனைத் தோற்றுவித்தான். சந்திரனிடமிருந்து பிறந்தது பாண்டிய வம்சம். அந்த வம்சத்து அரசர்கள் அகத்தியமுனிவரைப் புரோகிதராகக் கொண்டனர். அப்பால், பாண்டிய வம்சத்துப் பழைய அரசர்கள் நிகழ்த்தியனவாகப் புராண வரலாற்றிலே காணப்படும் செய்திகள் சில கொடுக்கப்பட்டுள்ளன. அவை:

(1) இந்திரன் முடிமேல் வளை உடைத்தது;
(2) இராவணனுக்காகச் சந்து (சமாதானம்) செய்தது;
(3) பாரதப் போரில் துரியோதனன் சேனையை அழித்தது;
(4) அதர்வணவேத விதிப்படி முடிசூட்டப் பெற்ற தன் தலையைத் தானே அறுத்துக் கவந்தங்களின் கூத்தை நிறுத்தியது.

அப்பால் சுந்தரனை உள்ளிட்ட அந்த வம்சத்து அரசர்கள் காலஞ் சென்றபின் பராந்தகனுக்கு மகனாக மாறன் பிறந்தான். அவன் கேரள, சிங்கள அரசர்கள் முதலிய பலரைப் போரில் வெற்றி கொண்டான். அப்பால் வரகுணன் என்ற ஓர் அரசனது புகழ் ஒரு சுலோகத்திலே கொடுக்கப்பட்டுள்ளது. வரகுணன் என்ற அவன் பெயரை அதிலே கவி சிலேடையாக ஆண்டிருக்கிறார். அடுத்தாற்போல் அவன் தம்பி ஸ்ரீவீர நாராயணன் பெருவீரனாக வருணிக்கப்பட்டுள்ளான். இவன் ஸ்ரீகண்ட சோழன் மகளான அக்களநிம்மடியின் வயிற்றில் பிறந்தவன். இவன் ஸ்ரீவல்லபமங்கலம் முதலிய பல கிராமங்களைப் பிராமணர்களுக்கு ஏக போகமாக வழங்கியிருக்கிறான். அத்தகைய தானம் ஒன்று நாராயணன், ஈசானன் ஆகியோருடைய அர்ச்சனைக்காக வழங்கப்பட்டது. இவனுடைய ஆட்சியில் நாற்பதுக்கு மேல் மூன்றும் ஒன்றும் கூடிய ஆண்டு கழிந்து அடுத்த ஆண்டில், அதாவது நாற்பத்துநாலு முடிந்து நாற்பத்தைந்தாம் ஆண்டு நடக்கையில், இவ்வரசன் கரவந்தபுரத்தில் தங்கியிருந்த காலத்தில் இந்தச் சாசனம் வழங்கப்பட்டது.

தானம் வழங்கப்பெற்ற கிராமத்தின் பழைய வரலாறு அப்பால் கொடுக்கப்பட்டுள்ளது. முன்னாளிலே கடுங்கோன் என்னும் அரசன், ஆசி நாட்டில் அடங்கிய ஸ்ரீமங்கலம் என்ற ஊரைப் பிராமணர் பன்னிருவர்க்குத் தானமாக வழங்கியிருந்தான். மற்றொரு ஊரான சோமாசிக்குறிச்சி என்பது காடகசோமயாஜியாருக்குக் கழுதூரில் உயிர்நீத்த (பாண்டிய) அரசன் ஒருவனால் வழங்கப்பட்டது. சிறிது காலத்திற்குப் பிறகு அதில் ஒரு

பாகம் நான்காம் வருணத்தாரால் கைப்பற்றப்பட்டு மதுரஸ்தான ஸத் கிராமம் என்று பெயரிடப்பட்டது. சோமாசிக்குறிச்சியைச் சேர்ந்தவனும் வானகோத்திரத்து மாயன் என்பவனின் பெயரனும் நாராயணனின் மகனுமான கேசவன் ஸ்ரீமங்கலம், சோமாசிக்குறிச்சி ஆகிய இரண்டு ஊர்களையும் ஒன்றுக்கிப் பிராமணருக்குத் தானம் செய்யவேண்டுமென்று அரசனிடம் (வீரநாராயணனிடம்) வேண்டிக்கொள்ள, மன்னவனும் அவ்வாறே செப்பேடு வழங்கித் தானம் அளித்தான். விஷ்ணுபக்தனும் மந்திரியுமான இளையாநக்கன் என்பான் அதற்கு ஆக்ஞப்தி. தத்தபட்டர் மகனான சுப்பிரமணியன் தர்மாத்யக்ஷன்.

ஸ்ரீவல்லபமங்கலத்து வாசியான மாதவன் இந்தப் பிரசஸ்தியை எழுதிய கவியாவன். கணசுவாமியின் மகனும் தேவேச்வரனின் உடன்பிறந்தானுமான யோகேச்வரன் இந்தக் கவியின் தந்தை. மகாவிளால், பருத்தி வயக்கல் என்ற பெயர் கொண்ட இரு கிணறுகளும், அவைகளைச் சேர்ந்த நிலத்தின் உரிமையும் பிரசஸ்தி பாடிய அந்தக் கவிக்கு வழங்கப்பட்டன.

மற்றப் பகுதியைத் தமிழ்ப்பாகத்தைப் பாடிய கவிஞருக்கும், சாசனத்தைச் செப்பேட்டில் எழுதியவருக்குமாக, கண்ணங்கீரன் வயக்கல், சிறுக்குளவளால், சோமயாஜி வயக்கல் ஆகிய மூன்று நிலங்களும், அவற்றில் இருந்த கிணறுகளின் உரிமையும் வழங்கப்பட்டன. கருமாரர் தலைவனும் நிருபசேகரன் என்ற சிறப்புப் பெயரைக் கொண்டவனும் குண்டூரைச் சேர்ந்தவனுமான நக்கன் அந்த ஏட்டை எழுதியவன் என்ற செய்தியுடன் சம்ஸ்கிருதப் பகுதி முடிகிறது.

அலைகடலில் படுத்துறங்கும் திருமாலின் புகழ் பாடுவதோடு ஆரம்பிக்கிறது தமிழ்ப் பகுதி. அவர் உந்தியில் தோன்றிய கமலத்திலிருந்து பிரமன் தோன்றினன். அவனுடைய மனத்திலிருந்து அத்திரிமுனிவர் பிறந்தார். அம்முனிவரிடம் பிறந்த சந்திரனுக்குப் புதன் மகனுகத் தோன்றினன். சூரிய வம்சத்து அரசனுன இளன் என்பான் சிவபெருமான் சாபத்தால் பெண்ணுருவாக மாறியிருந்த காலத்தில் அவள் மூலமாகப் புதனுக்குப் புரு என்பான் மகனுகப் பிறந்தான். அவனுக்குப் பின் அந்த வம்சத்தில் பல அரசர்கள் அரசுபுரிந்து சென்றபின், கடல் பணிந்து கழுவிய கால்களைக் கொண்ட மன்னன் ஒருவன் இருந்தான். அப்பால் அகத்தியரைப் புரோகிதராகக் கொண்டு வீரச்செயல்கள் பலவற்றையும் அநேக நற்காரியங்களையும் ஆற்றிய பல

அரசர்கள் தோன்றினர்கள். அவர்கள் நிகழ்த்திய அருஞ்செயல்களுள் முக்கியமானவை பின்வருமாறு:

1. கடலைக் கடைந்து அமிர்தம் கொண்டது.

2. வடக்கே உள்ள மலை, அதாவது இமயத்தின் மீது இரு கயலைப் பொறித்தது,

3. ஹரிஹயன் (இந்திரன்) மாலையை அணிந்தது,

4. அவன் முடிமேல் வளையை உடைத்தது.

5. வேல் எறிந்து கடலை மீளச் செய்தது.

6. தேவாசுர யுத்தத்தில் வெற்றி கண்டது.

7. அகத்திய முனிவருடன் தமிழ் ஆய்ந்தது.

8. பெருவலி கொண்ட மன்னர் பலரை அழித்தது.

9. இராவணனுடன் சமாதானம் செய்வித்தது.

10. திருதராட்டிரன் மக்கள் (கௌரவர்) அனைவரும் அழியும்படி போர்க்களத்தில் யானைகளை நடத்திச் சென்றது.

11. அர்ச்சுனனுக்கு ஏற்பட்ட வஸுசாபத்தை நீக்கியது.

12. அரிச்சந்திரன் நகரை அழித்து அவன் பரிச்சந்தம் பலவற்றைக் கவர்ந்தது.

13. நாற்கடலின் நீரினால் ஒரே பகலில் நீராடியது.

14. நாற்கோடிப் பொன் கொடுத்து நூற்கடலைக் கரை கண்டது, ஆயிரம் யானைகளை வழங்கியது.

15. வலி பொருந்திய அரசர்கள் பலரை வானுலகம் அனுப்பியது.

16. கழிமுகம் உள்ள கடலைப்போல் தோற்றம் அளிக்கும் குளங்கள் பலவற்றுக்குக் கரையை உயர்த்தியது.

17. தென் மதுராபுரியை நிர்மாணித்தது.

18. அங்கே சங்கம் நிறுவித் தமிழை வளர்த்தது.

அப்பால் ஆலங்கானத்துப் போரில் வெற்றி கொண்டு அரசை நிறுவிய மன்னன் குறிக்கப்பட்டிருக்கிறுன். அதுமுதலே வரலாற்றுக் காலத்தைச் சார்ந்த மன்னர்களைப் பற்றிய விவரங்கள் காணப்படுவதாகக் கொள்ளலாம். அவன் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் ஆவன். பிறகு கடுங்கோன் என்னும் அரசன் குறிப்பிடப் படுகிறுன். இவன் "கற்றறிந்தோர் திறல் பரவக் களப்பாளரைக் களைகட்ட மற்றிரடோள் மாக்கடுங்கோன்" என்றும் "மானம் பேர்த்தருளிய கடுங்கோன்" என்றும் கூறப்படுகிறுன் இக்கடுங்கோனை சம்ஸ்கிருதப் பகுதியும் கூறுகிறது.

இத்தகைய புகழ்வாய்ந்த மன்னர் பலர் கழிந்தபின், இடையாறை, வெண்பைக்குடி ஆகிய இடங்களில் வெற்றி கொண்ட மன்னன் தோன்றிய வம்சத்தில் சடையன் தோன்றினுன். பராந்தகன் என்ற மறுபெயர் கொண்ட அவன் காடவனை அதாவது பல்லவனைக் கருவூரில் தோற்கடித்தான். அவன் மகனுன ஸ்ரீவல்லபன் குண்ணூரில் வெற்றி கொண்டும் ஈழத்தைக் கைப்பற்றியும், விழிஞத்தில் வில்லவனை (சேரனை)க் கொன்றும் கடலாணூர் என்னுமிடத்துப் போர்க்களத்திலிருந்து காடவனைத் துரத்தியும் புகழ் கொண்டவன். மேற்கேயுள்ள குட்டுவர் (சேரர்), கிழக்கேயுள்ள சோழர், தெற்கேயுள்ள கூபகர், வட புலத்தைச் சேர்ந்தவர்கள் ஆகியோர் அழியக் குடந்தை (கும்பகோணம்)யில் நடந்த போரில் வெற்றி கொண்டான். அந்தப் போரிலே அமர்வல்லான் மகன் இறந்துபோனுன். ஸ்ரீவல்லபனுக்கு யம்புரசீலன், உபாயபஹுளன் என்பன போன்ற சிறப்புப் பெயர்கள் உண்டு. அவன் இறந்த பிறகு "எங்கோ" (எங்கள் அரசன்) என்று வருணிக்கப்பட்டுள்ள வரகுணன் பெயரைச் சாசனம் குறிக்கிறது. சடாமகுடத்தில் பிறைச் சந்திரனை அணிந்த பிநாகபாணியை (சிவபெருமானை) எப்போதும் தியானித்து வரும் அம்மன்னன் அந்தச் சாசனம் வழங்கப்பட்ட காலத்தில் உலகத்தைக் காத்து வந்தான் என்று காணப்படுகிறது.

அப்பால் பராந்தக வீரநாராயணனின் பெயர் காணப்படுகிறது. இவனுடைய தாயார், தாய்வழிப்பாட்டன் ஆகியோருடைய விவரங் களும் கொடுக்கப்பட்டுள்ளன. பொத்தப்பிச் சோழர் குலத்தைச் சேர்ந்த ஸ்ரீகண்டன் மகளான அக்களநிம்மடி என்பவள் இவனுடைய தாய். ஸ்ரீகண்டன் ஒரு பேரரசன் போலவே அவ்விடம் புகழப்பட்டிருக்கிறுன். இவன் தொண்டியர்கோன், மாறுபைரணன்திருமருகன் (சகோதரி

குமாரன்), மயிலையர்கோன், மத்தமாமலைவலவன் என்பன போன்ற விருதுகளை உடையவன்.

அப்பால் சாசனத்தை வழங்கிய பராந்தக வீரநாராயணனுடைய புகழ் விவரிக்கப்பட்டுள்ளது. இவன் செந்நிலம் என்ற இடத்திலே தன் *அண்ணனோடு போரிட்டு வெற்றி கண்டான். இன்னும், இவன் குன்றை என்ற இடத்திலும் மேற்குக் கொங்கிலும் பொக்கரணியிலும், தென் மாயல், வெண்பை, பராந்தகம் என்னுமிடங்களிலும் வெற்றி கொண்டு தன்னை எதிர்த்தோருடைய "வஸ்துவாகனங்களைக்" கைப்பற்றினன். இவன் பல ஆறுகளுக்குத் தலைப்பு வெட்டி அமைத்திருக்கிறான். பல கோயில்களை எழுப்பியிருக்கிறான். தென் விழிஞ நகரைக் கைப்பற்றினன். கொங்கூரிலிருந்து தேனூர் வரை மேற்குக் கொங்கர் அழிந்து போகும்படி இவன் வேலை வீசினன். இன்னும் வீரதுங்கனைக் கடிவாள மிட்டு அடக்கினன். இவனுக்குக் கலிப்பகை, கண்டரோள் கண்டன் (வீரருள் வீரன்), என்பன போன்ற விருதுகள் உண்டு. இவனுடைய ஆட்சியின் நாற்பதுக்கு மேல் மூன்றும் இரண்டும் கொண்ட ஆண்டில், அதாவது நாற்பத்தைந்தாம் ஆண்டில், களக்குடி நாட்டைச் சேர்ந்த களக்குடியில் தங்கியிருந்த காலத்தில் இந்தச் சாசனத்தில் கண்ட தானத்தை வழங்கினன்.

'களப்பாழர்' (களப்பிரர்) மீது வெற்றி கொண்டவனும் அவர்கள் மானம் பேர்த்தவனுமான கடுங்கோன் என்பான் முன்னளிலே திருமங் கலம் என்னும் கிராமத்தைப் பன்னிரண்டு பிராமணர்களுக்குத் தானஞ் செய்து அதற்கான செப்பேட்டையும் வழங்கினன். கழுதூரில் 'ஒத்தி செய்த' (இறந்து போன) அரசனும் அதேபோலச் சோமாசிக்குறிச்சி என்ற ஊரைக் காடக சோமயாசியாருக்கு ஏகபோகமாக அளித்திருந் தான். இவ்விரண்டு ஊர்களின் செப்பேட்டுச் சாசனங்கள் கலவரம் நடந்த காலத்தில் '(மறக் கேட்டால்') தொலைந்து போயின.

அப்பால் கடற்றிருக்கைக் கிழவன், சோமாசிக்குறிச்சியின் எல்லை வகுத்துத் தனக்கு எடுத்துக்கொண்டு, எஞ்சியதை மதுரதரநல்லூர் என்ற பெயரில் குடிநிலமாக்கினன். அதாவது உழுதுண்போர் வாழும் ஊராக்கி னன். அந்த நிலையில் அவ்வூரில் குடிநிலம் என்ற நிலையை மாற்றி அதன் புரவை (வரியை)ச் சோமாசிக்குறிச்சிக்கு உரியதாக்கி இரண்டு ஊர்களை

* இந்த அண்ணன் வரகுணனை வேறு ஒருவனை என்பது கூறப்படவில்லை.

யும் ஒன்ருகச் சேர்த்துப் புதிய சாசனம் ஒன்றை வழங்கும்படி ஆசிநாட்டுப் பிரம்மதேயமான திருமங்கலத்து வாசியும் சோமாசிக்குறிச்சியின் பதிகாவலனுமான நாராயணங்கேசவன் என்பான் அரசனிடம் வேண்டிக் கொண்டான். அவ்விதம் விண்ணப்பம் செய்தவன் வானகோத்திரத்துப் பௌதாயனகல்பத்தைச் சேர்ந்த மாயாநம்பி பட்டர்க்குத் தம்பியான மாயாநாராயண பட்டர்க்கு மகனுவன். அவன் க்ஷத்திரிய தர்மங்களை நன்குணர்ந்து பாண்டிய வீரநாராயணனுடைய நம்பிக்கைக்குப் பாத்திர மான அதிகாரியாகவும் விளங்கினுன். அரசனும் அம்மாதிரியே அதன் புரவைச் சோமாசிக்குறிச்சிக்கு ஏற்றித் திருமங்கலத்தோடு கூட அதனை யும் சேர்த்துப் பிடிசூழ்வித்துத் தானம் வழங்கினுன்.

வத்சகோத்திரத்தில் பிறந்தவனும் புல்லூர் வாசியும் வைகுண்ட வளநாடன், ஆயிரத்தைந்நூற்றுவன் எனப்படுபவனுமான இளையாநக்கன் என்னும் அதிகாரி இந்தத் தானத்துக்கு ஆணத்தியாவன். வெண்புநாட்டுப் பெருந்துறவெள்ளிக் கிழவனுன சேந்தங் கிழவன் அதற்கு நடுவுநிலை நாயகன். அளற்றுநாட்டு முசுக்குறிச்சி வாசியும் தமிழ்க் கவியுமான அளற்றுநாட்டுக் கோன் சாத்தம்பட்டாரகனும், பெருங்காக்கூர்த் தேய மாணிக்கமான கிழவன் கோனும் இதற்குக் கணக்கர் ஆவர்.

ஆசிநாடு, நேச்சுரநாடு ஆகிய இரண்டு நாடுகளின் நாட்டார் முன்னிலையில் தான பூமிக்கு எல்லை வகுத்துப் பிடி சூழ்விக்கப் பெற்றது. அப்பால் நான்கெல்லையின் விவரம் கொடுக்கப்பட்டுள்ளது. திருவிருப்பூர், வெள்ளாறு, இளநேச்சுரம் ஆகிய பெயர்கள் அங்கே காணப்படுகின்றன. இவ்விதம் அந்த ஊர்கள் பிரமதேயஸ்திதி மாருமல் திருமங்கலத்துச் சபை யாருக்கும் சோமாசிக்குறிச்சிப் பிராமணர்களுக்கும் அரசனுல் வழங்கப் பட்டன. அதற்கான பிரசஸ்தியை ஸ்ரீவல்லப மங்கலத்து வாசியும் கண சுவாமி பட்டன் மகனும் யோகேச்வர பட்டன் தம்பியுமான ஸ்ரீ மாதவன் இயற்றினுன். அவனுக்கு அந்த ஊர்ச் சபையாருக்கு ஒப்ப இரண்டு கிணறு களோடு கூடிய புலங்கள் அதற்காகக் கிடைத்தன. அதேபோலத் தமிழ்ப் பிரசஸ்தியை எழுதிய கவியும் ஏட்டில் பொறித்தவனுமான மார்த்தாண்ட னுக்குக் கிணறுகளோடு கூடிய மூன்று புலங்களும் வேறு சில உரிமைகளும் மகாசபையின் சம்மதத்தோடு அளிக்கப்பட்டன.

பிரசஸ்தியின் மற்றைப்பகுதியை அதாவது தமிழ்ப் பாகத்தை இயற் றியவன் கருமார சிரேணியின் தலைவனும் பாண்டிய திரமிளாபரணன் என் னும் கவியும் ஆவன் என்பதைத் தெரிவிக்கும் சம்ஸ்கிருத சுலோ

கம் ஒன்று காணப்படுகிறது. அப்பால் இரண்டு தமிழ்ச் செய்யுள்கள் உள்ளன. ஒன்றிலே தமிழ்ப் பிரசஸ்தியை எழுதியவன் பாண்டித் தம்ழா பரணன் என்ற விருதையுடைய ஸ்ரீவல்லபனுன பாண்டி மாராயப் பெருங் கொல்லன் ஆவன் என்ற செய்தி கொடுக்கப்பட்டுள்ளது. அவன் வைகுண்ட வளநாடன் என்றும் குண்டூர் வாசி என்றும் வருணிக்கப்பட்டிருக்கிருன். இன்னும் அவன் சிவபெருமானுக்கு அவர் வேண்டியபடி பரசு (கோடரி) செய்துகொடுத்த தேவதச்சரான மநுவின் வழிவந்தவன் என்று கூறப் படுகிருன்.

கடைசிச் செய்யுள், சாசனம் நிருபசேகரப் பெருங்கொல்லன் ஆயின நக்கனுல் ஏட்டில் பொறிக்கப்பட்டுள்ளது என்பதைத் தெரிவிக் கிறது. தமிழ்ப் பிரசஸ்தியைப் பாடிய கவியின் தந்தையான அவன் பாண்டிய அரசர்களின் கட்டளைப்படி முன்னுளிலே இமயத்தில் கயலைப் பொறித்த சிற்பிகளின் வமிசத்தில் தோன்றியவன் என்ற செய்தியும் கொடுக்கப்பட்டிருக்கிறது.

இந்தச் சாசனம் பல வகையில் முக்கியமானது. பாண்டிய வமிசத் தின் பழம் பெருமைகளையும் புராண வரலாறுகளையும் எடுத்துக் கூறும் செப்பேட்டுச் சாசனங்களுள் இது முதன்மையானது. வேறு இடங்களில் கிடைக்காத அரிய செய்திகள் பலவும் இதில் நமக்குக் கிடைக்கின்றன.

இந்தச் சாசனத்திலே ஸ்ரீமாற ஸ்ரீவல்லபனுடைய தந்தையின் பெயர் பராந்தகன் என்று காணப்படுகிறது. சின்னமனூர்ச் செப்பேட்டுப் பெரிய சாசனத்தில் அது வரகுணன் என்று காணப்படுகிறது. ஆகவே இவ் விரண்டு பெயர்களும் ஓர் அரசனையே குறிப்பனவாகும். வேள்விக்குடிச் சாசனத்தை வழங்கியவனும் சீவரமங்கலச் சாசனத்தை வழங்கிய வனும் ஒருவனே என்று பேராசிரியர் க. அ. நீலகண்ட சாஸ்திரி கருதியது இதனுல் உறுதிப்படுகிறது.

ஸ்ரீமாற ஸ்ரீவல்லபன் பொத்தப்பிக் குலத்துச் சோழனுன ஸ்ரீகண் டன் மகள் *அக்களநிம்மடியை மணந்திருந்தான். அவளுக்குப் பிறந்த வனே இந்தச் சாசனத்தை வழங்கிய பராந்தக வீரநாராயணன் ஆவன்.

*அக்களநிம்மடி என்ற பெயர் கொண்ட இராசமாதேவி வேறு ஒருத்தியைப் பற்றி நாமறிவோம். பல்லவ அரசனுன நந்திவர்மனை மணந்திருந்த அவள் கதம்ப குலத்தில் பிறந்தவள் என்று பல்லவ சாசனம் கூறுகிறது.

பொத்தப்பிக் குலத்துச் சோழர்கள் அவ்வளவு பழங்காலத்திலே இருந்தனரென்ற செய்தி நமக்குத் தெரியாது. அந்தக் கிளை பிற்காலத்தில் ஏற்பட்டதெனவே பொதுவாக ஆராய்ச்சியாளர்கள் கருதி வருகிறார்கள். எனினும் இந்தச் சாசனத்தில் பொத்தப்பிக் குலத்தைப் பற்றிக் கூறும் முறையைக் கவனித்தால் அது நீண்ட காலத்துக்கு முன்னதாகவே தோன்றியிருத்தல் வேண்டும் என்று எண்ணலாம். ரேனாட்டுச் சோழர் அல்லது தெலுங்குச் சோழர் என்று ஆராய்ச்சியாளர்களால் குறிக்கப் படும் கிளையிலே ஸ்ரீகண்டன் என்ற பெயர் கொண்ட அரசன் ஒருவன் இருந்திருக்கிறான். அவன் வழங்கிய செப்பேட்டுச் சாசனம் ஒன்று சென்னை அரசினர் பொருட்காட்சிச் சாலையில் உள்ளது. அதிலே அவன் ஒரு பேரரசனாகப் புகழப்பட்டிருக்கிறான். அவன் அரசு புரிந்த காலத்தை நிர்ணயிக்க ஆதாரம் ஏதும் கிடைக்கவில்லை. எனினும் சாசனம் பொறிக்கப்பட்ட எழுத்தின் வரி வடிவத்தைக் கொண்டு அது ஏறக்குறைய இந்தச் சாசனம் வழங்கப்பட்ட காலமாகவே இருத்தல் வேண்டும் என்று ஆராய்ச்சியாளர் கருதுவர்.

தஞ்சையில் ஆண்ட சோழர்களிலே இரண்டாம் பராந்தகன் எனப் பெறும் சுந்தர சோழன் வழங்கிய அன்பில் செப்பேடுகளிலே அந்த வம்சத்தை நிறுவிய விசயாலயனை அடுத்து முன்னதாக ஸ்ரீகண்ட சோழன் என்பான் பெயர் காணப்படுகிறது.

இம்மூன்றும் ஒருவனையே குறிக்கிறதா?

இந்தச் சாசனத்திலே ஸ்ரீகண்ட சோழனுடைய புகழ் வருணிக்கப் பட்டிருக்கும் முறையைக் கவனித்தால் அவன் பெருவலியும் செல்வாக்கும் மிகுந்தவனாக இருத்தல் வேண்டும் எனலாம். அவன் மயிலையர்கோன் என்று குறிக்கப்பட்டிருக்கிறான், அதிலிருந்து அவன் மயிலாப்பூரை உள்ளிட்ட தொண்டைநாட்டு வடபகுதியை ஆண்டு வந்தான் என்பது விளங்கும். அந்தப் பகுதி பல்லவ சாம்ராஜ்யத்தில் அடங்கியது. பல்லவர் ஆட்சிக்குட்பட்டிருந்த இந்தப்பகுதி எப்படி ஸ்ரீகண்டசோழன் ஆட்சிக்கு வந்தது என்பது ஆராயத்தக்கது.

கும்பகோணத்தில் நடந்த போரிலே ஸ்ரீவல்லபன் தன்னுடைய விரோதிகளின் கூட்டு ஒன்றை எதிர்த்து நின்று வெற்றி கண்டிருக்கிறான். அதிலே அமர் வல்லானுடைய மகன் ஒருவன் இறந்துபட்டான் என்ற செய்தி இந்தச் சாசனத்திலிருந்து தெரிகிறது. அந்தச் செய்தி வேறு எங்கும் காணாதது.

சிவபெருமானை உள்ளத்தில் இனிதிருவி உலகம் காத்து வந்த வரகுணனே சாசனம் வழங்கிய காலத்தில் அரசனுக இருந்தான். எனினும் சாசனத்தை வழங்கியவன் அவன் தம்பியான பராந்தக வீரநாராயணனே. இவனுடைய ஆட்சி ஆண்டே சாசனத்தில் குறிக்கப்பட்டிருப்பது. இவற்றைக் கவனித்தால் அண்ணன் பெயரளவிலே அரசனுக இருக்க, தம்பியே ஆட்சியை நடத்தி வந்தான் என்பது தெளிவாகும். சிறந்த சிவபக்தனுன அண்ணன் சிவபூசையிலேயே தன் காலத்தைக் கழித்து வந்தான் போலும். சைவ சமய குரவர் நால்வரில் கடைசியில் வந்த மாணிக்கவாசகர் சிவனடியாராக மாறுவதற்கு முன் வரகுணன் என்ற பாண்டிய அரசனிடம் மந்திரியாக இருந்தார் என்று தெரிகிறது. மாணிக்கவாசகர் தாம் பாடிய திருக்கோவையார் எனப்படும் திருச்சிற்றம்பலக் கோவையிலே வரகுணன் என்ற அரசனைப் பற்றிப் புகழ்ந்து பாடியிருக்கிருர். பட்டினத்தடிகளும் திருவிடைமருதூர் மும்மணிக் கோவையிலே பாண்டிய மன்னனுன வரகுணன் சிவபெருமானிடம் பூண்டிருந்த பக்தியைச் சிறப்பாக வருணித்திருக்கிருர். இவைகளைக் கவனித்தால் அந்த வரகுணனே இந்த மன்னனுக இருக்கக் கூடுமோ என்னும் ஐயம் தோன்றுகிறது.

சாசனத்தை வழங்கிய பராந்தக வீரநாராயணனுடைய வெற்றிகள் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. இவனுடைய முதல் வெற்றி செந்நிலம் என்ற இடத்திலே தன் அண்ணனேடு போரிட்டு அடைந்ததாகும். இதே நிகழ்ச்சி சின்னமனூர்ப் பெரிய சாசனத்திலும் குறிக்கப்பட்டிருக்கிறது. அந்த அண்ணன் யார், எதற்காக அவனேடு பராந்தகன் போரிட்டான் என்பன போன்ற விவரங்கள் தெளிவாக இல்லை. அந்த அண்ணன் வரகுணனுக இருக்க முடியுமா?

மற்றெரு போரிலே இவன் வீரதுங்கனை வெற்றி கொண்டு அவனைக் கடிவாளமிட்டுக் குதிரையை அடக்குவது போல அடக்கினுன் என்ற செய்தியையும் இந்தச் சாசனம் கூறுகிறது. அந்தத் துங்கன் யார் என்பது தெளிவாக இல்லை. கொடும்பாளூர் வேளிரில் வீரதுங்கன் என்ற பெயர் கொண்ட ஒருவன் இருந்திருக்கிருன். அந்த வீரதுங்கனும் இந்தத் துங்கனும் ஒருவரா என்பது ஆராய்ச்சிக்குரியது.

---

# தளவாய்புரச் செப்பேட்டில் காணப்படுகிற பாண்டியர் பரம்பரை

## (சம்ஸ்கிருதப் பகுதி)

பராந்தகன்

↓

மாறன் (மாறவர்மன்)
(கேரளனையும் சிங்களனையும் வென்றான். தேவனை (?) வென்றான்)

↓

↓ வரகுணன்

↓ வீரநாராயணன்
(இவன் தாய் அக்களநிம்மடி. 45 ஆட்சியாண்டில் ஸ்ரீவல்லபமங்கலத்தைத்தானம் செய்தான்.)

## (தமிழ்ப் பகுதி)

ஸ்ரீபராந்தகன் கோச்சடையன்
(கருவூரில் காடவனை யானைப் படையால் வென்றான்)

↓

ஸ்ரீவல்லபன்
(குண்ணூரிலும் ஈழத்திலும் போர் வென்றான். விழிஞத்தில் சேரனை வென்றான் காடவனைக் கடலானூரில் வென்றான். அமர்வல்லான் மகனைக் குடந்தைப் போரில் வென்றான்.)

↓

↓ வரகுணன்
(சிவபக்தன்)

↓ ஸ்ரீபராந்தக மகாராசன் வீரநாராயணன்
(அக்களநிம்மடி இவனுடைய தாய். தன் தமையனைச் செந்நிலப் போரில் வென்றான். குன்றை, குடகொங்கு, பொக்கரணி, தென்மாயல், வெண்பை, பராந்தகன் (?) போர்களில் வெற்றி கொண்டான். விழிஞ நகரைக் கைப் பற்றினான். கொங்குமுதல் தேனூரையும் கொங்கரையும் அடக்கினான். வீரதுங்கனைக் குசை கொண்டான். 45 ஆம் ஆட்சியாண்டில் இச் செப்பேட்டை வழங்கினான்.)

## தளவாய்புரச் சாசனம்

## சாசன வாசகம்

### முதல் ஏடு—பின்புறம்

1. स्वस्ति श्री [।*] लक्ष्मीनाथादभवदुदयो यस्य विश्वाधिनाथायस्योत्पाद्यं समुरदनुजा म्भो

2. धयः सप्तलोकाः [।*] शाचीपत्यप्रभृतिफलदो यस्य सौमुख्यलेशो भूयो भूयः क

3. मलभवनो भूतये वः स भूयात् ॥॥० [1*] प्रत्यक्षानुमितिसमत्वबोधक्लृप्ति ज्ञानाना

4. मविषयभूतरूपतत्वम् [।*] वेदान्तावगतमनादिमध्यहानि ज्योतिर्व्वो हरतु हरेरमंग

5. लानि ॥॥० [2*] निस्पन्दमारुतमचञ्चलसूर्य्यसोमं विष्टब्धतारकमकम्पित सिन्धु नाथम् [।*] अन्त

6. र्म्मुखाक्षगण[1]मान्मनिशामनार्त्थं योगासनं भवतु वः शिवदायि शैवम् ॥॥० [3*] बभूव ना

7. रायणनाभिपंकजान्मुखैश्चतुर्भिश्चतुराननो गृणन् [।*] हिताहितानाम् पि

8. तृ मातृ वाक्यवत्प्रमाणभूतान्निगमानघच्छिदः ॥॥० [४] स निर्म्ममेऽत्रिन्तपसाम् परायण

9. श्चराचरानुग्रहनिग्रहक्षमम् [।*] स निर्म्ममे लोचनतो जगत्रयीसुखावह

10. ज्ज्योतिषमोषधीश्वरम् ॥॥० [5*] तस्मादासीदमृतकिरणादन्वयो मन्वयातानप्या चारानलमनुसर

1. मात्म என்று படிக்கவும்.

11. न्नायेसम्माननीयान् [।*] तेजो[1]वृन्ध्या रविमधरयत्रात्रिनाथम् प्रसत्या ज्ञानोन्नत्या पतिमपि गिराम् पा

12. ण्ड्यदेशेश्वराणाम् ॥॥ [6*] विन्ध्यं लोकत्रितयविवरं[2]स्वान्तना पूरयन्तं शैलाकारे नियतमक

13. रोदग्रपादार्प्पणेन [।*] तिर्य्यग्भूतं सुरगणपतिम् बिन्दुमप्यम्बुराशिं यस्येशानो मुनिपरिष

14. दां कुम्भयोनिः पुरोधाः ॥॥ [७*] शुचितया चितया धनसम्पदा रहितया हितया तमसा धिया [।*]

15. सततया मतया महिताम्नहीनकृत योकृत योषिदतिस्पृहः ॥॥ [८*] कल्पान्ते कबळयतो

*இரண்டாம் ஏடு—முன்புறம்

16. पि विश्वलोकान्दुर्व्वारोद्गमनजवम् पयः पयोधेः [।*] यत्सूतेरभवदवस्थित

17. स्य राज्ञो नैवालञ्चरणसरोजलंघनाय ॥॥ [९*] इन्द्रूत्पादकशार्ङ्गधन्वमतया स [।*]

18. हाय्यशुश्रूषया राज्ञाम् मौळिषु भग्नशिष्टवलयद्ध्वंसेन मौलौ हरेः [।*] सन्धाव

19. त्य्यतया निशाचरपतेर्जेतुश्च वज्रायुधम् यस्यालंकृतयो बभूवुरखिलक्ष्मानाथवन्द्या नृ

20. पाः ॥॥ [१०*] प्रातः कृताग्निहवनः समरे कुरूणान्दुर्य्योधनीय बलतर्प्पितमृत्यु चेताः [।*] प्रत्याग

21. तोनुदिन[3]सान्मपुरन्नरेन्द्रो यत्सम्भवोतनुत सायमपि स्वहोमम् ॥॥ [११*] यदु द्भवोथर्व्ववि

1. वृद्धया என்று வாசிக்கவும்.
2. स्वात्मना என்று வாசிக்கவும்.
3. मात्म என்று வாசிக்கவும்.
* ஏட்டின் துளைக்கு இடது புறம் 2 என்று எண்ணிடப்பட்டுள்ளது.

22. धानद्दष्ट्या राज्येभिषिक्तं गुरुणानुरागात् [।*] निजन्निकृत्य स्वयमुत्तमांगम् कव

23. न्धजालं शनयाम्बभूव ॥।१ [१२*] एतदन्वयभवेष्वनेकशः सुन्दरादिषु नृपेषु

24. कर्म्मभिः [।*]देवतामुपगतेषु मार इत्याख्ययाजनि नृपः परान्तकात् ॥। १ [१३] स केर

25. ळेशं युधि सिंहळेन्द्रन्देवञ्च दुर्द्धर्षतमान् बलौघैः [।*] विजित्य वेगे

26. न तदीय कोशैः शिष्टान्प्रहृष्टानकरोदधिश्रीः ॥। १ [१४] वरगुण इति नाम धारयन्नवर

27. गुणानपि साधु कर्म्मणा[।*]वरगुण इति नामधारयन्नभवदतोधिपतिर्म्महीभुजाम् ॥। १ [१५*] तस्या

28. नुजो वह्निररीन्धनानां श्रीवीरनारायणनामधेयः [।*] सोमोपमो मित्रकुमुद्वतीना

29. न्नाथोभवद्वारिधिमेखलायाः ॥।१ [१६*] श्रीकण्ठनाम्नोकळनिम्नटीति नाम्ना श्रुता चोळकुल

30. प्रदीपात् [।*] अम्भोनिधेरम्बुजवासिनीव लब्धोद्भवा यञ्जनयाम्बभूव ॥।१ [१७*] विद्यापारदृशा

31. म् विनीत[1]मनसं वृतप्रतिष्ठावतां विप्राग्रेसरताजुषाम् प्रवचनव्याख्यान[2]निष्ठान्मनाम् [।*] पा

## இரண்டாம் ஏடு—பின்புறம்

32. ण्डयानानितलकायमानमतुलं श्रीशालिनं शाश्वतं [3]य श्रीवल्लभमंगलं विहितवा

33. न्ग्रामोत्तमम् भूपतिः ॥। १ [१८*] एवं विधान्ग्रामवराननेकान् भोग्यैकभोग्यानवनीसु

1. मनसां என்று படிக்க
2. निष्ठात्म என்று படிக்க
3. यः என்று படிக்க

34. राणाम् [।*]नारायणेशानसमर्चनार्थानपि व्यधाद्यो विनिहत्य दस्यून् ॥॥ [१९*] कृतश्च येनोग्र

35. तरप्रताप प्रह्वावनीन्द्रात्तकरप्रपञ्चैः [।*] सम्पूर्णकोशेन गुरुप्रकृष्टग्रामप्रदा

36. नीयकराल्पभावः ॥॥ [२०*] दशकेषु चतुर्षु वत्सराणान्त्रिषु चाब्देषु गतेषु सैक

37. केषु [।*] करवन्दपुरे वसन्समायां क्षितिपानामधिपस्ततः परस्याम् ॥॥ [२१*] आशि

38. नाटिति विख्याते ख्याते जनपदोत्तमे [।*] ग्रामः श्रीमंगलश्रीमान् द्वादश

39. द्विजलम्भितः ॥॥ [२२*] *மானம்பேர्त्त कटुंकोनित्यभिधानमुपेयुषा [।*] देवदे

40. वस्य गुरुणा देवलोकाधिपश्रिया ॥॥ [२३*] ग्रामोपरः काठकसोमया

41. जीत्यन्वर्थनाम्ने विदुषां वराय [।*]दत्तो धुलोकं கழுதூர் न्निवासात् गतेन रा

42. ज्ञा गुरुणा तवैव ॥॥ [२४*] स चोमाचिक्कுறிச்சிति ख्यातस्तस्यैकदेशभूः [।*] मधुरस्था

43. नसद्ग्राम नाम्ना शूद्राभिलंघिता ॥॥ [२५*] तामाच्छिद्य ततः पूर्व्वस्वामि भोग्याम् प्रकल्प्य

44. च [।*] तस्याश्शूद्रकृताख्यानव्यावृत्तिमु[प*]पाद्य च [२६*] तदेकीभूतचोமாசிகுறிச்சிरेकतां स

45. ह [।*] श्रीमंगलेन सम्पाद्य शुद्धमुमाकलेवरा ॥॥ [२७*] [1]तत् ग्रामन्वय पौरस्त्य ताम्रप

* 'மானம்பே' என்பது வட்டெழுத்தில் இல்லாமல் பல்லவர் காலத்திய தமிழ் எழுத்தாக ஏட்டில் இருப்பது கவனிக்கத்தக்கது.

1. तद् ग्रामद्वय என்று படிக்க

46. ट्ट प्रमाणयोः [।*] नाशदोषन्निराकर्तुन्तयोश्चैकत्वबुद्धये |||௨ [२८*] ऐक्येन ग्रा

## மூன்றும் ஏடு—முன்புறம்

47. मयोः कृत्वा सीमानं करिणीपदैः [।*] ताम्रपट्टप्रमाणञ्च कल्पयित्वाद्य दीयताम्
|||௨ [२९*] इ

48. त्येवं वानगोत्रे कृतजनन भवन्माय [1]सज्ञस्य कल्पेनल्पे बोधायनीये सम

49. धिगतिमतः पौत्रभावं गतेन [।*] [2]आन्मोभ्भूतेन भूमित्रिदशगणमनोज्ञस्य
नाराय

50. णस्य श्रौतस्मार्त्ताध्वगेन श्रितहरिचरणाम्भोरुहा केशवेन |||௨ [३०*] विज्ञापितो
बु

51. द्धिमताग्रहारे जातेन चोमाचिकुஞ्चि नाम्नि [।*] कृत्वा यथोक्तन्तददाद्विलिख्य
सत्ताम्र

52. पट्टेषु महीसुरेभ्यः |||௨ [३१*] अभवत् द्विजपुंगवोत्र कर्मण्यलमाज्ञापयिता नरे

53. न्द्रमन्त्री[।*] परमो हरिपाद[3]पन्मभाजामिळयानक इति श्रुताभिधानः |||௨ [३२*]
ध

54. र्माध्यक्षोभवदिह कृतो वेदशास्त्रान्तदर्शी प्रज्ञामेधा प्रथितयशसा

55. लब्धकात्यायनश्रीः [।*] सुब्रह्मण्यो बुधजनसुहृद्यस्य लक्ष्मीविभूत्यो

56. रिष्टन्धाम[4]न्प्रवरति पिता सोमपो दत्तभट्टः |||௨ [३३*]यं योगेश्वरभट्टमष्टधरणीदे

1. संज्ञस्य என்று படிக்.

2. आत्मोद्भू என்று படிக்க

3. पद्म என்று படிக்க

4. प्रभवति என்று படிக்க

57. वेश्वरभ्रातरम् विद्यावृत्तनिधिम् विदुर्गुणनिधेः पुत्रं गणस्वामिनः [।*] तत्पुत्रस्य मुखात्प्र

58. शस्तिरुदिता तीर्त्थस्य शास्त्रेष्वियम् यश्श्रीवल्लभमंगले वसतिमान् वाग्मी कविः माध

59. वः ॥ [३४*] एतं ग्रामं रक्षताम् भूपतीनाम् [1]चात्वारोत्थाः प्राणिभिः प्रात्थ्यर्यमानाः [।*] दीर्ग्घं का

60. लं वृद्धिमृच्छन्तु पृथ्वीन्धर्म्मो लक्ष्मीर्भोगशक्तिर्यशश्च ॥ [३५*] महाविला लित्यभिधाम् प

61. रुत्तिवयक्कलित्यप्यभिधान्दधानौ [।*] कूपौ तदर्द्धभागवनिश्च दत्ताः प्रशस्तिकृन्माधव

மூன்றும் ஏடு—பின்புறம்

62. भट्टनाम्ने ॥ [३६*] स्वस्ति श्री [॥*]कण्णन्कीरन्वयक्कत्च श्रीरुक्कुळवलालपि [।*] सोमयाजिवय्यक्कत्च कूपास्त

63. त् क्षेत्रसंयुताः ॥ [३७*] कर्त्रे प्रशस्तिशेषस्य प्रशस्तेर्लेखकाय च [।*] अविभक्तत

64. या दत्ताः द्वाभ्यामाभ्याममी त्रयः ॥ [३८*] अलिखदिदन्निरवद्यं राजनियोगादशेष

65. शिल्पीशः[।*]नक्कः कुन्दूर्प्रभवो नृपशेखरमुख्यकर्म्मारः॥ [३९*]नमश्शिवाय ॥

66. स्वस्ति श्री [।*] ஓங்குதிரை வியன்பரப்பில் उदधि ஆலயமாகத் தேங்கமழ் மலர்நெடுங்

67. கட் டிசை மகளிர் மெய்காப்ப விண்ணென் பெயரெய்திய மேகஞாலி விதானத்தின் ற

1. 'चत्वारोऽर्था:' என்று படிக்க
வரி 66—உததி

68. ண் ணிழற் கீழ் ஸஹஸ்ரफणमणि கிரணம் விளக்கிமைப்ப भुजगमपुरस्सरभोगि எ

69. ன்னும் பொங்கணை மீய்மிசைப் பயந்தரு தும்புரு நாரதர் பனுவனரப் பிசை

70. செவி உறப் பூதல மகளொடு பூமகள் पादस्पर्शனை செய்யக் கண்படுத்த கார் வண்ண

71. ன் றிண்படைமால் श्रीभूपति ஆதி புருஷன் அமரநாயகன் அழகமை नाभिमण्ड

72. லத்துச் சோதி மரகத துளைத் தாட் சுடர்பொற் றாமரை மலர்மிசை விளை

73. வுறு கூளமகனிஸ மென மிளிர்ந்திலங்கு சடைமுடிஒடளவியன்ற कमण्ड

74. லு வொடகூஷமாலைஒடு தோன்றின चतुर्भुजन् चतुर्वक्त्रन् चतुर्वेदि चतुर्द्वया

75. क्षन् மதுக்கமழ் மலர்க் கமல யோனி மனந்தந்த மாமுனி अत्रि அருமரபிற் பலகால

76. ந் தவஞ்செய்வுழி அவன் கண்ணி லிருள்பருகும் பெருஞ்சோதி इन्दुकिरणन् வெளிப்ப

77. ட்டனன் மற்றவற்கு மகனுகிய மணிநீள்முடிப் புதனுக்கு கற்றைச் செங்கதிர்க் க

78. டவுள் வழிவந்த கழல் வேந்தன் ஏந்தெழிற் றேள் இளனெரு நாளீசனது சாபமெய்

வரி 68 (1) ஸஹஸ்ர பணமணி (2) புஜங்கமபுரஸ்ஸரபோகி
" 70—பாதஸ்பர்ச
,, 71—(1) ஸ்ரீ பூபதி (2) புருஷன் (3) நாபி மண்ட
,, 73—(1) களமகனிச (2) கமண்ட
,, 74—(1) ஓ: (2) சதுர்ப்புஜன், சதுர்வக்த்ரன், சதுர்வேதி, சதுர்த்வயா
,, 75—(1) க்ஷந் (2) அத்ரி
,, 76—இந்து கிரணன்

79. தி பூந்தளவ மணிமுறுவற் பொன்னாகிய பொன்வயிற்றுள் போர்வேந்தர் தலைபணிப்ப வந்

80. து தோன்றிய புரூரவர்ப்பின் பார்வேந்த ரேனைப் பலரும் பார்காவல் பூண்டு [ய் *] த்தபின் திசை

81. யானையின் கும்ப கூடத் துலவிய செழுமகரக் குலம் விசைஒடு விண் மீ (ன்) னெடு போர்

82. மிக்கெழுந்த கடற்றிரைகள் சென்றுதன் சேவடிப்பணிய அன்று நின்ற ஒருவ

83. ன்பின் விஞ்சத்தின் விஜம்பணையும் பெறல் நஹுஷன் மதவிலாஸமும் வஞ்சத்தொழி

## நான்காம் ஏடு—முன்புறம்

84. ல் வாதாவி சீராவியு மஹோததிகளின் சுருங்காத பெருந்தன்மையும் ஸுகேது

85. ஸுதை ஸுந்தரதை யுமொருங்கு முன்னாள் மடிவத்த சிறுமேனி உயர்தவத் தோன் ம

86. டலவிழ் பூமலையத்து மாமுனி புரோசிதன்னாக கடல் கடைந் தமிர்து கொண்டுங் க

87. யலிணை வடவரைப் பொறித்தும் ஹரிஹயன தாரம்பூண்டு மவன்முடிஒடு வளை

88. உடைத்தும் விரிகடலை வேலின் மீட்டுப் தேவாஸுர ஞ் செரு வென்றும் அகத்திய

வரி 80. புரூர
,, 81. ம்ப
,, 83. (1) ஜ்ரும்ப (2) நஹுஷன் (3) மதவிலாஸ
,, 84. (1) மஹோததி (2) ஸுகேது
,, 85 (1) ஸு (2) ஸுந்தரதை
வரி 87. ஹரிஹயந
,, 88. தேவாஸுர

89. ஞெடு தமிழா[ய் * ] ந்தும் மிகத்திறனுடை வேந்தழித்துन्दशवदन ன் சார்பாகச் சந்துசெய்

90. துन्धार्त्तराष्ट्रர் படை முழுதுங் களத்தவிய भारत த்துப் பகடோட்டியும் மடைமி

91. குவேல் வானரध्वजன் वसुधा ப மகல்வித்தும् हरिश्चन्द्र ன்னகரழித்தவன் பரிश्चन्द ம்

92. பலகவர்ந்தும் நாற்கடலொரு பகலாடி நாற்கோடி பொன்னியதி நல்கி நூற்

93. கடலேக் கரை கண்டு நோன் பகடாயிரம் வழங்கியும் உரம் போந்த திண்டோள

94. ரைசுக சுரம் போகித் துறக்கமெய்தியும் பொன்னிமையப் பொருப்பதனில் க

95 ன்னிமையிற் கயலெழுதியும் பாயல்மீமிசை நிமிர்ந்து பல்லுண்

96. டி விருப்புற்றுங் காயல்பாய் கடல்போலக் குளம்பலவின் கரையுயரி

97. யும் மன்னெதிரா வகை வென்று தென் மதுராபுரஞ் செய்தும் அங்க தனி(ல்) லருந் தமிழ்

98. நற் சங்கம் இரீஇத் தமிழ்வளர்த்தும் ஆலங்கானத் தமர்வென்று ஞாலங் காவல் நன்

99. கெய்தியும் கடி ஞாறு கவினலங்கூர் களப்பாழர் குலங்களைந்தும் முடி சூடிய முர

100. ண் மன்னர் ஏனைப்பலரு முன்னிகந்தபின் இடையாறையும் எழில் வெண்பைக் குடி

வரி 89. ந்தசவதன
.. 90. (1) ந்தார்த்தராஷ்ட்ர (2) பாரத
.. 91. (1) த்வஜ (2) வஸுதா (3) ம் (4) ஹரிச்சந்த்ர (5) ச்சந்த

101. யிலும் வெல்கொடி எடுத்த குடைவேந்தன் றிருக்குலத்துக் கோமன்னர் பலர் க

102. ழிந்தபின் காடவனைக் கருவூரில் கால் கலங்கக் களிறுகைத்த கூடலர்கோன் ஶ்ரீபராந்த க

103. ன்குரைகழற் கோச் சடையற்குச் சேயாகி வெளிப்பட்ட செங்கண் மால் ஶ்ரீவல்லப ன்வே

104. ய் போலுந் தோளியர்கேள் வித்யாதரஹிரண்யகர்ப்பன் குண்ணூரி லமர் வென்றுங் குரைகடலீ

## நான்காம் ஏடு—பின்புறம்

105. ழங் கொண்டும் விண்ணுள வில்லவற்கு விழிஞத்து விடை குடுத்தும் காடவனைக் கடலா

106. ணூர்ப் பீடழியப் பின்னின்றுங் குடகுட்டுவர் குண சோழர் தென் கூபகர் வடபுலவர்

107. அடலழிந்து களஞ்சேர அமர்வல்லான் மகன் படத்தன் களிறென்று வண்குடந்தைக் கதிகாட்டி

108. யஸ்புரஶிலன் ஒளிறிலைவேல்உபாயபஹுலன் உம்பர்வான் உலகணைந்தபின் மற்றவற்

109. கு மகனாகிய கொற்றவனெங் கோ வரகுணன் பிள்ளை பிறைச் சடைக்கணிந்த பினாகபாணி

110. எம்பெருமானை உள்ளத்தி லினிதிருவி உலகங் காக்கின்ற நாளில் அரவரைச

111. ன் பல்லூழி ஆயிரமா யிருந்தலையால் பெரிதரிதின் பொறுக்கின்ற பெரும்பொறை மண்

வரி 102. ஸ்ரீபராந்த
,, 103. ஸ்ரீவல்லப
,, 104. வித்யாதர ஹிரண்ய கர்ப்பன்
,, 108. (1) ம்பரசி (2) உபாயபஹு
,, 109. வரகு

112. மகளைத் தன் தொடித்தோளில் லெளிது தாங்கிய தொண்டியர் கோன் துளக்கில்லி வ

113. டிப்படை மாரு भरण ன்திருமருகன் மயிலையர் கோன் பொத்தப்பிக் குலச்சோழ

114. ன் புகழ்தரு சிரி கண்டராசன் மத்தமாமலை வலவன் மணிமக ளக்கள நிம்மடி

115. திருவயிறு *கருவுர்யித்த श्री परान्तकमहाराஜன் விரைபரித் தேர் வீரநா

116. ரணன் முன்பிறந்த வேல் வேந்தனைச் செந்தாமரைமலர்ப் பழனச் செந்நிலந்

117. தைச் செருவென்றும் கொந்தார்பூம் பொழிற் குன்றையுங் குடகொங்கிலும்

118. பொக்கரணியுந் தென்மாயலுஞ் செழுவெண்கையும் பராந்தகத்து ஞ் சிலைச்செதி

119. ர்ந்த மன்மாயா மிகுத்தவர் वस्तुवाहन ங் கொண்டும் ஆறுபல தலை கண்டும்

120. அமராலயம் பலசெய்துஞ் செறுபடுவியன் கழனித் தென்விழிஞ நகர்கொண்

121. டுங் கொங்கினின்று தேனூரளவுங் குடகொங்கருடல் மடிய வெங்கதிர்வேல் வலங்கொ

122. ண்டும் வீரதுங்கனைக் குசைகொண்டும் எண்ணிறந்த பிரமதேயமும் ÷ எண்ணிந்த தேவ

* இங்கு எழுத்து முன் பின்னாக மாறியிருக்கிறது. கருவுயிர்த்த என்று படிக்கவேண்டும்.

வரி 113. பரண

,, 115. ஸ்ரீபராந்தகமஹா

,, 119. வஸ்துவாஹன

÷ எண்ணிறந்த என்று படிக்க

123. தானமும் எண்ணிறந்த தடாகங்களும் இரு நிலத்தி லியற்றுவித்தும் நின்றபெரு

124. ம் புகழாலுந் நிதிவழங்கு கொடையாலும் வென்றிப் போர்த் திருவாலும் வெல்வே

125. ந்தரில் மேம்பட்ட கதிரார்கடுஞ் சுடரிலே வேல் கலிப்பகை கண்டரோள் கண்டன் மதுரா

126 पुरपरमेश्वरन् मानिनिमकरकेतनन् தன் செங்கோல் யாண்டுநாற்பதின்மேல் மூன்

127. ருமூர் யாண்டில் பொன் சிறுகா மணிமாடப் புரந்தரனது நகர் போன்ற களக்குடி

128. நாடதனிற் படுங் களக்குடி வீற்றிருந்தருள ஆசிநா டதனிற்படும் பிரம

## ஐந்தாம் ஏடு—முன்புறம்

129. தேயம் கன்னிடக்கைத் தேசமலி திருமங்கலமிது பண்டு பெரு நல்லூர்ப்

130. படுவதனைப் பாங்கமைந்த குடிகளது காராண்மை மோ டெழுந்த முது கொம்பர்க்

131. கோடெழுந்து கிடந்ததனைக் கற்றறிந்தோர் திறல் பரவக் களப்பாழரைக் களைகட்

132. ட மற்றிரண்டோண் மாக்கடுங்கோன் மான [ம்] * பேர்த்தளிய கோன் ஒன்றுமொழிந் திரண்டோம்

133. பி ஒருமுத்தியுள்பட்டு நன்று நான்மறை பேணி அய் வேளிவி† நலம் படுத்து அறுதொழி

வரி 125. மதுரா
,, 126. புர பரமேச்வரன் மாநிநி மகரகேதனம்
†வேள்வி என்று படிக்க
* பேர்த்தருளிய என்று படிக்க,

134. ற்கள்* மேம்பட்ட மறைஓர் பந்நிருவர்க்குக் காராண்மை மீயாட்சி உள்ளடங்கக் கண்டமை

135. த்துச் செப்பேடு செய்து குடுத்தருளினன் றேர்வேந்த நின் குல முத[ல்*]வன் மைப்படுகண்

136. மடமகளிர் மதவேள் மனு ஸமாந ன் வழுவாத செங்கோ னடவி மண்மகட் கொரு கோவாகிக் க

137. ழூதூரில் ஸித்தி செய்த கடிக்கூட னகர்காவலன் சோமாசி குறுச்சியிது தொல்லே

138. மேற்படி கிடந்ததனை ஸோமபாநமநோஶுத்தரா கிய காடகஸ்ஸோமயாஜி யார்க்கு ஏ

139. கபோக மதுவாக எழிற் செப்பேட்டொடு குடுத்தனன் ஆகிய இவ்வூரி

140. ரண்டின் செப்பேடு மறக்கேட்டில் இழந்து போயின வென்றும் ஏதமில் சோ

141. மாசி குறுச்சிச் செழுந்தகைய நிலத்துப்படும் நிலத்தைக் கடற்றிரு

142. க்கைய் கிழவன் மதிதரு பெருநான் கெல்லே இட்டுக் கொண்டு மற்றதனை மதுர

143. தர நல்லூரென்று பேரிட்டுக் குடிநிலஞகைக் கொண்ட நில மது!வும் அவ

144. ன்குடி நிலஞைகைய் தவிர்ந்து தொண்டு சோமாசி குறிச்சி மேலே புரவேறப் பெறுதெ†

* அறு தொழிற்கண் என்று படிக்க
†பெறுவதெ—என்று படிக்க
வரி 136. ஸமான
,, 137 ஸித்தி
,, 138. (1) ஸோமபாநமநோ சுத்தரா (2) காடகஸ்ஸோமயாஜி (3) ஏ
,, 139. கபோக
,, 142. மதுர
,, 143. தர

145. ன்றும் சொல்லிய வூரிரண்டுந் தம்மி லெல்லை கலந்து கிடக்கு மாதலில் ஒன்ருகவு

146. டன் கூட்டிப் புரவெழுதிப் பிடி சூழ்ந்து நன்ருகிய शासन ஞ் செய்து நன்கருளவே

147. ண்டு மென்றும் வாச நாள் மலர் கமழ் பொழில்லாசி நாட்டு ள ग्रमा கிய கருவமைந்த கன

148. கமாளிகைத் திருமங்கல நகர்த் தோன்றல் சோமாசி குறிச்சி என்னும் காமர்வண் பதி

149. காவலன் வடிவமை வா न गोत्र த்து बौधायन கல்பத்துக் குடிவிளங்க வெளிப்ப

150. ட்டு गुण கணங்கட் கிடமாகி மறைநான்கின் றுறை போகிய மாயானம்பி பட்டற்கு

151. ச் சிறுவனுகிய பெருந்தகைஇன் திசைமுகன் வெளிப்பட் டனைஒன் धर्म्मवत्सलन् अ

152. धर्म्मकोपि மாயாநாராயண பட்டர் महापत्नि வயிறுயிர்த்த சேயான திருத்தகைஇன் श्री

### ஐந்தாம் ஏடு—பின்புறம்

153. नारायण ங்கே श வன் கல்விக்கடல் கரைகண்டும் क्षत्रि யானு மதமுணர்ந்து சொல்வித்தக

1 पत्नि என்று படிக்க
வரி 146. சாஸன
,, 147. க்ரமா
,, 149. (1) நகோத்ர (2) பௌதாயன
,, 150. குண
,, 151. (1) தர்மவத்ஸலன் (2) அ
,, 152. (1) தர்மகோபி (2) மஹாபத்நி (3) ஸ்ரீ
,, 153. (1) நாராயண (2) ச (3) க்ஷத்ரி

154. ந் தனதாக்கி ஶுத்தஶீலாசார ஞகி மீனவன் வீரநாரணற்கு விச்வாஸகர்ம ங்கட்கான

155. தன்மையனுதலில் லருளறிந்து *விண்ணப்பயஞ் செய மதுர (தர) தரநல்லூரெனும் வள

156. ம்பதி சோமாசி குறுச்சி அதன்மேலே புரவேற்றி ஆங்கதுந் திருமங்லமும் $

157. உடன்கூடப் பிடி சூழ்வித் துலகறியக் குடுத்தருளினன் வடங்கூடு முலேமக

158. ளிர் மன்மதவேள் மனுசரிதன் ॥உ மற்றிதனுக் காணத்தி வண்டமிழ்க் கோ னதிகாரி

159. பொற் றடம்பூண் மணிமார்பன் பொழிற் புல்லூரெழிற் பூஸுரன் செய்யுந்து புன

160. ற் செறுவின் செங்கழு நீர் மல(ர்)படுகர் வைய்குந்த வளநாடன் வாத்ஸகோத்ரசூடா

161. மணி ஹரி சரண கமல சேகரன் ஆயிரத்தஞ் ஞூற்றுவன் திருமகிழிளேயானக்கன்

162. திசை நிறை பெரும் புகழாளன் புவனதலம் புகழு நிதி அவனி ஸு ர குல திலகன் தா தலர்

163. பூம்பொழி றமுவிச் சாலிவிளே வயவளத்தால் மேதகு புகழ் வேண்புஞா

* விண்ணப்பஞ் செய என்று படிக்க

$ மங்கலமும் என்பதில் க விடுபட்டிருக்கிறது. மங்கலமும் என்று படிக்க

வரி 154. (1) சுத்த சிலாசார (2) விச்வாஸகர்ம

,, 159. பூஸுர

,, 160. வாத்ஸகோத்ரசூடா

,, 162. 'ஸு'

164. ட்டு பெருந் தூவெள்ளி எனப் பெயரிய திருந்துபதிக் குடித்தலைவன் தெ

165. ன்னவன் திருவருள்சூடிய பெருந்தூ வெள்ளி கிழவனாகிய பெருந்தகை

166. சேந்தங் கிழவன் நலமலிசீர் நடுவுநிலை நன்கு நாயகனாகவும் அலர்

167. கமழுட் †பொனலளற்று நாட்டுக் கக்கிரமாகிய முகிரூய் பொழில் முசுக் குறு

168. ச்சி முற்குடிப் பினோர் *கார்முளைய் அகனிலத்தோர் புகழளற்று நாட்டுக் கோன் னருந்

169. தமிழின் பாத் தொகு பொருள் பயனுணர்வோன் கொடை பயில் கற்பக சீலன் சாத்தம் படாரனெ

170. னப் பியரிய தக்கோன் மிக்கோங்கு கார் வயல் சூழ் களாத் திருகைப் பேரரண் சூழ் பெ

171. ரும் காக்கூர்த்தலை ஆகிய குலக் குருசில் தகுதேய மாணிக்கம் கலைபயில் கிழவங்

172. கோனும் கணக்குநூல் பயில் கணக்கராகவும் மாசில்வான் குடித் தோன்றிய ஆசி நாட்டு நா

173. ட்டாரும் மச்சுறுவளமணவி வேந்தநேச்சுர நாட்டு நாட்டாரும் உடனாகி நின்றெல்லை

174. காட்டப் பிடி சூழ்ந்த பெருநான்கெல்லை ॥உ கீழெல்லை புனல் புவனிபுத்தேள் மாருதம்

175. கனல் இருசுடர் யஜமானன் ஆகிய திறல ஶமூர்த்தி அமரர்க்கு மறிவரிஒன் வே

† புனலளற்று என்று படிக்க
* கான்முளை என்று படிக்க
வரி 175. ஷ்டமூர்த்தி

176. க வெள் விடை ஊர்தி विषमलोचनन् * மகுழ்ந் துறையும் வாழியவான் திருவிருப்

## ஆறும் ஏடு— முன்புறம்

177. பூர் மூழி நின்று தென்கிழக்கு நோக்கிப் போயின வெள்ளாற்றுக்கும் ஆயின பெ

178. ரு நல்லூரார்ச் சிறைக்கும் வன்கள்ளி முரப்புக்கும் வண்ணத்தார் வளாகத்தி

179. ன் நன்குயர் பரம்பீட்டுக்கும் நலமிகு கள்ளிக் குறுச்சி மேலைக் கள்

180. ளி முரம்புக்கும் மேதகு நடையாட்டி குளத்தில் சால நீர் கோளுக்கும் இக்கு

181. ளத்தின் தென் கொம்பின் மறுவாக்கும் பாங்கமைபடு பாறைக்கும் பயந்தருகுடி

182. நடை ஏரி ஓங்கியவன் குளத்தகம் பால்லொழுகிய வன் பெருப்புக்கும் இப்

183. பெருப்பை ஊடறுத்துச் செப்படு †செழுங் கிழக்கு நோக்கி வாரிக் கொள்ளி

184. க் கேய் போயின வழியதற்கும் வயல் மலிந்த வாரிக்கொள்ளிக் குளத்தினீர்

185. கோளுக்கும் அடிகுழிக்கும் மேக்கும் $ தென்னெல்லை திருமரு

186. நிலப் பாறைக்கும் செஞ்சாலி விளைகழனி ஏரியநதை வடக

வரி 176. விஷமலோசனன்

* மகிழ்ந்து என்று படிக்க

† செப்பிடு என்று படிக்க

$ மேற்கும் என்று படிக்க

187. டைக் கொம்பிற்குப் ஒழுகுகள்ளி முரப்புக்கும் நீருடை

188. அளவைச் சுனைக்குப் ஊருடையான் குழித்தென் கடைக் கொ

189. ம்புக்கும் நெடுமணிற் கற்றூழ்வுக்குப் நீர்மாற்றுத்தி

190. டலுக்கும் கடிகமழ் பூந்தார்க் கணத்தார் குழிக்கும் வடக்கு மே

191. லெல்லை கூற்றன் குழி மீய் குழியேய் போயின படுகாலுக்கும் பொற்

192. றருமாறுத்த மாணி[க்]குளத்துக் கரை பெருப்புக்கும் நாடறி நங்

193. கையார் குழியின் மீய் குழியேய் காடனேரிக்கேய் போயின வழிக்

194. கு மேதமில் லெறிச்சில் வழிக்கும் எழிலமை நேச்சுறநாட் டோலை

195. க் குளத் தெல்லைக்கும் கிழக்குமன் வடவெல்லை வளமிக்க மருத வே

196. லி இள நேச்சுறத் தெல்லைக்கும் வெள்ளாற்றுக்குப் தெற்கும் இ

### ஆறாம் ஏடு—பின்புறம்

197. வ்விசைத்த பெருநான் கெல்லை உண்ணில மொன்றொழியாமல் காராண்மை

198. *மீயாள்சி உள்ளடங்கக் கண்டமைத்துச் சீர்சான்ற திசையனைத்தி

199. ன்னெல்லைவாய்க் கன்னட்டித் தருமங்களிரொன்று பயில் திருமங்கலத்

200. துச் சவையார்க்கும் தொல்லை வண் சோமாசிக் குறுச்சி மல்லன்மா மறையோர்

201. க்கும் 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌦𑍇𑌯𑌸𑍍𑌥𑌿𑌤𑌿 வழாவகைய் 𑌪𑍍𑌰𑌤𑌿 வியின் கண்ணிலே பெறுத்து 𑌧

202. ர்மகர்ம பராயணனாகிய 𑌨𑌰𑌾𑌪𑌤𑌿 கொடுத்தருளியபின் ஈண்டிய பெரும்

* மீயாட்சி என்று படிக்க
வரி 201. (1) ப்ரஹ்மதேயஸ்திதி (2) ப்ரதி (3) த
,, 202. (1) ர்மகர்ம (2) நராபதி

203. புகழேடுறுशाण्डिल्यगोத்திரத்து ஏத்தார் புகழ் ஏக सन्धिकात्यायन

204. சூத்திரத்து வரிவண்டு மது நுகர் பொழிற்சிரி वल्लभ மங்கல

205. த்து செப்பரிய செழுஞ் செல்வத்துப் பம்பிரால் மேதக்க சு

206. ஊ பயில் गणस्वामिभट्ट ற்குற்ற பெருமாமதலை உலவு சீர்த்தி

207. योगेश्वरभट्टற்கு விசிஷ்ஞகிய திருவடிச் சோமாசி

208. யென்னுஞ் சீர் மறையோன் மகள் பயந்த திருமரு சீர்ச்சிரி

209. माधवन् श्रीमाधवचरणशेखरन् वेदवेदान्तங்களும் விவி

210. धशास्त्रமும் தன்ஞெடு பிறரோதிக் கேட்டுணர்வெய்தஉரைக்கு माचार्यஞ

211. கி பெருந்தகைய் பிரமதேய மிதற்கு प्रशस्ति செய்தோற்கு திருந்திய ந

212. ன் பெருவளாலும் செழும்புனற் பருத்தி வயக்கலும் இவ்வயல் களிக்†

213. கிணறிரண்டும் அக்கிணற்ருல் விளை நிலனும் மற்றவ்வூர் மாசஸவஓர் $

214. பெற்ற பரிசேய் கொடுத்தபின் சீரிய செழும்பணி இதற்குச் செப்பேடு வாச

215. கத்தை ஆரியம் விராய்த் தமிழ் தொடுத்த மதிஓற்கும் அது எழுதிய கற்

† களிற் எனப்படிக்க
$ மாசவையோர் என்று படிக்க
வரி 203. (1) சாண்டில்யகோ (2) ஸந்தி (3) த்யா
" 204. (1) ஸூ (2) வல்லப
" 206. கணஸ்வாமி பட்ட
" 207. (1) யோகேச்வரபட்ட (2) ஷ்ட
" 209. மாதவன் ஸ்ரீ மாதவ சரணசேகரன் வேதவேதாந்த
,, 210. (1) தசாஸ்த்ர (2) மாசார்ய
,, 211. ப்ரசஸ்தி

216. பமைந்த கரதலத்துச் சிறப *மாத்தாண்டற் (க்)கும் மண்ணெங்குந் நிறைந்த வான்

## ஏழாம் ஏடு—முன்புறம்

217. புகழ் கண்ணங்கிரன் வயக்கல் திருமிகு நற்சிறுக் குளவளால் மருவிய சோ

218. மாசிவயக்கல் லென்னும் வயல் களிற் கிணறுகள் $ ளொரு மூன்றும் எக்காலமும் மன்

219. னுக் கிணற்ருல் விளைவயலனைத்தும் இறையிலியாகவும் சொல்லிய இக்கி

220. ணறு மூன்றின்னிடைக் கிடந்த தொன்னில முழுவதும் இல்ல வளாலதுவாகவும் எழி

221. ன்மிக்க தோட்ட மாகவும் வல்லெருமை வெருவு மீன்கள் விராலு கள் புனற்பதி இ

222. தனிற் கொல்லுரிமையிற் செம்பாகமும் महासभ குறிப்பேடு கொடுத்துப் பக

223. ல் செய்யும் பருதி ஞாயிறும் இரவுச் செய்யும் பனிமதிஉம் அகல் ஞாலமும்

224. உளவளவும் செப்பேடு செய்து கொடுத்தருளினன் மணிநீழ் முடி * மன்பணிகழல்

225. वसुधाधिपवासुदेवन् அணி நீள் வுயத் த हिताग्नि அசலாசலன் अनवर्ज्यन् கொந்த

226. லர் தார் கோச் சடையன் கூடர் * கோன் குருசரிதன் செந்தமிழ்க் கோன் श्रीनिके

* மார்த்தாண்டற்கும் என்று படிக்க
$ கிணறுகளொருமூன்றும்—என்று படிக்க
* நீள்முடி என்று படிக்க
* கூடற்கோன் என்று வாசிக்க
வரி 222. மஹா ஸபை
" 225. (1) வஸுதாதிப வாஸுதேவன் (2) ஹிதாக்னி (3) அனவர்ஜ்யன்
" 226. ஸ்ரீநிகே

227. तनन् श्रीपरान्तकमहाराजन् ॥।ௐ प्रशस्तिशेषकृत्पाण्ड्यद्रमिळाभ

228. रण: कवि: [।*] कर्मारश्रेणिकामुख्य: शिवपादाम्बुजाश्रित: ॥।ௐ தேர்மி

229. கு மாக்கடற் குனைத் தென்னவர் கோன்றிரு வருளாற் சிர்மிகு செப்பேட்டு

230. க்குச் செந்தமிழ்ப் பாத் தொடை செய்தோன் அத்புத மெனும் பாழிக்க

231. ள்* அவிர் சடைமுடி அரன் வேண்ட நற் பரசு நிர்மி த்துவைவ விர் சடைமேலலங்கல் பெற்ற

232. மாமுனி மநுவழி வந்தோன் பாமருபண்டித दासन् பொன்வரன்றி மணிவரன்றி அகி

233. ல் வரன்றிக் கரைபொரு புனற் றென் வைய்கை வளநாடன் செழுங் குண்டூர் நகர்த்தோன்றல் பாண்டித்

234. தமிழாபரண னென்னும் பலசிறப்புப் பெயரெய்திய பாண்டியரா யப் பெருங்கொ

235. ல்லனுகிய சிரீவல்லவன் ॥।ௐ தென்னவர்தந் திறலாணைச் சிலைஒடு புலிகயலி

236. ணைமன் பொன்னிமையச் சிமையத்து விறற் கருவிஇற் போக்குந் தொழில்செய்து வந்

237. தவர்பின்னேன் செயல்பல பயின்றோர் முன்னேன் திருமலி शासन मिதற்குச் செ

238. ழுந் தமிழ் பாடினேன் தாதை நிருபசேகரப் பெருங் கொல்லன் நிறை புகழ் நக்கனெழுத் திவை ॥।ௐ

* ள் என்பது ண் என்று இருந்தால் பொருந்தும்

வரி 227. (1) தனன் ஸ்ரீ பராந்தக மஹாராஜன்
(2) ப்ரசஸ்திசேஷக்ருத் பாண்ட்யத்ரமிளாப

" 228. ரண: கவி. (1) கர்மாரச்ரேணிசாமுக்ய: சிவபாதாம்புஜாச்ரித: (11)

,, 230. அத்புத

" 231. நிர்மி

,, 232. தாஸன்

# தளவாய்புரச் சாசனம்

## சம்ஸ்கிருதப் பகுதியின்

# மொழிபெயர்ப்பு

மங்களம் உண்டாகட்டும்.

**சுலோகம்—1**

எவனுடைய தோற்றம் உலகநாதனாகிய திருமகள் கேள்வனிடமிருந்து உண்டாகியதோ, எவனுக்குத் தேவர் அசுரர் கடல்கள் இவர்களை உள்ளிட்ட ஏழுலகங்களும் படைப்புப் பொருள்களோ, எவனுடைய சிறு முக மலர்ச்சியும் இந்திர பதவி (சசீபதித்துவம்) முதலிய பலன்களை அளிக்கக் கூடியதோ, அந்தக் கமலபவனன் (பிரமன்) உங்களுக்குச் செல்வத்தை அளிப்பவனாகுக.

**சுலோகம்—2**

பிரத்யக்ஷம், அநுமானம், உபமானம், சப்தம் என்னும் பிரமாணங்களுக்கு (அறிவுத்திறன்களுக்கு) எட்டாத உருவ உண்மையை உடையதும், வேதாந்தங்களால் (உபநிஷத்துகளால்) அறியப்பட்டதும், அடி இடை முடி இல்லாததுமான மஹாவிஷ்ணுவினுடைய சோதியானது உங்களுடைய அமங்கலங்களை அகற்றுவதாகுக.

**சுலோகம்—3**

அசையாத மூச்சுக்காற்றையுடையதும், அசையாமற் செய்யப்பட்ட சூரிய சந்திரர்களை யுடையதும், நகர முடியாத நக்ஷத்திரங்களை உடையதும், அசைவில்லாத (நதிகளின் பதியான) கடலையுடையதும், ஆத்ம ஸாக்ஷாத்காரஞ் செய்வதற்காக உட்புறந் திருப்பிய கண்கள் கூட்டத்தை (மூன்று கண்களையும் மற்றப் புலன்களையும்) உடையதுமான சிவபெருமானின் யோகாஸனம் உங்களுக்கு மங்களங்களை அளிப்பதாகுக.

ஸ்லோகம்—4

நன்மை தீமைகளுக்குத் தாய் தந்தையரின் பேச்சுகள் போல் பிரமாணங்களாக உள்ளவைகளும், பாவத்தைப் போக்குபவைகளுமான வேதங்களை நான்கு முகங்களாலும் உச்சரித்தவாறே பிரமதேவன் நாராயணனுடைய உந்திக்கமலத்திலிருந்து தோன்றினன்.

ஸ்லோகம்—5

அசை பொருள்கள் அசையாப் பொருள்கள் ஆகிய எல்லாவற்றையும் வாழவைப்பதற்கும் அழிப்பதற்கும் வல்லமை கொண்டவரும், தவம் செய்வதையே குறிக்கோளாகக் கொண்டவருமான அத்திரியைப் பிரமன் படைத்தான். அத்திரி மூவுலகுக்கும் இன்பத்தையளிக்கும் ஓஷதித் தலைவனை ஜோதியை (சந்திரனை)த் தம் கண்களிலிருந்து படைத்தார்.

ஸ்லோகம்—6

அமிர்த கிரணங்களையுடைய அந்தச் சந்திரனிடமிருந்து, பெரியோர்களால் கௌரவிக்கப்பட்டதும் மநுவால் வகுக்கப்பட்டதுமான ஆசாரங்களை நிரப்ப அநுஷ்டிப்பதும், ஒளியின் வளர்ச்சியால் சூரியனையும், தெளிவினல் சந்திரனையும், ஞானத்தின் ஏற்றத்தால் பிருகஸ்பதியையும் தாழ்த்திக்கொண்டதுமான பாண்டிய மன்னர்களின் குலம் தோன்றியது.

ஸ்லோகம்—7

தன் உடலால் மூவுலகின் வாயிலை (ஆகாயத்தை) அடைக்கின்ற விந்திய மலையைத் தன் முன் பாதங்களை வைத்து ஒரே இடத்தில் நிலைத்திருக்கும் மலையாகச் செய்தவரும், தேவேந்திரனை (நகுஷனை) ஊர்ந்து செல்லும் பிராணியாக (பாம்பாக)ச் செய்தவரும், கடலை நீர்த்துளியாகச் செய்தவரும், முனிவர் கூட்டத்தின் தலைவருமான குடமுனி (அகத்தியர்) எந்தக் குலத்திற்குப் புரோகிதரோ;

ஸ்லோகம்—8

சுத்தமாக இருப்பதும், செல்வத்தைச் சேர்த்து வைத்ததும், தமோ குணமற்றதும் இதமாயுமுள்ள புத்தியைப் பெற்றதுமான எந்தப் (பாண்டிய) குலத்தாலே சமநோக்குடன் கௌரவிக்கப்பட்ட பூமியானது, மனைவியைக் காட்டிலும் மிக்க ஆசையுள்ளதாகச் செய்யப்பட்டதோ;

**சுலோகம்—9**

ஊழி முடிவில் உலகங்களனைத்தையும் விழுங்கும் கடலினுடைய, தடுத்தற்கரிய எழுச்சியையுடைய, நீரானது, எந்தக் குலத்தில் பிறந்து நிலை கொண்ட மன்னனுடைய அடிமலர்களைக் கடத்தற்கும் போதியதாக இல்லையோ;

**சுலோகம்—10**

(தம் முன்னோரான) சந்திரனைப் படைத்த சார்ங்கபாணியால் (விஷ்ணுவினால்) மதிக்கப்பட்ட குற்றேவல் முதலியவைகளைச் செய்வதாலும், அரசர் தலைகளில் உடைத்தபின் மிகுந்த வளையை இந்திரன் முடியில் உடைத்தமையாலும், வஜ்ராயுதனை (இந்திரனை)யும் வெற்றி கொண்ட அரக்கர் கோனால் (இராவணனால்) சமாதானம் செய்துகொள்ளும்படி வேண்டிக்கொள்ளப்பட்டமையாலும் எல்லா மன்னர்களும் வணங்கத்தக்க அரசர்கள் எந்தக் குலத்திற்கு அலங்காரமாக இருந்தனரோ;

**சுலோகம்—11**

எந்தக் குலத்து மன்னன் தினந்தோறும் காலையில் அக்கினியில் ஹோமம் செய்து, (பிறகு) குருநாட்டவரது போரில் துரியோதனனின் படையால் (படையை அழித்தலால்) கூற்றுவனின் மனத்தை மகிழ்வித்துத் தன்னுடைய நகருக்குத் திரும்பி வந்து, மாலையிலும் தன் ஹோமத்தைச் செய்தானோ;

**சுலோகம்—12**

எந்தக் குலத்தில் பிறந்தவன், அதர்வ வேத முறைப்படி தன் தந்தையால் (அல்லது குருவால்) அன்புடன் அபிஷேகம் செய்யப்பெற்ற தன் தலையைத் தானே வெட்டிக்கொண்டு கபந்தக் (தலையில்லா முண்டக்) கூட்டத்தை அடங்கச் செய்தானோ;

(சிலேடையால்: தேக பந்தமாகிற வலையை விலக்கிக்கொண்டானோ)

**சுலோகம்—13**

அக்குலத்தில் பிறந்த சுந்தரன் முதலிய அரசர்கள் பலர் தம் கடமைகளை அனுஷ்டிப்பதன் மூலம் அமரநிலையை அடைந்த பிறகு, பராந்தகனிடமிருந்து மாறன் என்ற பெயருள்ள மன்னன் ஒருவன் தோன்றினான்.

**சுலோகம்—14**

திருவுக்கு இருப்பிடமான அவ்வரசன், போரில் அடக்குதற்கரிய கேரள தேசத்து அரசனையும், தேவனையும் (தன்) படையினுல் விரைவில் வென்று, அவர்களுடைய பொக்கிஷங்களாலே நல்லோர்களைப் பெரு மகிழ்ச்சி எய்தப்பெற்றவர்களாகச் செய்தான்.

**சுலோகம்—15**

இழிகுணம் படைத்தவர்களையும் நற்காரியங்களால் "வரகுணன்" என்ற பெயரைத் தாங்கும்படிச் செய்கிறவனும், அரசர் தலைவனுமான வர குணன் இவனிடமிருந்து (மாறவர்மனிடமிருந்து) தோன்றினுன்.

**சுலோகம்—16**

அவனுடைய தம்பி, எதிரிகளாகிய விறகுக்கு நெருப்புப் போன்ற ஸ்ரீ வீரநாராயணன் என்பவன். நண்பர்களாகிய ஆம்பல் மலர்களுக்குச் சந்திரனைப் போன்றவனுன அவன், கடலை மேகலையாகக் கொண்ட பூமிக்குக் கணவனுக இருந்தான்.

**சுலோகம் 17**

கடலிலிருந்து மலர்மகள் தோன்றியது போலச் சோழ வம்சத்திற்குத் தீபம் போன்ற ஸ்ரீகண்டன் என்பவனிடமிருந்து தோன்றிய அக்களநிம்மடி என்ற பெயரால் புகழ்பெற்றவளால் எவன் பெற்றெடுக்கப்பட்டவனே;

**சுலோகம்—18**

கல்வியின் கரைகண்டவர்களும், விநயத்துடன் கூடிய மனமுள்ளவர் களும், நன்னடத்தை, புகழ் இவைகளை உடையவர்களும், அந்தணச் சிரேஷ் டரென்ற நிலையை அடைந்தவர்களும், வேதம் ஓதுவித்தல், விளக்கம் தரு தல் இவைகளில் ஊன்றிய மனமுள்ளவர்களுமான அந்தணர்களுக்கு எந்த அரசன் பாண்டியர்களுக்குத் திலகம் போன்றதும், இணையற்ற செல் வத்துடன் விளங்குவதுமான ஸ்ரீவல்லபமங்கலமென்ற சிறந்த கிராமத்தைச் சாசுவதமாக அளித்தானே;

**சுலோகம்—19**

(எந்தஅரசன்) தஸ்யுக்களை (கொள்ளைக்காரர்களை) அழித்து அநேக போக்கியங்களாகவும் ஏகபோக்கியங்களாகவும் இருந்த இத்தகைய உயர்ந்த கிராமங்களை அந்தணர்களுக்காகவும், நாராயணன், சிவபெருமான் இவர்களின் பூஜைகளுக்காகவும் அளித்தானே;

**சுலோகம்—20**

மிகவும் உக்கிரமான (தன்) பிரதாபத்தின்மூலம் வணங்கிய மன்னர் களிடமிருந்து பெற்றுக்கொண்ட அதிகமான கப்பங்களால் நிரப்பப்பட்ட பொக்கிஷத்தை உடையவனுன எந்த அரசனுல் (தன்) குருமார்களுக்காக ஏற்படுத்திய கிராமங்களால் தரப்படவேண்டிய வரியானது குறைக்கப் பட்டதோ; (அந்த அரசனுல்)

**சுலோகம்—21**

நான்கு பத்து ஆண்டுகளும், ஒன்றுடன் கூடிய மூன்று ஆண்டுகளும் கழிந்த பிறகு அதற்கடுத்த ஆண்டில் (அதாவது நாற்பத்தைந்தாவது ஆண் டில்) மன்னர்பிரான் கரவந்தபுரத்தில் தங்கியபொழுது;

**சுலோகம் 22**

ஆசி நாடு என்று புகழ்பெற்ற நாட்டில் செல்வம் மிகுந்த ஸ்ரீமங்கலம் என்ற கிராமம் பன்னிருவர் அந்தணர்களுக்கு அளிக்கப்பட்டது.

**சுலோகம் 23**

"மானம் பேர்த்த கடுங்கோன்" என்ற பெயரை அடைந்தவனும், தேவலோகத்ததிபனுன இந்திரன் போன்று செல்வம் படைத்தவனுமான தேவதேவனின் தந்தையால் (குருவால்);

**சுலோகம் 24**

தெய்வலோகம் சென்ற உன்னுடைய தந்தையால் கழுதூர் நிவாஸத் திலிருந்து காடகஸோமயாஜி என்று பொருத்தமான பெயரையுடைய பண்டிதச் சிரேஷ்டனுக்கு மற்றொரு கிராமம் அளிக்கப்பட்டது.

**சுலோகம்—25**

அது சோமாசிக்குறிச்சி என்று புகழ்பெற்றது. அதன் ஒரு பகுதி மதுர ஸ்தான ஸத்கிராமம் என்ற பெயருடன் சூத்திரர்களால் ஆக்ரமிக்கப்பட்டது.

**சுலோகம்—26**

அதை அவர்களிடமிருந்து பறித்து முன் அனுபவித்த எஜமானர்களுக்கு அனுபவிக்கத் தக்கதாகச் செய்து, (அவர்கள் வைத்த) அதன் பெயரை மாற்றி,

**சுலோகம்—27**

சுத்த புஸ்தகத்தில் எழுதுவதன் மூலம் ஸ்ரீமங்கலத்தையும் சோமாசிக்குறிச்சியையும் ஒன்று சேர்த்து,

**சுலோகம்—28**

அந்த இரண்டு கிராமங்களுக்கான முந்திய தாமிர சாசனப் பிரமாணத்தை அழித்த தோஷத்தை நீக்குவதற்கும் அவ்விரண்டையும் ஒன்று சேர்ப்பதற்கும்

**சுலோகம்—29**

அவ்விரண்டு கிராமங்களையும் ஒன்று சேர்த்து, பெண் யானை அடிகளால் எல்லை வகுத்து (பிடி சூழ்ந்து), தாமிர சாசனப் பிரமாணத்தையும் ஏற்படுத்தி இன்று தரப்படட்டும்.

**சுலோகம்—30**

மேற்கண்டவாறு வாநகோத்திரத்தில் பிறந்தவனும், மகத்தான போதாயனீயகல்பத்தில் நன்கு தேர்ச்சிபெற்ற ஞானமுள்ளவனுமான பவன்மாயன் என்பவனுடைய பெயரனும், பூதேவர் குழாத்தின் அன்பனான நாராயணனுடைய மகனும், சிரௌத ஸ்மார்த்த மார்க்கத்தைப் பின்பற்றியவனும், விஷ்ணுவின் திருவடிக்கமலங்களை அடைந்தவனுமான கேசவனால்,

**சுலோகம்—31**

சோமாசிக்குறிச்சி யென்ற அக்கிரகாரத்தில் பிறந்தவனும், அறிஞனு மான (அவனுல்) விண்ணப்பிக்கப்பட்டவனுய், அதைத் தாமிரப் பட்டயத் தில் எழுதி சாஸ்திர முறைப்படி அதை அந்தணர்களுக்கு அளித்தான்.

**சுலோகம்—32**

இநத (தான)க் காரியத்தில் அரசனின் மந்திரியும், விஷ்ணுபக்தர்களில் சிறந்தவனுமான இளையானக்கன் என்று புகழ்பெற்ற அந்தணச் சிரேஷ் டன் ஆணத்தியாவன்.

**சுலோகம்—33**

வேத சாஸ்திரங்களின் கரைகண்டவனும், கல்வியாலும் மேதையா லும் எங்கும் பரவிய புகழாலும் காத்யாயனரை ஒத்தவனும், பண்டிதர் களுக்கு அன்பனும், சோமபானம் செய்தவனும், திருவுக்கும் செல்வத்திற் கும் இருப்பிடமானவனுமான தத்த பட்டனின் மகன் சுப்பிரமணியன் என்ப வன் இதில் தர்மாத்யக்ஷன் ஆவான்.

**சுலோகம்—34**

அஷ்டதரணீ தேவேச்வரன் என்பவரின் சகோதரனுன எந்த யோகே ச்வர பட்டனைக் கல்வி ஒழுக்கங்களுக்கு நிதியென்று அறிகின்றனரோ, குணங்களுக்கு இருப்பிடமான கணஸ்வாமியின் மகனுக அறிகின்றனரோ, அவனுடைய மகனும் சாஸ்திரங்களிலே தேர்ச்சி பெற்றவனும், ஸ்ரீவல்லப மங்கலத்தில் வசிப்பவனும், வாக்காளனுமான மாதவகவியின் வாக்கி லிருந்து இப்பிரசஸ்தி தோன்றியது.

**சுலோகம்—35**

இந்தக் கிராமத்தைக் காக்கும் அரசர்களுக்கு (அரசர்களுடைய) மக்க ளால் வேண்டிக்கொள்ளப்பட்ட நான்கு பொருள்களான தர்மம், அர்த்தம், காமம், மோட்சம் என்றவை பெரும் வளர்ச்சியை அடையட்டும்.

**சுலோகம்—36**

மஹாவிளால் என்ற பெயரையும், பருத்தி வயக்கல் என்ற பெயரையும் தாங்கிய கிணறுகளும் அவற்றின் நீர்ப்பாய்ச்சலே யளவாகக்கொண்ட பூமி யும் பிரசஸ்தியைச் செய்த மாதவ பட்டன் என்பவனுக்கு அளிக்கப்பட்டன.

மங்களம் உண்டாகட்டும்.

**சுலோகம் 37**

கண்ணங்கீரன் வயக்கல், சிறுக்குளவளால் சோமயாஜி வயக்கல் என்ற பூமியைச் சேர்ந்த கிணறுகளும் இதில் சேர்ந்தவை.

**சுலோகம் 38**

பிரசஸ்தி சேஷத்தை இயற்றியவனுக்கும், பிரசஸ்தியை எழுதியவனுக் கும் இவ்விருவர்க்கும் இவை மூன்றும் பிரிக்காமல் அளிக்கப்பட்டன.

**சுலோகம் 39**

குற்றமற்ற இதைச் (இச்சாசனத்தை) சகல சிற்பிகளுக்குத் தலைவனும் குண்டூரில் பிறந்தவனும், அரசனின் முக்கிய கருமானுமான நக்கன் எழுதினன்.

சிவபெருமானுக்கு நமஸ்காரம்.

(சாசன முடிவில்)

பாண்டிய த்ரமிடர்களுக்கு அலங்காரமானவனும், கருமார் கூட்டத் தில் முக்கியனும், சிவபாதத் தாமரையைத் தியானிப்பவனுமான கவி இந்தப் பிரசஸ்தி சேஷத்தை இயற்றினன்.

# தளவாய்புரச் சாசனம்

## தமிழ்ப் பகுதியின்

# செய்யுளுருவம்

ஒங்குதிரை வியன்பரப்பில் உததிஆ லயமாகத்
தேங்கமழ் மலர்நெடுங் கட் டிசைமகளிர் மெய்காப்ப
விண்ணென் பெயரெய்திய மேகஞாலி விதானத்தின்
தண்ணிழற்கீழ் ஸகஸ்ரபண மணிகிரணம் விளக்கிமைப்ப
புஜங்கம புரஸ்ஸர போகிஎன்னும் பொங்கணை
மீமிசைப் பயந்தரு துப்புரு நாரதர்
பனுவ னரப்பிசை செவியுறப் பூதல
மகளொடு பூமகள் பாதஸ்பரி சனைசெய்யக்
கண்படுத்த கார்வண்ணன் திண்படைமால் ஸ்ரீபூபதி
ஆதிபுருஷன் அமரநாயகன் அழகமைநாபி மண்டலத்துச்
சோதிமரகத துளைத்தாட் சுடர்பொற் ருமரைமலர்மிசை
விளைவுறு களம கணிசமென மிளிர்ந்திலங்கு
சடைமுடியொ டளவியன்ற கமண்டலுவொ டக்ஷமாலையொடு தோன்றின
சதுர்ப்புஜன் சதுர்வக்த்ரன் சதுர்வேதி சதுர்த்வயாக்ஷன்
மதுகமழ்மலர்க் கமலயோனி மனந்தந்த மாமுனிஅத்ரி
அருமரபிற் பலகாலந் தவஞ்செய்வுழி அவன்கண்ணில்
இருள்பருகும் பெருஞ்சோதி இந்துகிரணன் வெளிப்பட்டனன்
மற்றவற்கு மகனுகிய மணிநீள்முடிப் புதனுக்குக்
கற்றைச்செங் கதிர்க்கடவுள் வழிவந்த கழல்வேந்தன்
ஏந்தெழிற்ருேள் இளனெருநா ளீசனது சாபமெய்திப்
பூந்தளவ மணிமுறுவற் பொன்னுகிய பொன்வயிற்றுள்
போர்வேந்தர் தலைபணிப்ப வந்துதோன்றிய புரூரவற்பின்
பார்வேந்த ரேனைப்பலரும் பார்காவல் பூண்டுய்த்தபின்
திசையானையின் கும்பகூடத் துலவியசெழு மகரக்குலம்
விசையொடு விண்மீனெடு போர்மிக்கெழுந்த கடற்றிரைகள்
சென்றுதன் சேவடிப்பணிய அன்றுநின்ற ஒருவன்பின்
விஞ்சத்தின் விஜ்ருப்பணையும் பெறல்நகுஷன் மதவிலாசமும்
வஞ்சத்தொழில்வாதாவி சீராவியும் மகோததிகளின்

சுருங்காத பெருந்தன்மையும் சுகேதுசுதை சுந்தரதையும்
ஒருங்குமுன்னாள் மடிவித்த சிறுமேனி உயர்தவத்தோன்
மடலவிழ்பூ மலயத்து மாமுனி புரோசிதனாகக்
கடல்கலடைந்து அமிர்துகொண்டுங் கயலிணைவட வரைப்பொறித்தும்
ஹரிஹயன தாரம்பூண்டு மவன்முடியொடு வளைஉடைத்தும்
விரிசுடலை வேலின்மீட்டும் தேவாசுரஞ் செருவென்றும்
அகத்தியனொடு தமிழாய்ந்தும் மிகத்திறனுடை வேந்தழித்தும்
தசவதனன் சார்பாகச் சந்துசெய்தும் தார்த்தராஷ்ட்ரர்
படைமுழுதுங் களத்தவியப் பாரதத்துப் பகடோட்டியும்
மடைமிகுவேல் வானரத்வஜன் வசுசாப மகல்வித்தும்
அரிச்சந்த்ர னகரழித்தவன் பரிச்சந்தம் பலகவர்ந்தும்
நாற்கடலொரு பகலாடி நாற்கோடிபொன் னியதிநல்கி
நூற்கடலைக் கரைகண்டு நோன்பகடா யிரப்வழங்கியும்
உரம்போந்த திண்டோளரைசுகள் சுரப்போகித் துறக்கமெய்தியும்
பொன்னிமையப் பொருப்பதனில் கன்னிமையிற் கயலெழுதியும்
பாயல்மீ மிசைநிமிர்ந்து பல்லுண்டி விருப்புற்றும்
காயல்பாய் கடல்போலக் குளம்பலவின் கரையுயரியும்
மன்னெதிரா வகைவென்று தென்மதுரா புரஞ்செய்தும்
அங்கதனி லருந்தமிழ்நற் சங்கம்இரீஇத் தமிழ்வளர்த்தும்
ஆலங்கானத் தமர்வென்று ஞாலங்காவல் நன்கெய்தியும்
கடிஞாறு கவினலங்கற் களப்பாழர் குலங்களைந்தும்
முடிசூடிய முரண்மன்னர் ஏனைப்பலரு முன்னிகந்தபின்
இடையாறையும் எழில்வெண்பைக் குடியிலும்வெல் கொடிஎடுத்த
குடைவேந்தன் றிருக்குலத்துக் கோமன்னர் பலர்கழிந்தபின்
காடவனைக் கருவூரில் கால்கலங்கக் களிறுகைத்த
கூடலர்கோன் ஸ்ரீபராந்தகன் குரைகழற்கோச் சடையற்குச்
சேயாகி வெளிப்பட்ட செங்கண்மால் ஸ்ரீவல்லபன்
வேய்போலுந் தோளியர்கேள் வித்யாதர ஹிரண்யகர்ப்பன்
குன்னூரி லமர்வென்றுங் குரைகடலீ ழங்கொண்டும்
விண்ணுள வில்லவற்கு விழிஞத்து விடைகொடுத்தும்
காடவனைக் கடலானூர்ப் பீடழியப் பின்னின்றும்
குடகுட்டுவர் குணசோழர் தென்கூபகர் வடபுலவர்
அடலழிந்து களஞ்சேர அமர்வல்லான் மகன்படத்தன்
களிறென்று வண்குடந்தைக் கதிகாட்டி யம்புரசீலன்

ஒளிறிலைவேல் உபாயபஹுலன் உம்பர்வான் உலகணைந்தபின்
மற்றவற்கு மகனாகிய கொற்றவனெங் கோவரகுணன்
பிள்ளைப்பிறைச் சடைக்கணிந்த பினாகபாணி எம்பெருமானை
உள்ளத்தி லினிதிருவி உலகங்காக் கின்றநாளில்
அரவரைசன் பல்லூழி ஆயிரமா யிருந்தலையால்
பெரிதரிதின் பொறுக்கின்ற பெரும்பொறைமண் மகளைத்தன்
தொடித்தோளி லெளிதுதாங்கிய தொண்டியர்கோன் துளக்கில்லி
வடிப்படைமா றாபரணன் திருமருகன் மயிலையர்கோன்
பொத்தப்பிக் குலச்சோழன் புகழ்தரு சிரீகண்டராசன்
மத்தமா மலைவலவன் மணிமக ளக்களநிம்மடி
திருவயிறு கருவுயிர்த்த ஸ்ரீபராந்தக மகாராஜன்
விரைபரித்தேர் வீரநாரணன் முன்பிறந்த வேல்வேந்தனைச்
செந்தாமரை மலர்ப்பழனச் செந்நிலந்தைச் செருவென்றும்
கொந்தார்பூங் பொழிற்குன்றையும் குடகொங்கிலும் பொக்கரணியும்
தென்மாயலுஞ் செழுவெண்கையும் பராந்தகனதுஞ் சிலைச்செதிர்ந்த
மன்மாய மாமிகுத்தவர் வஸ்துவா கனம்கொண்டும்
ஆறுபல தலைகண்டும் அமராலயம் பலசெய்தும்
சேறுபடு வியன்கழனித் தென்விழிஞ நகர்கொண்டும்
கொங்கினின்று தேனூரளவுங் குடகொங்க ருடல்மடிய
வெங்கதிர்வேல் வலங்கொண்டும் வீரதுங்கனைக் குசைகொண்டும்
எண்ணிறந்த பிரமதேயமும் எண்ணிறந்த தேவதானமும்
எண்ணிறந்த தடாகங்களும் இருநிலத்தி லியற்றுவித்தும்
நின்றபெரும் புகழாலும் நிதிவழங்கு கொடையாலும்
வென்றிப்போர்த் திருவாலும் வெல்வேந்தரில் மேம்பட்ட
கதிரார்கடுஞ் சுடரிலைவேல் கலிப்பகை கண்டருள்கண்டன்
மதுராபுர பரமேச்வரன் மாநிதிமகர கேதனன்தன்
செங்கோல்யாண்டு நாற்பதின்மேல் மூன்றாமாண்டிற் யாண்டில்
பொன்சிறுகா மணிமாடப் புரந்தரனது நகர்போன்ற
களக்குடிநா டதனிற்படும் களக்குடிவீற் றிருந்தருள
ஆசிநா டதனிற்படும் பிரமதேயம் கன்னிடக்கைத்
தேசமலி திருமங்கல மிதுபண்டு பெருநல்லூர்ப்
படுவதனைப் பாங்கமைந்த குடிகளது காராண்மை
மோடெழுந்த முதுகொம்பர்க் கோடெழுந்து கிடந்ததனைக்
கற்றறிந்தோர் திறல்பரவக் களப்பாழரைக் களைகட்ட
மற்றிரடோண் மாக்கடுங்கோன் மானம்பேர்த் தருளியகோன்

ஒன்றுமொழிந் திரண்டோம்பி ஒருமுத்தீ யுள்பட்டு
நன்றுநான் மறைபேணி ஐவேள்வி நலம்படுத்து
அறுதொழில்கள் மேம்பட்ட மறையோர்பன் னிருவர்க்குக்
காராண்மை மீயாட்சி உள்ளடங்கக் கண்டமைத்துச்
செப்பேடுசெய்து கொடுத்தருளினன் தேர்வேந்த! நின்குலமுதல்வன்
மைப்படுகண் மடமகளிர் மதவேள் மனுசமானன்
வழுவாத செங்கோனடவி மண்மகட்கொரு கோவாகிக்
கழுதூரில் சித்திசெய்த கடிக்கூட னகர்காவலன்

சோமாசி குறிச்சியிது தொல்லைமேற்படி கிடந்ததனை சோமபாந மனோசுத்த ராகிய காடகஸ் ஸோமயாஜியார்க்கு ஏகபோகமதுவாகஎழிற் செப்பேட்டொடுகொடுத்தனன் ஆகிய இவ்வூரிரண்டின் செப்பேடு மறக் கேட்டில் இழந்துபோயினவென்றும் ஏதமில் சோமாசிகுறிச்சிச் செழுந் தகைய நிலத்துப்படும் நிலத்தைக் கடற்றிருக்கை கிழவன் மதிதரு பெரு நான்கெல்லை இட்டுக்கொண்டு மற்றதனை மதுரதரநல்லூரென்று பெயரிட் டுக் குடிநிலனுகைக் கொண்ட நிலமதுவும் அவன் குடிநிலனுகை தவிர்ந்து தொண்டு சோமாசிகுறிச்சி மேலைபுரவேறப் பெறுவதென்றும் சொல்லிய ஊரிரண்டும் தம்மிலெல்லை கலந்து கிடக்குமாதலில் ஒன்றுக வுடன்கூட்டிப் புரவெழுதிப் பிடிசூழ்ந்து நன்றுகிய சாசனஞ்செய்து நன்கருள வேண்டு மென்றும் வாசநாள்மலர்கமழ்பொழில் ஆசிநாட்டுள் அக்ரமாகிய கரு வமைந்த கனகமாளிகைத் திருமங்கல நகர்த்தோன்றல் சோமாசிகுறிச்சி யென்னும் காமர்வண் பதிகாவலன் வடிவமை வானகோத்ரத்து பௌதா யன கல்பத்துக் குடிவிளங்க வெளிப்பட்ட குணகணங்கட் கிடமாகி மறை நான்கின் றுறைபோகிய மாயாநம்பி பட்டற்குச் சிறுவனுகிய பெருந்தகை யின் திசைமுகன்வெளிப் பட்டனையோன் தர்மவத்ஸலன் அதர்மகோபி மாயாநாராயண பட்டர் மகாபன்னி வயிறுயிர்த்த சேயான திருத்தகை யின் ஸ்ரீநாராயணங் கேசவன் கல்விக் கடல் கரைகண்டும் க்ஷத்ரியாநு மதமுணர்ந்து சொல்வித்தகம் தனதாக்கி சுத்தசீலாசாரனுகி மீனவன் வீரநாரணற்கு விச்வாச கர்மங்கட்கான தன்மையனுதலில் அருளறிந்து விண்ணப்பஞ்செய மதுரதரநல்லூரென்னும் வளம்பதி சோமாசிகுறிச்சி அதன்மேலை புரவேற்றி ஆங்கதுவும் திருமங்கலமும் உடன்கூடப் பிடிசூழ் வித்து உலகறியக் கொடுத்தருளினன்

வடப்கூடு முலைமகளிர் மன்மதவேள் மனுசரிதன்
மற்றிதனுக் காணத்தி வண்டமிழ்க்கோ னதிகாரி
பொற்றடம்பூண் மணிமார்பன் பொழிற்புல்லூ ரெழிற்பூசுரன்

செய்யுந்து புனற்செறுவின் செங்கழுநீர் மலர்படுகர்
வைகுந்த வளநாடன் வாத்ஸகோத்ர சூடாமணி
ஹரிசரண கமலசேகரன் ஆயிரத் தைஞ்ஞூற்றுவன்
திருமகி ழிளையானக்கன் திசைநிறை பெரும்புகழாளன்
புவனதலப் புகழுநிதி அவனிசுர குலதிலகன்
தாதலர்பூம் பொழில்தழுவிச் சாலிவிளை வயவளத்தால்
மேதகுபுகழ் வேண்புநாட்டு பெருந்தூவெள்ளி யெனப் பெயரிய
திருந்துபதிக் குடித்தலைவன் தென்னவன்திரு வருள்சூடிய
பெருந்தூவெள்ளி கிழவனுகிய பெருந்தகை சேந்தங்கிழவன்
நலமலிசீர் நடுவுநிலை நன்குநா யகனுகவும்
அலர்கமழுப் பொன்னளற்று நாட்டுக் கக்கிரமாகிய
முகில்தோய்பொழில் முசுக்குறிச்சி முற்குடிப்பிறேர் கான்முளை
அகனிலத்தோர் புகழளற்று நாட்டுக்கோன் அருந்தமிழின்
பாத்தொகுபொருள் பயனுணர்வோன் கொடைபயில் கற்பகசிலன்
சாத்தம்படார னெனப்பெயரிய தக்கோன் மிக்கோங்கு
கார்வயல்சூழ் களாத்திருகைப் பேரரண்சூழ் பெருங்காக்கூர்த்
தலையாகிய குலக்குருசில் தகுதேய மாணிக்கம்
கலைபயில் கிழவங்கோனுப் கணக்குநூல்பயில் கணக்கராகவும்
மாசில்வான் குடித்தோன்றி ஆசிநாட்டு நாட்டாரும்
மச்சுறுவளம் அணவிவேந்த னேச்சுரநாட்டு நாட்டாரும்
உடனாகிநின் றெல்லைகாட்டப் பிடிசூழ்ந்த பெருநான்கெல்லை

கீழெல்லை

புனல் புவனி புத்தேள் மாருதம் கனல் இருசுடர் யஜமானன் ஆகிய திறல் அஷ்டமூர்த்தி அமரர்க்கும் அறிவரியோன் வேகவெள்ளிமை யூர்தி விஷமலோசனன் மகிழ்ந்துறையும் வாழியவான் திருவிருப்பூர் மூழிநின்று தென்கிழக்கு நோக்கிப் போயின வெள்ளாற்றுக்கும் ஆயின பெருநல்லூரார்ச் சிறைக்கும் வன்கள்ளி முரப்புக்கும் வண்ணத்தார் வளாகத்தின் நன்குயர்பராட்டிட்டுக்கும் நலமிகு கள்ளிக்குறிச்சி மேலைகள்ளி முரம்புக்கூர் போதரு நடையாட்டிகுளத்தில் சாலநீர் கோளுக்கும் இக்குளத்தின் நெடுங் கொம்பின் மறுவாக்கும் பாங்கமைபடு பாறைக்கும் பயந்தரு குடிநிலை ஏரி ஓங்கியவன் குளத்தகப்பால் ஒழுகியவன் பெருப்புக்கும் இப்பெருமடை ஊடறுத்துச் செப்பிடு செழுங்கிழக்கு நோக்கி வாரிக்கொள்ளிக்கே போயின வழியதற்கும் வயல்மலிந்த குளத்திநீர் கோளுக்கும் அடிகுழிக்கும் மேற்கும்

தென்னெல்லை

திருமருநிலப்பாறைக்குச் செஞ்சாலி விளைகழனி ஏரியநதை வடகடைக் கொம்பிற்கும் ஒழுகுகள்ளி முரம்புக்கும் நீருடை அளவைச் சுனைக்கும் ஊருடையான்குழித் தென்கடைக் கொம்புக்கும் நெடுமணிற் கற்றூழ்வுக்கும் நீர்மாற்றுத் திடலுக்கும் கடிகமழ் பூந்தார்க் கணத்தார் குழிக்கும் வடக்கு

மேலெல்லை

கூற்றன் குழிமீ குழியே போயின படுகாலுக்கும் பொற்றருமாருத்தமாணிக் குளத்துக்கரைப் பெருப்புக்கும் நாடறி நங்கையார் குழியின்மீய் குழியே காடனேரிக்கே போயின வழிக்கு மேதமில் எறிச்சில்வழிக்கும் எழிலமைநேச்சுற நாட்டோலைக் குளத்தெல்லைக்கும் கிழக்குமன்

வடவெல்லை

வளமிக்க மருதவேலி இளநேச்சுறத் தெல்லைக்கும் வெள்ளாற்றுக்கும் தெற்கும் இவ்விசைத்த பெருநான்கெல்லை உண்ணில மொன்றொழியாமல் காராண்மை மீயாட்சி உள்ளடங்கக் கண்டமைத்துச் சீர்சான்ற திசையனைத்தின் எல்லைவாய் கன்னாட்டித் தருமங்களிரொன்று பயில் திருமங்கலத்துச் சவையார்க்கும்

தொல்லைவண் சோமாசிக்குறிச்சி மல்லன்மா மறையோர்க்கும் பிரமதேய ஸ்திதி வழாவகை பிருதிவியின்கண் நிலைபெறுத்து தர்மகர்ம பராயணனாகிய தராபதி கொடுத்தருளியபின் ஈண்டிய பெரும்புகழேழுறு சாண்டில்ய கோத்திரத்து ஏத்தார்புகழ் ஏகசந்தி காத்யாயன ஸூத்திரத்து வரிவண்டு மதுநுகர் பொழில் சிரீவல்லப மங்கலத்துச் செப்பரிய செழுஞ் செல்வத்து பம்பிரால் மேதக்க கலைபயில் கணஸ்வாமி பட்டற்குற்ற பெருமாமதலை உலவுசீர்த்தி யோகேச்வர பட்டற்கு விசிஷ்டனாகிய திருவடிச் சோமாசி யென்னுஞ் சீர்மறையோன் மகள் பயந்த திருமருசீர்ச் சிரிமாதவன் ஸ்ரீமாதவ சரணசேகரன் வேத வேதாந்தங்களும் விவித சாஸ்திரமும் தன்னொடு பிறரோதிக் கேட்டுணர்வெய்த உரைக்கு மாசார்யனாகி பெருந்தகை பிரமதேய மிதற்கு பிரசஸ்தி செய்தோற்கு திருந்திய நன் பெருவளாலும் செழும்புனற் பருத்தி வயக்கலும் இவ்வயல்களிற் கிணறிரண்டும் அக்கிணற்றூல் விளைநிலனும் மற்றவ்வூர் மாசவையோர் பெற்ற

பரிசே கொடுத்த பின் சீரிய செழுப்பணி இதற்குச் செப்பேடு வாசகத்தை ஆரியம் விராய்த் தமிழ்தொடுத்த மதியோற்குப் அது எழுதிய கற்பமைந்த கர தலத்துச் சிற்ப மார்த்தாண்டற்குப் மண்ணெங்கும் நிறைந்த வான்புகழ் கண்ணங்கீரன் வயக்கல் திருமிகு நற்சிங்ககுளவளால் மருவிய சோமாசி வயக்கலென்னும் வயல்களிற் கிணறுகள் ஒரு மூன்றும் எக்காலமும் மன்னு கிணற்றால் விளைவயலனைத்தும் இறையிலியாகவும் சொல்லிய இக்கிணறு மூன்றினிடைக் கிடந்த தொன்னில முழுவதும் இல்லவளாலதுவாகவும் எழின்மிக்க தோட்டமாகவும் வல்லெருமை வெருவு மீன்கள் விரால் உகள் புனற்பதி யிதனில் கொல்லுரிமையிற் செம்பாகமும் மகாசபை குறிப்பேடு கொடுத்துப் பகல்செய்யும் பருதிஞாயிறும் இரவுச் செய்யும் பனிமதியும் அகல்ஞாலமும் உளவளவும் செப்பேடு செய்து கொடுத்தருளினன். மணி நீள்முடி மன்பணிகழல் வஸுதாதிப வாஸுதேவன் அணிநீள்வுயத்து அஹிதாக்னி அசலாசலன் அநவர்ஜ்யன் கொந்தலர்தார் கோச்சடையன் கூடற்கோன் குருசரிதன் செந்தமிழ்க்கோன் ஸ்ரீநிகேதனன் ஸ்ரீபராந்தக மகாராஜன்

தேர்மிகுமாக் கடற்றானைத் தென்னவர்கோன் திருவருளாற் சீர்மிகு செப்பேட்டுச் செந்தமிழ்ப் பாத்தொடை செய்தோன் அத்புத மெனும் பாழிக் கண்ணவிர் சடைமுடி அரன்வேண்ட நற்பரசு நிர்மித்தவன் நளிர் சடைமேல் அலங்கல் பெற்ற மாமுனி மனுவழி வந்தோன் பாமரு பண்டித தாசன் பொன்வரன்றி மணிவரன்றி அகில்வரன்றிக் கரைபொருபுனற் றென்வைகை வளநாடன் செழுங்குண்டூர் நகர்த்தோன்றல் பாலன்டித் தமிழாபரணன் என்னும் பல சிறப்பும் பெயரெய்திய பாண்டிமாராயப் பெருங்கொல்லனுகிய சிரீவல்லவன் தென்னவர்தந் திறலாணைச் சிலையொடு புலி கயலிணைமன் பொன்னிமையச் சிமையத்து விறற்கருவியிற் போக்குந் தொழில் செய்து வந்தவர் பின்னேன் செயல்பல பயின்றோர் முன்னேன் திருமலி சாசனமிதற்குச் செழுந்தமிழ் பாடினேன்தாகை நிருபசேகரப் பெருங்கொல்லன் நிறைபுகழ் நக்கனெழுத்திவை.

## தளவாய்புரச் சாசனம்

### தமிழ்ப் பகுதியின்

# பொழிப்புரை

மங்களம் உண்டாகுக.

ஓங்கி எழுகின்ற அலைகளையுடையதும், மிக்க பரப்பினையுடையது மான கடலை ஆலயமாகக் கொண்டவன்; இனிய மணங்கமழும் மலர்களை யொத்த நீண்ட கண்களையுடைய திசைப் பெண்கள் திருமேனிகாவல் செய் யப்பெற்றவன்; விண்ணென்னும் பெயர் கொண்ட மேக தோரணங்களை யுடைய மேற் கட்டியின் குளிர் நிழலின் கீழே ஆயிரம் படங்களிலுள்ள இரத்தினங்களின் ஒளி விளக்குப்போல் பிரகாசிக்க, ஆதிசேடனாகிய சிறந்த அமளியின் மீது அமர்ந்தவன்; தும்புரு நாரதர்களுடைய இன்பந் தரும் பாடல்களையும் வீணாகானத்தையும், திருச்செவி மடுப்பவன்; நிலமக ளொடு மலர்மகளும் அடிவருடத் துயிலமர்ந்தவன்; நீலமேக வண்ணன்; (இவன் யாரெனில்) வலிமை மிக்க ஆயுதங்களைத் தரித்த திருமால்; ஸ்ரீதேவி பூதேவிகளின் தலைவன்; ஆதிபுருஷன்; நித்திய சூரிகளின் நாயகன்.

(இவனுடைய) அழகமைந்த உந்தியஞ் சுழியில், ஒளி பொருந்திய மரகதத்தை யொத்த பசுமை நிறமும் துளைகளும் கொண்ட தண்டினை யுடைய பொற்றாமரை மலர்ந்து சுடர் வீசுகின்றது. அதன் மீது, விளையும் வளம் மிக்க நற்கதிரென மிக்கு விளங்குகின்ற சடைமுடிகளுடனும், தக்க அளவு பொருந்திய கமண்டலத்துடனும், ஜபமாலையுடனும் பிரமன் தோன்றினான். இவன் நான்கு கைகள், நான்கு முகங்கள், நான்கு வேதங் கள், இருநான்கு கண்கள் இவைகளையுடையவன்; தேன் கமழும் தாமரை மலரைப் பிறப்பிடமாகக் கொண்டவன்.

இப்பிரமனுடைய மனத்திலிருந்து தோன்றிய மாமுனி அத்திரி. இம்முனிவர் பலகாலம் தவம் செய்தபோது இவருடைய கண்ணிலிருந்து இருளை நீக்கும் பெருஞ்சோதியான சந்திரன் அவ்வம்சத்தவனாகத் தோன்றி னான்.

அவன் மகன் மணிநீள்முடிப் புதன். செங்கதிர்த் தொகுதியுடைய சூரியகுலத்துதித்தவனும், வீரக்கழலணிந்த அரசனும், எழில்மிக்க தோள் களை யுடையவனுமான இளன் என்பவன் ஒரு சமயம் சிவபெருமானுடைய சாபத்தால் பெண் உருப்பெற்று இளைஆனான். அழகிய அந்த இளையைப் புதன் காதலிக்க அவள் பொன் வயிற்றிலே புரூரவன் தோன்றினான். இப் புரூரவன் போர் புரியும் மன்னர்களைத் தலை நடுங்கச் செய்தான்.

பிறகு, மற்ற மன்னர் பலரும் பூமியைக் காத்து மறைந்தபின், திசை யானைகளின் கும்பத்தலத்தில் உலாவுகின்ற பருத்த மகரமீன்களின் கூட்டம் வேகமாக விண்மீன்களுடன் போர் தொடுக்குமாறு பொங்கி எழுந்த கடலலைகள் சென்று இவனுடைய கால்களில் பணியும்படி அன்று (தான்) ஒருவனாகப் பாண்டியன் நின்றான்.

பிறகு, விந்தியத்தின் வளர்ச்சி, இந்திர திருவனான நகுஷனுடைய செருக்கு, வஞ்சத்தொழில் வாதாவியின் சீரான உயிர், கடல்களின் குன்றுதலில்லாத பெரிய தன்மை, ஸுகேதுஸுதை (தாடகை)யின் அழகு இவற்றையெல்லாம் மடிவித்த குறுமுனிவனாகிய பெருமுனிவன் இதழ் விரிகின்ற பூக்களையுடைய பொதிய மலையில் உறைபவன்; இவனைப் புரோகிதனாகக் கொண்டவன் (பாண்டியன்.)

(இப்பாண்டிய மரபினர்) கடல் கடைந்து அமிர்தம் கொண்டவர்; இரு கயல்களை இமயத்தின்மீது பொறித்தவர்; இந்திரனது முத்து மாலையை அணிந்தவர்; அவன் முடியொடுவளை உடைத்தவர்; விரிந்த கடலை வேலினால் மீளச் செய்தவர்; தேவாசுரப் போரில் வெற்றி கொண்டவர்; அகத்திய னுடன் தமிழ் ஆராய்ந்தவர்; மிக்க வல்லமையுடைய வேந்தர்களை அழித்த வர்; இராவணன் தொல்லை நீங்கச் சந்தி செய்தவர்; துரியோதனாதியர் படை முழுவதும் போர்க்களத்தில் மடியும்படி, பாரதப் போரில் யானை களைச் செலுத்தியவர்; உறுதியான இணைப்புக்கொண்ட வேலாயுதத்தை யுடைய அநுமக்கொடியோனாகிய அர்ச்சுனனுக்கு, வசுக்களினால் ஏற்பட்ட சாபத்தை அகற்றியவர்; அரிச்சந்திரன் நகரை அழித்து அவனுடைய பரிச் சின்னங்கள் பலவற்றைக் கவர்ந்தவர்; ஒரே பகலில் நான்கு கடல்களின் நீரினால் அபிஷேகஞ் செய்துகொண்டவர்; நாற்கோடி பொன்னை நியதியா கக் கொடுத்தவர்; நூற்கடலைக் கரைகண்டவர்; வலிமை கொண்ட யானை களாயிரம் வழங்கியவர்; வலிமிக்க தோள்களையுடைய (சில) அரசர்கள் சிதறியோடிக் கானகம் புகுந்து வானகம் அடையச் செய்தவர்; பொன் மய

மான இமயமலையில் இளங்கயல் மீன்களைப் பொறித்தவர்; பாயல் மீமிசை நிமிர்ந்து பல்லுண்டி விருப்புற்றவர்; பல குளங்களின் கரைகளை உயர்த்தி அவைகளைக் காயல் பாய் கடல்போலச் செய்தவர். அரசர்கள் தம்மை எதிர்க்கா வகையில் அவர்களை வென்று தென் மதுராபுரியை நிர்மாணித்த வர்; அவ்விடத்தில் அரிய நல்ல தமிழ்ச் சங்கத்தை நிறுவித் தமிழ் வளர்த்த வர்; ஆலங்கானம் என்னும் இடத்தில் நடந்த போரில் வெற்றி கொண்டு பூமியை நன்கு ஆட்சி புரிந்தவர்; மிக்க வாசனை கமழ்வதும் அழகினையுடை யதுமாகிய மாலையைத் தரித்த களப்பாழர் குலத்தை நாசம் செய்தவர்; இத்தகைய முடிசூடிய வலிமை மிக்க மன்னர்கள் மற்றும் பலரும் கடந்த பின், இடையாறை, அழகிய வெண்பைக்குடி இவைகளில் வெற்றி தரும் கொடியைத் தூக்கிய கொற்றைக்குடை வேந்தனுடைய திருக்குலத்துதித்த சிறந்த அரசர்கள் பலர் இறந்த பிறகு;

பல்லவனைக் கருவூரில் கால் நடுங்கும் வண்ணம் யானைகளைச் செலுத் திய மதுரைத் தலைவனாகிய ஸ்ரீ பராந்தகன் ஒலிக்கின்ற வீரக்கழலை அணி கின்ற கோச்சடையனுக்கு மகனாகத் தோன்றினான். இவன் திருமாலை நிகர்த்த ஸ்ரீவல்லபன் ஆவன். இவன் மூங்கிலை யொத்த தோள்களையுடைய பெண்களுக்கு நாயகன். வித்யாதர இரண்யகர்ப்பன். (அதாவது, வித் தைக்கும் செல்வத்திற்கும் உறைவிடமானவன்.)

இவன் குண்ணூரில் போர் வென்றவன்; ஒலிக்கின்ற கடல் சூழ்ந்த இலங்கையைக் கைப்பற்றியவன்; விழிஞத்தில் சேரனுக்கு விண் ஆள விடை கொடுத்தவன்; கடலாணூர்ப் போரில் பல்லவனுடைய பெருமை குன்றும் வண்ணம் அவனை முதுகு காட்டி ஓடச்செய்தவன்; மேற்கிலுள்ள குட்டுவர் (சேரர்), கிழக்கிலுள்ள சோழர், தெற்கிலுள்ள கூபகர், வடநாட்டவர், இவர்களனைவரையும் குடந்தை (கும்பகோண)ப் போர்க்களத்தில் அழித்து அமர்வல்லான் மகனும் அழியும்படி தன் யானை ஒன்றை அவன் மீது செலுத்தினான். "யம்புரசீலன். ஒளிர்இலைவேல் உபாயபகுளன்" ஆகிய இவன் மேலுலகம் சென்றபின் இவனுக்கு மகனான அரசன் எமது தலைவன் வரகுணன் தோன்றினான். இவன், இளம்பிறைச்சந்திரனைச் சடையில் அணிந் தவனும், கையில் பிநாகம் என்ற வில்லையுடையவனுமான சிவபெருமானை (த்தன்) உள்ளத்தில் நன்கு நிலைக்கச்செய்து உலகத்தைக் காக்கின்றநாளில்,

ஆதிசேஷன் பல்லூழிகளாகத் தன் ஆயிரம் பெருந் தலைகளால் மிக அரிதென்னும்படி சுமக்கின்ற சுமையாகிய பூமிதேவியை வாகுவலயம்

அணிந்த தோளில் எளிதே தாங்கியவனும், தொண்டியர் தலைவனும், நடுக்க மில்லாதவனும், கூர்மையான ஆயுதத்தையுடையவனுமான மானபரண னுடைய மருகனும், மயிலையில் உள்ளோர்க்குத் தலைவனுமான பொத்தப் பிக்குலச் சோழன் சிரீகண்டராசனுடைய அழகிய புதல்வி அக்களநிம்மடி யினுடைய திருவயிற்றில் தோன்றியவன் ஸ்ரீபராந்தகமஹாராஜன் இருந்தான். இவன் வேகமுள்ள குதிரைகளைப் பூட்டிய தேரையுடைய வீரநாரணன் ஆவன்.

(இவ்வீர நாரணன்) தனக்கு முன் பிறந்த அரசனை (தன் அண்ணனை)ச் செந்தாமரை மலர் பூக்கின்ற வயல்களைக் கொண்ட செந் நிலத்தைப் போரில் வென்றான்; பூங்கொத்துக்கள் நிறைந்த அழகிய சோலை களையுடைய குன்றை, மேற்குக் கொங்கு, பொக்கரணி, தென்மாயல், செழுமையான வெண்கை என்னும் இடங்களிலும், பராந்தகம் என்ற இடத்திலும் முழங்கி எழுந்த மன்னர் மாய்ந்துபோக மீதியுள்ளவர்களின் வஸ்து வாகனங்களைப் பற்றினான்; ஆறுகளுக்குப் பல தலைப்புக்களை அமைத்தான்; பல கோயில்களை நிர்மாணித்தான்; சேறு பொருந்திய அகன்ற கழனிகளைக் கொண்ட தென் விழிஞ நகரைக் கைக் கொண்டான். கொங்கு முதல் தேனூர் வரை குடகொங்கருடைய உடல் மடியும்படி கொடிய ஒளிபொருந்திய வேலாயுதத்தால் வெற்றி கொண் டான்; வீரதுங்கனைக் கடிவாளமிட்டான்; அளவில்லாத பிரமதேயங்கள், அளவற்ற தேவஸ்தானங்கள்; அளவற்ற தடாகங்கள் இவைகளை இப் பேருலகில் செய்வித்தான். நிலைத்த பெரும்புகழாலும் நிதிகளை வழங்குகின்ற தானத்தாலும், வெற்றியைத்தரத்தக்க செல்வத்தாலும் அரசர்களில் சிறந்தவன்; ஒளி பொருந்திய மிக்க சுடர் பொருந்திய இலை வடிவமான வேல்களைக் கொண்டவன்; கலிப்பகை; கண்டருள் கண்டன்; மதுராபுரிப் பரமேச்வரன்; மானினீ மகரகேதனன் என்ற விருதுகளையுடையவன்.

இவன், தன் ஆட்சி ஆண்டு நாற்பத்தைந்தில் பொன் மலிந்த அழகிய மாடங்களையுடைய இந்திரனது நகர் போன்ற களக்குடி நாட்டில், தலைமை யூராகிய களக்குடியில் தங்கியிருந்தான். அப்பொழுது, ஒரு பிராமணன் வந்து கீழ்க்கண்டவாறு விண்ணப்பஞ் செய்துகொண்டான்.

அதாவது, ஆசி நாட்டில் உள்ள பிரமதேய நிலமான கன்னிடக் கைத் தேசமலி திருமங்கலம் என்ற இந்தக் கிராமம் முற்காலத்தில் பெரு நல்லூரைச் சேர்ந்தது. நன்கமையப்பெற்ற குடிகளுக்கு உரிமையாக இருந்த இவ்வூர் மேடிட்டு, பழைய மரங்கள் வளர்ந்த காடாகக் கிடந்தது.

இதைக் கல்வியறிவாளர்கள் தம் திறமையைப் புகழும்வண்ணம் களப் பாழரை வேரறுத்தவனும் மற்போரால் திரண்ட தோள்களையுடைய வனும் ஆகிய மாட்சி பொருந்திய கடுங்கோன், மானம் பேர்த்தருளிய கோன், என்ற விருதுப் பெயர் பெற்றவன் இவ்வூரைத் தானஞ் செய்தான். யாருக்கு என்றால் ஒன்று (வாய்மை) உரைப்பவன்; (சந்தியாவந்தனம்) அந்தித் தொழுகைகள் இரண்டு ஓம்புபவன்; முத்தீ (கார்ஹபத்யம் ஆஹவனீயம், தக்ஷிணக்கினி) வளர்ப்பவன்; நான்கு வேதங்களைக் காத்த வன்; ஐந்து வேள்வி (கடவுள் வேள்வி, பிரம வேள்வி, பூதவேள்வி, மானிட வேள்வி, தென்புலத்தார் வேள்வி) களைச் செய்தவன்; ஆறு தொழில்களில் (ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல்.) மேம்பட்ட வன் ஆகிய பன்னிருவருக்குக் காராண்மை, மீயாட்சி உட்பட சீர் அமைத் துச் செப்பேடு செய்து கொடுத்தருளினன். தேர் வேந்தனே! உன் குல முதல்வன்; மைதீட்டிய கண்களையுடைய இளம் பெண்களுக்கு மன்மதன்; மனுவுக்குச் சமமானவன்; நீதி வழுவாது செங்கோல் நடத்தியவன்; நிலமக ளுக்கு ஒப்பற்ற தலைவன்; கட்டுக்காவலமைந்த மதுராபுரிக்கு மன்னனை இவன் கழுதூரில் உயிர் நீத்தவன்; இவன், இந்தச் சோமாசிக் குறிச்சி முன்னளில் மேலே சொல்லியபடி கிடந்ததை, சோம பானம் செய்து மனத்தெளிவடைந்தவரான காடக சோமயாஜியாருக்கு ஏகபோகமாக அழகிய செப்பேட்டுடன் கொடுத்தான்.

ஆக இவ்விரண்டு ஊர்களின் (திருமங்கலம், சோமாசிக்குறிச்சி) சாசனம் பகைக்கேட்டால் தொலைந்துபோயிற்று என்றும் குற்றமில்லாத சோமாசிக் குறிச்சியில் செழுமை மிக்க நில வகையைச் சேர்ந்த நிலத்தை, கடற்றிருக்கைக் கிழவன் புத்திசாலித்தனமாகப் பெரிய நான்கு எல்லையை அமைத்துக்கொண்டு மற்றதை மதுரதரநல்லூரென்று பெயரிட்டுக் குடி நிலமாகச் செய்த அந்தப் பகுதி நிலமும் அவன் குடி நிலமாக இருப்பதைத் தவிர்க்கச் செய்து, முன்னையை சோமாசிக்குறிச்சி முன்போல் இறையிலி நிலமாகச் செய்யப்பட வேண்டுமென்றும் மேலே கூறிய ஊரிரண்டும் தமக்குள் எல்லை கடந்து கிடக்குமாதலால் ஒன்றாகச் சேர்த்து இறையிலி நிலமாக கணக்குப் புத்தகத்தில் எழுதுவித்துப் பிடிசூழ்ந்து நன்றாகச் சாசனம் செய்து, நன்கு அருள் புரியவேண்டும் என்றும்;

அன்று அலர்ந்த மலர்கள் வாசனை வீசும் பொழில்களையுடைய ஆசி நாட்டில் உயர்ந்ததாயும், அஸ்திவாரம் அமைந்ததாயும் பொன்மய மான மாளிகைகளை யுடையதாயுமுள்ள திருமங்கலமென்னும் ஊரில்

தோன்றியவனும், சோமாசிக்குறிச்சி என்னும் அழகும் வளப்பமும் பொருந்திய ஊருக்குத் தலைவனும், அழகமைந்த வானகோத்திரத்துப் பௌதாயன கல்பத்துக் குடிவிளங்கத் தோன்றியவனும், நற்குணங்களுக்கு இருப்பிடமானவனும், நான்கு மறைகளையும் முறையாகக் கற்றவனுமாகிய மாயாநம்பி பட்டற்கு மகனாகத் தோன்றிய இவன், பெருந்தகைமையுடையவன்; நான்முகனையொத்தவன்; தர்மவத்ஸலன்; அதர்மகோபி எனப் பாராட்டப்படும் மாயாநாராயண பட்டர்க்கும், அவரது பத்தினிக்கும் பிறந்த பிள்ளை. கண்டாரால் விரும்பப்படும் தன்மையுடைய ஸ்ரீநாராயணங் கேசவன் ஆவன்.

இவன், கல்விக்கடலைக் கரைகண்டவன்; க்ஷத்திரியக் கொள்கைகளை யுணர்ந்து சொற்சாதுரியத்தைத் தனதாக்கிக் கொண்டவன், பாண்டியன் வீரநாரணற்கு நம்பிக்கைக்குரிய செயலாளனாகும் தன்மையன்; ஆதலால் அரசன் குறிப்பறிந்து விண்ணப்பஞ் செய்தான். மதுரதரநல்லூர் என்ற வளமை பொருந்திய ஊரைச் சோமாசிக்குறிச்சி என்னும் ஊரோடு சேர்த்து இறையிலி ஊராகச்செய்து, இச் சோமாசிக் குறிச்சியையும் திருமங்கலத்தையும் உடன்சேர (எல்லையைப்) பெண் யானை கொண்டு சூழ்வித்து உலகறியக் கொடுத்தருளினான்.

இவன் மணி வடங்கள் பொருந்திய தனங்களையுடைய மகளிர்க்கு மன்மதன். மனு நெறியில் ஒழுகுபவன் ஆவன் (வீரநாராயணன்).

இதற்கு ஆணத்தி தமிழ்ப் பாண்டியனிடத்தில் அதிகாரி, பொன்னால் செய்த அணிகலன்களை அணிந்தவன். விசாலமான, பூண்கள் அணிந்த, அழகிய மார்பை உடையவன். சோலைகளையுடைய புல்லூரில் விளங்குகின்ற அந்தணன், வயல்களிலும் குளங்களிலும் நீர் பாய்கின்றதும் செங்கழுநீர்ப்பூக்களை உடையதுமான மருத நிலத்தையுடைய வைகுந்த வளநாட்டில் உள்ளவன், வத்ஸ கோத்திரத்துக்குச் சூடாமணி, திருமாலின் திருவடித்தாமரைகளைத் தலையில் தாங்கியவன் (விஷ்ணு பக்தன்), ஆயிரத்தைந்நூற்றுவன் என்னும் குலச்சிறப்புப் பெயரை உடையவன். செல்வச் சிறப்புப் பெற்ற இளையான் நக்கன் ஆவன். திசை நிறைந்த பெரும் புகழை உடையவன். பூமியிலுள்ளார் புகழும் செல்வத்திற்கு உறைவிடம் ஆனவன். நிலத்தேவர் குலத்துக்குத் திலகம் போன்றவன். மலர்ந்த பூக்களில் மகரந்தப் பொடிகளையுடைய சோலைகளைத் தழுவிய வயல்களில் நெல் விளையும் நீர் வளத்தால் மேம்பாடுள்ள புகழையுடைய வேண்பு நாட்டில் பெருந்தூவெள்ளி என்னும் பெயருள்ள செம்மையான குடிப்பிறந்தவர்

களுக்குத் தலைவன். பாண்டியனுடைய திருவருளை நிரம்பப் பெற்ற பெருந் தூவெள்ளி என்னும் ஊர்க்கு உரிமையுடைய பெருந்தகையாளனாகிய சேந்தங்கிழவன் என்பவன். நன்மை மிகுந்த சிறப்பினை உடைய நடுவுநிலை நாயகனாகை (மத்யஸ்தனாக) இருந்தான்.

மலர்களின் மணம் வீசும் அழகிய அளற்று நாட்டுக்கு முதன்மை யானதும், மேகங்கள் படியக்கூடிய சோலைகளையுடையதுமாகிய முசுக் குறிச்சி என்னும் ஊரில் முதற்குடியிற் பிறந்தவன். அகன்ற நிலவுலகிலுள் ளார் புகழும் அளற்று நாட்டுக்குத் தலைவன். அருந்தமிழ்ச் செய்யுட்களின் கருத்தையும் பயனையும் உணர்பவன். கொடைபயின்ற கற்பகத்தை ஒத்த சீலன். சாத்தம் படாரன் என்னும் பெயருடைய தகுதியுடையவனும் மிகுதியாக ஓங்கி வளர்கின்ற கார் நெற்களையுடைய வயல்கள் சூழ்ந்த களாத்திருக்கையைச் சேர்ந்த பேரரண்கள் சூழப்பெற்றுள்ள பெருங்காக்கூரில் சிறந்த குலத்தின் சிறந்த தலைவனும், தகுதியுள்ள தங்கள் தேசத்துக்கு மாணிக்கம் போன்றவனும் கலைகளைப் பயின்ற கிழவங் கோனும் ஆகிய இவ்விருவரும் கணக்கு நூல்களைப் பயின்ற கணக்கர் ஆவர்.

குற்றமில்லாத சிறந்த குடித்தோன்றிய ஆசி நாட்டு நாட்டாரும், பொன் வளம் பொருந்திய நேச்சுர நாட்டு நாட்டாரும் கூடியிருந்து! எல்லை காட்டப் பிடி சூழ்ந்த பெரு நான்கு எல்லையாவது:

கீழெல்லை:

நீர் நிலம் ஆகாயம் வாயு தேயு சூரியன் சந்திரன் இயமானன் ஆகிய வல்லமையையுடைய அட்டமூர்த்தி ஆனவனும், தேவர்களா லும் அறிய முடியாதவனும், வேகமாகச் செல்கின்ற வெண்ணிறமுடைய காளையை வாகனமாக உடையவனும் சமமில்லாத கண்களையுடையவனும் ஆகிய சிவபெருமான் மகிழ்ந்து எழுந்தருளிய திருவிருப்பு என்ற ஊருக்குத் தென் கிழக்காக ஓடின வெள்ளாற்றிற்கும், பெருநல்லூர் ஏரிக்கும் வலிய கள்ளிகளையுடைய பாலை நிலத்துக்கும் வண்ணார் இடமாகிய நன்குயர்ந்த பரந்த பாலை நிலத்துக்கும், நன்மை மிக்குள்ள கள்ளிக்குறிச்சி என்னும் ஊரில் உள்ள மேலைக்கள்ளிப் பாலைநிலத்துக்கும். மேற்கு நடையாட்டிக் குளத்தில் மிகுதியான நீர் பாயும் குளத்தின் தென்கோடியில் எதிர்ப்பக் கத்தில் உள்ள பாறைக்கும். பயனை அளிக்கும் குடிநடை ஏரி ஓங்கிய குளத்துக்கருகில் ஒழுகியன் பெருப்புக்கும் இப்பெருப்பைச் செழுங்கிழக்கு நோக்கி ஊடறுத்துப்போயின வாரிக்கொள்ளி வழிக்கும், வயல் மிகுந்த வாரிக்கொள்ளிக் குளத்தின் நீர் கோளுக்குப் அடி குழிக்குப் மேற்கு.

தென்னெல்லை

திருமரு நிலப்பாறைக்கும் எரியந்தை என்னும் பெயருள்ள செந்நெல் விளைவயலின் வடக்கிலுள்ள கடைக்கோடிக்கும் நிலத்தின் எல்லை குறிக்கும் கள்ளிமேட்டுக்கும் மலையூற்றுக்கும் ஊருடையான் குழித் தென்கடைக்கொம்புக்கும் நெடுமணிற் கற்குழ்வுக்கும் நீர் மாற்றுத் திடலுக்கும் சிறந்த வாசனை வீசுகின்ற பூக்களை அழகிய மாலையாக அணிந்த கணத்தார் குழிக்கும் வடக்கு;

மேலெல்லை

கூற்றன்குழி மேல்குழியே போயின குளத்திற்கு நீர் பாயும் வாய்க்காலுக்கும், அழகிய மரங்கள் நிறைந்த தணமாணிக் குளத்தின் கரைப் பெருப்புக்கும், நாடரி நங்கையார் குழிக்கு மேல் குழியேயுள்ள காடனேரிக்குப் போயின வழிக்கும், குற்றமில்லாத எறிச்சில் வழிக்கும், அழகு பொருந்திய நேச்சுற நாட்டு ஒலைக்குளத்தெல்லைக்கும் கிழக்கு;

வடவெல்லை

வளப்பம் பொருந்திய வயலையும் வயல் சார்ந்த இடத்தையும் வேலியாகவுடைய இள நேச்சுறத்தெல்லைக்கும் வெள்ளாற்றுக்கும் தெற்கு.

இவ்வாறு சொல்லப்பட்ட பெரு நான்கெல்லைக்குள் உள்ள நிலம் ஒன்றும் நீங்காமல் (எனவே இவ்வெல்லைக்குட்பட்ட எல்லா நிலங்களும்) காராண்மை மீயாட்சியுள்ளடங்கக் கண்டு அமைத்து, சிறப்புப் பொருந்திய எல்லைகளில் எல்லைக்கல்லை நாட்டித் தருமங்களில் ஒன்றைப் பயிலும் திருமங்கலத்துச் சபையார்க்கும் பழமை வாய்ந்த வளப்பமுள்ள சோமாசிக் குறிச்சியிலுள்ள பெருமை பொருந்திய மறையோர்க்கும், பிரமதேயத்தன்மை தவறாத வகையில் பூமியில் தர்ம காரியங்களை நிலைபெறச் செய்தலைக் குறிக்கோளாக உடைய அரசன் கொடுத்தருளினான்.

பிறகு மிக்க பெரும்புகழுடன் மேன்மையும் உடைய சாண்டில்ய கோத்திரத்து, துதிக்கத் தக்க புகழ்கொண்ட ஏகசந்தி காத்யாயன சூத்திரத்தில் வரிவண்டுகள் தேனை நுகர்கின்ற பொழில்களையுடைய சிரீவல்லப மங்கலத்தில் சொல்லுதற்கரிய செழுஞ் செல்வத்து

தாமரை மலரில் எழுந்தருளியிருக்கும் கலை பயின்ற கணஸ்வாமி பட்டர்க்குப் பொருந்திய மகனும், எங்கும் நிலவும் பெரும்புகழுடைய யோகேச்சர பட்டர்க்குச் சிறப்பு வாய்ந்தவனும் சோமாசி என்னும் சிறந்த வேதியனின் மகள் பெற்ற செல்வமும் சிறப்பும் கொண்ட சிரீமாதவன் ஸ்ரீ மாதவசரணசேகரன், வேத வேதாந்தங்களை யும், பலவித சாஸ்திரங்களையும் தன்னோடு பிறர் ஓதிக் கேட்டு அறிந்து கொள்ளுமாறு சொல்லும் ஆசாரியனாகிய பெருந்தகை. பிரமதேயமாகிய இதற்குப் பிரசஸ்தி செய்வதற்குத் திருந்திய நற்பெருவளாலும் செழும் புனல் பாயும் பருத்தி வயக்கலையும் இவ்வயல்களின் கிணறு இரண்டையும் அக்கிணற்று நீரால் விளைகின்ற நிலத்தையும் அவ்வூர்ச் சபையோர் அடைந்தபடியே கொடுத்தனர்.

இந்தச் சிறப்புப் பொருந்திய செம்மையான தொண்டுக்குச் செப் பேட்டு வாசகத்தை ஆரியம் கலந்த தமிழ் மொழியில் பாடிக் கொடுத்த அறிஞனுக்கும், சிற்பக் கைத்திறன் கொண்ட மார்த்தாண்டனுக்கும். நிலவுலகத்தில் நிறைந்த பெரும் புகழையுடைய கண்ணங்கீரன் வயக்கல் என்னும் செல்வம் மிக்க நற்சிறுக் குளவளாலைச் சேர்ந்த சோமாசி வயக்கல் என்னும் வயல்களில் மூன்று கிணற்று நீரால் விளைகின்ற வயல் அனைத்தையும் இறையிலி நிலமாகவும் சொல்லப்பட்ட இந்தக் கிணறு மூன்றிற்கும் இடையில் இருந்த பழைய நிலம் முழுவதையும் வீடு கட்டு வதற்குரிய நிலத்தையும், எழில் மிக்க தோட்டமும், வலிய எருமைகளுக் குப் பயப்படக்கூடிய மீன்களும் வரால் மீன்களும் துள்ளப்பெற்ற நீர்வளம் பொருந்திய இப்பூமியில் மீன்களைப் பிடிக்கும் உரிமையில் பாதியை யும், மகாசபையின் குறிப்பேடு கொடுத்து, பகலைச் செய்யும் சூரியனும் இரவைச் செய்கின்ற குளிர்ந்த சந்திரனும் அகன்ற பூமியும் உள்ளளவும் செப்பேடு செய்து கொடுத்தருளினன். (யாவன் எனில்) இரத்தினங்கள் பதிப்பிக்கப்பெற்ற நீண்ட முடியையுடைய மன்னர்கள் தன்னை வணங்கக் கூடிய வீரக் கழலை அணிந்தவனும், பூமிக்கு அதிபனாகிய வாசுதேவன், அழகிய நீண்ட தோள்களையுடைய ஆஹிதாக்கினி, அசலாசலன், அநவர்ஜ்யன், கொத்தான மலர்களால் தொடுக்கப்பட்ட மார்பு மாலையையுடைய கோச்சடையன் என்னும் பெயரையுடையவன்; கூட லுக்குத் தலைவன், குருசரிதன், செந்தமிழ்க்கோன், ஸ்ரீ நிகேதனன் என்னும் ஸ்ரீ பராந்தக மகாராஜன் ஆவன். கருமார்குல முக்கியனும் சிவனடித் தாமரையில் பக்தி கொண்டவனும் பாண்டிய திரமிளாபரணன் என்ற கவி தமிழ்ப் பிரசஸ்தியை எழுதினன்.

தேர் மிகுந்த பெரிய கடல் போன்ற சேனையையுடைய பாண்டியன் திருவருளால் சீர்மிகு செப்பேட்டுக்குச் செந்தமிழ்ப் பாத் தொடுத்தவன் அற்புதம் என்று சொல்லப்படும் இடத்தில் தேன்பிலிற்றும் சடாமுடியை யுடைய சிவபெருமான் வேண்டிக்கொள்ள நல்ல கோடரி என்னும் ஆயுதத்தைச் செய்தவனும் சடைமேல் மாலையை அணிந்த மாமுனி மனு வழி வந்தோனும் ஆகிய செய்யுள் இயற்றவல்ல பண்டித தாசன் என்னும் பெயரையுடையவன். இவன் பொன்னையும் மணியையும் அகிற் கட்டைகளை யும் அரித்துக்கொண்டு கரைகளோடு மோதுகின்ற புனலையுடைய தென் வைகை வளநாடன்; செழுமைமிக்க குண்டூர் என்னும் நகரத்துக்குத் தலைவன்; தமிழாபரணன் என்னும் பல சிறப்புக்களையும் புகழையும் எய்திய பாண்டிமாராயப் பெருங்கொல்லனாகிய சிரீவல்லவன் ஆவன். பாண்டியனுடைய வலிய ஆணையாகிய, சிலை புலி இரு மீன்கள் இவைகளைப் பொன்மயமான இமயத்தின் உச்சியில் சிறந்த கருவி கொண்டு செதுக்கிய தொழில் செய்து வந்தவர்க்குப் பின்னோன் ஆவன். பல செயல்களைப் பழகி அறிந்தவர்க்கு முன்னோன் ஆவன். திருமகளின் அருள் மலிந்துள்ள இச் சாசனத்திற்குச் செழுந்தமிழ்ப் பாடினோன் தந்தை நிருபசேகரப் பெருங்கொல்லன் நிறைபுகழ் நக்கன் எழுத்து இவை.

---

# அறிமுகம்

இந்தச் செப்பேடுகள் கிடைத்த வரலாற்றை முன்னரே சின்னமனூர்ச் சிறிய செப்பேட்டுச் சாசனத்தின் முன்னுரையில் கூறியிருக்கிறோம். தென் இந்திய சாசனங்கள் மூன்றும் தொகுதி, நான்காம் பகுதியில் (S.I.I. Vol. III, Part IV No. 206) 206-ஆம் எண்ணுள்ள சாசனமாக இது வெளியிடப்பட்டுள்ளது.

இந்தப் பெரிய செப்பேட்டுச் சாசனத்தில், முதல் ஏடும் கடைசி ஏடும் காணப்படவில்லை. கிடைத்துள்ள ஏழு ஏடுகளிலே பாண்டியர் வரலாற்றை ஆராய்வதற்குப் பயன்படும் சில செய்திகள் கிடைத்திருக்கின்றன.

இந்தச் செப்பேடுகளின் இடதுபுறத்தில் வளையம் கோத்து இணைப்பதற்காகத் துளைகள் இடப்பட்டுள்ளன. இத்துளைகளுக்கு அருகில் ஏடுகளின் பக்கங்களைக் குறிக்கும் எண்கள் பொறிக்கப்பட்டுள்ளன. இந்த எண்கள் இரண்டு முதல் எட்டு வரை உள்ளன. இதிலிருந்து முதல் ஏடும் கடைசி ஏடும் காணவில்லையென்பது தெரிகின்றது. இந்த ஏடுகளை ஒன்றாகச் சேர்த்துப் பிணைத்திருந்த வளையமும் காணப்படவில்லை. கடைசி ஏடு "கற்குளத்தில்" என்ற சொல்லுடன் முடிகிறது.

இந்த ஏடுகள் ஏறத்தாழ 10 அங்குல நீளமும் 3⅞ அங்குல அகலமும் கொண்டவை. ஏட்டின் ஓரங்கள் முழுவதும் தேய்ந்திருக்கின்றன.. இந்தச் செப்பேடுகளின் மொத்த எடை 390 தோலா. என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

கிடைத்துள்ள ஏழு ஏடுகளிலே முதல் நான்கு ஏடுகளில் சம்ஸ்கிருத் சுலோகங்கள் கிரந்த எழுத்தில் எழுதப்பட்டுள்ளன. ஏனைய ஏடுகள் தமிழ் மொழியில் வட்டெழுத்தில் எழுதப்பட்டுள்ளன.

முதல் மூன்று சுலோகங்கள் பாண்டியரின் குலப்பெருமைகளையும், அகத்திய முனிவர் பாண்டியரின் புரோகிதராக இருந்ததையும் கூறுகின்றன. பிறகு பாண்டிய அரசரின் பெயர் குறிக்கப்படாமல் பொதுவாக அக் குலத்தினருள் சிலர் செய்த வீரச்செயல்கள் புராணச் செய்திகளாகக் கூறப்படுகின்றன. ஒரு பாண்டியன் இந்திரனுடைய சிங்காதனத்தில் அமர்ந்ததையும், ஒரு பாண்டியன் இராவணனைச் சமாதானத்திற்கு (சந்திக்கு) இசைவித்ததையும், ஒரு பாண்டியன் நரஸகனுடைய மகளைத் திருமணம் செய்துகொண்டதையும், கடலைக் கடைந்ததையும் சில சுலோகங்கள் கூறுகின்றன. பிறகு பாண்டிய அரசர் இந்திரனுடைய ஆரத்தைக் கைக்கொண்டதையும், குரு நாட்டவரின் சேனையை வென்றதையு. விசயனை வெற்றி கொண்டதையும் கூறுகின்றன.

ஒரு பாண்டியன் தன்னுடைய குருவைக் காப்பதற்காகத் தன் கழுத்தை அரிந்துகொண்ட செய்தி கூறப்படுகிறது. பல கலைகளையும் கற்றவனான சுந்தர பாண்டியன் பெயர் கூறப்படுகிறது. மற்றும் இராஜ சூயம், அசுவமேதம் முதலிய யாகங்களைச் செய்தவர்களாக அரசர்கள் கூறப்படுகின்றனர். அரிகேசரி என்னும் பாண்டியனும் அவனைத் தொடர்ந்து சில பாண்டியர்களும் கூறப்படுகின்றனர். இதில் வரும் அரச பரம்பரையில் முதல்வனாகக் கூறப்படும் அரிகேசரியின் மகன் ஜடிலன், அவன் மகன் ராஜசிம்மன், அவன் மகன் வரகுணன், அவன் மகன் ஸ்ரீ வல்லபன் என்னும் பெயருள்ள ஸ்ரீ மாறன் என்ற வரிசையில் அரசர்கள் கூறப்படுகின்றனர்.

ஸ்ரீமாறன், மாயாபாண்டியனையும் கேரள சிங்கள பல்லவ வல்லப அரசர்களையும் வென்றான் என்று கூறப்படுகிறது. அவனுடைய மக்கள் வர குணன், பராந்தகன் என்னும் இருவராவர். இவர்களில் பராந்தகன் கரகிரியில் போர் வென்று உக்கிரனைச் சிறைப்பிடித்தான். இப்பராந்தக னுடைய தேவியின் பெயர் வானவன் மாதேவி. இவர்களுக்குப் பிறந்த மகன் ராஜசிம்மன் என்று கூறப்படுகிறான்.

இந்த ராஜசிம்ம பாண்டியன் ராஜசிம்ம குளக்கீழ் என்னும் ராஷ்டிரத்தில், சூழல் என்ற ஊரில் தங்கியிருந்தபொழுது தன்னுடைய

பதினைருவது ஆட்சியாண்டில் பராந்தகன் என்னும் பெயருள்ள அந்தணனுக்கு அழல் நாட்டு நற்செய்கைப்புத்தூர் என்னும் ஊரை மந்தர கௌரவ மங்கலம் என்று பெயர் சூட்டித் தானமாக வழங்கினன்.

இந்தச் சாசனத்துக்கு விஜ்ஞப்தியாக இருந்தவன் ஜடிலன் என்னும் அமைச்சன். ஆணத்தியாக இருந்தவன் கூற்றங்கோன் என்பவன். கீழ்வேம்ப நாட்டுக் கூரம் என்னும் ஊரில் பிறந்தவனும், யானைப் படைத் தலைவனும், அமைச்சனுமான நக்கன் குமான் என்ற குடிகாவல் அதிகாரி எல்லைக்குப் பிடிசூழ்ந்தவன் ஆவான். அவ்வெல்லையைப் பிடி சூழ்ந்த பொழுது உடனிருந்த கணக்கர்கள் நக்கன்காடன், கோன் வேளான், படாரஞ்சோலை என்பவர்கள். இந்தப் பிரசஸ்தியைப் பாடியவன் வாசுதேவன்.

37–ஆம் சுலோகம் ராஜசிம்மனுக்கு இருந்த அபிமானமேரு என்ற சிறப்புப் பெயரையும் கூறுகிறது. இதனோடு சம்ஸ்கிருதப் பகுதி முற்றுப் பெறுகிறது.

அடுத்து வருகிற தமிழ்ப் பகுதியிலும் பாண்டியரைப் பற்றிய செய்திகள் கூறப்படுகின்றன. இவ்விரு பகுதிகளுக்கிடையே சில மாறுபாடுகள் உண்டு. சம்ஸ்கிருதப் பகுதியில் கூறப்பட்டது போன்று இதிலும் பாண்டிய அரசரின் பராக்கிரமச் செயல்களைக் கூறிய பின்னர், பாண்டியர் தலையாலங் கானத்துப் போரில் இரு பெருவேந்தரை வென்றதையும், மகா பாரதத்தைத் தமிழில் இயற்றியதையும், மதுரையில் தமிழ்ச் சங்கம் வைத்ததையும் இப்பகுதி சிறப்பாகக் கூறுகின்றது.

மேற்கூறிய பாண்டியர்கள் மறைந்த பின் இப்பரம்பரையில் பராங்குசன் தோன்றினன். இவன் நெல்வேலிப் போரில் சேர அரசனையும் சங்கரமங்கைப் போரில் பல்லவனையும் வென்ருன். இவனுடைய பெயரன் இராஜசிம்மன் என்பவன். இவனுக்கு மகனாக வரகுண மகாராசன் என்னும் பாண்டியன் தோன்றினன்.

வரகுண மகாராசனுடைய மகன் பரசக்கர கோலாகலன். குண்ணூர், சிங்களம், விழிஞம் என்னும் ஊர்களில் இவன் போர் செய்தான். குடமூக்கு (கும்பகோணம்) என்னும் ஊரில் நடந்த போரில் இவன் கங்க, பல்லவ, சோழ அரசர்களையும் கலிங்கர், மகதர் முதலியவர்களையும் வென்ருன். இவனுக்கு வரகுண வர்மனும் பராந்தக சடையனும் மக்க

ளாவர். பராந்தக சடையன் செந்நிலம், கரகிரி, கொங்கு நாட்டுப் பெண்ணுகடம் என்னும் ஊர்களில் நடந்த போர்களில் வெற்றி கொண் டான். இவனுக்கும் இவனுடைய மனைவியான வானவன் மகாதேவிக்கும் பிறந்த மகன் இராஜசிம்மன் என்பவன். இராஜசிம்மனுக்கு விகடவாடவன், மந்தர கௌரவன் என்னும் சிறப்புப் பெயர்களுண்டு. இவன் உலப்பினி மங்கலம் என்னும் ஊரில் நடந்த ஒரு போரில் பகைவனை வென்றான். நைப்பூர்ப் போரில் தஞ்சை மன்னனைத் தோல்வியுறச் செய்தான். கொடும்பை (கொடும்பாளூர்)ப் போரிலும் வெற்றிகண்டான். பொன்னி (காவிரி)க் கரை மேல் இருந்த கொங்கு நாட்டு வஞ்சி நகரத்தை வென்று தீயிட்டான். நாவல் என்னும் ஊரில் தென் தஞ்சை நாட்டு மன்னனுடன் போரிட்டு அவன் படைகளை அழித்தான்.

இவ்வரசனுடைய இரண்டாவதன் எதிர்ப் பதினைன்காம் ஆண்டு என்பதைச் சமஸ்கிருதப் பகுதி பதினாறும் ஆண்டு என்று கூறுகிறது. இவன் இராஜசிம்மப் பெருங்குளக்கீழ் என்னும் நாட்டுச் சூழல் என்னும் ஊரில் தங்கியிருந்த பொழுது பராந்தகன் என்னும் அந்தணனுக்கு அழல் நாட்டு நற்செய்கைப் புத்தூர்க் கிராமத்தை மந்தர கௌரவமங்கலம் என்று பெயர் சூட்டித் தானமாகக் கொடுத்தான்.

இந்தத் தானத்தைக் கொடுக்கும்படி அரசனிடம் விண்ணப்பஞ் செய்துகொண்டவன் சோழ நாட்டுப் புள்ளமங்கலத்துச் சடையபிரான் பட்ட சோமயாஜி என்பவன், ஆணத்தியாக இருந்தவன் களவழி நாட்டு, வேம்பற்றூர்க் கூற்றங்கோன் என்புவன். கீழ் வேம்ப நாட்டுக் கூரம் என்னும் ஊரவனாகிய குமான் என்பவன் குடிகாவல் நாயகன் என்றும் அவன் எல்லையைப் பிடி சூழ்ந்தான் என்றும் குறிப்பிடப்படுகிறான். மூன்று கணக்கர்கள் அதாவது நக்கன் காடன், படாரஞ் சோலை, கோன் வேளான் என்பவர்கள் எல்லை வகுத்தபோது உடன் இருந்தவர்கள். நாட்டார்களும் எல்லை வகுத்தபோது உடன் இருந்தார்கள். தானங் கொடுக்கப்பட்ட ஊரின் கிழக்கெல்லை சுருளியாறு என்று கூறப்படுகிறது. இதன் தென்னெல் லையைக் கூறுகிற பகுதியும் மற்ற எல்லைகளைக் கூறுகிற பகுதியும் அடுத்த ஏட்டில் குறிப்பிட்டிருக்க வேண்டும். அந்த ஏடு கிடைக்கவில்லை.

இந்தச் செப்பேட்டுச் சாசனத்தின் சுலோகப் பகுதியில் காணப்படு கிற முக்கியமான பகுதியைச் சுட்டிக்காட்ட வேண்டுவது முறையாகும். அது தமிழ் மொழியின் சிறப்பு எழுத்துக்களாகிய ழ, ற என்னும் எழுத்துக்

கள் சம்ஸ்கிருதத்தில் கிரந்த எழுத்துக்களுடன் சேர்த்து எழுதப்பட்டிருப் பதுதான். அவையாவன:—வரி 58 இல் "ராஜசிம்ம குளக் கீழித்யுக்தே ராஷ்ட்ரே" (ராஜசிம்மக் குளக்கீழ் என்று சொல்லப்பட்ட நாட்டில்) என்றும், 59ஆம் வரியில் "சூழலாக்யோஜ்வலம்" (சூழல் என்னும்பெயரால் விளங்கும்) என்றும், 60 ஆம் வரியில் "அழ நாட பாஜம்" (அழல் நாட்டைச் சேர்ந்த) என்றும், 68ஆம் வரியில் "கூற்றங் கோனஹ்வயோ" (கூற்றங்கோன் என்று பெயருள்ள) என்றும், 69 ஆம் வரியில் "கீழ் வேம்ப நாடாபிஜநஸ்ய" (கீழ் வேம்ப நாட்டில் பிறந்த) என்றும் எழுதப்பட்டிருப் பது கவனிக்கத்தக்கது. இனி இச் சாசனத்தில் கூறப்படுகிற பாண்டிய அரச ரின் பரம்பரையைக் கூறி இதனை முடிப்போம்.

———

# சின்னமனூர்ப் பெரிய செப்பேட்டின்படி பாண்டியர் வழிமுறை

## (சம்ஸ்கிருதப் பகுதி)

**அரிகேசரி**

↓

**ஜடிலன்**

↓

**ராஜசிம்மன்-I**

↓

**வரகுணன்-I**

↓

**ஸ்ரீ மாறன், ஸ்ரீ வல்லபன்,**
(மாயாபாண்டியன், கேரளன், சிங்களன் இவர்களை வென்றவன். பல்லவனையும் வல்லபனையும் வென்றவன்.)

↓

**வரகுணன்-II**

**பராந்தகன்**
(மனைவி—ஸ்ரீவானவன் மகாதேவி. இவன் கரகிரியில் உக்கிரனைச் சிறைப் பிடித்தவன்.)

↓

**ராஜசிம்மன் II**
**(அபிமானமேரு)**
சின்னமனூர்ப் பெரிய செப்பேடு வழங்கினவன்.

## (தமிழ்ப் பகுதி)

**பராங்குசன்**
(நெல்வேலியில் சேரனையும் சங்கரமங்கையில் பல்லவனையும் வென்றவன்.)

↓

**(பேரன்) ராஜசிங்கன்**

↓

**வரகுண மகாராஜன்**

↓

**பரசக்கர கோலாகலன்**
(குண்ணூர், சிங்களம். விழிஞம் ஊர்களை வென்றவன். குடமூக்குப் போரில் கங்க பல்லவ சோழ கலிங்க மகத அரசர்களை வென்றவன்.)

↓

**வரகுணவர்மன்**

**பராந்தக சடையன்**
(செந்நிலம், கரகிரி, பெண்ணுகடம் போர்களை வென்றவன்.)

↓

**இராச சிம்மன்**
விகடவாடவன், மந்தரகௌரவன் என்ற சிறப்புப் பெயர் கொண்டவன். உலப்பினி மங்கலம், நைப்பூர், கொடும்பை, நாவல் போர்களை வென்றவன். சின்னமனூர்ப் பெரிய செப்பேட்டை வழங்கினவன்.

# சின்னமனூர் (பெரிய) சாசனம்

## சாசன வாசகம்

### [2]இரண்டாம் ஏடு—முன்புறம்

1. त्वंगत्तरंगावलि भंगरंगत्पतंग नक्षत्रशशांकरत्न: [।*] कल्पावसानक्षुभि

2. तोपि सिन्धुर्य्यत्पादर्पाठश्रियमाललम्बे ॥ [१*] वंशस्तस्यासीद्विक्रमाक्रा

3. न्तविश्वश्शत्रुक्षत्रश्रीशर्व्वरीसप्तसप्ति: [।*] पुण्यश्लोकानाम् भूरिधाम्नान्नृपाणा

4. म् यत्रोत्पन्नानान्धर्म्मपत्नी धरित्री ॥ [२*] हताखिलाराति महीपती

5. नां हिमाचलारोपितशासनानाम् [।*] पुरोहितोभूदवनीपतीना[म्]

6. यदुद्भवानाम् भगवानगस्त्य: [३*] निहत्य देवासुरयुद्धमध्ये महा

7. सुरान्मानधनो यदुद्ध: [।*] अर्धांनिषण्णामरलोकमेकस्सुरेन्द्रसिंहासन

8. मध्यतिष्ठत् ॥ [४*] जयाय दौत्यन्त्रिदिवालयानाञ्जगाम कश्चित्कृतधी: कृतज्ञ: [।*] द

9. [3]शाननन्तसन्धिपरश्चकार नरेश्वर: कश्चिदखण्डिताज्ञ: ॥ [५*] नरसखत

10. नया पतिर्न्नरेन्द्रस्त्रिभुवनगीत गुणस्त्रिलोचनश्च [।*] मथितजलनिधिश्च

1. தென்னிந்தியச் சாசனங்கள் (South Indian Inscriptions) தொகுதி 3, பகுதி 4ல் அச்சிடப் பட்டுள்ள மசிப்படத்திலிருந்து வாசிக்கப்பட்டது.

2. ஏட்டின் வளையத்தின் துவாரத்திற்கு வலதுபுறம் 2 என்று எண்ணிடப்பட்டுள்ளது.

3. शानन्त सन्धि என்று படிக்க.

### *இரண்டாம் ஏடு—பின்புறம்

11. यत्र जात [:*] क्षितिपतिरप्रतिमोप्यगस्त्यशिष्य: ॥ [६*] विदलितवलयस्सुरे

12. न्द्रमौलौ हृतहरिहारविभूषितश्च यद्भूः [।*] कुरुपतिबलतूल कालव[ह्नि]

13. र्ज्जितविजयश्च यदुद्भवो नरेन्द्र: ॥ [७*] चकर्त्त कश्चिन्निजमुत्तमांगं गुरु

14. न्निजं पालयितुं यदुद्भूः [।*] समस्तशास्त्रार्ण्णव कर्ण्णधारो यदुद्भवस्सुन्दर

15. पाण्ड्यनामा ॥ [८*] यत्रोत्पन्ना राजसूयाश्वमेधैरिष्ट्वाने

16. कैर्द्देवभूयं [1]प्रपन्ना: [।*] संख्यातीतास्सार्व्वभौमा नरेन्द्रा: कस्ता

17. न्मर्त्य: कृत्स्नशो वक्तुमीष्टे ॥ [९*] तत्रासीदरिकेसरी नरपतिर्व्वंशे व

18. शी श्रीनिधिस्तत्पुत्रो जटिलस्सुतो [ऽ*]स्य नृपति [:*] श्रीराजसिंह: कृती [।*] प्राज्ञ [:*] स्फी

19. त पराक्रमो वरगुणस्तस्यात्मजस्तत्सुत [:*] श्रीमार: श्रवणीय कीर्त्तिरजि

20. त [:*] श्रीवल्लभो भूपति: ॥ [१०*] मायापाण्ड्यं केरळं सिंहळे [न्द्र] ञ्जित्वा [2]संखे

### மூன்றும் ஏடு—முன்புறம்

21. पल्लवम् वल्लभञ्च [।*] एकच्छत्राम् मेदिनीमेकवीर [:*] प्रारक्षद्य: प्रे

22. मपात्रम् प्रजानाम् ॥ [११*] नृपकिरीटमणिद्युमणिप्रभाविसरभासितपादस

23. रोरुह:[।*]वरगुणस्य विभोरनुज: कृती नरपतिस्तनयो[ऽ*]स्य परान्तक: ॥[१२*]

1. प्रपन्ना: என்று படிக்க.
2. संख्ये என்று படிக்க.

* வளையத்தின் துவாரத்திற்கு வலதுபுறத்தில் 3 என்று தமிழ் எண்ணிடப்பட்டுள்ளது.

24. खरगिरिमभित: करीन्द्रयू [थं] रिपुनृपशोणितशोणदन्तमाजौ [।*] करकलितक्

25. पाण मा[त्र] सैन्यस्सरभसमुग्र[1]मुदग्रमग्रहीन्य: ॥ [१३*] अग्रहारै

26. रप्रमेयैरनेकैर्देवस्थानैरस्त[2]सम्स्थैस्तटाकै

27. : [।*] पू[र्ण] म् पुण्यै[3]र्य्यस्स्वयम् पुण्यकीर्त्तिश्चक्रे चक्रश्चक्रवर्त्ती ध [रा]

28. या: ॥[१४*] श्रीरिव श्रीनिवासस्य पौलोमीव शतक्रतो: [।*] [श्री] वानवन्महा

29. देवी देवी तस्य प्रभोरभूत् ॥ [१५*] तस्याज्ञात [:*] श्रीनिधेस्तस्य देव्याम्

30. पुत्रश्शत्रुक्षत्रवित्रासनश्री: [।*] प्रज्ञाशौर्य्यस्थैर्य्यधैर्य्याभि

மூன்றும் ஏடு—பின்புறம்

31. जात्यत्यागाधार: पार्त्थिवो राजसिंह: ॥ [१६*] राजन्वती भवति यम्

32. पतिमेत्य [4]पृत्थी देवन्दिवाकर निशाकरवंशकेतुम् [।*] आचिं[म्]

33. परामरि[5]कदम्ब्वकमर्त्थिसार्त्थम् पूर्त्तिन्नयन्तमखिला हरितश्च कीर्त्तिम् [।*][१७*]ना

34. लम् भवन्ति निखिलार्त्थिजनाभिलाषास्त्यागस्य यस्य रिपवो[ऽ*]पि पराक्रमस्य[।*]की

35. र्त्तेस्समस्तभुवनानि समुल्लसन्त्या वाचस्पतेरपि व

36. चांसि गुणस्तुतीनाम् ॥ [१८*] अर्त्थैरनर्त्थरहितैरखिलान्द्वि

37. जेन्द्रानत्यर्त्थ र्थरहितैरहितानन्र्थै: [।*] आपूरयन्दशदिशोप्यम

38. लैर्यशोभिर्य्यो[ऽ*]यम् भुनक्ति भुवनम् भरतानुभाव: ॥ [१९*] श्रीमान् [कौ]

1. मुदग्रमग्रहीय: என்று படிக்க.
2. संस्थैस्त என்று படிக்க.
3. र्य्यस्स्वयं என்று படிக்க.
4. पृथ्वी देवं दिवाकर என்று படிக்க.
5. कदम्बक என்று படிக்க.

39. [शि]क वंशजश्श्रुतधन [:*] श्रीश्रेष्ठिशर्म्मात्म [ज] [:*] श्रेष्ठश्शीलवताम् परान्त

40. क इति प्रख्यातनामो[ज्*]ज्वल: [।*] तस्यास्ति प्रथितान्वय: पृथुयशा: प्रा

[1] நான்காம் ஏடு—முன்புறம்

41. ज्ञ: कृतज्ञ: कृती राज्ञ: प्राज्यगुण: प्रभूतविनय: श्रेमैकपात्रम् प्रभो: ॥ [२०*]

42. पौत्रस्[2]त्रैयेकधाम्न: परहितनिरतो भास्कराख्यस्य यो [ऽ*] भूद्विद्यानद्या

43. [:*] पयोधिर्व्विविधबुधजन प्रार्थनापारिजात: [।*] पुत्तूराप्तोदयानाम्

44. पुरुनरतपसाड्भिकुटिकौशिकानां श्रेष्ठस्य श्रेष्ठि

45. नाम्नश्श्रुतविनयनिधे: श्रीनिधेर्य्यश्च नप्ता ॥ [२१*] आग्निवेश्य

46. कृतं क[ल्प]मनल्पं यस्य पूर्व्वजा: [।*] प्रतिष्ठाम् सूतधारिण्यामनयन्वेद

47. पारगा: ॥ [२२*] मौद्गल्यानां स्यन्दनग्रामजानाम् मुख्य: ख्यात [:*] स्फीत [वृ] त्ताभि

48. जात्य: [।*] श्रीनान्धीमान्कीर्त्तिनानूरशर्म्मा धर्म्माधारो यस्य मातामहो [ऽ*] भूत्

49. ॥ [२३*] विद्या वृत्तं विनयविभव[:*][3]श्लाघनीया च लक्ष्मीर्लक्ष्मीभर्त्तुश्चरणकमला

நான்காம் ஏடு—பின்புறம்

50. संगिनी चित्तवृत्ति: [।*] नित्योत्तुंगश्शुचिरभिजन: शाश्वती कीर्त्तिरुच्चै:

51. प्रज्ञा चेति प्रथितयशसो यस्य वंशव्रतानि ॥ [२४*] [4]वृत्तावदातो विन

52. यैकपात्रम् प्रभु: पिता यस्य पितामहश्री: [।*] प्राज्ञ: [5]प्रसत्न: प्रथिताभि

1. துவாரத்தின் வலதுபுறத்தில் 4 என்று தமிழில் எண்ணிடப்பட்டுள்ளது.
2. त्र्य्येकधाम्न: என்று வாசிக்க.
3. श्लाघनीया என்று படிக்க.
4. वृत्ता என்று படிக்க.
5. प्रसन्न: என்று படிக்க.

53. जात्य [:] श्रीश्रेष्ठिशर्मा श्रवणीयकीर्त्तिः ॥ [२५*] पाण्ड्यान्ववायतिलका

54. त्पुण्यश्लोकात्परान्तकात् [।*] वीरनारायणाद्देवाद्वीराद्वीमत्

55. पुरोगमः ॥ [२३*] वटकळवழराष्ट्रतो [ऽ*] ग्रहारम् महितगुणम् मणियाच्चि ना

56. मधेयम् [।*] अलभत मतिमाननूनसारम् विहिततिचैच्चटर्मंगलाभि

57. धानम् ॥ [२७*] स राजा रञ्जिताशेषभूचक्रश्शक्रविक्रमः [।*] षोडशे राज्य

58. वर्षे स्वे सादितारातिमण्डलः ॥ [२८*] राजसिंह कुळक्कीழस्तु [क्ते] रा

[1] ஐந்தாம் ஏடு—முன்புறம்

59. ष्ट्रे प्रतिष्ठितम् [।*] चू ழ लाख्योज्वलं ग्राममा[व]सन्नमरोपमः ॥ [२९*] अ

60. नून[2]लक्ष्मी அழஞ டभाजम् நற்செய்கைபுத்தூरभिधानभाजम्[।*] कारा

61. ण्मैमीयाट्चियुतं समस्तन्निरस्तपृथ्वीवलयोपसर्गः ॥ [३०*] करे

62. [णु] सञ्चारविभक्तसीमा[3]चतुष्टयस्तुष्टिकर प्रजानाम् [।*] स ब्रह्मदेय

63. स्थितिममुवुपूर्व्वन्द्विजाय तस्मै सकलं समग्रम् ॥ [३१*] वि

64. हितमन्दरगौरव मंगलाह्वयविराजितमग्रहरं वरं [।*] स

65. मदिशत्स परान्तकशर्म्मणे निरुप [म*] म् नृपतिर्नयकेतनः ॥ [३२*] धर्म्मो

66. पदेष्टा नृपतेरमुष्य मन्त्री कविश्श्रीनिधिरत्रिगोत्रः [।*] विज्ञप्तिरस्याहृतस

67. मतन्तुस्तुंगाभिजात्यो जटिलो [ऽ*] जनिष्ट ॥ [३३*] श्रीमारवर्म्मणस्तस्य भृत्यः

68. क्षत्रशिखामणेः[।*]கூற்றங்கோनाह्वयो[ऽ*][4]स्याभूराज्ञप्तिरमलान्वय[:*] [३४*]

1. துவாரத்தின் வலதுபுறம் 5 என்று தமிழ் எண்ணிடப்பட்டுள்ளது.
2. लक्ष्मीर ழ என்று படிக்க.
3. चतुष्टयं तुष्टिकरः प्रजानाम् என்று படிக்க.
4. स्या भूदाज्ञप्ति என்று படிக்கவும்.

ஐந்தாம் ஏடு—பின்புறம்

69. कीः्‌ वेम्पनाटाभिजनस्य पुत्रो नक्कंकुमानित्यवदातनाम्नः [।*] क्रूरासज

70. न्मा सचिवो नृपस्य नाथः करिण्या[:*]कुटिकावलासीत् ॥ [३५*]नक्कंकाटस्य कोन्वे

71. ळान्पटार[1]श्चोलयांह्वयः [।*] इत्येते गणकाश्चात्र करिणीश्रमरे [ऽ*] भव

72. [2]त् ॥ [३६*] पात[3]प्रसन्नमनसस्सुकृतम्ममेति सो[ऽ*]यं समस्तवसुधाधिप

73. वन्दनीयः [।*] वद्धाञ्जलिः प्रतिदिनम् प्रणमत्यशेषानागामि

74. नः क्षितिपतीनभिमानमेरुः ॥ [३६*] विदितसकल[4]वां[न्म]य

75. स्य विष्णोर्विनयनयप्रभवस्य पूर्व्वजो यः [।*] अरचयदतुला

76. मिमाम् प्रशस्तिम् मधुरगुणस्य सखा स वासुदेवः ॥ [३८*] स्वस्ति श्री [॥*]

77. திருவொடுந் தெள்ளமிர்த [த்*] தொடுஞ் செங்கதிரொளிக் கௌஸ்துபத் தொடும் அ

78. ருவிமதக் களிறென்றெடுந் தோன்றி அரனவிர் சடைமுடி வீற்றிருந்

79. த வெண்டிங்கள் முதலாக வெளிப்பட்டது நாற்றிசைஓர் புகழ்நீரது நா

[5]ஆறும் ஏடு—முன்புறம்

80. னிலத்திலே[6]பெற்றது भारद्वाजादि களால் நெரஸ்துதிக்கப்பட்டது வி

1. चोलयाह्वयः என்று வாசிக்க.
2. न् என்று படிக்க.
3. प्रसन्न என்று படிக்க.
4. वाङ्मय என்று படிக்க.
5. வனேயம் கோக்கும் துவாரத்தின் வலதுபுறமாக 6 என்று தமிழில் எண்ணிடப்பட்டுள்ளது.
6. தினிலே என்று படிக்க.

வரி 77. கௌஸ்துப

„ 80. (ஏ) பாரத்வாஜாதி (பி) ஸ்து

81. ரவலர்க் கரியது மீநத்வய சாஸநத்தது பொருவருஞ்சீர் அ

82. கத்தியனை புரோஹி தனாகப் பெற்றது ஊழிஊழிதொறு முள்ள

83. து நின்ற ஒருவனை உடையது வாழியர் பாண்டியர் திருக்குல மி

84. (ற்) தனில் வந்துந் தோன்றி வானவெல்லை வரைத்தாண்டும் மலைக்
கடல் [க]

85. டைந் தமிர்து கொண்டுந் நானிலத்தோர் விஸ்மயப்(ப்)பட

86. நாற்கடலொரு பகலாடிஉம் [1] மறுகிலொளிர் மணிமு

87. டிஒடு சங்க வெள்வளைத் [2] தரத்தும் நிலவுலகம் வலஞ்

88. செய்துந் நிகரில் வென்றி அமரர்க்குப் பலமுறைஉந்

89. தூதுய்த்தும் பாகசாஸந னாரம் வவ்விஉஞ் செம்மணிப் பூணொடு

90. தோன்றித் தென்றமிழின் கரைகண்டும் வெம்முனை வேலொன்று
விட்டும்

91. விரைவரவிற் கடல்மீட்டும் பூழியனெனப் பெயரெய்திஉம் போர்

92. க்குன்றாயிரம் [3] மீசிஉம் பாழியம் ப்பயலி னிமிர்ந்தும் பஞ்ச

93. வனெனும் பெயர் நிறீஉம் வளமதுரை நகர்கண்டும் மற்றதற்கு
மதி

[4] ஆறாம் ஏடு—பின்புறம்

94. ள் வகுத்தும் உளமிக்க மதிஅதனா லொண்டமிழும் வடமொழி

1. மறுவிலொளி என்று படிக்க.
2. தரித்தும் என்று படிக்க.
3. வீசியும் என்று இருக்க வேண்டும்.
4. வளையத்தின் துவாரத்தைச் சுற்றிலும் ஒரு சதுரம் இரண்டு வரிகளில் காணப்படுகிறது.

வரி 81. மீநத்வயசாஸ
,, 82. புரோஹி
,, 85. விஸ்ம
,, 89. பாகசாஸ

95. உம்பழுதறத் தாஞராய்ந்து பண்டிதரில் மேந்தோன்றிஉம் மா

96. ரதர் மலைகளத் தவியப் பாரதத்திற் பகடோட்டிஉம் விஜயனை

97. 𑌵𑌸𑍁𑌶𑌾𑌪𑌂 நீக்கிஉம் வேந்தழியச் சுரம் போ[க்*]கிஉம் வசை இல் மாக்

98. கயல்புலி சிலைவடவரை நெற்றிஇல் வரைந்துந் தடம்பூதம் பணி [கொ]

99. ண்டு தடாகங்கள் பல திருத்திஉம் அடும் பசிநோய் நாடகற்றி

100. அம்பொற் 𑌚𑌿𑌤𑍍𑌰 முயரிஉந் தலைஆலங் கானத்திற்றன்னெக்கு

101. மிரு வேந்தரைக் கொலைவாளிற் றலைதுமித்துக் [1]குறத்தலையின்

102. கூத்தொழித்தும் 𑌮𑌹𑌾𑌭𑌾𑌰தந் தமிழ்ப் படுத்தும் 𑌮𑌧𑍁𑌰𑌾𑌪𑍁𑌰𑌿ச்ச

103. ங்கம் வைத்தும் 𑌮𑌹𑌾𑌰𑌾𑌜 ரும் 𑌸𑌾𑌰𑍍𑌵𑌭𑍌𑌮 ரு 𑌮𑌹𑌿𑌮𑌣𑍍𑌡𑌲ங் காத்

104. திகந்தபின் வில்லவனை நெல்வேலிஉம் விரிபொழிற் (ச்)

105. சங்கரமங்கைப் பல்லவனைஉம் புறங்கண்ட பராங்குசன் பஞ்ச வர்தோன்

106. றலு மற்றவற்கு 𑌪𑍌𑌤𑍍𑌰ஞயின மன்னபிரா னிரா- சிங்கனும் கொற்ற

107. வ[ர்] கடொழு கழற்காற் கோ 𑌵𑌰𑌗𑍁𑌣𑌮𑌹𑌾𑌰𑌾𑌜 னும் ஆங்க்வற்கா 𑌤𑍍𑌮𑌜ன

108. கி அவனி தலந் பொறை தாங்கித் தேங்கமழ் பொழிற் குண்ஞரி லுஞ் சி

---

குறைத்தலையின் என்று படிக்க.

வரி 97. வஸுசாபம்
,, 100. சித்ர
,, 102. மஹாபார மதுராபுரி
,, 103. மஹாராஜ ஸார்வபௌம மஹிமண்டல
,, 106. பௌத்ர
,, 107. வரகுண மஹாராஜ த்மஜ

109. ங்களத்தும் விழிஞத்தும் வாடாத வாகை சூடிக் கோடாத செங்கோ னட [ா]

### ஏழாம் ஏடு—முன்புறம்[1]

110. விக கொங்கலர் பொழிற் குடமூக்கிற் போர்குறித்து வந்தெதிர்ந்

111. த ग॑गपल्लवचोळकालिंगमागधादिகள் குருதிப் பெரும்புனற்

112. குளிப்பக் கூர்வெங்கணை தொடை ஞெகிழ்த்துப்பருதி ஆற்றலொடு வி

113. ளங்கின பரசக்கிர கோலாலனுங் குரைகழற்கா லரை சிறைஞ்சக் குவ

114. லையதலந் தனதாக்கின வரைபுரையு மணிநெடுந்தோள் மன்னர் கோன் வரகு

115. ணவர்ம்மனும் மற்றவனுக் கிளையனுன மனுசரிதன் வாட்சடை

116. யன் பொற்றடம்பூண் சிரிபராந்தகன் புனைமணிப் பொன்முடி

117. சூடிக் கைந்நிலந் தோய் கரிகுலமும் वाजि[2]व्रन्दமுங் காலா

118. ளுஞ் செந்நிலத்தி னிலஞ் சேரத் திண்சிலை வாய்க்கணை சித

119. றிஉம் खरगिरि இற் கருதாதவர் वरकरिகுல நிரைவாரிஉ

120. ம் நிலம்பேர நிகர்கடந்துந் நெடும் பெண்ணகட மழித்தும்

121. ஆலும் போர்ப் பரிஒன்று லகன்கொங்கி லமர்கடந்துந் देवदा

[1] துவாரத்தின் வலதுபுறம் "எ" என்ற தமிழ் எண்ணிடப்பட்டுள்ளது.

[2] वृन्द என்று படிக்க.

வரி 111. கங்க பல்லவ சோள காலிங்கமாகதாதி

,, 115. ர்ம்ம

,, 117. வாஜிப்ரந்த

,, 119. கரகிரி வரக

,, 121. தேவதா

122. நம் பலசெய்தும் ब्रह्मदेय पल திருத்திஉந் நாவலந்தீ வடி

123. ப்[1]படுத்த நரபதிஉம் வானடைந்தபின் வானவன்महादेवि என்

124. னு மலர்மடந்தை முன்பயந்த மீனவர்கோனிராசசிங்கன்விகட

125. வாடவனவனேய் அहिपति ஆயிரந் தலையாலரிதாகப் பொறுக்கி

ஏழாம் ஏடு—பின்புறம்

126. ன்ற மஹிமண்டலப் பெரும் பொறை தன் महाभुज ब லத்தாற்ருங்கி

127. भुजगनाय[क] धरणिधारण हरणराजित भुजवलனைய் உலப்பி

128. [2]நி மங்கலத் தெதிர்ந்த தெவ்வ ருடலுகுத்த செந்நீர் நிலப்பெண்

129. ணிற் கங்கராகமென நீவப்பாணி தந்தும் மடைப்பகர் நீர்த் தஞ்சை

130. யர் கோன் தானைவரை நைப்பூரிற் படைப் பரிசாரந் தந்து [போ]கத்

131. தன்பணை முழக்கிஉங் கொடும்பை மாநகர் நிறைந்த குரைக

132. டல்ப் பெருந்தானை இடும்பைஉற் றிரியத்தனி ரெணைதுபமேல் கொ

133. ண்டும் புனற் பொன்னி வடகரைஇற் பொழில்புடை சூழ்மதி

134. ள் வஞ்சிக் கனற்பட விழித் தெதிர்ந்த வீரர் கவந்தமாடக் க

135. ண் சிவந்துஞ் சேவலுயர் கொடிக் குமரனெனச் சீறித் தென்றஞ்சை

வ·ரி 122. ப்ரம்மதேயம்
,, 123. மஹாதே
,, 125. ஹிபதி
,, 126. ஹாபுஜப
,, 127. புஜகநாயக தரணிதாரண ஹரண ராஜித புஜபல

[1] படுத்து என்று படிக்க.

[2] நி என்பதை லி என்று படிக்கலாம்.

## சின்னமனூர் (பெரிய) சாசனம்

### எட்டாம் ஏடு—முன்புறம்




### எட்டாம் ஏடு—பின்புறம்



136. காவலனது கரிதுரக பதாதிசங்... களத் தவியப் பூம்புன னுவை

137. ற்பதிஇல் வாம்புரவி பலங்காட்டிஉம் विजयध्वजम् விசும்ப

138. ணவச் செங்கோ றிசைவிளிம் பணவக் குசைமாவுங் கொலைக் குன்றமு

139. ங்குருதி ஆரமுங் குணந்தும் குலवद्ध னரடிவணங்கம

[1]எட்டாம் ஏடு—முன்புறம்

140. हेन्द्रभोग மனு भवित्त विकटवाटवன் श्रीकान्तநं मीनांकितशैले

141. ந்திரன் राजशिखामணி தென்னன் ராஜித गुणगणங்கோன்ன

142. ண்ணிறந்த ब्रह्मदेयமும் எண்ணிறந்த देवदाநமும் எண்ணிறந்தப

143. ள்ளிச்சந்தமும் எத்திசைஉ மினிதியற்றி உராம்பி லொ

144. தி ஒலிகடல்போ லொருங்கு முன்னந் தானமைத்த வலிரா

145. ச சிங்கப் பெருங்குளக் கீழ்ச் சூழனகரிருந்த

146. ருளி राज्यवर्षம் இரண்டாவதனெதிர் பதினுன்கா

147. ம் யாண்டில் மாக்கொழுவூர்க் கூற்றத்து வருபுனல் மிய்

148. குண்டாற்றுப்[பு]த்தூரெனப் பெயரெய்திய கொத்தார்பொழிற்
ग्रा

149. மத்திற் கொமர कौशिकगोत्रத்திலாम्रेय कल्पத்தி லொம்பாழ்

150. வரில் மிக்கோனுயர் தருபெருப்புகழ்ச் செட்டி குலமதலை கு

151. வலைய सुरந்நலமிகு भास्करनन्दनநं தென்னவர்கோன் ஸ்ரீ பராந்தக

1. துவாரத்தின் வலதுபுறம் "அ" என்று தமிழில் எண்ணிடப்பட்டுள்ளது.
வரி 136. ஸங்கப்
,, 137. விஜயத்வஜம்
,, 139. லவர்த்த ம
,, 140. ஹேந்த்ர போக பவி விகடவாடவ ஸ்ரீகாந்தம் மீநாங்கிதசைலே
,, 141. ராஜசிகா குணகண
,, 142. ப்ரஹ்மதேய தேவதா
வரி 146. ராஜ்யவர்ஷம்
,, 148. க்ரா
,, 149. கௌசிக கோத்ர க்நிவேச்ய கல்ப
,, 151. ஸூர பாஸ்கரநந்தன

152. ந் 𑌶𑍍𑌰𑍀𑌵𑍀𑌰 நாரண னருளால் வடகளவழி நாட்டின்கட் டிசைச் சுட

153. ர் மங்கலமென்னுமிடனுடைய 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌦𑍇𑌯 மேக 𑌭𑍋𑌗 மாப்பெ

### எட்டாம் ஏடு—பின்புறம்

154. ற்றோன். 𑌪𑌤𑍍𑌮𑌾𑌸𑌨 𑌸𑌦𑍃𑌶னாயின பல [ர்] புகழ்𑌭𑌾𑌸𑍍𑌕ரன்செ

155. ட்டிதன் மாமகன் 𑌸𑌾𑌧𑍁𑌮𑌾𑌰𑍍𑌗ந் 𑌸𑌤𑍍𑌵𑌮𑌿𑌤𑍍𑌰ந் 𑌸𑌦𑍍𑌗𑍁𑌣𑌾𑌲𑌯ந் படை

156. க் கமலவனச் செங்குடிக் 𑌕𑍌𑌶𑌿𑌕ந் பராந்தகன் றனக்க𑌨𑍁𑌗𑍍𑌰𑌹

157. 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿யாகி முன்னுரைத்த அரைசர்பிரான் அந்தண் புனலழனாட்

158. டில் நற்செய்கை புத்தூர தனை மந்தர 𑌗𑍌𑌰வமங்க

159. லமென்று தன்பெயரிட்டுக் க[ா]ராண்மை மீயாட்சி உள்

160. ளடங்கக் கண்டருளி ஏக 𑌭𑍋𑌗𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌦𑍇யமாக நன்கு

161. கொடுத்தருளினன் [॥*] மாகந்தோய்குடை மன்னவன் 𑌶𑍍𑌰𑍀

162. 𑌰𑌾𑌜𑌸𑌿𑌂𑌹𑌵𑌰𑍍𑌮𑍍𑌮𑌨𑍍 [॥*] சோழநாட்டுப் புல்லமங்கலத்துசடைய

163. பிரான் 𑌭𑌟𑍍𑌟𑌸𑍍𑌸𑍋𑌮𑌯𑌾𑌜𑌿 விண்ணப்பஞ்செய களவழி நாட்டு வேம்பற்றூ
ர்க் கூற்றங் கோனா

164. னை ஆளாகவும் கீழ்[1] வேம்பனிட்டுக் கூரக்குமானை குடிகாவல் நாயகனாகவும் திருக்

1. வேம்பனாட்டு என்று படிக்க.

வரி 152. ஸ்ரீவீர
,, 153. ப்ரம்மதேய போக
,, 154. பத்மாஸன ஸத்ருச பாஸ்க
,, 155. ஸாதுமார்க்கந் ஸத்வமித்ரந் ஸத்குணாலயந்
,, 156. கௌசிக நுக்ரஹ
,, 157. புத்தி
,, 158. கௌர
,, 160. போகப்ரம்மதே
,, 161. ஸ்ரீ
,, 162. ராஜஸிம்ஹவர்ம்மன்
,, 163. பட்டஸ்ஸோமயா

165. கானப்பேர்க் கூற்றத்துச் சிறுசெவ்லூர் நக்கங்காடனும் மிழலைக் கூ

166. ற்றத்து நடுவிற் கூற்றிற் றுஞ்சலூர்ப் படாரஞ் சோலைஉம்களாத்தி

167. ருக்கைப் பெருங்காக்கூர்க் கோன்வேளானுங்கணக்கராகவும் அழ[னு]

168. ட்டுனட்டார் நின்றெல்லை காட்டப்பிடிசூழ்ந்த பெருநான்கெல்லை கீழெ

169. ல்லை சுருளி ஆற்றுக்கு[1] மேக்குந் தென்னெல்லை கற்குளத்தில்...*

[1] "மேற்கும்" என்று வாசிக்க.

* இதற்குப் பிறகு ஒன்று அல்லது இரண்டு செப்பேடுகள் இருக்கவேண்டும். அவ்வேடுகள் காணப்படவில்லை. ஆகையால் சாசனம் முற்றுப்பெறவில்லை.

# சின்னமனூர் (பெரிய) சாசனம்

### சம்ஸ்கிருதப் பகுதியின்

# மொழிபெயர்ப்பு

**சுலோகம்—1**

குதித்தெழுகின்ற அலைவரிசைகளால் மோதப் பெற்றுச் சுழல்கின்ற சூரியன், நக்ஷத்திரங்கள், சந்திரன் என்பவைகளை இரத்தினங்களாகக் கொண்ட கடலானது, ஊழிக்காலத்தின் இறுதியில் கொந்தளித்த பொழுதும் எவனுடைய (பாண்டியனுடைய) பாதபீடத்தின் ஒளியை ஊன்றுகோலாகக் கொண்டிருந்ததோ.

**சுலோகம்—2**

அத்தகைய பாண்டியவம்சமானது தன் பேராற்றலினால் உலகை அடிப்படுத்திக்கொண்டது. அது பகைவர்களின் ஆண்மையாகிய இரவுக்குக் கதிரவன போன்றது. அந்த வம்சத்தில் பிறந்தவர்களும், புனிதப் புகழும் வீரப்பொலிவும் கொண்டவர்களுமான அரசர்களுக்கு நிலமகள் தர்ம பத்தினியாக இருந்தாள்.

**சுலோகம்—3**

பகையரசர் அனைவரையும் அழித்தவர்களும் இமயமலை மீது தம் ஆணையை ஏற்றிவைத்தவர்களுமான இந்த (பாண்டிய) மரபினர்க்கு அகஸ்திய பகவான் புரோகிதராக இருந்தார்.

**சுலோகம்—4**

அந்த வம்சத்தில் தோன்றியவனும், மானத்தையே செல்வமாகக் கொண்டவனுமான ஓர் அரசன், தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் நடந்த போரிலே பெரிய அசுரர்களைக் கொன்று, தேவர் கூட்டம் கீழே அமர்ந்திருக்க, தான் ஒருவன் மட்டுமே தேவேந்திர சிங்காதனத்தில் அமர்ந்தான்.

**சுலோகம்—5**

பண்புமிக்க அறிவுடையவனும், நன்றியுள்ளவனும், சிதையாத ஆணையுடையவனுமான இக்குலத்தரசனொருவன், விண்ணவரின் வெற்றிக்காகத் தூது சென்றான். இராவணனைச் சமாதானத்தை (சந்தியை) ஏற்குமாறு செய்தான்.

**சுலோகம்—6**

இவ்வம்சத்தில் தோன்றிய மற்றொரு அரசன் நரஸகனின் (நரனுக்கு நண்பனின்) புதல்விக்குக் கணவன்; மூவுலகிலும் பாடப்பட்ட குணங்களையுடையவன்; திரிலோசனன் (முக்கண்ணன்); கடலைக்கடைந்தவன்; இவன் இணையற்ற அரசனாக இருப்பினும் அகத்தியரின் சீடன்.

**சுலோகம்—7**

இந்த வம்சத்தில் தோன்றிய அரசனொருவன் தேவேந்திரனின் முடியில் வளையை உடைத்தவன்; இந்திரனின் ரத்தினமாலையைக் கவர்ந்து அணிந்துகொண்டவன்; குருநாட்டவனின் படையாகிய பஞ்சுக்கு ஊழித்தீபோன்றவன்; விஜயனை (அர்ச்சுனனை) வென்றவன்.

**சுலோகம்—8**

இந்த வம்சத்தில் தோன்றிய ஓர் அரசன், குருவைக் காப்பாற்றுவதற்காகத் தன் தலையை அறுத்துக்கொண்டான். இந்த வம்சத்தில் ஸகல சாஸ்திரக் கடலைக் கடக்கும் மாலுமிபோன்ற சுந்தரபாண்டியன் என்ற பெயருள்ளவன் தோன்றினான்.

**சுலோகம்—9**

இந்த வம்சத்தில் தோன்றிய எண்ணற்ற சக்கரவர்த்திகள் ராஜசூயம், அசுவமேதம் என்ற யாகங்களைச் செய்து தெய்வத் தன்மையை அடைந்தார்கள். அவர்களைப் பற்றிய விவரம் முழுவதையும் யாரே இயம்பவல்லார்?

**சுலோகம்—10**

இந்த வம்சத்தில் அரிகேஸரி என்ற அரசன் தோன்றினான். இவன் புலன்களை வசப்படுத்தியவன்; செல்வத்திற்கு உறைவிடம்; இவன் மகன் ஜடிலன்; இவனுக்கு ஸ்ரீ ராஜசிம்மன் என்ற அரசன் மகன்; இவன் வல்லவன்; அறி

வாளியும் அதிபராக்கிரமசாலியுமான வரகுணன் என்பான் இவு னுடைய (ஸ்ரீ ராஜசிம்மனுடைய) மகன். இவன் மகன் ஸ்ரீமாரன். இவன் செவிக்கினிய புகழாளன்; (பிறரால்) வெல்லற்கரியன்; ஸ்ரீவல்லபன் (திரு மகள் கேள்வன்).

சுலோகம்—11

இந்த ஒரே வீரன் மாயாபாண்டியனையும், கேரளனையும், சிங்களனையும் பல்லவனையும், வல்லபனையும் போரில் வெற்றிகொண்டு மக்களின் அன்புக்குப் பாத்திரமாகி நிலவுலகை ஒரு குடைக்கீழ் ஆண்டு வந்தான்.

சுலோகம்—12

வரகுண மன்னனுடைய தம்பியான பராந்தகன் என்பவன் அரசர்களின் முடியிலுள்ள இரத்தினங்களாகிய சூரியனின் ஒளிவீச்சுகளால் ஒளிர்கின்ற திருவடித் தாமரைகளையுடையவன்; வல்லமை வாய்ந்தவன்.

சுலோகம்—13

இவன் வாளை மட்டும் கையிலேந்திய சேனையைக்கொண்டு கரகிரி (கர வந்தபுரம்) யைச் சுற்றிலும் நடந்த போரில் பகையரசர்களின் இரத்தத் திளுல் சிவந்த தந்தங்களையுடைய பெருயானைக் கூட்டத்துடன் கூடியவனுன உக்ரன் என்பவனைச் சிறைப் பிடித்தான்.

சுலோகம்—14

எண்ணற்ற அக்கிரகாரங்கள், எண்ணற்ற கோயில்கள், நீர்நிலைகள் என்னும் புனிதச் செயல்களின்மூலம் புண்ணிய கீர்த்தியாளனுன இச்சக் கரவர்த்தி இப்பூமண்டலத்தைச் செழிப்புறச் செய்தான்.

சுலோகம்—15

திருமகள் கொழுநனுக்குத் திருமகள்போலவும், இந்திரனுக்குச் சசீதேவி போலவும், இந்த அரசனுக்கு ஸ்ரீவானவன் மஹாதேவி தேவியாக இருந்தாள்.

சுலோகம்—16

திருவுக்கு உறைவிடமான அவனுடைய (பராந்தகனுடைய) தேவி யிடம் ராஜஸிம்ஹனென்ற அரசன் தோன்றினுன். அவன் பகை மன்னர்களை

வெருட்டும் ஒளித் (வீரத்) திருவுடையவன்; அறிவு, சூரத்தன்மை, திண்மை, தைரியம், குலப்பெருமை, தியாகம் என்பவைகளுக்கு ஆதாரமானவன்.

**சுலோகம்—17**

சூரிய சந்திர வம்சங்களுக்குக் கொடித்தம்பம் போன்றவனும், பகைவர் இன்னல்களையும், இரவலர் கூட்டம் நிறைவையும், திக்கனைத்தும் புகழை யும் பெறும்படி செய்கின்றவனுமான இந்த ராஜசிம்மனைக் கணவனாக அடைந்து, பூமிதேவி உண்மையாகவே ராஜந்வதி (அரசனையுடையவளாக) ஆகிறாள்.

**சுலோகம் —18**

இவனுடைய ஈகைக்கு எல்லா இரவலர்களுடைய ஆசைகளும் போதியனவாகா. பராக்கிரமத்திற்குப் பகைவர்கள் போதுமானவர்களல்லர். ஒளி மிக்க புகழுக்கு உலகனைத்தும் போதாது. குணங்களைத் துதிப்பதற்கு பிருகஸ் பதியின் வாக்குகளும் போதா.

**சுலோகம்—19**

பார்ப்பனச் சான்றோர்களை எவ்விதத் தீங்குமில்லாத செல்வத்தினாலும் பகைவர்களை எவ்விதப் பயனுமில்லாமல் (பகைவர் என்பதொன்றையே கருதி) அதிகத் தீங்குகளாலும், பத்துத் திக்குகளை மாசற்ற புகழினாலும் நிரப்பி, பரதன்போன்ற மகிமையுள்ள இவ்வரசன் பூவுலகை அனுபவிக் கிறான்.

**சுலோகம்—20**

சீமானும், கௌசிகவம்சத்தில் தோன்றியவனும், செவிச் செல்வத்தைச் செல்வமாகக்கொண்டவனும், ஸ்ரீசிரேஷ்டி சர்மனின் மகனும், நல்லொ ழுக்கமுள்ளவர்களில் சிறந்தவனும், புகழ்பெற்ற குலத்தையுடையவனும், மிக்க புகழ்பெற்றவனும், அறிஞனும், நன்றியுள்ளவனும், திறமையுற்றவ னும், அதிக நற்குணங்களையுடையவனும், பெரும் பணிவுள்ளவனுமான பராந்தகனென்று புகழ்பெற்ற பெயரால் விளங்குகிறவன் அரசனின் அன் புக்குப் பாத்திரனாக இருக்கிறான்.

**சுலோகம்—21**

முப்மறைகளுக்கு உறைவிடமான பாஸ்கரன் என்பவனுக்குப் பேரனும், பிறர்க்கு நன்மை செய்பவனும், கல்வியென்னும் ஆற்றுக்குக் கடலாக இருப்பவனும், பல்வகைப் பண்டித மக்களின் விருப்பங்களுக்குப் பாரிஜாதமாக இருப்பவனும், புத்தூரில் பிறந்த பெருந்தவத்தோர்களான சேங்குடிக்கௌசிக மரபினரில் சிறந்தவனும், கேள்வி, பணிவு, செல்வங்களுக்குக் களஞ்சியமாக இருப்பவனுமான சிரேஷ்டி என்பவரின் கொள்ளுப் பேரன்.

**சுலோகம்—22**

இவனுடைய முன்னோர்கள் வேதம் கரைகண்டவர்கள்; ஆக்னிவேச்யர் இயற்றிய பெரிய கல்பத்தைப் பூவுலகில் நன்கு நிலைநாட்டியவர்கள்.

**சுலோகம்—23**

ஸ்யந்தனக்ராமத்தில் (தேரூரில்?) பிறந்த மௌத்கல்யகோத்ரத்தவர்களின் தலைவனும், புகழ்மிக்கவனும், பேரொழுக்கம், குலப்பெருமை கொண்டவனும், செல்வம், அறிவு, புகழ்களைக்கொண்டவனும், அறத்திற்கு ஆதாரனுமான ஊரசர்மா என்பவன் இவனுக்குத் தாய்வழிப் பாட்டனாவான்.

**சுலோகம்—24**

கல்வி, ஒழுக்கம், அதிக பணிவு, சிறப்பு மிக்க செல்வம், திருமகள் கேள்வனின் திருவடி மலர்களைப்பற்றிக் கிடக்கும் உள்ளக் கிடக்கை, எப்பொழுதும் உயர்நிலை, சுத்தம், நற்குலம், நிலையான புகழ், உயர்ந்த மேதை இவையெல்லாம் புகழ்பெற்ற இவனுக்குக் (ஊரசர்மாவுக்கு) குலநோன்புகள் (வம்சவிரதங்கள்).

**சுலோகம்—25**

இவனுடைய பிதா ஒழுக்கத்தில் சுத்தமானவன்; அடக்கத்திற்கொரு கொள்கலன்; பிரபு; தந்தைவழிப் பாட்டனுக்குச் சமமான ஒளியுள்ளவன்; அறிஞன்; தெளிவுள்ளவன்; புகழ்பெற்ற குலப் பெருமை கொண்டவன்; செவிக்கினிய புகழாளனான ஸ்ரீச்ரேஷ்டிசாமா என்பவனாவன்.

**சுலோகம்—26—27**

பாண்டியவம்ச திலகமும், புண்ணிய கீர்த்தியாளனுமாகிய வீர நாராயண பராந்தக தேவனிடமிருந்து, வித்வான்களில் சிறந்தவனான அவன்; சிறந்த குணங்களுள்ளதும், மணியாச்சி என்ற பெயர்கொண்டதும், அதிக வளமுள்ளதும், திசைச்சுடர் மங்கலமென்று பெயர் சூட்டப் பெற்றதுமான வடகளவழி ராஷ்டிரத்தைச்சேர்ந்த அக்ரஹாரத்தை (அந்த அறிஞன்) அடைந்தான்.

**சுலோகம்—28—31**

பூமண்டலமனைத்தையும் மகிழ்விப்பவனும், இந்திரன் போன்ற பராக்கிரமம் கொண்டவனும், பகைவர் கூட்டத்தை அழித்தவனுமான அவ்வரசன் தன் ஆட்சியாண்டு பதினாறிலே;

தேவதைக்குச் சமமானவனும், உலகப் பிணியை நீக்கியவனுமான அவ்வரசன், ராஜசிம்மகுளக் கீழ் என்ற ராஷ்டிரத்தில் அமைந்த சூழல் என்ற பெயரால் விளங்கும் கிராமத்தில் தங்கியிருந்தபொழுது;

குறைவற்ற செல்வம்கொண்டதும், அழநாட்டைச்சேர்ந்ததும், நற்செய்கை புத்தூர் என்னும் பெயரைத்தாங்கியதும்;

பெண் யானையால் வலம் செய்வித்துப் பிரிக்கப்பட்டதும், நான்கு எல்லைகளைக்கொண்டதும் பிரம்மதேய நிலையிலுள்ளதுமான அந்தக் கிராமத்தை மக்களை மகிழ்விப்பவனான அவ்வரசன், துண்டாடாமல் பூர்ணமாக

**சுலோகம்—32**

மந்தரகௌரவ மங்கலம் எனப் பெயரிட்டு இணையற்ற அந்தச் சிறந்த கிராமத்தை நீதிக்குக் கொடித்தம்பம் போன்ற (நயகேதனனான) அரசன் பராந்தக சர்மனுக்கு அளித்தான்.

**சுலோகம்—33**

இந்தஅரசனுக்குத் தர்மத்தை உபதேசிப்பவனும், மந்திரியும், கவியும், அத்திரிகோத்திரத்தில் பிறந்தவனும், செல்வத்திற்குக் களஞ்சியமானவனும், வேள்வி செய்தவனும், உயர்ந்தகுலப் பெருமை கொண்டவனுமான ஜடிலன் என்பவன் இதற்கு விக்ஞப்தியாவன்.

**சுலோகம்—34**

க்ஷத்திரியரில் சிறந்தவனான ஸ்ரீ மாறவர்மனின் பணியாளனும் மாசற்ற மரபினனுமான கூற்றங்கோன் என்பவன் இதற்கு ஆணத்தியாவான்.

**சுலோகம்—35**

கீழ்வேம்பநாட்டு நற்குலத்தோனாகிய நக்கங்குமான் என்ற சுத்தமான பெயருள்ளவனுடைய மகனும், கூரத்தில் பிறந்தவனும், அரசனின் அமைச்சனுமான குடிகாவல் என்பவன் பெண் யானைக்குக் காவலன் ஆவான்.

**சுலோகம்—36**

நக்கங்காடன், கோன்வேளான், படாரஞ்சோலை என்பவர்கள் இந்தப் பெண் யானையை நடத்துவதில் கணக்கர்களாக இருந்தார்கள்.

**சுலோகம்—37**

வேந்தராலும் வணங்கத்தக்கவனும், தன்மானத்திற்கு மேருமலை போன்றவனுமான இவ்வரசன், "என்னுடைய பாக்கியம்" என்று சொல்லித் தெண்டனிட்டு வணங்கினவரைப் . பார்த்து மனங்குளிரக்கூடிய வரப் போகும் அரசர்களனைவரையும் கைகூப்பித் தினந்தோறும் வணங்குகிறான்.

**சுலோகம்—38**

..லைகளனைத்தும் கற்றறிந்தவனும், அடக்கம், நீதி இவற்றின் பிறப்பிடமுமான விஷ்ணு என்பவனின் முன் தோன்றலும், மதுரகுணனின் நண்பனுமான வாசுதேவன் என்பவன் இணையற்ற இப்பிரசஸ்தியை இயற்றினான்.

மங்களம் உண்டாகட்டும்.

## சின்னமனூர் (பெரிய) சாசனம்

### தமிழ்ப் பகுதியின்

# செய்யுளுருவம்

திருவொடுந்தெள்ளமிர்தத்தொடுஞ்செங்கதிரொளிக்கௌஸ்துபத்தொடும்

அருவிமதக் களிறொன்றொடுந் தோன்றிஅர னவிர்சடைமுடி

வீற்றிருந்த வெண்டிங்கள் முதலாக வெளிப்பட்டது

நாற்றிசையோர் புகழ்நீரது நானிலத்தி னிலைபெற்றது

பாரத்வா ஜாதிகளால் நேர ஸ்துதிக்கப்பட்டது

விரவலர்க் கரியது மீனத்வய சாசனத்தது

பொருவருஞ்சீர் அகத்தியனைப் புரோகிதனாகப் பெற்றது

ஊழியூழி தொறுமுள்ளது நின்றவொருவனை உடையது

வாழியர் பாண்டியர் திருக்குலமிதனில் வந்துந்தோன்றி

வானவெல்லை வரைத்தாண்டும் மலைக்கடல்கடைந் தமிர்துகொண்டும்

நானிலத்தோர் விஸ்மயப்பட நாற்கடலொரு பகலாடியும்

மறுகிலொளிர் மணிமுடியொடு சங்கவெள் வளைத்தரத்தும்

நிலவுலகம் வலஞ்செய்துந் நிகரில்வென்றி அமரர்க்குப்

பலமுறையுந் தூதுய்த்தும் பாகசாசன னாரம் வவ்வியுஞ்

செம்மணிப்பூ ணொடுதோன்றித் தென்றமிழின் கரைகண்டும்

வெம்முனைவே லொன்றுவிட்டும் விரைவரவிற் கடல்மீட்டும்

பூழியனெனப் பெயரெய்தியும் போர்க்குன் றுயிரம்வீசியும்

பாழியம்பா யலினிமர்ந்தும் பஞ்சவனெனும் பெயர்நிறீயும்

வளமதுரை நகர்கண்டும் மற்றதற்கு மதில்வகுத்தும்

உளமிக்க மதியதனு லொண்டமிழும் வடமொழியும்

பழுதறத்தா னுராய்ந்து பண்டிதரில் மேந்தோன்றியும்

மாரதர்மலே களத்தவியப் பாரதத்திற் பகடோட்டியும்

விஜயனே வசு சாபம்நீக்கியும் வேந்தழியச் சுரம்போக்கியும்

வசையில்மாக் கயல்புலிசிலே வடவரைநெற் றியில்வரைந்தும்

தடம்பூதம் பணிகொண்டு தடாகங்கள் பலதிருத்தியும்

அடும்பசிநோய் நாடகற்றி அம்பொற்சித் ரமுயரியுந்

தலேயாலங் கானத்திற் றன்ஞெக்கு மிருவேந்தரைக்

கொலேவாளிற் றலேதுமித்துக் குறைத்தலேயின் கூத்தொழித்தும்

மகாபாரதந் தமிழ்ப்படுத்துப் மதுராபுரிச் சங்கம் வைத்தும்

மகாராஜருஞ் சார்வபௌமரும் மகிமண்டலங் காத்திகந்தபின்

வில்லவனே நெல் வேலியும் விரிபொழிற் சங்கரமங்கைப்

பல்லவனேயும் புறங்கண்ட பராங்குசன் பஞ்சவர்தோன்றலும்

மற்றவர்க்குப் பௌத்ரனுயின மன்னபிரா னிராசசிங்கனுங்

கொற்றவர்க டொழுகழற்காற் கோவரகுண மகாராஜனும்

ஆங்கவற் காத்மஜனுகி அவனிதலம் பொறைதாங்கித்

தேங்கமழ் பொழிற் குன்னூரிலுஞ் சிங்களத்தும் விழிஞத்தும்

வாடாத வாகைசூடிக் கோடாதசெங் கோனடாவிக்

கொங்கலர் பொழிற் குடமூக்கிற் போர்குறித்து

வந்தெதிர்ந்த கங்கபல்லவ சோளகாலிங்க மாகதாதிகள்

குருதிப்பெரும் புனற்குளிப்பக் கூர்வெங்கணை தொடைநெகிழ்த்துப்

பருதியாற்ற லொடுவிளங்கின பரசக்ர கோலாலனுங்

குரைகழற்கா லரைசிறைஞ்சக் குவலையதலந் தனதாக்கின

வரைபுரையு மணிநெடுந்தோள் மன்னர்கோன் வரகுணவர்மனும்

மற்றவனுக் கிளையனான மனுசரிதன் வாட்சடையன்

பொற்றடம்பூண் சிரிபராந்தகன் புனைமணிப்பொன் முடிசூடிக்

கைந்நிலந்தோய் கரிகுலமும் வாஜிப்ருந்தமுங் காலாளுஞ்

செந்நிலத்தி னிலஞ்சேரத் திண்சிலைவாய்க் கணைசிதறியும்

கரகிரியிற் கருதாதவர் வரகரிகுல நிரைவாரியும்

நிலம்பேர நிகர்கடந்துந் நெடும்பெண்ணை கடமழித்தும்

ஆலும்போர்ப் பரியொன்று லகன்கொங்கி லமர்கடந்தும்

தேவதானம் பலசெய்தும் பிரமதேயம் பலதிருத்தியும்

நாவலந்தீ வடிப்படுத்த நரபதியும் வானடைந்தபின்

வானவன்மகா தேவியென்னு மலர்மடந்தை முன்பயந்த

மீனவர்கோ னிராசசிங்கன் விகடவா டவனவனேய்

அகிபதியா யிரந்தலையா லரிதாகப் பொறுக்கின்ற

மகிமண்டலப் பெரும்பொறைதன் மகாபுஜபலத் தாற்றாங்கி

புஜகநாயக தரணிதாரண ஹரணராஜித புஜபலனாய்

உலப்பிறிமங் கலத்தெதிர்ந்த தெவ்வருட லுகுத்தசெந்நீர்

நிலப்பெண்ணிற் கங்கராக மெனநீவப் பாணிதந்தும்
மடைப்பகர்நீர்த் தஞ்சையர்கோன் தானைவரை நைப்பூரிற்
படைப்பரிசா ரந்தந்து போகத்தன் பணைமுழக்கியுங்
கொடும்பைமா நகர்நிறைந்த குரைகடற் பெருந்தானை
இடும்பையுற் றிரியத்த னிரணோதய மேல்கொண்டும்
புனற்பொன்னி வடகரையிற் பொழில்புடைசூழ் மதில்வஞ்சிக்
கனற்படவிழித் தெதிர்ந்தவீரர் கவந்தமாடக் கண்சிவந்துஞ்
சேவலுயர் கொடிக்குமர னெனச்சீறித் தென்றஞ்சை
காவலனது கரிதுரக பதாதிசங்கங் களத்தவியப்
பூம்புனலு வற்பதியில் வாம்புரவி பலங்காட்டியும்
விஜயத்வஜம் விசும்பணவச் செங்கோறிசை விளிம்பணவக்
குசைமாவுங் கொலைக்குன்றமுங் குருதியார முங்கொணர்ந்தும்
குலவர்த்தன ரடிவணங்க மகேந்திரபோக மனுபவித்த
விகடவாடவன் சிரிகாந்தந் மீநாங்கித சைலேந்திரன்
ராஜசிகா மணிதென்னவ் ராஜித குணகணங்கோன்
எண்ணிறந்த பிரமதேயமும் எண்ணிறந்த தேவதானமும்
எண்ணிறந்த பள்ளிச்சந்தமும் எத்திசையு மினிதியற்றி
உராம்பிலொதி ஒலிகடல்போ லொருங்குமுன்னந் தானமைத்தவலி
ராசசிங்கப் பெருங்குளக் கீழ் சூழுநக ரிருந்தருளி
ராஜ்யவர்ஷம் இரண்டாவதி னெதிர்பதினுன் காய்யாண்டில்
மாக்கொழுவூர்க் கூற்றத்து வருபுனல்மீய் குண்டாற்றுப்

புத்தூரெனப் பெயரெய்திய கொத்தார்பொழிற் கிராமத்திற்

கொமரகௌசிக கோத்ரத்தி லாக்நிவேச்யகல்பத்தி

லொம்பாழ்வரில் மிக்கோனுயர் தருபெரும் புகழ்ச்செட்டி

குலமதலே குவலேயஸூரந் நலமிகுபாஸ் கரநந்தனந்

தென்னவர்கோன் ஸ்ரீ பராந்தகந் ஸ்ரீ வீரநாரண னருளால் வடகள வழி நாட்டின்கட் டிசைச்சுடர்மங்கலமென்னு மிடனுடைய பிரம்மதேய மேகபோகமாப் பெற்றுேன் பத்மாஸன ஸத்ருசனுயின பல[ர்] புகழ் பாஸ்கரன் செட்டிதன் மாமகன் ஸாது மார்க்கந்ஸத்வமித்ரந் ஸத்குணுலயந் படைக்கமலவனச் செங்குடிக் கௌசிகந் பராந்தகன் றனக்கநுக்ரஹ புத்தியனுகி முன்னுரைத்த அரைசர்பிரான் அந்தண்புனலழ ஞட்டில் நற் செய்கை புத்தூரதனே மந்தர கௌரவ மங்கலமென்று தன் பெயரிட்டுக் காராண்மை மீயாட்சி உள்ளடங்கக் கண்டருளி ஏகபோக ப்ரம்ம தேயமாக நன்கு கொடுத்தருளினன் மாகந்தோய் குடைமன்னவன் ஸ்ரீ ராஜஸிம்ஹவர்மன் சோழநாட்டுப் புல்லமங்கலத்துச் சடையபிரான் பட்டஸோமயாசி விண்ணப்பஞ் செய களவழி நாட்டு வேம்பற்றூர்க் கூற்றங்கோனுனே ஆளாகவும், கீழ்வேம்பனுட்டுக் கூரக்குமானே குடி காவல் நாயகனுகவும் திருக்கானப்பேர்க்கூற்றத்துச் சிறு செவ்லூர் நக்கங் காடனும் மிழலேக் கூற்றத்து நடுவிற் கூற்றிற் றுஞ்சலூர்ப் படாரஞ் சோலேயும் களாத்திருக்கைப் பெருங்காக்கூர்க் கோன்வேளானும் கணக் கராகவும் அழ[ஞ]ட்டுனட்டார் நின்றெல்லே காட்டப் பிடிசூழ்ந்த பெரு நான்கெல்லே கீழெல்லே சுருளி ஆற்றுக்கு மேக்குந் தென்னெல்லே கற்குளத்தில்.........

## சின்னமனூர் (பெரிய) சாசனம்

### தமிழ்ப் பகுதியின்

# பொழிப்புரை

பாண்டிய வம்சம், பாற்கடல் கடைந்தபொழுது அதிலிருந்து தோன்றிய திருமகளோடும், தேவாமிர்தத்தோடும், (திருமால் தன் மார்பில் அணிந்துகொண்ட) செந்நிற ஒளி வீசும் கௌஸ்துப மணியோடும், ஐராவதயானேயோடும் வெளிப்பட்டு, சிவபெருமானுடைய மகுடமாகிய ஆசனத்தில் வீற்றிருக்கும் சந்திரன்குல முதல்வனுகத் தோன்றியது. நான்கு திசையில் உள்ளவர்களும் புகழ இந்தப் பூமியில் நிலைபெற்றது. பாரத்துவாச முனிவர் முதலானவர்களால் சந்திர வம்சச் சிறப்பு பாண்டிய மன்னர் முன்னிலேயில் புகழப்பட்டது. எதிரிகள் சேர்ந்து பழகுவதற்கு முடியாதது. கல்வெட்டு முதலிய பாண்டிய சாசனங்களில், எதிர் எதிராகவுள்ள இரண்டு மீன்களே அடையாளமாகக் கொண்டுள்ளது. ஒப்பற்ற பெருமையுடைய அகத்திய முனிவரைத் தனது ஆசானுகக் கொண்டது. அழியாது நிலை பெற்று நிற்பவனுன ஒப்பற்ற கடவுளேத் தனக்குத் துணையாகக் கொண்டது. அத்தகைய சிறப்புடைய அந்த வம்சம் வாழ்வதாகுக.

வானத்தை எல்லேயாகவுள்ள பூமி முழுவதையும் தன்னடிப்படுத்தியும் தேவர்களும் அசுரர்களும் அமிர்தத்துக்காகப் பாற்கடல் கடைந்த பொழுது அவர்களுக்கு உதவியாகத் தன் சேனேயுடன் சென்று பணிபுரிந்தும், பூமியிலுள்ளோர் அனேவரும் ஓர் அரசன் கீழுள்ள குடிமக்கள் என்று வியப்புறும்படி ஒரே நாளில் நாற்றிசையிலுள்ள கடல் நீரைக் கொணர்வித்து மங்கல நீராடியும், மங்குதலில்லாத ஒளியையுடைய மணிகள் பதித்த முடியுடன், சங்குகளால் செய்த வெண்ணிறம் பொருந்திய வீர வளேயை அணிந்தும், நிலவுலகத்தை வலமாக வந்தும், நிகரற்ற வெற்றியால் தன்னேடு போர்புரிய வரும்படி தேவர்களுக்குப் பலமுறை தூது அனுப்பியும், இந்திரனுடைய தாங்கமுடியாத பெரும் பாரத்தையுடைய பொன்னுரத்தைத் தாங்கியும், சிவந்த மணிகள் பதித்த அணிகலன் முதலியவற்றை அணிந்தும், தென்னுட்டில் வழங்குவதாகிய (அல்லது அழகிய) தமிழ் முழுவதையும் அறிந்தும், பகைவர் மீது போர்க்களத்தில், செலுத்

தக்கூடிய ஒரு வேலாயுதத்தை விட்டும், அளவுக்கு மீறிப் பெருகி மதுரையை அழிக்க வந்த கடலைத் திரும்பிப் போக (அல்லது வற்ற)ச் செய்தும், பூழியன் எனப் பெயர் எய்தியும், ஆயிரம் யானைகளைத் தானம் வழங்கியும், பாழி என்ற ஊரை வென்று அங்கே அரியணையில் சிலநாள் தங்கியிருந்தும், பாண்டவர்க்குரிய பஞ்சவன் என்னும் பெயரைக் கொண்டும், வளப்பம் பொருந்திய மதுரைமாநகர் கண்டும், அந்நகரத்துக்கு மதில் எடுப்பித்தும், மிக்க மதியினால் ஒண்தமிழையும் வடமொழியையும் ஐயம் திரிபு அறக்கற்று, ஆராய்ச்சி செய்து, புலவரின் மேம்பட்டு நின்றும், பாரதப் போரில் யானையேறிச் செலுத்திப் பெரிய சேனாதிபதிகளை யுத்த களத்தில் இறக்கும்படி செய்தும் அஷ்டவசுக்களால் அர்ச்சுனனுக்கு நேர்ந்த சாபத்தைப் போக்கியும், பகையரசர்களைப் போரில் தோல்வியுறச் செய்து அவர்களைக் காட்டிற்கு ஓடத் துரத்தியும், சேர, சோழ மன்னர்களை வென்று அவர் கொடிகளில் குறிக்கும் அடையாளங்களாகிய புலியையும் வில்லையும் அவைகளோடு தனது கொடியின் அடையாளமாகிய மீனையும் இமயமலைச் சிகரத்தில் இம்மூன்று அடையாளங்களைப் பொறித்தும், (தான் கற்ற ஒரு மந்திர வலியினால்) ஒரு பெரிய பூதத்தை வசியஞ் செய்து, அதனால் தடாகங்கள் பல அமைத்துத் தன்னாட்டில், கொடிய பசி நோய் நீங்கச் செய்தும், தலையாலங்கானம் என்னுமிடத்தில் தன்னோடு சமமான இரு வேந்தரைப் போர்க் களத்தில் கொன்று தலை வெட்டப்பட்ட முண்டங்கள் போர்க் களத்தில் ஆடுவதாகிய கூத்தை ஒழித்தும், பாரதத்தைத் தமிழ்ப்படுத்தியும் மதுரையில் தமிழ்ச் சங்கம் அமைத்தும் ஆண்ட பேரரசர்களும், சார்வ பௌமரும் அரசாட்சி செய்து மறைந்த பின்னர்;

ஒரு சேர அரசனை நெல்வேலியிலும், ஒரு பல்லவ அரசனைச் சோலைகள் சூழ்ந்த சங்கரமங்கையிலும் தோற்றோடச் செய்தவன் பராங்குசன் என்னும் பாண்டியன். இப்பராங்குசனுக்கு இராசசிங்கன்பேரன் ஏனைய மன்னர்கள் கீழே விழுந்து வணங்கும்படியான வீரக்கழலையணிந்த கால்களையுடைய தலைவனான வரகுணபாண்டியன் அவனுடைய மகன்.

இவ்வரகுணனுக்கு மகனாகிப் பூமியைக் காப்பதாகிய பாரந்தாங்கி, மலர்களின் மணம் வீசும் சோலைகளையுடைய குன்னூரிலும், இலங்கையிலும், விழிஞத்திலும் பகைவர்களை வென்றமைக்கு அறிகுறியாகப் பொன்னால் செய்த வாகைப் பூவைச் சூடி வளையாத செங்கோலைச் செலுத்திப் பின், வாசனை விரியும் பொழில் சூழ்ந்த குடமூக்கில்... 

பொருட்டு வந்து எதிர்த்த, கங்கர் பல்லவர், சோழர், கலிங்கர், மகதர் முதலிய அரசர்கள் இரத்த வெள்ளத்தில் குளிக்குமாறு, கூர்மையும் கொடுமையும் உடைய அம்புகளைச் செலுத்திப் பராக்கிரமத்தில் சூரியனோடு ஒப்ப விளங்கிய பரசக்கிரக் கோலாகலனும்; அரசர்கள் தமது வீரக்கழல் அணிந்த காலை வணங்கும்படிப் பூமண்டலத்தைப் பொதுவென்பதன்றித் தனக்கே உரியதாக்கிக் கொண்ட மலையை ஒத்த அழகிய பெரிய தோள்களையுடைய அரசர்க்கரசனாகிய வரகுணவர்மனும், அவ்வரகுணனுக்குத் தம்பியாகி மனுசரிதன், வாட்சடையன் என்னும் அடைமொழியோடு கூறப்பட்டு உயர்ந்த பொன்னாபரணங்களை அணிந்தவனாகிய சிரீபராந்தகன் அலங்கரித்த இரத்தினங்கள் பதித்த பொன் மகுடம் தரித்து நிலத்தைத் தொடும்படியான துதிக்கையுடைய யானைக் கூட்டங்களும், குதிரைக் கூட்டங்களும், வீரர்களும், செந்நிலமாகிய போர்க்களத்தில் நிலம் சேரும்படி வலிய தன் வில்லினிடத்து அம்புகளைப் பாய்ச்சியும், கரகிரி என்னுமிடத்தில் பகைவர்களின் சிறந்த யானைக் கூட்டங்களைச் சிறைப்படுத்தித் தன் நகருக்குக் கொணர்ந்து, பின் (படைகள் செல்வதனால்) பூமியானது பெயர்ந்து போகும்படியாகத் தன் நகரத்தைக் கடந்து விரிவான பெண்ணாகடம் என்னும் ஊரை அழியச் செய்தும், போர்க்களத்தில் ஆரவாரித்து வருகின்ற ஒரு குதிரையைச் செலுத்தி அகன்ற கொங்கு நாட்டில் நிகழ்ந்த போரில் வெற்றி பெற்றும், கோயில்களுக்கு இறையிலியாக நிலம் விட்டும், அந்தணர்களுக்குக் குடியிருக்க அளித்த அகரங்களை (அக்கிரஹாரங்களை)ச் சீர்ப்படுத்தியும், பாரத நாடு முழுவதையும் தன் ஆட்சியின் கீழ்க் கொண்டுவந்த இந்தச் சிரீபராந்தகனும் சொர்க்கம் அடைந்தான்.

பின் இலக்குமிக்குச் சமானமான வானவன் மாதேவி என்பவள் முதலில் பெற்றெடுத்துப் பாண்டியர்களுக்குத் தலைவனாகிய இராசசிங்கன் விகடவாடவன் என்னும் பட்டம் பெற்று, பாம்புக்கு அரசனான ஆதிசேடன் தன் ஆயிரம் தலையால் அரிதாகத் தாங்குகின்ற இந்தப் பூமண்டல பாரத்தைத் தாங்கும் அழகிய தோள்களையுடையவன். உலப்பிறிமங்கலம் என்னும் ஊரில் எதிர்த்த பகைவர் உடலை வெட்டி உகுத்த இரத்தம் பூமிதேவிக்கு உடற்பூச்சாக ஓடும்படித் தந்தும், வயல்களில் தேங்கி நிற்பதும் சிறப்பாக எடுத்துக் கூறப்படுகின்ற காவிரி நீர் பாயும் வளமுடையதுமாகிய தஞ்சை அரசனை நைப்பூர் என்னுமிடத்தில் நேர்ந்த போரில் மலைபோன்ற தோற்றமுடையவனது படைப் பரிசாரம் தந்து புறங்காட்டி ஓடத் தன் வெற்றி முரசு முழக்கியும், கொடும்பாளூரில் ஒலிக்கின்ற கடல் போன்ற நிறைந்த பெரிய சேனைகள் துன்பமுற்று ஓடும்படி தன் இரேணே

தயமென்னும் யானை மேல் ஏறியும், தெளிந்த நீரையுடைய ஆன்பொருநை (ஆம்பிராவதி) வடகரையிலுள்ள சோலை சூழ்ந்த மதிலையுடைய கருவூரில் (வஞ்சி—கருவூர்) கண்ணில் நெருப்புப் பொறி பறக்குமாறு கோபத்தோடு எதிர்ந்த பகையரசர்களின் தலையிலா முண்டங்கள் துள்ளிக் கூத் தாடும்படிக் கண்சிவந்தும், சேவலை உயர்த்திய கொடியையுடைய முருகக் கடவுள் தேவாசுர யுத்தத்தில் சீறி எழுந்தமைபோலக் கோபித்துத் தென்னாட்டில் உள்ளதாகிய தஞ்சை மண்டல அரசனுடைய மூவகைப் படைகளும் போர்க் களத்தில் இறந்தொழியும்படி அழகிய தண்ணீரால் சூழப்பட்ட திருவானைக்காவில் தனது பட்டத்துக்குரிய தாவும் குதிரையின் வலிமை இத்தகையது என்று உலகத்துக்குக் காட்டியும், வெற்றிக்கொடியை வானளாவப் பரவச்செய்தும், தன் அரசாட்சி எண் திசை எல்லை அளாவ வும், கடிவாளமிட்ட குதிரைகளையும் யானைகளையும் செந்நிற மணிகள் பதித்த பொன்னாரங்களையும் கொணர்ந்தும், முடிசூடிய மன்னனர்கள் காணிக்கையாகத் தன்முன் செலுத்திக் காலை வணங்க, சிறந்த இந்திரனது போகத்தைப் போன்ற செல்வ போகத்தை அநுபவித்தும், விகடவாடவன், சீரீகாந்தன் (இலக்குமியின் கணவன்) மீனாங்கிதசைலேந்திரன் (இமயத்தில் மீனைப்பொறித்தவன்) இராஜசிகாமணி (அரசர்கள் உச்சியில் வைத்துக் கொண்டாடும் மணி போன்றவன்) தென்னன் (தென் திசைக்கதிபன்) ராஜி தகுணகண நங்கோன் (அரசர்க்குரிய குணங்கள் அனைத்தும் நிறைந்த நம் தலைவன்) என்னும் விருதுப் பெயர்களைப் பூண்டு, அளவற்ற அகரங் களும், கோயில்களுக்கு விடப்பட்ட அளவற்ற தானங்களும், பள்ளிகளுக் குரிய நிவந்தங்களும் எல்லாத் திசைகளிலும் இனிதாகச் செய்தும், ஒலிக் கின்ற கடல்போல முரசுகளின் ஒலி முழங்க இராசசிங்கப் பெருங்குளக் கீழ் என்ற பிரதேசத்திற்குட்பட்ட சூழல் என்ற கிராமத்தில் எழுந்தருளி யிருந்து தன் ஆட்சியாண்டு பதினாறில், மாக்கொழுவூர்க் கூற்றத்தில் நீர் ஓடுகின்ற குண்டாற்றின் மேல்கரையில் கொத்துக்கள் பொருந்திய சோலைகளையுடைய புத்தூர்க் கிராமத்தில், கௌசிக கோத்திரத்தில் ஆக்நிவேச்ய கல்பத்தில், ஒம்பாழ்வரில் மிக்கோனும் பெரும் புகழ் வாய்ந் தவனும் ஆகிய செட்டி என்பானது சிறந்த மகன், நிலத்தேவன், நன்மை மிக்க பாஸ்கரநந்தனன் என அழைக்கப்பெறுபவன் படைக்கமலவனச் செங்குடிக் கௌசிகன், தென்னவர் கோனாகிய பராந்தகன் ஸ்ரீ வீரநாரணன் அருளால் வடகளவழி நாட்டில் திசைச் சுடர் மங்கலம் என்னும் ஊரை ஏகபோகப் பிரமதேயமாகப் பெற்றான். தாமரை மலரை ஆசனமாக (இருக்கையாக) உடைய பிரமாவைப் போன் றவனும், பலரால் புகழப்படுபவனுமாகிய (மேற்குறித்த) பாஸ்கரன்

செட்டி என்பவனது பெருமை பொருந்திய மகன் சன்மார்க்கன், நற்குணத் தவர் நண்பன், நற்குணங்களுக்கு இருப்பிடமானவன் பராந்தகன் என்னும் பெயருடையவனுக்கு அருள்புரியும் திருவுள்ளமுடையவனாய், இராச சிம்ம பாண்டியன் அழகிய குளிர்ந்த நீரையுடைய அழல் நாட்டில் உள்ள நற்செய் கைப் புத்தூர்க்குத் தன் பெயரால் மந்தர கௌரவ மங்கலம் எனப் பெய ரிட்டு, காராண்மை மீயாட்சி உள்ளடங்க ஏகபோகப் பிரமதேயமாகக் கொடுத்தருளினன். இங்ஙனம் செய்தருளுமாறு விண்ணப்பஞ் செய்தவன் சோழநாட்டுப் புல்லமங்கலத்துச் சடையபிரான் பட்ட சோமயாஜி ஆவன்.

இதற்குக் களவழி நாட்டு வேம்பற்றூர்க் கூற்றங்கோன் என்பானை ஆணை ஆளாகவும், கீழ் வேம்ப நாட்டுக் கூரக்குமானைக் குடிகாவல் நாயக னாகவும், திருக்கானப்பேர்க் கூற்றத்துச் சிறுசெவ்வூர் நக்கங்காடனும், மிழலைக் கூற்றத்து நடுவிற் கூற்றில் துஞ்சலூர்ப் படாரஞ் சோலையும், களாத்திருக்கைப் பெருங்காக்கூர்க் கோன்வேளானும் கணக்கராகவும், அழல் நாட்டு நாட்டார் நின்று எல்லை காட்ட பிடி சூழ்ந்த ஊரின் பெரு நான்கெல்லையாவது—

கீழெல்லை சுருளியாற்றிற்கு மேற்கு, தெற்கெல்லை, கற்குளத்தில்...*

* எஞ்சிய பகுதியுள்ள ஏடுகள் கிடைக்கவில்லை.

# அறிமுகம்

திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள சிவகாசியில் ஒரகண்டே-கனைகய நாயுடுவின் குடும்பத்தில் நீண்ட காலமாக இருந்துவந்த இந்தச் செப்பேட்டுச் சாசனத்தின் மூலப்பிரதி இப்போது சென்னை அரசினர் பொருட்காட்சிச் சாலையில் பாதுகாக்கப்பட்டு வருகிறது. பொருட்காட்சிச் சாலையில் தொல் பொருள்களின் பாதுகாவலராக இருந்து, இப்பொழுது சென்னை அரசினர் தொல்பொருள் ஆராய்ச்சித் துறையின் நிர்வாகியாக இருக்கும் திரு இரா. நாகசாமி இதைக் கண்டு பிடித்துப் பொருட்காட்சிச் சாலையில் வைப்பதற்கு ஏற்பாடு செய்தார். இந்தச் செப்பேட்டுச் சாசனம் எவ்விதம் எப்போது அந்தக் குடும்பத்தார்க்குக் கிடைத்தது என்ற விவரம் தெரியவில்லை. பொருட்காட்சிச் சாலைக்குப் போய்ச் சேருவதற்கு முன்னதாக இந்தச் செப்பேட்டுச் சாசனத்தை ஆராய்ந்துபடித்து இதன் மசிப்படம் ஒன்று தயாரிக்கப்பட்டது. அதைக்கொண்டே இந்தச் சாசனம் இவ்விடம் முதன் முதலாகப் பதிப்பிக்கப்படுகிறது.

சாசனம் ஐந்து ஏடுகளைக் கொண்டது. மூன்றும் ஏடு இரண்டாக உடைந்து இரண்டு துண்டுகளும் கிடைத்துள்ளன. கடைசியான ஐந்தாம் ஏடு ஐந்து துண்டுகளாக ஒடிந்துள்ளது. அவற்றுள் ஒரு துண்டு கிடைக்கவில்லை. அதனல் அந்தப் பக்கத்திலுள்ள கடைசி ஏழு வரிகளின் நடுவில் ஒன்று முதல் நாலைந்து வரை உள்ள எழுத்துகள் விண்டு போயின. அதே

போல் இரண்டாம் ஏட்டின் வலது புறத்தில் ஒரு மூலை சிறிது பிய்ந்துள்ளது. அதனால் ஏட்டிலே இருபுறங்களிலும் ஒருவரியின் முடிவில் ஒன்றிரண்டு எழுத்துக்கள் சிதைந்துள்ளன. எனினும் அந்த இடத்தை எளிதாக நிரப்பிவிடமுடியும். ஒவ்வோர் ஏடும் இடதுபுறத்தில் நடுவிலே துளையிடப் பட்டுள்ளது. அதன் மூலம் அந்த ஏடுகளை வளையத்தில் கோத்து வைத்திருத் தல் வேண்டும். ஆனால் அந்த வளையமோ அதனைச் சேர்ந்த அரசன் முத்தி ரையோ இப்போது கிடைக்கவில்லை. அந்த முத்திரை மற்ற ஏடுகளைப் போல் வளையத்தின் இரு முனைகளும் ஒன்று சேருமிடத்தில் அமைந்தி ருந்ததா அல்லது தளவாய்புரம் செப்பேடுகளில் காண்பதைப் போல, தனி யாகக் கோக்கப்பட்டிருந்ததா என்பதும் தெரியவில்லை.

முதல் ஏடும் கடைசி ஏடும் உட்புறத்தில் மட்டுமே எழுதப்பட். டுள்ளன. நடுவில் உள்ள மூன்று ஏடுகளும் இருபுறங்களிலும் எழுதப் பட்டுள்ளன. இவ்விதம் இந்தச் சாசனம் மொத்தம் எட்டுப் பக்கங்களில் எழுதப்பட்டுள்ளது. ஏடுகள் முன்புறத்திலே வரிசையாக எண்ணிடப் பட்டுள்ளன. அந்த எண், முதல் பக்கத்திலே துவாரத்தின் இடதுபுறத்தில் பொறிக்கப்பட்டுள்ளது. முதல் ஏட்டின் முன்புறம் எழுதப்படவில்லையாத லால் முதல் எண் அதிலே காணப்படவில்லை. மற்ற ஏடுகளில் இரண்டு முதல் ஐந்து வரையில் உள்ள எண்கள் தொடர்ச்சியாக முறையே அந்தந்த ஏட்டில் எழுதப்பட்டுள்ளன.

பாண்டியர்களின் மற்றச் செப்பேட்டுச் சாசனங்களைப் போலவே இந்தச் சாசனத்திலும் சம்ஸ்கிருதம், தமிழ் ஆகிய இருபகுதிகள் உள்ளன. முதலில் உள்ளது சம்ஸ்கிருதப் பகுதி. அது கிரந்த எழுத்தில் பொறிக்கப் பட்டுள்ளது. அடுத்துவரும் தமிழ்ப்பகுதி வட்டெழுத்திலே உள்ளது. மற்றச் சாசனங்களிலே சம்ஸ்கிருதப் பகுதியில்வரும் தமிழ்ப் பெயர்களைக் கிரந்த எழுத்திலேயே எழுதுவர். அந்தப் பெயர்களில் றகர ழகரங்கள் வந்தால் அந்த எழுத்துக்களுக்கான தமிழ் வடிவங்களைக் கொடுப்பது வழக்கம். இந்தச் சாசனத்திலும் அந்த முறை உபயோகிக்கப்பட்டுள்ளது.

தமிழ், சம்ஸ்கிருதம் ஆகிய இரு பகுதிகளையும் ஒப்பு நோக்கினால் தமிழ்ப்பகுதியே முதலில் தயாரிக்கப் பட்டிருத்தல் வேண்டும் என்பதும், அதுவே அதிகாரபூர்வமானது என்பதும், அப்பால் அதனை ஒட்டிச் சம்ஸ்கிருதப்பகுதி தயாரிக்கப் பட்டிருத்தல் வேண்டுமென்பதும் இரண்டு பகுதிகளும் தயாராகி அங்கீகரிக்கப்பட்ட பிறகு அவை முறையே செப் பேட்டில் எழுதப்பட்டிருத்தல் வேண்டுமென்பதும் தெளிவாகும்.

வீரபாண்டியன் தன் ஆட்சியின் மூன்றும் ஆண்டில் சாசனங்கள் எழுதும் பீதாம்பரன் என்ற சம்ஸ்கிருதக் கவிக்குப் பிரமதேயம் அளித்த செய்தியைக் கூறுகிறது இந்தச் சாசனம்.

சம்ஸ்கிருதப் பகுதி விஷ்ணு, பிரமன், சிவன் ஆகிய மும்மூர்த்தி களுக்கும் வணக்கம் கூறும் சுலோகத்துடன் ஆரம்பிக்கிறது. அடுத்த சுலோகத்திலே பாண்டிய வம்சத்தின் புகழ் கூறப்பட்டுள்ளது.

அப்பால் அந்தக்குலத்தின் முன்னோர்களைப்பற்றிய மரபுச் செய்தி கள் (குலமுறைச் செய்திகள்) விவரிக்கப்பட்டுள்ளன. ஆதிதாமரையி லிருந்து படைப்புக் கடவுளான பிரமன் தோன்றினான். அவனிடமிருந்து அத்திரி தோன்றினார். அம்முனிவரிடமிருந்து சந்திரனும், அவனிடமிருந்து குலமுதல்வனான பாண்டியனும் உண்டானார்கள். அந்த வம்சத்தில் பிறந்தவர்கள் புராண—சரித்திரப் புகழ்வாய்ந்த அரிய பல வீரச் செயல்களை நிகழ்த்தியிருக்கிறார்கள். குலிசாயுதன் (இந்திரன்) மாலையைக் கைப் பற்றியது, அவன் முடிமேல் வளை எறிந்தது, தேவர்களுக்காகத் தூது சென்றது, கௌரவர்களின் படைமீது வெற்றி கொண்டது என்பன போன்றவை அவற்றுள் சில. அந்த வம்சத்திலே தீவிர கோபன் என்ற அரசன் பிறந்தான். விநயம், வீரம் ஆகியவை நிறைந்த ஸ்ரீவல்லபன் அவன் மகன். அந்த மகனிடமிருந்து மானகுலாசலன் தோன்றினான். அவனுக் குப் பிறந்தவன் மாறுபரணன். அவன் கேரள வேந்தனான ரவியின் மகளை மணந்து கொண்டான். அவளுக்குப் பிறந்தவனே வீரபாண்டியன். அவன் பிறப்பு சிவபெருமானுக்குப் பார்வதியிடம் (குகன்) சுப்பிரமணியன் பிறந்ததனோடு ஒப்பிடப்பட்டுள்ளது. அவனுக்குச் சுந்தரபாண்டியன் என் றொரு அண்ணன் இருந்தான்.

அவன் அறிஞர்களின் புகலிடமாக (விபுதாச்ரயனாக) விளங்கினான். வேற்றரசர் பலரும் வணங்கும் தோள்வலியுடன் வீரபாண்டியன் நாட்டை ஆண்டுவந்தான். அவனுடைய ஆட்சியின் மூன்றும் ஆண்டிலே அவன் வீர பாண்டிய புரத்தில் தங்கியிருந்த காலத்தில் தன்னுடைய சாசன சுலோகங் களை இயற்றுவதற்காகப் பீதாம்பரனை நியமித்து நிலமும் அளித்தான். தானம் பெற்ற பீதாம்பரன், ராதிதர கோத்திரத்தில் பிறந்தவரும் ஆச்வ லாயன சூத்திரத்தைச் சேர்ந்தவருமான கோவிந்தஸ்வாமி பட்டருடைய பேரன்; வாசுதேவன் என்பவருடைய மகன். அவன் தாயார் பெயர் ஆர்யை. அவனுக்குப் பட்டகோவிந்தசுவாமி, ஸ்ரீதரன், நாராயணன் என்று உடன் பிறந்தோர் மூவர். மேல் வேம்ப ராஷ்டிரத்தில் நலபுரம் என்ற ஊரில்

புறநாஞ்சில் கோலால் மூன்றுவேலி அளவு கொண்ட நிலமும், அதனைச் சேர்ந்த வாழைக்கோடு என்னும் படாகையில் குடியிருப்புக்காக முது நிலம் பத்துமாவும் அவனுக்குத் தானமாக வழங்கப்பட்டன. ஒரே பரப்பாக இருந்த அந்த நிலங்களைக் கிராமத்திலிருந்து தனியாகப் பிரித்து ராஷ்டி ரத்து (நாட்டில்) முன்மாதிரி அக்ரஹாரமாகச் செய்வித்துப் பிடிசூழ் வித்து, காராண்மை மீயாட்சியுடன் சாசனமங்கலம் என்று பெயரிட்டுப் பிரமதேயமாக நீர்வார்த்து அளித்தான் அரசன்.

இதற்கு விக்ஞப்தி(விண்ணப்பித்துக்கொண்டவன்) கர்க்க குலத் தில் பிறந்தவனும் ரவி என்ற பெயரை உடையவனுமான பிரமஸ்ரீ துங்க ராஜன் ஆவன். இதற்கு ஆக்ஞப்தி (நிறைவேற்றிவைப்பவன்) சந்திவிக்கிர கங்களை நிர்வகித்து வந்த தென்னவன் உத்தரமந்திரி. திரமிள மஹாராஜன் இதற்கு அதிகாரியாவான். பெண் யானையை வலமாக நடத்திச் சென்றவன் முள்ளி ராஷ்டிரத்தில் குலக்கிராமம் என்ற ஊரின் தலைவனான திருச்சிராப் பள்ளி என்பான். யானைப்படைத் தலைவன் (கஜாத்யக்ஷன்) ஆன தென்ன வன் அனுத்தரப்பல்லவ திரையன் பார்வையில் அவன் அதை நிறைவேற்றி னான். விரையாச்சிலை, புல்லன், படாலகன், சோணாடுகிழவன் ஆகிய நால் வரும் கணக்கர்களாகக் குறிக்கப்பட்டிருக்கிறார்கள்.

அப்பால், மற்றச் சாசனங்களில் காண்பது போல இந்தத் தானத்தைக் காத்து நடத்தும்படி வரப்போகும் அரசர்களை வீரபாண்டியன் இரந்து வேண்டிக்கொள்வதாக ஒரு சுலோகம் உள்ளது. இந்தப் பிரசஸ்தியை எழுதியவன் விஷ்ணுத்ராதன் என்று பெயர் கொண்டவன். இவன் ரவி என் பவன் பேரனும் உருகீர்த்தியின் மகனுமாவன். பார்த்திவ கேசரி என்ற சிறப்புப் பெயரைப் பெற்றிருந்த இவன் அரசனுடைய தர்மோபதேஷ்டா குரு (தர்மத்தை உபதேசிக்கும் ஆசாரியன்) ஆவன் என்றும் காணப் படுகிறது.

தமிழ்ப் பகுதி, பாண்டிய பரமேசுவரர்களின் பரம்பரைப் புகழைக் கூற ஆரம்பித்துப் பழைய அரசர்கள் நிகழ்த்தியனவாகச் சில புராண வர லாறுகளையும் கூறுகிறது.

1. சந்திரனிடமிருந்து தோன்றியது.
2. பூமண்டலம் முழுவதையும் அரசு புரிந்தது.
3. இந்திரன் முடிமேல் வளையை உடைத்தது.
4. இமயத்தில் மீன் உருவைப் பொறித்தது.

5. ஆயிரம் யானைகளைத் தானமாக வழங்கியது.
6. அகஸ்தியருடன் தமிழ் ஆய்ந்தது:
7. தேவர்களுக்குத் தூது சென்றது.
8. பெருங்கடலின் வரவு மீட்டது.
9. கடலைக் கடைந்தது. இவை போன்ற பல்வேறு அருஞ் செயல் கள்.

அந்த வம்சத்திலே மானுபரணன் எனற பெயர் கொண்ட தென் னவர் கோன் ராசமல்லன் பிறந்தான், அவனுக்குச் சேரலன் மகளிடம் வீரகேரளன் என்ற மகன் பிறந்தான். வீரபாண்டியன், விநயகஞ்சுகன், விசாலசீலன் என்ற பெயர்களும் அவனுக்கு உண்டு.

அவனுடைய குலம் விளங்குவதற்காகத் தமிழ்க்கூடலில் அதாவது மதுரையில் முடி சூட்டப் பெற்றான். அச்சமயம், முள்ளி நாட்டைச் சேர்ந்த தென் வீரதரமங்கலத்து வாசியும், ராதிதர கோத்திரத்திற் பிறந்தவனும், ஆச்வலாயன சூத்திரத்தைச் சேர்ந்தவனும், கோவிந்தசாமி பட்டசோமயாஜி குலத்தைச் சேர்ந்தவனுமான, வாசுதேவ பீதாம்பரபட் டன் என்ற கவிஞன் இயற்றிய அநுஷ்டுப் சுலோகத்தைக்கேட்டு மகிழ்ந் தான் அரசன். அவன் அண்டநாட்டு வீரபாண்டியபுரமான செல்லூரில் தங்கியிருந்த நாளில் தன் ஆட்சியின் இரண்டாம் ஆண்டிற் கெதிராம் ஆண் டில் (மூன்றாம் ஆண்டில்) அக்கவிஞனுக்கு நில தானம் செய்தான்.

தானம் அளித்த நிலத்தின் விவரம் வருமாறு:—

மேல் வேம்பநாட்டு நலபுரத்துக் கொப்பம் என்ற ஊரில் வாழைக் கோடு என்னும் நிலம் உள்ளடங்கப் புறநாஞ்சில்கோல் அளவினால் மூன்று வேலி இரும்பாக நன்செய் நிலமும் அதனையொட்டிய முது நிலத்தில் குடி யிருப்புக்காகப் பத்துமாவும் சாசனமங்கலம் என்ற பெயரில் ஏகபோகப் பிரமதேயமாக அந்த நிலம் பிடிசூழப்பெற்று ஊராண்மையிலிருந்து பிரித்து நாட்டாண்மையில்கூட்டி, காராண்மை மீயாட்சியுட்பட அறை யோலை செய்து தரப்பட்டது.

அப்பால் அதனைச் செய்து முடித்த அதிகாரிகள் யார் யார் என்ற விவரம் காணப்படுகிறது. இதற்கு விண்ணப்பம் செய்தவன் தெழிலரும் போர்க் கூற்றத்து ரணசிங்க மங்கலத்து வனத்தன் ஆயின தென்னவன்

பிரமஸ்ரீ துங்கராஜன் ஆவன். இதற்கு ஆணத்தி கணயரப்பள்ளி கிழவனும் மந்திரஓலை நாயகப் பதவியை வகித்தவனும் தென்னவன் உத்தர மந்திரியு மான இயக்கஞ் செல்வன் ஆவன். ராஜசிம்மனுன தமிழ்ப் பேரரையன் அதற்கு அதிகாரியாவன். அணுக்கப்பிள்ளை பதவி வகித்தவனுன தென் பருத்திக் குடிநாட்டுச் செந்நிலக்குடியில் இருந்த சடையன் காளியும் வெள் ளப்ப நாட்டுக் கேசவன் கணவதியும் கண் காணியராகக் குறிக்கப் பட்டுள் ளார்கள்.

புறத்தாய நாட்டு நத்தராயக்குடி அரையன் விரையாச்சிலையும், திருக்கானப்பேர்க் கூற்றத்துச் சிறு சேலூர்க் காடம்பட்டாலகனும், சோழநாட்டு மாங்குடிச் சோலை கிழவனும், விக்கிரமகாம வளநாட்டுக் கண்ணனூர் இளவலம் புல்லனும் ஆகிய நால்வரும் புரவுவரி அதிகாரிகள் என்று குறிக்கப்படுகின்றனர்.

(புரவுவரி—அரசிறை நீங்கிய ஊர்களினின்றும் வருவதற்குரிய பிற வரிகளுக்குக் கணக்கு வைத்திருப்பவன்.)

அநுத்தரப் பல்லவ அரசு என்னும் மாறஞ்சோலை யானையை நடத்திச் சென்ற நாயகன். முள்ளிநாட்டுக் குளத்தூர் அரையன் திருச்சி ராப்பள்ளி என்பான் யானை ஒழுக்காக இருந்தான். (யானையை நடத்திச் சென்ருன்.) மேல் வேம்ப நாட்டாரும், பிரமதேயக் கிழவரும் (உரிமை யாளர்களும்) நலபுரத்து ஊராரும் உடன் இருந்து நிலம் அளந்து கல் நாட்டி எல்லையை நிச்சயித்தார்கள். பராங்குச மங்கலம், கருங்குடி, தண் பொருந்தம் (ஆறு) நைதலும் பனைநாட்டுப் பெருங்கால் என்ற வாய்க் கால் எழி நாட்டுப் பெருங்கால் போன்றவை எல்லைகளாக இங்கே காணப் படுகின்றன. அதற்கு இறைக்கடன் பதினுலு ஈழக் கழஞ்சாக நிச்சயிக்கப் பட்டது என்ற விவரமும் காணப்படுகிறது.

கடைசியில் இரண்டு சம்ஸ்கிருத சுலோகங்கள் உள்ளன. அவற் றுள் ஒன்று இந்தச் சாசனத்தை எழுதியவர் யாரென்பதைத் தெரிவிக் கிறது. இரண்டு சுலோகங்களும் சிதைந்து இடைவெளி காணப்படுகிறது. எழுதியவன் பெயர் தெளிவாகத் தெரியவில்லை. ஆனுல், அவன் மூவேந்த வேளான் என்ற சிறப்புப் பெயர் கொண்டவன் என்பதும் திருமால் என் பவன் மகன் என்பதும் ஊகிக்கப்படலாம்.

இரண்டாவதாக உள்ள சுலோகம் சாதாரணமாகச் செப்பேட்டுச் சாசனங்களின் முத்திரையிலும் கல்வெட்டுகளின் ஆரம்பத்திலும் காணப்

படுவது போல இந்தச் சாசனம் வழங்கிய அரசன் யார் என்பதைக் குறிப்பதாக உள்ளது. சந்திரார்க்க வம்சத்தின் தீபம் என்றும் ஜடிலவர்மன் என்ற பெயரைக் கொண்டவன் என்றும் தெரிய வருகிறது. மற்றச் சாசனங்களில் காணப்படுவதுபோல் இந்தத் தர்மத்தைக் காத்தவன் அடையும் மேன்மையையும், அழித்தவன் அடையும் துன்பங்களையும் எடுத்துக் கூறுவதாகக் காணப்படும் பலச்ருதி சுலோகங்கள் இந்தச் சாசனத்திலே காணப்படவில்லை என்பது கவனிக்கத் தக்கது.

இச்சாசனத்தில் கண்டுள்ள விவரங்களிலிருந்து பாண்டியர்களின் பின்வரும் வம்சாவளி தெரிய வருகிறது.




(தென்னவர்கோன், ராசமல்லன், கேரள அரசனை ரவியின் மகளை மணந்தவன்.)




இந்த வம்ச பரம்பரை வேறு எந்தச் சாசனத்திலும் காணப்படவில்லை. தீவிர கோபன், மானகுலாசலன் ஆகிய இரண்டு பெயர்களையும் இங்கேதான் நாம் முதன் முதலாகக் காண்கிறோம். தீவிர கோபன் என்

*சுந்தரபாண்டியன் வீரபாண்டியனின் மாற்றுந்தாய் வயிற்றில் பிறந்த அண்ணன் என்கிற சம்ஸ்கிருதப் பகுதியால் நன்கு விளங்குகிறது.

பது பழந் தமிழ் இலக்கியங்களிலே காய்சினவழுதி என்று காணப்படும் பாண்டியன் பெயரை நமக்கு நினைவூட்டுகிறது. உக்கிரப் பெருவழுதி என்றுள்ள மற்ெருரு பெயரும் ஏறக்குறைய அதே பொருளைக் கொடுப்பதாகும். இந்தப் பெயர்கள் பாண்டிய வம்சாவளியிலே எந்த இடங்களைப் பெற்றிருந்தன என்பது நமக்குத் தெரியவில்லை. எனினும் கடைசி மூன்று பெயர்கள் வேறு சில சாசனங்களிலே காணப்படுகின்றன. அவற்றிலிருந்து இந்தச் சாசனம் எழுதப்பட்ட காலத்தை அறியலாம். அதனை விளக்குவோம்:—

வீரபாண்டியனின் மூன்ருவது ஆட்சி ஆண்டில் இச்செப்பேடு எழுதப்பட்டது. ஆனால், இதில் சக ஆண்டு கூறப்படவில்லை. எந்த நூற்ருண்டில் எழுதப்பட்டதென்பதை ஆராய்ந்து காண்போம்.

இந்தச் சாசனத்தை வழங்கின வீரபாண்டியனுக்கு மானபரணன் என்ற தந்தையும் சுந்தரபாண்டியன் என்னும் தமயனும் இருந்தனர் என்று இந்தச் சாசனம் கூறுகிறது. இந்த மூன்று பாண்டியரையும் முதலாம் இராசாதிராசன் என்னும் சோழன் போரில் வென்ருன் என்றும் இந்த மூன்று பாண்டியரும் ஒரே காலத்தில் (சம காலத்தில்) இருந்தவர் என்றும் சோழ சாசனங்களில் விளங்குகிறது. இந்த முதலாம் இராசாதிராசன் கி. பி. 1018 முதல் 1054 வரையில் அரசாண்டவன். இவன், முதல் இராசேந்திர சோழனுடைய மகன். இவன் இளவரசனாக இருந்தபோது அந்த மூன்று பாண்டியரையும் வென்ருன் என்று இவனுடைய சாசனம் கூறுகிறது. அந்தச் சாசனத்தின் வாசகம் இது:

"தென்னவர் மூவருள், மானபரணன் பொன்முடி ஆனைப்பருமணிப் பசுந்தலை பொருகளத் தரிந்து, வாரளவிய கழல் வீரகேரளனை முனைவயிற் பிடித்து தனததிவாரணக் கதக்களிற்ருனுதைப்பித்தருளி, அளவில் பெரும் புகழ்ச் சுந்தரபாண்டியன் கொற்ற வெண்குடையுங் கற்றை வெண்கவரியும் சிங்காதனமும் வெங்களத்திழந்து, தன்முடிவீழத் தலைவிரித் தடிதளர்ந்தோட தொல்லைய முல்லையூர்த் துரத்தி" (வரி 1–2. தென்னிந்திய சாசனங்கள் தொகுதி 3, பகுதி 1. நெ. 28 பக்கம் 54.) தென்னிந்திய சாசனம் தொகுதி நான்கு, எண் 867–ஆம் சாசனத்திலும் இச்செய்தி கூறப்படுகிறது.

இந்தச் சாசனச் சான்றினல், முதலாம் இராசாதிராசனல் இந்த மூன்று பாண்டியரும் வெல்லப்பட்ட செய்தி தெரிகின்றது. இந்தச் சோழன் கி. பி. 1018–இல் இளவரசுப் பட்டம் பெற்றவன். எனவே இவனல் வெல்

லப்பட்ட வீரபாண்டியன் கி. பி. பதினொராம் நூற்றுண்டின் முற்பகுதியில் இருந்தவன் என்பதும் அவனுல் அளிக்கப்பட்ட இந்தச் சிவகாசிச் செப்பேடும் அக்காலத்ததேயாகும் என்பதும் தெரிகின்றன.

ஆனுல் சில ஆராய்ச்சியாளர் சிவகாசிச் செப்பேட்டை வழங்கிய வீர பாண்டியன் கி. பி. 10ஆம் நூற்றுண்டில் இருந்தவன் என்று கூறுகின்றனர். இதற்கு அவர்கள் காட்டும் சான்று என்னவென்றுல் கி. பி. 10ஆம் நூற்றுண்டில் ஒரு வீரபாண்டியன் இருந்தான் என்பதும், அந்த வீரபாண்டியன் காலத்தில் மானுபரணன், சுந்தரபாண்டியன் என்னும் பெயர்களைக்கொண்ட பாண்டியர் இருவர் இருந்தனர் என்பதும் ஆகும்.

இம்மூவரில் ஒருவனுன வீரபாண்டியன், சோழன் ஒருவனைப் போரில் தலையை வெட்டி, "சோழன் தலைகொண்ட வீரபாண்டியன்" என்ற சிறப்புப் பெயரைப் பெற்றுனென்றும் அதே வீரபாண்டியனைச் சிறிது காலத்திற்குப் பிறகு பரகேசரி இரண்டாம் ஆதித்த கரிகாலச் சோழன் கொன்று வீர பாண்டியன் தலைகொண்ட பரகேசரி வர்மன் என்று அழைக்கப்பட்டா னென்றும் ஆகவே 10ஆம் நூற்றுண்டில் இருந்த வீரபாண்டியனே சிவ காசிச் செப்பேட்டை அளித்தவன் என்றும் அவர்கள் கூறுவர்.

சோழன் தலைகொண்ட வீரபாண்டியனைப்பற்றியும், அவன் தலை கொண்ட பரகேசரி வர்மனைப்பற்றியும் விரிவாக ஆராய்ச்சி செய்ய விரும்பு வோர் கீழ்க் குறிப்பிட்ட ஆராய்ச்சிக் கட்டுரையையும் சாசனங்களையும் காண்பாராக*

இந்த ஆராய்ச்சிக் கட்டுரையை விரிவாக ஆராய்ந்து எழுதிய திரு. ஏ. எஸ். இராமநாதையர், "சோழன் தலைகொண்ட வீரபாண்டியன் வேறு. பரகேசரி வர்மனிடம் தலையை இழந்த வீரபாண்டியன் வேறு. இருவரும் வெவ்வேறு காலத்தில் இருந்தவர்கள்" என்று கூறுகிறுர். அவர் கூறுவதே சரியானதாகும்.

* Inscriptions of Solanralai Konda Virapandya pp. 35—42. Epigraphia Indica. Vol. 25.
Suchindram Inscriptions of Vira Pandya Nos. 22, 23, 24, 25 and 26. Travancore Archaeological Series Vol III (Part 1 and 2)
South Indian Inscriptions Vol. XIV (The Pandyas) Nos. 79 and 96.

எனவே கி. பி. பத்தாம் நூற்றுண்டில் இருந்த வீரபாண்டியனே சோழன் தலைகொண்டவன் என்பதும், கி.பி. 11ஆம் நூற்றுண்டில் இருந்த வீரகேரளனுகிய வீரபாண்டியன் சோழன் தலைகொண்டவனல்லன் என்பதும் தெரிகின்றன. ஆகவே கி.பி. 11ஆம் நூற்றுண்டில் இருந்த வீரபாண்டியனே சிவகாசிச் செப்பேட்டை வழங்கியவன் ஆவன்.

கி. பி. 10ஆம் நூற்றுண்டில் இருந்த சோழன் தலைகொண்ட வீரபாண்டியன் சிவகாசிச் செப்பேட்டை வழங்கியவன் அல்லன் என்று கருதுவதற்குச் சில தடைகள் உள்ளன. அவற்றில் சில வருமாறு: சோழன் தலைகொண்ட வீரபாண்டியனும், சுந்தரபாண்டியனும், மானுபரணனும் சமகாலத்தில் இருந்ததாகத் தெரியவில்லை. அவர்களுக்கு இருந்த உறவு முறையும் தெரியவில்லை.

சிவகாசிச் செப்பேட்டை வழங்கிய வீரபாண்டியனும், மானுபரணனும், சுந்தரபாண்டியனும் சமகாலத்தில் இருந்தவர்கள். மானுபரணன் தந்தையும், மற்ற இருவரும் அவனுடைய பிள்ளைகளும் ஆவர். இந்த உறவு முறை சிவகாசிச் செப்பேட்டில் நன்கு தெரிகிறது. இவர்களை வென்ற இராசாதிராச சோழனுடைய சாசனமும் இந்த உறவு முறையைக் கூறி இவர்கள் சமகாலத்தில் இருந்தவர்கள் என்பதை ஐயமறத் தெரிவிக்கிறது.

கி. பி. 10–ஆம் நூற்றுண்டிலிருந்த வீரபாண்டியன், தனக்கு முன்பு இறந்துபோன சுந்தரபாண்டியனுக்கு பள்ளிபடைக்கோயில் அமைத்தான் என்று கல்வெட்டுச் சாசனம் ஒன்று கூறுகிறது. ஆனுல், சிவகாசிச் செப்பேட்டில் கூறப்படுகிற சுந்தரபாண்டியன், வீரபாண்டியனுக்குப் பிறகும் உயிர் வாழ்ந்திருந்தான் என்றும், வீரபாண்டியனை இராசாதிராச சோழன் கொன்ற பிறகும் சுந்தரபாண்டியன் உயிரோடு இருந்தான் என்றும் சாசனத்தினுல் அறிகிறோம். இதனுல் கி. பி. 11ஆம் நூற்றுண்டில் இருந்த வீரபாண்டியனே சிவகாசிச் செப்பேட்டை வழங்கியவன் என்பது நன்கு தெரிகின்றது.

இந்தச் சிவகாசிச் செப்பேட்டை வழங்கின சில ஆண்டுகளுக்குப் பிறகு முதலாம் இராசாதிராச சோழனுல் இந்தப் பாண்டியன் வெல்லப்பட்டான் என்று சாசனங்களிலிருந்து அறியப்படுகிறது.

## சிவகாசிச் சாசனம்

## சாஸன வாசகம்

### முதல் ஏடு—பின்புறம்

1. स्वस्ति श्री [।।*] लक्ष्मीस्थिरं पुष्यतु यस्त्रिधामा तन्नाभि[1]पद्म प्रभवस्स्वयम्भूः [।*] शै

2. लेन्द्रधन्वापि सुरापगाम्भि न्यासंगिसोमांकुरशेखरश्रीः ॥१ [१*] लयान

3. भिन्नो जगताम् विलयेपि [2]निधिश्श्रियः [।*] यशसा [3]पाण्डुरस्थेयान्वंशः पा

4. ण्डुच महीभुजाम् ॥२ [२*] आदि[4]पत्माद्भूत ब्रह्मा तस्मादत्रिस्ततश्शशी [।*] पाण्ड्योस्मात् भु

5. वनस्थित्यै प्रससार ततोन्वयः ॥२ [३*] हारस्य [5]हत्ता कुलिशायुध

6. स्य तन्मौलिबन्धे वलयस्य भेत्ता [।*] [6]गिर्व्वाणदूतः कुरुसैन्य जे

7. तेत्येवम् विधा यत्प्रभवा नरेन्द्राः ॥२ [४*] तत्रान्ववायेजनि तीव्र

8. [7]कोप श्रीवल्लभोस्मान्नयशौर्य्यशाली [।*] तस्मान्नृपान्मानकुला

9. चलोभूत् पुत्रोस्य मानाभरणो बभूव ॥२ [५*] राज्ञो रवेः केरळवंशके

1. पद्म என்று படிக்க.
2. निधिः श्रियः என்று படிக்க.
3. पाण्डरस्स्थे என்று படிக்க.
4. पद्मा என்று படிக்க.
5. हर्त्ता என்று படிக்க.
6. गीर्वाण என்று படிக்க.
7. कोपः என்று படிக்க.

10. तो रूढा सुता या नृवरेण तेन [।*] श्रीवीरपाण्ड्यन्तनयन्ततोसौ लेभे [1]गुहं

11. शैलसुतेव शम्भोः ॥। ७ [६*] यस्य सुन्दरपाण्डयोभूत् पूर्व्वजो विबुधाश्रयः [।*]

12. विक्रमाक्रान्तविश्वस्य शौरेरिव पुरन्दरः ॥। [७*] विश्वं गुणौघैर्ज्जनताः प्र

## இரண்டாம் ஏடு—முன்புறம்

13. मोदैरर्त्थैः द्विजेन्द्रा नहितानन्नर्त्थैः [।*] बन्धून् सुखैराश्रयतोभि [ला]

14. षैर्य्यैः पूरयत्यप्रतिमप्रभावः ॥।७ [८*] सम्भ्रान्तनम्रावनिपालमौलिमा

15. लारजो [2]रज्जित पादपीठः [।*] [3]दोभ्याम्महीमण्डलमापयोधे[4]यो लीलयै

16. वांगदवत् बिभर्ति ॥।७ [९*] गोविन्दस्वामिनाम्नस्तुलितशतधृतेः पीतसोम

17. स्य पौत्रः पत्युर्व्वाचामशेषागमसरिदुदधेर्व्वासुदेवस्य पु

18. त्रः [।*] प्राज्ञस्य व्यास[5]धाम्नश्रुतविनय[6]निधे श्रीधरस्याग्रजन्मा तस्य

19. प्रेमैकपात्रं कविरमलमतेरस्ति पीताम्बराख्यः ॥।७ [१०*] धीमान

20. भून्निधिर्व्वाचां यस्य नारायणोनुजः [।*] अग्रजो भट्टगोविन्द

21. स्वामिचूळामणिस्सताम् ॥।७ [११*] योध्यैष्टातुलमाश्वलायनकृतं सूत्रं स

22. तीनाम् परा[7]माय्यामाहुररुन्धतीमिव परां यस्यानघाम्मातरम् [।*]प[।*]रावार

1. गुहं என்ற சொல்லின் அநுஸ்வாரம் தனியாக 11-வது வரியில் எழுதப்பட்டுள்ளது.
2. रज्जित என்று படிக்க.
3. दोर्भ्यां என்று படிக்க.
4. र्यो என்று படிக்க.
5. धाम्नः என்று படிக்க.
6. निधेः என்று படிக்க.
7. मार्य्यां என்று படிக்க.

23. चतुष्टयान्त सकलक्ष्माशासने शासने लेख्यं ऋ्लोकमनिन्द्यधीरकुरु

24. त श्रीवीरपाण्ड्यस्य यः ॥॥ [१२*] तस्मै रथीतरकुलध्वजायासौ कलाकरः[।*] तृती

இரண்டாம் ஏடு—பின்புறம்

25. ये राज्यवर्षे स्वे वीरपाण्ड्यपुरे वसन् ॥॥ [१३*] मेल्वेम्पराष्ट्रालंकारा

26. त् ग्रामान्नलपुराह्वयात् [।*] पु ழ नाञ्चिल्कोलिमतम् वेलित्रयमात्रमखण्डि

27. तम् ॥॥ [१४*] समेत वा ழ कोटाख्यदेशम्मुतुनिले तथा [।*] निवासकल्पनार्थं

28. ञ्च दशमाषप्रमाणकम् ॥॥ [१५*] काराण्मै मीयाट्चियुतं करेणुभ्रमणान्वित

29. म् [।*] पृथ [क्*] कृत्य महीखण्डमानीय ब्रह्मदेयताम् [१६*] राष्ट्रलक्ष्याग्रह[ा*]र

30. त्वन्तथा[1]पान्य विशाम्पतिः [।*]कृत्वाग्रहारन्तमिमन्नाम्ना शासन

31. मंगलम् ॥॥ [१७*] वारिपूर्व्वन्द्विजेन्द्राय वीरपाण्ड्यः प्रसेदिवान् [।*]

32. भट्टपीताम्बरायादात् पुनरुक्तस्वयम्भुवे ॥ [१८*] ब्रह्मश्रीतुंग

33. राजोस्मिन्विज्ञप्ति[2]द्विजपुंगवः [।*] गार्ग्यान्ववायतिलको रविनामाभवत् कृ

34. ती ॥॥ [१९*] आज्ञप्तिरस्मिन्नृपतेः कुर्व्वाणस्सन्धिविग्रहम् [।*] आसीच्चेन्नवनुत्तरम

35. न्त्री धीमान् कुलोद्गतः ॥॥ [२०*] अस्याधिकारी द्रमिळ महाराजः கடைகுடு: [।*] अची

36. कर[3]दीह श्रीमानखिलास्सम्पदः प्रभुः ॥॥ [२१*] श्रीतेन्नवन्नुत्तरपल्लवाय [र]

1. पाय என்று படிக்க.

2. द्विज என்று படிக்க.

3. दिह என்று படிக்க.

## மூன்றும் ஏடு—முன்புறம்

37. यः कृती [।*] नेता करेणोरत्र[।*]सीत् गजाध्यक्षो महीपतेः ॥॥ [२२*] [1]आज्ञप्तिमुळ्ळि

38. राष्ट्रस्थकुलग्रामभव [:*] प्रभुः [।*] तिरुच्चिराप्पळ्ळित्र करेणुश्रमणे भवत् ॥ [२३*]

39. विलयाच्चिलैसंज्ञश्च पुल्लः पट्टालकस्तथा [।*] चाणाट्टुकिழवश्चा

40. स्मिन् गणकाः कृतिनो भवत् ॥॥ [२४*] संरक्ष्योयं[2]सावधानैभवत्भिर्द्ध

41. र्म्मस्सर्वैरित्यसौ भाविनो वः [।*] क्षोणीपालान्वन्दनीये

42. पि राज्ञान्धर्मस्नेहाद्याचते वीरपाण्ड्यः ॥॥ [२५*] पौत्रस्सत्क

43. वितास्पदस्य धिषणप्रख्यस्य योयं रवेर्विष्णुत्रातसमा

44. ह्वयः श्रुतनिधिर्यस्योरुकीर्तिः पिता [।*] अन्तग्राम[3]समुत्भवोस्य

45. नृपतेर्द्धर्मोरदेष्टा[4]गुरुश्रग्राम् पार्थिव[5]केसरिह कृतवानेताम् प्रश

46. स्ति कविः ॥॥ [२६*] உ உ உசந்திரனது வழித்தோன்றி இத்தரா மண்டல முழுதாண்டு

47. பண்டிந்திரன் முடி வளையுடைத்து மிமையத்துக் கயலெழுதியும் ஆ

48. னை யாயிர மைய்யமிட்டு மகத்தியனெடு தமிழ்தெரிஞ்சும் வானவர்

49. க்குத் தூதுசென்று மால்கடலின் வரவு மாற்றியு மீண்டிய வக்கடல் க

1. आज्ञाप्तिर्मुळ्ळि என்று படிக்க
2. सावधानैर्भवद्भि என்று படிக்க.
3. समुद्भवो என்று படிக்க.
4. गुरुः என்று படிக்க.
5. केसरीह என்று படிக்க.

## மூன்ரும் ஏடு—பின்புறம்

50. டைந்து மின்னன பலதிறல் செய்த பாண்ட்ய பரமேச்வரராள் பரம்பரையிந் வ

51. ந்து தோன்றினன் மன்னவர்கோன் இராசமல்லன் மணிமுடி மாஞு பரணன் றென்ன

52. வர்கோன் மற்றவற்குச் சேரலன்றன் மடப்பாவை சீர்திகழு மணிபயிலி

53. ச் செழுநிலந் தொழவெளிப்பட்ட வீரகேரளன் வீரபாண்ட்யன் விநயகஞ்சுகன் வி

54. சாலசீலன் றன்னுடைய குலம் விளங்கத் தன்னுடெய தமிழ்க்கூடலில் ம

55. ன்னிய மணிமுடிகவித்து மஹாபிஷேக மகிழ்ந்தநாளில் மேதகு சாஸ

56. நச்லோகம் விதிகிடந்தவா செய்யவல்ல பூஸுர மத்திவன்னது தன்

57. பூம் பொருநம் புடைவர்க்குஞ் சீர்திகள் தரு முள்ளி நாட்டுத் தென்

58. வீரதரமங்கலத் தோர்திகழும் பெருந்தன்மை ராதிதரகோத்ர த்தி

59 லளப்பரிய பேரொழுக்கத் தாச்வலாயகஸூத்ர த்து விளக்கமுற வந்துதோன்

60. றி விப்ரர்க்கோர்விளக்காயின ஒருதன்மை இருபிறப்பில் முச் செந்தி நா

61. ல வேதத் தருமரபிலேய்வேள்வி யாறங்கத் தந்தணாளன் கோவிந்த ஸ்வா

62. மிபட்டச் சோமாசிதன் குலவரவில் வாஸுதேவ பிதாப்பர ப [ட்]ட னென்ற மறை

வரி 50. பாண்ட்ய பரமேச்வர
,, 53. வீர கேரளன், வீரபாண்ட்யன், விநைய கஞ்சுகன், வி
,, 54. சாலசிலன்
,, 55. (1) மஹாபிஷேக (2) சாஸ
,, 56. (1) நச்லோகம் (2) பூஸுர
,, 58. ராதிதரகோத்ர
,, 59. ச்வலாயகஸூத்ர
,, 60. விப்ர
,, 61. ஸ்வா
,, 62. மிபட்ட (2) வாஸுதேவ

63. வாழ்நளை மதித்தருளி நீய்செய்கென மற்றவனு மனமகிழ்ந்து விதித்தமைத்த

64. அநுஷப்பின் விழுப்பநோக்கி மிக [1]மகுந்து தனக்கிரண்டா மாண்டி [2]னதிரா மா

65. ண்டி லண்ட நாட்டு மின்னுகொடி நெடுமாடவீதி வீரபாண்டிய புர மான செல்லூ

66. [3]ரிலிருன்தருளி நலந்திகழ் மேல் வேம்பநாட்டு நலபுரத்துக் கொப் பத்தில்க்

67. கலந்த வாழைகோ டுட்படக் காமருகோல் புறனுஞ்சிலா லிருபூவிளை வது நீர்நி

## நான்காம் எடு—முன்புறம்

68. லன் மூவேலியுங் குடிஇருக்க முருகூர் பொழில் புடைசுற்றிய முதுனிலத்தி

69. ல் பத்துமாவு மற்றதற்கு [1]दक्षिणयाக மன்னு [2]शासன மங்கலமென வேற்றபேருடை

70. ஏக भोग ब्रह्मदे யமாய்ப் பிடிசூழ்வித்து ஊராண்மையில் வே(றெ)ன் றுக்கி நா

71. ட்டாண்மையோ டுடன் கூட்டிக் காராண்மையும் [4]மீசாய்சியும் முள்ளடங்க கல்பமை

1. மகிழ்ந்து என்று படிக்க
2. னெதிராமாண்டில் என்று படிக்க
3. லிருந்தருளி என்று படிக்க
4. மீயாட்சியும் என வாசிக்க

வரி 64. அநுஷ்டு

,, 69. (1) தக்ஷிணை (2) சாஸ

,, 70 போக ப்ரஹ்மதே

72. ய 𑌶𑌾𑌸𑌨 மு மறையோலை[யு*]ந் தனித்தனியேய் சமைப்பித்து 𑌭𑍂𑌸𑍁𑌰 ற்குக் குடுப்பி

73. த்தி [ப்*] பூதலத்தென் புகழ்நிறு [த்*]தென தெழிலரும் போர்க் கூற்றத்தி லிரணசிங்க மங்கல

74. த்து செழுமலர்த் தென்னவன் 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌶𑍍𑌰𑍀𑌤𑍁𑌙𑍍𑌗𑌰𑌾𑌜 ஞயின வனத்தன் விண் ணப்பமா

75. கவும்* மன்திர ஓலை [நா*]யகன் கணையர்பள்ளி மன்னின தென்ன வன் உத்தர

76. மந்திரி ஆயின இயக்கஞ்செல்வன் ஆணத்தி ஆகவும் ஏர்திகழு ம

77. திள்க்கூடல் 𑌰𑌾𑌜𑌸𑌿𑌂𑌹னென்னும் பியருடைச் சீர்திகள் தமிழப்பேர

78. ரையன் திருந்ததிகார மாகவும் அணுக்கபிள்ளை தென்பருத்திக்குடி நாட்டு

79. ச் செழும்பொழில் சூழ் செந்நிலக்குடித் தன்குலத்தில் மேந்தோன் றிய சடை

80. யங்காளிஉம் மாசறுசீர் வெள்ளப்பநாட்டு வடிநெடுவேல் கேசவங் கணவதி

81. யோடுடன் கெழுதகு கண்காணி ஆகவும் பூம்பொழில் புறத்தாய நாட்டு நற்றராயக்கு

82. டி மேம்படு சீர் அரையன் விரையாச்சிலைஉம் திருக்கானப்பேர் கூற்றத் துச் சி

83. று சேவூர்க் காடம்படாலகனும் சோழநாட்டுமாங்குடிச் சோலை கிழவனும் விக்கி

வரி 72. சாஸன பூஸுர
,, 74. ப்ரஹ்மஶ்ரீதுங்கராஜ
,, 77. ராஜஸிம்ஹ
* மந்திர ஓலை என்று படிக்க.

84. ரமகாம வளநாட்டு கண்ணனூர் இளவளம்புல்லனும் புரவுவரிஆக
வுர் அனுத்தரப் ப

85. ஸ்ல[வ*] அரைசெனும் பியரியன்ற மாறஞ்சோலை மால்களிற்றின்
1நாசகமினிதியற்ற

## நால்காம் ஏடு—பின்புறம்

86. வுமுள்ளி நாட்டு குளத்தூர் அரையன் திருச்சிராப்பள்ளி ஆணை
ஒழுக்கவும் மேல்வே

87. ம்பநாட்டு நாட்டாரும் ப்ரஹ்மதேய க்கிழவரும் நலபுரத்து ஊராரும்
உடனின்

88. று நிலம்அளந்து பிடிசூழ்ந்து கல்நாட்டி எல்லைதெரிச்ச பெருநான்
கெல்லை

89. க்குக் கீழ்எல்லை மாயன் பதக்கென்னுஞ் செய்யின் வடதலைத் துலாச்
செய்க்கிறை

90. க்குந் தேயாற் பண்ணையினின்றுந் தெற்குநோக்கிச் செழுங்கழனி
வாழை கோட்டிதனு

91. க்கேய் பாய்ந்த வாய்க்காலூடேய் போந்து சூழ்புனலணி கண்ணிற்
காய் பண்ணைதன்

92. னைத் துன்னவந்து மற்றதனின்று கண்ணிற்காய் வடதலைத் துடவை
களுக் கிறைக்கப்பா

93. ய்கின்ற சிறுகாலின் ஊடுபோந்து கண்ணிற்காய் வடகீழ்த் தலைத்
துடவை

94. களின் தென்வரவை நண்ணவந்து கிழக்குநோக்கி நாட்டுபெருங்
காலில் நி

1. நாயகம் என்று வாசிக்க

வரி 87. ப்ரஹ்மதேய

95. ன்று மேதகு பராங்குச மங்கலத்து மேல்எல்லையின் மேலருகேய் தாத மர்பொழி

96. ல் வாழைகோட்டுப் பொழியுடேய் தண்பொரு[ந*]ம் எய்தவந்து தெக்குநோ

97 க்கிப் பா[ய்*]ந்ததனுக் கியன்ற மேக்கும் செய்தமைத்து தென்எல்லை தண்பொருநல் வீற்றி

98. ருகழ வடக்கும் குடக்கெல்லை வன்னியோடு பொழியினின்றும் குனே யாமல் வடக்குனே

99. க்கிக் க[ளுச்செ]ய்புகக் கல்லின் வாய்க்கால ஊடறுத்து வடக்கு நோக்கி அங்குற நட்ட

100. நடுகல்லின் மாடுநின்று கிழக்குநோக்கி வண்கணத்தா மங்கலமுடை யான் வயக்கின

101. நெடுங்கண்டு வலின்மத்திமமேய் கிழக்குநோக்கிநயக்கவந்து வாழை கோட்டின்

102. நாற்றங்கால் புகப்பாய்[ந்*]த புறக்காலே நணுகவந்து கருங்குடிப் பொழியினின்றும்

103. [. . . ]வேற்சாத்தன் பதக் கென்னுஞ்செய் புகப்பா [ய்*] ந்த காலே எய்தவந்தக் காலூடேய்

ஐந்தாம் ஏடு—முன்புறம்

104. கிழக்கு நோக்கி இனிது போந்து நெய்தலம் பனைநாட்டுப் பெருங் காலில் நி

105. ன்று நின்பரவைக் கடனடுவேய் சாத்தன் பதக்கெனுஞ் செய்புகத் தணந்தகாலி

[. .] இக்குறியிட்ட இடங்களில் ஏடு உடைந்துபோய் எழுத்து காணப்படவில்லை.

106. ன் செந்நடுவேய் வடக்குநோக்கி வந்துமற்றிதினின்று திண்டிறல் விளங்

107. குடையான் இட்ட மண் [1] மதிளொரகுபோந் தெழினட்டுப் பெருங் காலதனை ஒ

108. ட்ட வந்ததன் கிழக்கும் மற்றத னுத்தரந்திசை ஓங்கெல்லை நாட்டுப் பெருங்கா

109. லினின்றுங் கிழக்குநோக்கி நலவரவெகடகிட்டம் படவணைக்கின்ற எழில்

110. விளங்கு பேரணை உட்படகௌகிள்பணையி னின்றும் கிழக்கு நோக்கிந வாழை

111. கோட்டுக்கேய் வந்து மாயான்பதகெ[க்] கென்னு மஞ்செய் வடது லாச்செய்க

112. ளுக்கினிதி(...)நம் எழிற்பண்ணையின் றெற்[க்*]கும் மற்றிவை எல்

113. லையாகத் தனி(...)[றைக்]கடன் ஈழக்கழஞ்சு ஈரேழுதான்பகுத்து உண்ணில

114. ம் ஒழிவின்றி(...) கேழ்வி[ள*]ங்கச் செய்தனன்னூர் மோயம்பில் அ

115. वनिकान्तने ।உ உ உ ..................तारव्यो लिखत् प्राज्ञस्तिरुमालान्मजः कृती [।*] इदं

116. यशस्वी सूवेन्त[1]ंवे ........[र्य्यो]नृपाज्ञया [॥*]चन्द्रार्कान्वयदीपस्य विश्व

117. रक्षणदक्षिणम् [।*] श[ा ....ग] तीजेतुर्जैत्रज्ञटिलवर्म्मणः [॥*]

1. மதிளருகு என்று வாசிக்க

1. ळाना என்று நிரப்பலாம்

2. संनज्ञ என்று நிரப்பலாம். இந்த சுலோகம் தளவாய்புரம் செப்பேட்டுச் சாசன முத்திரையிலும் காணப்படுகிறது.

(. .) இக்குறியிட்ட இடங்களில் ஏடு உடைந்து போய் எழுத்து காணப்படவில்லை.

## சிவகாசிச் சாசனம்

### சம்ஸ்கிருதப் பகுதியின்

# மொழிபெயர்ப்பு

மங்களம் உண்டாகட்டும் !

**சுலோகம்—1**

திரிதாமனும் (மஹாவிஷ்ணுவும்) அவனுடைய உந்திக்கமலத்திலிருந்து உண்டான பிரமதேவனும்; தேவநதி (கங்கை)யின் அலைகளை அணிந்துகொண்டிருக்கும் சந்திர கலையைத் தாங்கிய திருமுடிப் பொலிவை உடையவனும்; மேருவை வில்லாகக் கொண்டவனும் (சிவபெருமானும்) உங்களுக்கு வெகுகாலம் செல்வத்தை வளரச் செய்பவர்களாகுக.

**சுலோகம்—2**

உலகம் அழிந்தாலும் தன் செல்வக்களஞ்சியத்தின் அழிவை அறியாததும், *வெண்மையான புகழையுடையதுமான பாண்டிய மன்னர்களின் குலம் நிலைத்திருப்பதாகுக.

**சுலோகம்—3**

ஆதித் தாமரையிலிருந்து பிரமன் உண்டானான், அவனிடமிருந்து அத்திரியும் அவனிடமிருந்து சந்திரனும், (உலகம் நிலைத்திருப்பதற்காக) அவனிடமிருந்து பாண்டியனும் உண்டானார்கள். இப்பாண்டியனிடமிருந்து பாண்டிய குலம் தோன்றியது.

**சுலோகம்—4**

வஜ்ஜிராயுதனின் (இந்திரனின்) முத்துமாலையைக் கைப்பற்றியவன்; அவனுடைய (இந்திரனுடைய) மகுடத்தில் தன் வளையை உடைத்தவன்;

* வெண்மை என்ற பொருளைக் கொடுக்கும் பாண்டு என்ற சொல்லின் அடியாய்ப் பிறந்தது பாண்டியன் என்ற சொல் என்பாரும் உளர். அதே சொல்லின் அடியாய்ப் பிறந்த பாண்டவர் என்ற சொல்லை ஒட்டிப் பாண்டியரும் பஞ்சவர் ஆயினரோ?

தேவர்களுக்குத் தூது சென்றவன்; குரு (கௌரவர்) சேனையை வெற்றி கொண்டவன் என்று கூறப்படும் மன்னர்கள் எந்த வம்சத்தில் தோன்றினர் களோ.

**சுலோகம்—5**

அந்தப் (பாண்டிய) வம்சத்தில் தீவிரகோபன் தோன்றினன். அவனிடமிருந்து நீதியும் வீரமும் கொண்ட ஸ்ரீவல்லபன் தோன்றினன். அந்த அரசனிடமிருந்து மானகுலாசலன் தோன்றினன். அவனுக்கு மகனாக மானாபரணன் தோன்றினன்.

**சுலோகம்—6**

எந்த மன்னர்பெருமானால் கேரள குலத்திற்குக் கொடிக்கம்பம் போன்ற ரவி என்பவனுடைய மகள் மணந்து கொள்ளப்பட்டாளோ அவள், மலைமகள் சிவ பெருமானிடமிருந்து குகனைப் பெற்றதுபோல் ஸ்ரீ வீரபாண்டியன் என்ற மகனைப் பெற்றெடுத்தாள்.

**சுலோகம்—7**

பராக்கிரமத்தால் உலகை ஆக்கிரமித்துக்கொண்ட மகாவிஷ்ணு வுக்கு (உபேந்திரனுக்கு)த் தேவேந்திரன்போல் இவனுக்கு, பண்டிதர் களுக்குப் புகலிடமான சுந்தரபாண்டியன் என்ற அண்ணன் இருந்தான்.

**சுலோகம்—8**

இணையற்ற மகிமைகொண்ட எந்த அரசன், உலகத்தைத் தன் குணங் களாலும், குடிமக்களைத் தன் மகிழ்ச்சிச் செயல்களாலும், அந்தணர்களைப் பொருள்களாலும், பகைவர்களைத் தீமைகளாலும், உற்றார்களைச் சுகங்களாலும், அண்டினவர்களை (அவர்களின்) விருப்பங்களாலும் நிறைவு பெறச் செய்கிறானே,

**சுலோகம்—9**

அஞ்சி வணங்கிய அரசர்களுடைய முடிகளிலுள்ள மாலைகளின் மகரந்தப்பொடிகளால் அலங்கரிக்கப்பட்ட பாதபீடத்தை உடைய எந்த அரசன், கடல்வரை பரவியுள்ள பூமண்டலத்தை இரண்டு தோள்

களாலும் தோள்வளைகளைத் தாங்குவதுபோல் விளையாட்டாகத் தாங்குகிருனே,

சுலோகம்—10

இந்திரனுக்கு நிகரானவனும் சோமபானம் செய்தவனுமான கோவிந்தசுவாமி என்பவனின் பேரனும், சகல வேதங்களாகிய நதிகளுக்குச் சமுத்திரம் போன்றவனும் சாத்திரங்களின் தலைவனுமான வாசுதேவனின் புத்திரனும், அறிஞனும், வியாச (புராணப் பிரவசன)ங்களுக்கு இருப்பிட மானவனும், கேள்வி, அடக்கம் ஆகியவைகளுக்கு நிதி போன்றவனுமான ஸ்ரீதரனுடைய அண்ணனும், தெளிந்த ஞானமுள்ள அவனுடைய அன்புக்குப் பாத்திரமானவனுமான பீதாம்பரன் என்ற கவி இருக்கிருன்.

சுலோகம்—11

புத்திமானும் சாத்திரநிதியுமான நாராயணன் அவனுக்குத் தம்பி. நல்லோர்களுக்குச் சூளாமணி (அணிகலன்) போன்ற பட்டகோவிந்தசுவாமி இவனுக்குத் தமையன் ஆவன்.

சுலோகம்—12

எவன் ஆச்வலாயனரால் செய்யப்பட்ட இணையில்லாத சூத்திரத்தைப் படித்தவனே, மற்றொரு அருந்ததியைப் போன்ற ஆர்யை என்ற எவனுடைய தாயைப் புண்யவதி என்றும், பூஜிக்கத் தகுந்தவள் என்றும் (மக்கள்) கூறுகின்றனரோ, புகழத் தகுந்த புத்திமானை எவன் ஸ்ரீ வீரபாண்டியனுக்கு நாற்கடலின் இறுதிவரையிலுள்ள சகல பூமியின் ஆளுகையில் சாசனத்தில் எழுதவேண்டிய சுலோகத்தை இயற்றினனே,

சுலோகம்—13

கலைகளுக்கு இருப்பிடமான அவன் (அரசன்) ரதிதரகுலத்திற்குக் கொடி போன்ற அவ்வந்தணனுக்குத் தன்னுடைய ஆட்சியின் மூன்றும் ஆண்டு வீரபாண்டிய புரத்தில் தங்கியிருக்கும்பொழுது,

சுலோகம்—14

மேல்வேம்ப ராட்டிரத்திற்கு அணியாக விளங்கும் நலபுரம் என்ற கிராமத்திலிருந்து புறநாஞ்சில்கோல் அளவுள்ள மூன்றுவேலி நிலத்தை,

**சுலோகம்—15**

முதுநிலத்தில் வாழைகோட்டம் என்ற இடத்துடன் குடியிருப்புக்குப் பத்துமா அளவுள்ள நிலத்தையும்,

**சுலோகம்—16**

காராண்மை மீயாட்சியுடன் கூடியதும் பிடி சூழப்பட்டதுமான துண்டு நிலத்தைத் தனியாகப் பிரித்துப் பிரமதேயமாக்கி.

**சுலோகம்—17**

(அதை) நாட்டின் லக்ஷ்யாக்ரகாரமாக்கி, பாண்டிய அரசன் இந்த அக்கிரகாரத்தைச் சாஸனமங்கலம் என்று பெயரிட்டு,

**சுலோகம் —18**

இதை வீரபாண்டியன், மற்ருெரு பிரமன் போன்ற பீதாம்பர பட்டன் என்ற பிராமண சிரேட்டருக்குத் தாரை வார்த்துக் கொடுத்தான்.

**சுலோகம்—19**

அந்தணசிரேட்டனும், கார்க்கிய குலத்திற்குத் திலகம் போன்றவனும் ரவி என்னும் பெயர் உடையவனுமான பிரம்மஸ்ரீ துங்கராஜன் இதற்கு விக்ஞப்தியாவன்.

**சுலோகம்—20**

இந்த விஷயத்தில் புத்திமானும் குலத்திற் சிறந்தவனும், அரசனுக்குச் சந்தி, விக்ரஹம் என்ற காரியங்களைச் செய்பவனுமான தென்னவன் உத்தரமந்திரி ஆக்ஞப்தியாவன்.

**சுலோகம்—21**

இதற்குக் கலைகளில் தேர்ந்தவனை திரமிள மகாராஜன் அதிகாரி. பிரபுவும் சீமானுமான அரசன் சகலசம்பத்துகளையும் இதில் அமைத்தான்.

**சுலோகம்—22**

அரசனின் கஜாத்யக்ஷன் (யானைப் படைத்தலைவ)னை தென்னவன் உத்தர பல்லவன் பெண்யானையை நடத்தினன்.

**சுலோகம் 23**

முள்ளிராட்டிரத்தில் இருக்கும் குலக்ராமத்துப் பிரபுவான திருச்சிராப்பள்ளி என்பான் பெண்யானையைச் சுற்றிவரச் செய்தான்.

**சுலோகம்—24**

விலையாச்சிலை என்பவனும் புல்லனும் பட்டாலகனும் சாணடு கிழவனும் இதில் சாமர்த்தியமுள்ள கணக்கர்களாக இருந்தார்கள்.

**சுலோகம்—25**

இனி வரப்போகும் அரசர்களால் தான் வணங்கப்படத் தக்கவனுக இருந்தாலும் தர்மத்தால் உண்டான நட்பினுல் பாண்டிய அரசன் உங்களை யாசிக்கிறுன். உங்கள் அனைவராலும் வெகு ஜாக்கிரதையாக இந்தத் தர்மம் காப்பாற்றப்படவேண்டியது.

**சுலோகம்—26**

நல்ல கவிதைக்கு இருப்பிடமானவனும் பிருகஸ்பதி போன்றவனுமான ரவி என்பவனின் பேரனும், சாத்திர ரீதியான புகழ்மிக்க விஷ்ணுத்ராதர் என்பவரின் புத்திரனும், அந்தம் என்ற கிராமத்தில் பிறந்தவனும், இந்த அரசனுக்குத் தர்மோபதேசம் செய்யும் குருவுமான பார்த்திவ கேஸரி என்ற கவி செவிக்கினியதான இந்தப் பிரசஸ்தியை இயற்றினன்.

## சிவகாசிச் சாசனம்

### தமிழ்ப் பகுதியின்

# செய்யுளுருவம்

சந்திரனது வழித்தோன்றிஇத் தராமண்டல முழுதாண்டு
பண்டிந்திரன்முடி வளையுடைத்தும் இமயத்துக் கயலெழுதியும்
ஆனையாயிர மையமிட்டும் அகத்தியனொடு தமிழ் தெரிந்தும்
வானவர்க்குத் தூதுசென்றும் மால்கடலின் வரவுமாற்றியும்
ஈண்டியவக் கடல்கடைந்தும் இன்னனபல திறல்செய்த
பாண்டியபர[1] மேச்வரராள் பரம்பரையில் வந்துதோன்றினன்
மன்னவர்கோன் இராசமல்லன் மணிமுடிமா ணுபரணன்
தென்னவர்கோன் மற்றவற்குச் சேரலன்றன் மடப்பாவை
சீர்திகழு மணிபயிலிச் செழுநிலந்தொழ வெளிப்பட்ட
வீரகேரளன் வீரபாண்டியன் விநயகஞ்சுகன்
தன்னுடைய குலம்விளங்கத் தன்னுடைய தமிழ்க்கூடலில்
மன்னியமணி முடிகவித்து மகாபிஷேக மகிழ்ந்தநாளில்,
மேதகு சாசனச் சுலோகம் விதிகிடந்தவா செய்யவல்ல
பூசுரமத் திவன்னதுதன் பூம்பொருநர் புடைவர்க்கும்
சீர்திகழ்தரு முள்ளிநாட்டுத் தென்வீரதர மங்கலத்து
ஏர்திகழும் தன்மை ராதிதர கோத்திரத்தில்

1. பரமேச்வரர் ஆள் பரம்பரை என்று பிரித்துப் படிக்க.

அளப்பரிய பேரொழுக்கத் தாச்வலாயன சூத்திரத்து

விளக்குமுற வந்துதோன்றி வப்ரர்க்கோர் விளக்காயின

ஒருதன்மை யிருபிறப்பில் முச்செந்தீ நால்வேதத்து

அருமரபில் ஐவேள்வி ஆறங்கத் தந்தணாளன்

கோவிந்தஸ்வாமி பட்டர்க்குச் சோமாசிதன் குலவரவில்

வாசுதேவ பீதாம்பர பட்டனென்ற மறைவாழ்நனே

மதித்தருளி நீசெய்கென மற்றவனு மனமகிழ்ந்து

விதித்தமைத்த அநுஷ்டுப்பின் விழுப்பநோக்கி மிகமகிழ்ந்து

தனக்கிரண்டாமாண்டின் எதிராமாண்டில் அண்டநாட்டு மின்னு கொடி நெடுமாட வீதி வீரபாண்டிய புரமான செல்லூரிலிருந்தருளி நலந் திகழ் மேல் வேம்பநாட்டு நலபுரத்துக் கொப்பத்தில் கலந்த வாழை கோடு உட்படக் காமருகோல் புறஞ்சிலால் இருபூ விளைவது நீர் நிலன் மூவேலியும் குடியிருக்க முருகூர் பொழில்புடை சுற்றிய முது நிலத்தில் பத்துமாவும் மற்றதற்குத் தட்சிணையாக மன்னு சாசனமங்கலமென ஏற்ற பேருடை ஏகபோக பிரமதேயமாய்ப் பிடிசூழ்வித்து ஊராண்மையில் வேறொன்றுக்கி நாட்டாண்மையோடுடன் கூட்டிக் காராண்மையும் மீயாட்சியும் உள்ளடங்க கல்பமைய சாசனமும் அறையோலையுந் தனித் தனியே சமைப்பித்து பூசுரர்க்குக் கொடுப்பித்துப் பூதலத்து என் புகழ் நிறுத்தென தெழிலரும் போர்க்கூற்றத்தில் இரணசிங்க மங்கலத்துச் செழுமலர்த் தென்னவன் பிரமஸ்ரீ துங்கராஜனாயின வனத்தன் விண்ணப்ப மாகவும், மந்திரவோலை நாயகன் சுணையரப்பள்ளி மன்னின தென்னவன் உத்தர மந்திரியாயின இயக்கஞ்செல்வன் ஆணத்தியாகவும், ஏர்திகழும் மதிள்கூடல் இராச சிம்மனென்னும் பேருடைச் சீர்திகழ் தமிழ்ப் பேர ரையன் திருந்து அதிகாரமாகவும், அணுக்கபிள்ளை தென்பருத்திக்குடி நாட்டுச் செழும் பொழில் சூழ் செந்நிலக்குடித் தன் குலத்தில் மேந் தோன்றிய சடையங்காளியும் மாசறுசீர் வெள்ளப்பநாட்டு வடிநெடுவேல் கேசவங் கணவதியோடுடன் கெழுதகு கண்காணி ஆகவும், பூம்பொழில் புறத்தாய நாட்டு நற்றராயக்குடி மேம்படு சீர் அரையன் விரையாச் சிலை

யும் திருக்கானப் பேர்க் கூற்றத்துச் சிறுசேவூர்க் காடம்படாலகனும், சோழநாட்டு மாங்குடிச் சோலே கிழவனும் விக்கிரமகாம வளநாட்டு கண்ணனூரர் இளவளம் புல்லனும் புரவுவரி ஆகவும் அனுத்தரப் பல்லவ அரைசெனும் பெயரியன்ற மாறஞ்சோலே மால்களிற்றின் நாசகமினிதியற்ற முள்ளிநாட்டுக் குளத்தூரர் அரையன் சிராப்பள்ளி ஆணே ஒழுக்கவும் மேல் வேம்பநாட்டு நாட்டாரும் பிரமதேயக் கிழவரும் நலபுரத்து ஊராரும் உடனின்று நிலம் அளந்து பிடிசூழ்ந்து கல்நாட்டி எல்லே தெரித்த பெரு நான்கெல்லேக்கும் கீழெல்லே மாயன்பதக் கென்னுஞ் செய்யின் வடதலேத் துலாச் செய்கிறைக்குந் தேயான பண்ணேயினின்றுந் தெற்கு நோக்கிச் செழுங்கழனி வாழை கோட்டிதனுக்கே பாய்ந்த வாய்க்காலூரடே போந்து சூழ்புனலணி கண்ணிற்காய் பண்ணே தன்னேத் துன்னவந்து மற்றிதனின்று கண்ணிற்காய் வடதலேத் துடவைகளுக்கு இறைக்கப் பாய்கின்ற சிறுகாலின் ஊடு போந்து கண்ணிற்காய் வடகீழ்த் தலேத் துடவைகளின் தென்வரவை நண்ணவந்து கிழக்கு நோக்கி நாட்டு பெருங்காலில் நின்று மேதகு பராங் குச மங்கலத்து மேல் எல்லேயின் மேலருகே தாதமர் பொழில் வாழை கோட்டுப் பொழிலூடே தண்பொருநம் எய்தவந்து தெக்கு நோக்கிப் பாய்ந்ததனுக்கு இயன்ற மேற்கும் செய்தமைத்து தென் எல்லே தண்பொரு நல்வீற்றிரு கழவடக்கும் குடக்கெல்லே, வன்னியோடு பொழியினின்றும் குனேயாமல் வடக்கு நோக்கிக் களுச்செய் புகக்கல்லின் வாய்க்காலே ஊட றுத்து வடக்கு நோக்கி அங்குற நட்ட நடு கல்லின் மாடு நின்று கிழக்கு நோக்கி வண்கணத்தா மங்கலமுடையான் வயக்கின நெடுங்கண்டுவலின் மத்திமமே கிழக்கு நோக்கி நயக்க வந்து வாழை கோட்டின் நாற்றங்கால் புகப் பாய்ந்த புறக்காலே நணுக வந்து கருங்குடிப் பொழியினின்றும்...... வேற்சாத்தன் பதக்கென்னுஞ் செய்புகப் பாய்ந்த காலே எய்தவந்த காலூடே கிழக்கு நோக்கி இனிது போந்து நெய்தலம் பனேநாட்டுப் பெருங்காலில் நின்று நின்வரவைக் கடனெடு வேய் சாத்தன் பதக்கெனுஞ் செய்புகத் தணந்த காலின் செந்நடுவேய் வடக்கு நோக்கிவந்து மற்றி தினின்று திண்டிறல் விளங்குடையான் இட்ட மண்மதிளொரகு போந் தெழினட்டுப் பெருங்கால்தனே ஒட்ட வந்ததன் கிழக்கும் மற்றதன் உத் தரந் திசை ஒங்கெல்லே நாட்டுப் பெருங்காலினின்றுங் கிழக்கு நோக்கி நல்வரவெகட் கிட்டம் வடவணேக்கின்ற எழில் விளங்கு பேரணே உட்பட கௌகிளபணேயினின்றுங் கிழக்கு நோக்கின வாழை கோட்டுக்கே வந்து மாயான் பதகைக்கென்னு மஞ்செய் வடதுலாச் செய்களுக்கினிதி [...] நம் எழிற் பண்ணேயின் தெற்கும் மற்றிவை எல்லேயாகத் தனி.........றை கடன் ஈழக் கழஞ்சு ஈரெழுதான் பகுத்து உண்ணில......ம் ஒழிவின்றி......, கேழ் விளங்கச் செய்தனன்னுர் மோயம்பில்,

## சிவகாசிச் சாசனம்

### தமிழ்ப் பகுதியின்

# பொழிப்புரை

சந்திரனது வழியில் தோன்றி, இப்பூமண்டலம் முழுதையும் ஆண்டும், முன்னாளில் இந்திரன் முடிமேல் வளையையுடைத்தும், இமையத்துக் கயல் எழுதியும், ஆயிரம் யானையை ஐயமிட்டும், அகத்தியனொடு தமிழாராய்ந்தும், வானவர்க்குத் தூது சென்றும், பெரிய கடலின் வரவை மாற்றியும், விரைந்து மீண்டகடலைக் கலக்கியும், இப்படிப்பட்ட பல ஆற்றல்களைச் செய்த பாண்டிய அரசர் பரம்பரையில் மன்னவர்களுக்குத் தலைவனும், இராசமல்லன் என்னும் பெயரையுடையவனும், இரத்தினங்கள் இழைத்த முடியைத் தரித்தவனும் ஆகிய தென்னவர்கோன் மானாபரணன் வந்து தோன்றினான்.

இம் மன்னனது தேவியும் சேர அரசரின், இளம்பருவம் பொருந்திய பதுமையை ஒத்த புதல்வியும் ஆகியவள் திருவயிற்றில் செழுமைவாய்ந்த நிலத்திலுள்ள மக்கள் தொழத் தோன்றினன் வீரகேரளன் வீரபாண்டியன் வினையகஞ்சுகன் விசாலசீலன் ஆவன். இவன் தன்னுடைய குலம் விளங்கத் தன்னுடைய தமிழ்க் கூடலில் மணிமுடி கவித்து மகாபிஷேகஞ் செய்து கொண்டான்.

அக்காலத்தில் உயர்ந்த சாசன சுலோகங்களை முறைப்படி செய்ய வல்ல பிராமண சிரேஷ்டரும் சிறப்பு மிகப்பெற்ற முள்ளி நாட்டுத் தென் வீரதர மங்கலத்து அழகு விளங்குகின்ற பெருந்தன்மையுடைய ராதிதர கோத்திரத்தில் அளவிடுதற்கரிய பெருஞ் சீலமுள்ள ஆச்வலாயன சூத்திரம் விளங்கத் தோன்றி அந்தணர்களுக்கு விளக்காக இருந்த மாருத நிலையும் இருபிறப்பும் மூன்று அக்நிகளும் உடைய சதுர்வேதி குலத்தில் பிறந்தவரும், இல்லறத்தார் நாள்தோறும் செய்யவேண்டிய கடவுள் வேள்வி, பிரமவேள்வி, பூதவேள்வி, மானிடவேள்வி, பிதிர்வேள்வி, என்னும் ஐவகை வேள்விகளையுடையவரும், சிட்சை, வியாகரணம், சந்தசு, நிருக்தம், சோதிடம், என அறுவகைப்பட்ட வேதத்தின் உறுப்புக்களைக் கற்ற அந்தணருமான கோவிந்தசாமிப் பட்டச் சோமாசி...

தோன்றிய வாசுதேவ பீதாம்பர பட்டனென்ற மறைவாணனைக் கௌர வித்து, "நீ கவிதை செய்க" என்று சொல்லப் பீதாம்பரப் பட்டனும் மனம் மகிழ்ந்து விதிப்படி அமைத்த அநுஷ்டுப் சுலோகத்தின் மேன்மை நோக்கி மிக்க மகிழ்ச்சியடைந்து அதன் பொருட் செறிவைக் கண்டு அரசன் மகிழ்ந்து தன் மூன்றுவது ஆட்சியாண்டில் அண்ட நாட்டில் கொடிகளோடு விளங்குகின்ற பெரிய மாடங்களுள்ள வீதிகளையுடைய வீரபாண்டிய புர மான செல்லூரில் இருந்தருளி நன்மை மிகுந்த வேம்ப நாட்டில் நலபுரத் துக் கொப்பத்தில் வாழைக்கோடு உள்பட அழகுள்ள புறஞ்சிக் கோலால் இருமுறை சாகுபடிசெய்யக் கூடிய மூவேலி நன்செய் நிலத்தையும், குடி யிருப்பதற்கு முருகூர் என்னும் ஊரில், பக்கங்களில் சோலை சூழ்ந்த முது நிலத்தில் பத்து மாநிலத்தையும் இதற்குத் தட்சிணையாக சாசனமங்கலம் என்ற ஏற்ற பெயரை இட்டு ஏகபோக பிரமதேயமாய் ஆக்கியும் பிடிசூழ் வித்தும், ஊராண்மையில் வேறு ஆக்கியும் நாட்டாண்மையோடு கூட்டி யும், காராண்மை மீயாட்சியுள்ளடங்கத் தான் கற்பித்தபடி சாசனமும் அறையோலையும் தனித்தனியே அமைப்பித்துப் பூசுரர்க்குக் கொடுப்பித்துப் பூமியில் தன் புகழை நிறுத்துமாறு கூறினன்.

இதனை விண்ணப்பித்தவன் போர்க்கூற்றத்து இரணசிங்கமங்கலத் துத் தென்னவன் பிரமஸ்ரீ துங்கராஜன் ஆயின வனத்தன். இதற்கு ஆணத்தி திருமந்திர ஓலை நாயகன் கணையர பள்ளியில் தங்கியிருந்த தென்னவன் உத்தரமந்திரியாயின இயக்கஞ் செல்வன். அதிகாரியாய் விளங்கியவன் மதுரையில் இருந்த ராஜசிம்மன் என்னும் பெயருடைய தமிழ்ப் பேரரை யன். இதற்கு அணுக்கப் பிள்ளையாய் இருந்தவர் தென்பருத்திக்குடி நாட்டுச் செழும் பொழில் சூழ் செந்நிலக்குடியில் தன் குலத்தில் மேம்பாடுற்றிருந்த சடையங்காளியும், குற்றமில்லாத சிறப்பினையுடைய வெள்ளப்ப நாட்டில் கூர்மையும் நீளமுமுடைய வேலையுடைய கேசவங்கணபதியும் ஆவர்.

புரவுவரியாக விளங்கியவர் புறத்தாயநாட்டு நற்றராயக்குடியில் மேம்பட்ட சிறப்பினையுடைய அரையன் விரையாச் சிலையும், திருக்கானப் பேர்க் கூற்றத்துச் சிறு சேவூர்க் காடம்படாலகனும், சோழநாட்டு மாங் குடிச் சோலைகிழவனும், விக்கிரம காம வளநாட்டுக் கண்ணனூர் இள வளம் புல்லனும் ஆவர்.

## அறிமுகம்

பழைய திருவாங்கூர்ச் சமஸ்தானத்தின் தலைநகராக விளங்கிய திருவனந்தபுரத்தில் அரசாங்கத்தின் தலைமைக் காரியாலயத்தில் (ஹுசூர்க் கச்சேரியில்) ஒரு அலமாரியிலே இருபுறமும் பொறிக்கப்பட்ட ஆறு உதிரிச் செப்பேட்டுச் சாசனங்கள் நீண்ட காலமாகக் கிடந்தன. அவை எப்போது எதற்காக எவ்விதம் அங்கே வந்தன என்ற விவரம் தெரியவில்லை. ஐம்பது ஆண்டுகளுக்குமுன் அங்கே புதைபொருள் ஆராய்ச்சிக்காகத் தனியாக ஒரு துறை ஏற்பட்ட காலத்தில் அதன் தலைவராக இருந்த திரு. து. அ. கோபிநாதராயர் அவர்களிடம் அந்தச் செப்பேடுகள் ஒப்படைக்கப்பட்டன. அந்த ஆறு ஏடுகளுள் ஒன்று விக்கிரமாதித்ய வரகுணன் என்பவனுடைய சாசனத்தைக் கொண்டு பூர்த்தியாக உள்ளது.

மற்ற ஐந்து ஏடுகளும் உதிரி ஏடுகள். அவற்றுள் ஒன்றிலே கருநந்தடக்கன் என்னும் அரசன் ஒருவனுடைய சாசனத்தின் தொடக்கம் காணப்படுகிறது. மற்றோர் ஏட்டில் சாசனத்தின் முடிவு அமைந்திருக்கிறது. பாக்கி மூன்று ஏடுகளும் சாசனத்தின் நடுப் பகுதிகள். ஐந்து ஏடுகளும் ஒன்றுக்கொன்று தொடர்புடையனவாக இல்லை. எனினும், இவற்றில் காணும் வாசகத்தைக் கொண்டு இவை ஐந்தும் ஒரே சாசனத்தின் ஏடுகளென்றே கருதலாம். இந்த ஐந்து ஏடுகளும் ஒரே கையால் எழுதப்பட்டனவாகத் தோன்றவில்லை. மூன்று

ஏடுகளின் எழுத்து ஒருவருடையதாகவும் மற்ற இரண்டு ஏடுகளின் எழுத்து மற்றொருவருடையதாகவும் கருதலாம். எனினும் அவை வெவ் வேறு சாசனங்களைச் சேர்ந்தவை எனக் கருதாமல் ஒரே சாசனத்தின் ஏடுகளே என்று கூறமுடியும். இந்தச் செப்பேட்டுச் சாசனம் அக் காலத்தில் சேரநாட்டில் வழங்கி வந்த வட்டெழுத்தினால் எழுதப்படாமல், பல்லவர் சாசனங்கள் எழுதப்படும் பல்லவர் வழங்கிய எழுத்தினால் எழுதப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது.

வேணாட்டு ஆய்குல வேந்தனான கருநந்தடக்கன் என்பான் அளித்த சாசனத்தின் விவரங்களே இந்த ஏடுகளில் காணப்படுகின்றன. சாசனம் கலியுகக் கோட்டு நாள் பதினான்கு நூறாயிரத்து நாற்பத் தொன்பதினாயிரத்து எண்பத்து ஏழு சென்ற நாளில் (1,44,9087) ஏற்பட்டது. அது அந்த அரசனுடைய ஆட்சியின் ஒன்பதாம் ஆண்டு, பதினைந்தாம் நாள் என்பதும் சாசனத்தில் கொடுக்கப்பட்டிருக்கிறது. அந்த நாள் கலி அப்தம் 3967 கர்க்கடக மாதம் 15-ஆம் நாள். அதாவது, கி. பி. 866-ம் ஆண்டு ஜூலை மாதம் எட்டாம் தேதியாகும் என்று கணக்கிட்டிருக்கிறார்கள்.

சாசனத்தை முதலில் பதிப்பித்த கோபிநாதராயர் கலிநாளை ஆண்டுக்கு 365¼ நாள் வீதம் கொண்டு கணித்து அவ்வாண்டு கி. பி. 864—865 ஆண்டாக இருத்தல் வேண்டுமென ஊகித்தார்.

ஆனால், சுவெல் (Sewell), ப்ளீட் (Fleet) ஆகிய ஆராய்ச்சி யாளர்கள் அதைச் சரியாகக் கணக்கிட்டு மேற்கண்ட கி. பி. 866 ஜூலை 8-ஆம் தேதியே ஆகும் என்பதை உறுதிப்படுத்தியிருக் கிறார்கள்.

அரசன் சிறிது சிறிதாக முன்சிறை என்னும் ஊர்ச்சபையாரிட மிருந்து வேறு நிலங்களை ஈடாகக் கொடுத்துப் பரிவர்த்தனை மூலம் விளைநிலங்களைப் பெற்று, அவற்றின் எல்லைகளை நிர்ணயித்துப் பரர்த்திவ சேகரபுரம் என்ற பெயருடன் ஓர் ஊரை நிர்மாணித்தான். அதிலே விஷ்ணுபட்டாரகருக்கு (திருமாலுக்கு) ஒரு கோயிலை எழுப்பினான்.

அப்பால் காந்தளூர் மரியாதையால் தொண்ணூற்றைவர் சட்டர்க்கு ஒரு சாலையும் செய்தான். கோயில், சாலை ஆகியவை சீராக நடைபெறுவதற்கு அவன் வகுத்த திட்டங்கள் இச்சாசனத்தில் விரிவாகக் கொடுக்கப்பட்டுள்ளன.

சட்டர் என்னும் சொல்லை சாத்ரர் என்னும் சம்ஸ்கிருதச் சொல்லிலிருந்து பெறப்பட்டதாகக் கொண்டு மாணவரைச் குறிப்ப தாகவே கொள்ளுவர். ஆயினும் நாம் மேலே காட்டிய சாசன வாசகத்தைக் கவனிக்கும்போது வெறும் மாணவனை மட்டுமே அந்தச் சொல் குறிப்பதாகத் தோன்றவில்லை. இந்தச் சாலையின் சட்டர் அவரவர் களுக்கு உரிய வேதத்தில் மட்டுமல்லாமல் மீமாம்சை, வியாகரணம், பௌரோஹித்தியம் ஆகிய பிரிவுகளிலும் முழுப்புலமை பெற்றிருக்கக் காண்கிறோம். மேலும் சாலாபோகத்திற்கு விடப்பெற்ற சொத்துகளை யன்றி, அந்தச் சாலையோடு சேர்ந்ததாக இருந்த கோயிலுக்குச் சொந்த மான தேவதான நிலங்களும், கோயில் நிர்வாகமும் அவர்கள் வசமே இருந்திருக்கின்றன. ஆதலின், சட்டரை வெறும் மாணவராகக் கொள் வதற்குப் பதிலாகப் பாடசாலையின் நிர்வாகத்தை வகித்து வந்த ஆசிரியர் களாகக் கொள்ளவேண்டும் என்று தோன்றுகிறது.

தென் ஆர்க்காடு ஜில்லா எண்ணாயிரம் என்னுமிடத்திலிருந்து கிடைக்கும் முதலாம் இராஜேந்திர சோழனுடைய காலத்துக் கல்வெட்டு ஒன்று சட்டர் என்ற சொல்லுக்கு இதே பொருளைக் கொடுப்பதாகக் காண்கிறது. (A. R. 333 of 1917).

அந்தச் சாசனம், அரசனே திட்டம் வகுத்து அளித்த உத்தரவை ஒட்டி ராஜராஜ சதுர்வேதி மங்கலத்துச் சபையார் அந்த இடத்தி லிருந்த பெரிய கலாசாலையில் பயிலும் மாணவர்களுக்கும் பாடம் சொல்லும் உபாத்தியாயர்களுக்கும் உணவு அளிக்கச் செய்த ஏற்பாடு களைத் தெரிவிக்கிறது. அந்தக் கலாசாலை, இருநூற்று எழுபது பிரம்ம சாரிகளையும், எழுபது சாத்திரர்களையும், பதினான்கு ஆசிரியர்களையும் கொண்டிருந்தது. ஒவ்வொரு பிரம்மசாரிக்கும் நாள் ஒன்றுக்கு ஆறு நாழி வீதம் நெல் அளிக்கப்பட்டது. ஆனால் சாத்திரருக்கோ நாள் ஒன்றுக்குப் பத்து நாழி வீதம் நெல் நிர்ணயிக்கப்பட்டது. பார்த்திவ சேகரபுரம் சாசனத்திலும் ஒவ்வொரு சட்டருக்கும் நாள்தோறும் பத்து நாழி வீதம் கணக்கிடப்பட்டிருப்பது கவனிக்கத்தக்கது, 'பதினாழிச்சாலை' என்றே குறிக்கவும் படுகிறது.

பாடம் சொல்லும் ஆசிரியர்களிலே வேதாந்த பாடம் சொல்ப வருக்கே நாள் ஒன்றுக்கு ஒரு கலம் முக்குறுணி நெல் அளிக்கப்பட்டது. அந்தத் திட்டத்திலே மிகவும் அதிகப்படியாகத் தானியமாகக் கொடுக்கப் படுவது அவருக்குத்தான். மீமாம்சை, வியாகரணம் ஆகியவற்றைப்

பாடம் சொல்லும் நம்பிகளில் ஒவ்வொருவரும் நாள் ஒன்றுக்கு ஒரு கலம் வீதம் பெற்று வந்தனர். மற்றவர்களுக்கு நாள்தோறும் முக்குறுணி நெல் வீதம் கணக்கிடப்பட்டது. இவ்விதம் நாள்தோறும் அளிக்கப் படும் தானியத்தைத் தவிர, பாடம் சொல்வதற்குப் பிரதிப் பிரயோஜன மாக ஆசிரியர்களுக்கும் சாத்திரர்களுக்கும் பொன்னும் தனியாக அளிக்கப்பட்டு வந்தது. வேதாந்த பாடம் சொல்லும் ஆசிரியருக்கு மட்டும் அவ்விதம் பொன் அளிக்கப்படவில்லை. பணம் வாங்கிக் கொண்டு வேதாந்த பாடம் சொல்லக்கூடாது என்பது மரபு. அதனால் அவருக்குப் பொன் அளிக்கப்படவில்லை போலும். மற்றவர்களைக் காட்டி லும் அவருக்கு அதிகமாக நெல் கொடுக்க ஏற்பாடு செய்யப்பட்டிருந்த தற்கும் அதுவே காரணம் போலும். வியாகரணம், மீமாம்சை ஆகிய இரண்டிலும் பாடம் சொல்லும் ஒவ்வோர் அத்தியாயத்துக்கும் ஒரு கழஞ்சு வீதம் பொன் அளிக்கப்பட்டு வந்தது. அதனால், அந்த அந்தச் சாஸ்திரங்களை ஒருதரம் முழுவதும் பாடம் சொன்னால் வியாகரண ஆசிரியர் எட்டுக் கழஞ்சும், மீமாம்சை ஆசிரியர் பன்னிரு கழஞ்சும் பெறுவர். மற்றவர்களுக்குத் தலைக்கு ஆண்டுதோறும் அரைக் கழஞ்சு பொன் என்பது திட்டம். இதனால் சாத்திரரும் பாடசாலையில் பாடம் சொல்லி அதற்கான பொன்னைப் பெற்று வந்தனர் என்பது விளங்கும்.

சற்றேறக்குறையப் பார்த்திவ சேகரபுரம் சாசனத்தின் காலத் தைச் சார்ந்த மற்றொரு சாசனமும் இதனையே வலியுறுத்துவதாகக் காண்கிறது. வட ஆர்க்காடு மாவட்டத்தில் காவேரிப்பாக்கம் என்னுமிடத்திலிருந்து கிடைக்கும் அக்கல்வெட்டு, பல்லவ அரசனான நிருபதுங்கவர்மனுடைய ஆட்சியின் இருபத்தைந்தாம் ஆண்டு (சுமார் கி. பி. 886) கொண்டது. அவ்வூர்க் கோயிலிலே விளக்கு எரிக்க எண்ணெய் அட்டுவதற்குப் பொன் அளித்து அந்தத் தர்மத்தை மடத்துச் சட்டப் பெருமக்கள் பொறுப்பிலே விட்ட செய்தியைக் கூறுகிறது அந்தக் கல்வெட்டு (தென்னிந்தியச் சாசனங்கள், பன்னி ரண்டாம் வால்யூம் 79 நெ.) இதிலிருந்து சட்டர்களுடைய நிலை ஒரு வகையில் தெரியவரும். அவர்கள் சாதாரண மாணவர்களாக மட்டும் இருந்ததற்கில்லை. அவர்கள் மடத்தில் வசித்து வந்தார்கள.

பார்த்திவசேகரபுரச் சாசனமும் இவ்விதமேதான் எடுத்துக் கூறுகிறது. வடமொழி நிகண்டான அமரகோசத்திலும், 'மடஸ் சாத்ராதி நிலய:' அதாவது 'மடம் என்பது சாத்திரர் முதலியோர் இருக்குமிடம்' என்று காணப்படுகிறது. ஆகவே சட்டர் என்பாரை ஆசிரியராகக் கொள்ள வேண்டும் போலும்.

இவற்றைக் கவனிக்கும்போது சட்டர் என்பார் உலகபந்தம் வேறு ஏதும் இல்லாமல் கல்வி ஒன்றையே பிரதானமாகக் கொண்டு, அதைக் கற்பதிலும் பிறருக்குக் கற்பிப்பதிலும் ஆயுட்காலத்தைச் செலவிடும் நைட்டிகப் பிரமசாரியாவர் என்று கருதலாம்.

பார்த்திவசேகரபுரச் சாசனத்திலிருந்து பல அரிய விவரங்கள் நமக்குத் தெரிய வருகின்றன. நாம் இவ்விடத்திலே இரு பொருள்களை முக்கியமாகக் கருதவேண்டும் :

(1) சட்டர்கள் த்ரைராஜ்ய விவகாரத்துக்கு, (அதாவது தமிழக வழக்குப்படி முடியுடைவேந்தர் மூவரான சேர, சோழ, பாண்டியர் ஆகிய மன்னர்களின் மூன்று ராஜ்யங்களது விவகாரங்களை நிர்வகிப்பதற்கு) வேண்டிய பயிற்சியும் அறிவும் உடையவராக இருத்தல்வேண்டும்.

(2) குறிப்பிட்ட கட்டுப்பாடுகள் சிலவற்றிற்கு உட்பட்டு அவர்கள் படைக்கலம் தாங்குவதற்கும் அவற்றை உபயோகிப் பதற்கும் அனுமதிக்கப் பட்டிருந்தனர். வேதங்களையும் அவற்றின் அங்கங்களான வியாகரணம், பௌரோஹித்யம் முதலிய சாத்திரங் களையும் நன்கு கற்றுத் தேர்ச்சி பெற்ற அந்தணன், ராஜ்ய நிர்வாக விஷயங்களை அறிந்திருந்த தோடு படைக்கலம் பிடிக்க வேண்டி யிருந்ததென்பதும் கவனிக்கத்தக்கது. இவற்றிலிருந்து நாட்டின் நிர்வாகம், போர்முறை ஆகிய இரண்டையும் நூல்வாயிலாக மட்டு மல்லாமல் நடைமுறை வழியாகவும் கற்பித்துவந்த ஒரு கலாசாலை யாகவே அது இருத்தல் வேண்டும் என்பதை எளிதில் உணரலாம். இப்போது உள்ளதைப்போல அந்நாளிலே நாட்டின் அரசியலமைப்பில் அன்றுட நிர்வாகப் பகுதி (ஸிவில் இலாகாக்கள்) ராணுவப் பகுதி ஆகிய இரண்டும் தனித்தனியாகத் தலைவர்களைக் கொண்டு தனிப் பிரிவுகளாக இருக்கவில்லை. இந்த இருவகைப் பொறுப்புகளையும் ஒரே நிர்வாகியே ஏற்று வந்திருக்கிறான். அதுமட்டுமல்ல, ராணுவ விஷயமான அறிவும் அனுபவமும் பெறாத நிர்வாகி எவருமே அந்தக் காலத்தில் இல்லையென்று சொல்லலாம்.

பார்த்திவசேகரபுரச் சாலையும் அதேபோலக் காந்தளூரில் இருந்த சாலையும் நாட்டுநிர்வாகத்தின் பல துறைகளிலும் ஏட்டுப் படிப்புடன் செயல் முறையிலும் பாடம் போதித்து வந்தன வென்பது தெரியவரும். இவை, இப்போது நடைபெற்றுவரும் அதிகாரி கள் கல்லூரி, நிர்வாகப் பயிற்சி நிலையம் என்பனவற்றை நினைவூட்டு

கின்றன. ஆனல் அந்தச் சாலைகள் எந்த அரசாங்கத்தின் எவ்விதக் கட்டுப்பாட்டிற்கு உட்பட்டோ, உதவியை எதிர்பார்த்தோ நடந்தனவாகத் தோன்றவில்லை. வேண்டிய அளவுக்குச் செல்வ நிலையையும் நிலங்களை யும் பெற்றுப் பிறருடைய தலையீடு ஏதுமின்றிச் சுயேச்சையாக நடந்து வந்தனவென்றே தெரிகிறது. மயூரசர்மன் காஞ்சிபுரத்தில் ஒரு கடிகை யில் பயின்ற செய்தி அறியப்படுகிறது.*

பார்த்திவசேகரபுரம் செப்பேட்டுச் சாசனத்தை அளித்த கோக் கருநந்தடக்கன் ஓர் அரச வம்சத்தைச் சேர்ந்தவன் என்பது சாசன இலாகாவிற்குத் தெரியாதது. திருவாங்கூர் ஹுசூர்க் கச்சேரிச் செப் பேடுகளும் மாறஞ்சடையனின் கழுகுமலைக் கல்வெட்டும் பாலியச் செப்பேடுகளும் இந்த வம்சத்தான் ஒருவனைக் குறிப்பிடும். மாறஞ் சடையன் கல்வெட்டும் இந்த ஆய்குல மன்னர்களைப் பற்றிய சில விவரங்களைத் தருகின்றன. இவ்வம்சத்தைச் சேர்ந்தவர்களில் ஆய் அண்டிரனே தொன்மை வாய்ந்தவன். இவன் ஆய் குடியைத் தலைநக ராகக் கொண்டு மலைப் பிராந்தியங்களில் ஒரு சிற்றரசனுக இருந்து வந்தான். இவன் பொதிய மலைக்குத் தலைவன், சுரபுன்னை மாலையை உடையவன். கடையெழு வள்ளல்களில் ஒருவன். பாணர்களுக்கும் புலவர்களுக்கும் யானைகளையும் பொன்னையும் வழங்கினுன். இவன் கொங்கு நாட்டு வேந்தர்களை வென்றதாக வருணிக்கப்பட்டிருக்கிருன்.

கருநந்தடக்கன் :

இந்த அரசன் முன்சிறை என்ற ஊர்ச் சபையோரிடமிருந்து கொஞ்சங் கொஞ்சமாக உழக்குவிளை என்ற நிலத்தை விலைக்கு வாங்கி அதன் எல்லையை நிர்ணயித்து, அந்த இடத்தில் கோயில் கட்டி அதில் விஷ்ணுவைப் பிரதிஷ்டை செய்து அந்தக் கிராமத்திற்குப் பார்த்திவ சேகரபுரம் என்று பெயர் இட்டான். மேலும் ஒரு சாலையை நிறுவினுன். அச்சாலையில் 95 சட்டர்களுக்குச் சாப்பாட்டிற்கு ஏற்பாடும் செய்தான். இந்தச் சாசனம் கோயிற் பணிகளுக்காக நிலங்களைத் தானம் செய்த விவரத்தையும் தெரிவிக்கிறது.

* எபிகிராபியா கர்னடிகா, ஏழாம் வால்யூம், ஷிகார்பூர் 176 நெ சாசனம்; எபிகிரா பியா இந்திகா, எட்டாம் வால்யூம் நெ 5)

இரண்டாவது ஏடு கோயிற் பணியாளர்கள் கடமையையும் பூத்தொண்டு செய்பவனின் கடமையையும் தெரிவிக்கிறது. கோயிலில் நுந்தா விளக்கு எரிப்பதறகாக நிலங்கள் அளிக்கப்பட்ட விவரம் குறிப் பிடப்படுகிறது. பங்குனி விசாக நாளில் முடியும்படி ஏழுநாள் திருவிழா நடத்த வேண்டிய வகையும், ஏழாவது நாள் ஆற்றில் தீர்த்தவாரி செய் வதும் குறிப்பிடப்படுகின்றன. இந்த விழாக் காலத்தில் கோயிற் பணி யாளர்களும் சட்டர்களும் இருமடங்கு ஊதியம் பெறவேண்டிய விஷய மும் தரப்படுகிறது. இந்த விழாவிற்காகச் சில நிலங்கள் அளிக்கப்பட் டுள்ளன.

மூன்றுவது ஏடு, கோயிற் பணியாளர்களின் சம்பளத்திற்காக நிலங்கள் அளிக்கப்பட்டதைக் குறிப்பிடுகின்றது. அவர்கள், சாந்தி செய்வான், அகநாழிகைப் பணிசெய்வார், பஞ்சகவ்யம் தெளிப்பான், பூத்தொண்டு செய்வான், இசைகாரர் முதலானவர்கள்.

நான்காவது ஏட்டிலே, வெவ்வேறு உள் நாட்டு மக்களை ஒன்று கூட்டி இந்தத் தர்ம சாலையைக் காப்பாற்றும் பொறுப்பு வற்புறுத்தப் படுகிறது. சாலையில் உண்ணும் சட்டர்கள், முறையே பவிஷிய சரணத் தார் (ரிக்வேதிகள்) 45, தைத்திரிய சரணத்தார் (யஜுர்வேதிகள்) 36, தலவகார சரணத்தார் (சாமவேதிகள்) 14 எனக் குறிக்கப்படுகின்றனர். மற்ற ஏடுகளில் சட்டர்களின் ஒழுக்கத்தைப் பற்றிய கட்டுத் திட்டங் களும் அவர்கள் கற்கவேண்டிய முறையும் குறிக்கப்படுகின்றன.

அதையடுத்து அந்நிலங்களிலிருந்து வரி வசூலிக்கும் முறையும் குறிப்பிடப்படுகிறது. அதன் பிறகு கோயிற் பணியாளர்கள் சட்டர் களிடம் நடந்துகொள்ள வேண்டிய முறை கூறப்படுகிறது. ஐந்தாம் ஏட்டின் இறுதியில் சாத்தன் முருகன் தெங்கநாடு கிழவனும் திரையன் சிங்கன் குன்றப்போழன் என்னும் ஓமாயநாடு கிழவனும் ஆணத்தி யாகவும் எழுத்தாளனாகவும் முறையே இருந்தார்கள் எனக் குறிப்பிடப்படு கிறது. ஐந்தாம் ஏடு பின்புறத்தில் முதலில் ஒரு சமஸ்கிருத சுலோகம் சிரீவல்லபன் என்பவனைப் புகழ்வதாக இருக்கிறது. அந்தச் சுலோகம் விஷ்ணுவையும் சிரிவல்லபனையும் சிலேடையால் வர்ணிப்பதாக உள்ளது.

மேலே தொகுத்துக் கூறிய குறிப்புகளிலிருந்து இந்த ஏடுகள் ஒரே சாசனத்தைச் சேர்ந்தன என விளங்குகின்றது. இந்தச் சாசனத் தில் இதை அளித்த அரசன் கோக்கருநந்தடக்கன் என்பது ஐயந்திரிபு

அறத் தெளிவாகிறது. இந்தப் பெயர், திருவிடைக்கோட்டுக் கல்வெட்டு களிலும் இம்மாதிரியே காணப்படுகிறது.

கருநந்தடக்கன் என்ற சொற்ருெடர் கருநந்தன் + அடக்கன். அதாவது கருநந்தனுடைய மகன் அடக்கன் என்று தெரிவிக்கிறது. அவன் கி. பி. 855-ல் அரியணை அமர்ந்தான் என்று தெரியவருகிறது.

அவன் பார்த்திவசேகர புரத்தில் விஷ்ணுகோயிலை அமைத்தவன். அவன் வரகுண பாண்டிய மன்னனின் சமகாலத்தவன். இந்தச் சாச னத்தின் இறுதிச் சுலோகம், ஸ்ரீவல்லபன் யாதவகுலத்தைச் சேர்ந்த நந்தன் என்பவனுக்குப் பிறந்தான் என்றும், அக்குலத்தில் பிறந்த சிரீவல்லபனுன கிருஷ்ணன் போன்று இந்தக் குலத்தை விளங்கச் செய்தான் என்றும் குறிப்பிடுகிறது.

ஆகவே கருநந்தடக்கனுக்குச் சிரீவல்லபன் என்று மற்ருெரு பெயர் உண்டு என்று தெரிகின்றது.

ஆய்குல வேந்தர்களையும் அவர்கள் காலத்திய பாண்டிய மன்னர் களையும் கீழே காணலாம்.

| ஆய்மன்னர் | பாண்டியமன்னா |
| --- | --- |
| 1. சடையன் | |
| \| | |
| 2. கருநந்தன் | மாறஞ்சடையன் |
| \| | \| |
| 3. கருநந்தடக்கன் என்னும் சிரீவல்லபன் கி. பி. 855 | வரகுணபாண்டியன் கி. பி. 862 |

இந்தச் சாசனம் பலவகையில் நம் உள்ளத்தைக் கவர்கிறது. இதற்குச் சான்ருக, அந்த அரசன் ஒரு கோயிலைக் கட்டுவதற்குத் தேவையான நிலத்தைப் பிறரிடம் பரிவர்த்தனை மூலம் பெற்ருன். மக்கள் விரும்பினுலும் விரும்பாவிட்டாலும் அவர்களுடைய சொத்துக் களைத் தாம் எடுத்துக்கொள்ளும் கொடுங்கோல் மன்னன்போல் நடந்து கொள்ளவில்லை.

சாலையில் வேதம் ஓதும் சட்டர்களைப் பற்றிய கட்டுப்பாடுகள் விசித்திரமாக இருக்கின்றன. சட்டர்களுக்கிடையே ஒழுங்கீனம் நிகழுமாயின் அதற்குப் பொற்காசு அபராதமும் உண்டி நிறுத்தலும் தண்டனையாகக் குறிப்பிடப்படுகின்றன. அவர்கள் ஒருவரை யொருவர் ஆயுதத்தால் தாக்கக்கூடாது. மக்கள் திரளாகக் கூடும் இடங்களில் ஆயுதங்களைத் தாங்கிச் செல்லக்கூடாது. அவர்கள் வெள்ளாட்டிகளை (பணிப்பெண்களை) மடத்தில் வைத்துக் கொள்ளக் கூடாது.

இந்தச் சாசனத்தில் துடவை, (துடவை=சோலை. சூடாமணி நிகண்டு.) துடவர் போன்ற பழங்காலத் தமிழ்ச் சொற்கள் காணப்படு கின்றன. இந்தச் சாசனத்தில் கீழ்க்கண்ட ஊர்களின் பெயர்கள் காணப் படுகின்றன:—

1. முடாலநாடு
2. பசுங்குளம்
3. முன்சிறை
4. பொழிசூழ்நாடு
5. குராத்தூர்
6. செங்கழுநாடு
7. குன்றத்தூர்
8. வள்ளுவநாடு
9. தெங்கநாடு
10. விளப்பில்
11. இளவேணாட்டு நல்லூர்
12. பனையூர்
13. ஓமாயநாடு
14. சிறுமண்ணூர்
15. மினச்சி
16. சிறுகுண்டூர்
17. அருமுனை ஆதனூர்
18. மாத்தூர்
19. படைப்பா நாடு
20. பாக்கோடு
21. யாப்பிகைக்கோடு

இவைகளுள் மிடாலம் என்பதிலிருந்து முடாலநாடு தோன்றிற்று பசுங்குளம் என்பது இக்காலத்திய பார்த்திவபுரத்துக்குத் தெற்கே ஒரு மைல் தொலைவில் உள்ள பைங்குளம் ஆகும். முன்சிறை என்பது தற்காலப் பார்த்திவபுரத்துக்கு இரண்டுமைல் வடக்கேயுள்ள முஞ்சிறே ஆகும். பொழிசூழ்நாடு என்பது இக்காலத்துப் பொழியூர் என்பதன் பழைய பெயராகும். திருநந்திக்கரையில் உள்ள கல்வெட்டு ஒன்று ராஜராஜ தென் வள்ளுவநாடு என்பதைப் பற்றிக் குறிப்பிடுகிறது. அது இச் சாசனத்தில் குறிப்பிடப்படும் வள்ளுவநாடாகலாம். முட்டம் என்பது பார்த்திவ புரத்துக்கு அருகில் தற்காலம் எரானியல் என்று வழங்கப்படும் ஊராகும். இது வள்ளுவநாட்டைச் சேர்ந்தது. பார்த்திவபுரத்திற்கு அருகே கடற்கரையில் உள்ள ஒரு இடம் தேங்காப்பட்டணம் என்று

இருக்கிறது. இதைச் சுற்றிலுமுள்ள பிரதேசம் தெங்க நாடாக இருக்கலாம். மினச்சி என்பது இக்காலத்தில் வழங்கப்படும் மினச்சில் என்பதாகும். தலைக்குளம் என்னும் ஊரிலுள்ள திருமால்கோயிலின் கல்வெட்டு, படைப்பாநாடு என்பதைக் குறிப்பிடுகிறது. இது எரானிய லுக்கு அருகில் ஏதோ ஒரு இடத்தில் இருந்திருக்கவேண்டும். விளப்பில் என்பது மேலே சுட்டிக் காட்டிய இடங்களைப் போலவே அதேபிரதேசத் தைச் சேர்ந்ததாக இருக்கவேண்டும். மற்ற இடங்களைப் பற்றிய விவரம் தெரியவில்லை.

கருநந்தடக்கன் காந்தளூரில் விளங்கிய சாலையை மாதிரியாகக் கொண்டு அதைப் பின்பற்றிப் பார்த்திவசேகர புரத்தில் ஒரு சாலையை நிறுவினுன் என்று சாசனத்திலே குறிக்கப்பட்டிருப்பது மிகவும் முக்கியு மானது.

---

பார்த்திவசேகரபுரச் சாசனம்

# சாசன வாசகம்

## முதல் ஏடு—முன்புறம்

1. 𑌸𑍍𑌵𑌸𑍍𑌤𑌿𑌶𑍍𑌰𑍀 [1*] கலியுகக் கோட்டு நாள் பதினுன்கு நூருயிரத்து நாற்பத்து ஒன்பதினுயிரத்து எண்ப

2 த்து ஏழுசென்ற நாள் 𑌸𑍍𑌵𑌸𑍍𑌤𑌿𑌶𑍍𑌰𑍀 கோக் கருநந்தடக்கனுக்கு யாண்டு ஒன்பது நாள் பதினைஞ்சுஇ

3. ந்நாளால் முடால நாட்டுப் பசுங்குளத்துப்படு நிலத்தில் முன்சிறைச் சவையாருடைய உழக்குடி

4. விளை என்னு நிலம் இவகளுக்கு அடிக்கடி நிலங்குடுத்து மாறிக்கொண்டு இங்நிலம் பிடி சூ

5. ழ்ந்து ஸ்ரீ கோயில் எடுத்து विष्णुभट्टारकरै [redacted] செய்து पार्थिवशेखरपुरम् எ

6. ன்று பேர் இட்டு காந்தளூர் मर्यादि யால் தொண்ணூற்று ஐவர் சட்டர்க்கு சாலையுஞ் செய்தா

7 ன் ஸ்ரீ கோக்கருநந்தடக்கன் அகநாழிகைச் சென்னடைக்கு அட்டின பூமி பொழிசூழ் நாட்டு குராத்

## முதல் ஏடு—பின்புறம்

8. தூரில் இடைக் குராத்தூர் வயலுங்கரையும் உண்ணிலம் ஒழிவின்றி மேற்பாதி மீதாட்சி உள்ளட

9. ங்க அட்டிக் குடுத்தான் செங்கழு நாட்டு ஐம்மாக் கொல்லை மேற் கொல்லை வயலுள் வெஞ்சைக் குளத்தின்

10. கீழ் வெஞ்சைப் பொறை தடி ஒன்றும் சாயறைக் கலம்பாடு தடிமூன்றும் நெடுமட் குளத்தின் கீழ்

வரி 1. ஸ்வஸ்தி ஸ்ரீ
வரி 2. ஸ்வஸ்திஸ்ரீ
,, 5. (1) விஷ்ணு பட்டார (2) ப்ரதிஷ்டை (3) பார்த்திவ சேகரபுரம்
,, 6. மர்யாதி

11. நரியகறை தடி ஒன்றும் கொற்றனகறை தடி ஒன்றும் குளவகறை தடி ஒன்றும் நீரகறைதடி ஒன்

12. று மாயிலகறை தடி ஒன்றும் தலை விலைச்செய் தடி இரண்டும் எருமை யகறையுந் துடவர் இரண்டே

13 ற்றித்தடி மூன்றும் பகை தொங்கன்தடி ஒன்றும் ஏற்றித் தடி புதினைஞ்சு விதை மடைப்பள்ளி நா

14. ழியால் ஆயிரத்து இருநூற்று நாழியுங் காராண்மை மீதாட்சி உள்ளடங்க உற அட்டிக் குடுத்தன வள்ளு*

## இரண்டாம் ஏடு—முன்புறம்

15. பணி குத்துக் காற்படாது$ செய்விப்பது அகநாழிகைப் பணி செய்வார் படாரரை ஆட்டப் பொழுதிற் பங்கிருகுடநீராக முப்ப

16. த்தறு குடநீர் குடுப்பது பூ இடுவான் குணந்த பூ இண்டையு மாலையுங் கட்டிக் குறைவறக் குடுப்பது நொந்தா விளக்கி னுக்காக மெ

17. துகின் மேற்பாற் கீழூரில் நெடுமண்ணெனனுங் தோட்டம் தென்னட்டுக் கோனுயின சடையங் தனிச் செய்கெ சந்ததி சந்த

18. தியேய் கீழ்ப்பாதி அனுபவிப்பதாகக் காராண்மை யாகவு மேற் பாதி நந்தா விளக்கினுக்குமாக அட்டிக்குடுத்தான்

19. விழாப் புறமாக ஏழு நாடிருவிழாச் செய்து பங்குனி வியாகம் ஆருடுவதாகவும் சட்டப் பெருமக்களும் பணி மக்க

20. ளும் ஏழு நாளும் படி இரட்டி ஆணியம் பெறுவதாகவு மற்றும் விழாவினுக்கு வேண்டுவதுக்குமாக அட்டின பூ

21. மி மெதுகின் மேற்பாற் கீழூர் பெருங் குளத்தின் கீழ் ஆதனகறை இளவர்தனகறை தலைத்துடவை மஞ்சாடியகறைப

* இதற்கும் அடுத்த ஏட்டின் தொடக்க வாசகத்துக்கும் தொடர்பு காணப்படவில்லை. இடையில் ஒரு ஏடு இருந்திருக்க வேண்டுமெனத் தோன்றுகிறது,

$ குத்துக்காறட்டாது என்றும் படிக்கலாம்.

22. னையறை செத்தறை தடி இரண்டேற்றித் தடி ஏழு விதை எண்ணூற்று நாற்பதினுழி இவை தென்னுட்டுக் கோனுயின ச

23. டையங் தனிச்செய்கை சந்ததி சந்ததியேய் போகத்துக்கும் பொலிக்கும் ஆயுவிக்கதிரேற்றி உடன்வாரம் நாற் கல

## இரண்டாம் ஏடு—பின்புறம்

24. னேய் எண் குறுணி நெல்லுக் கொண்டு கீழ்பாதி காராண் மையாக உழுது ஆலிலை வாரம் ஊட்டுவதாக மேற்பாதி திருவிழாப்பு

25. றமாக அட்டிக் குடுத்தன பணி மக்களுக்கு விருத்திக்காக அட்டின பூமி தெங்க நாட்டு விளப்பில் தலை விளப்

26. பில் பதினுழிக்காலால் எண்கல வித்துப் பாடும் இதனேடு செல்லுங் கரையுங் காராண்மை மீதாட்சி உ

27. ள்ளடங்க அட்டிக் குடுத்தன இங்நாட்டேய் இளவேணாட்டு நல்லூர் பதினுழிக் காலால் எண்கல வித்து

28. ப்பாடும் இதனேடு செல்லுங் கரையுங் காராண்மை மீதாட்சி உள்ளடங்க அட்டிக் குடுத்த

29. ன இங் நாட்டேய் இடைநீர்க்கால் பனையூரும் பியலாரும் பதினுழிக்காலால் எண்கல வித்துப் பா

30. டும் இதனேடு செல்லுங்கரையுங் காராண்மை மீதாட்சி உள்ளடங்க அட்டிக் குடுத்தன செங்கழு நாட்டு

31. ப் பாறையில் சயவஞ்சரனுயின சாத்தஞ் சடையன் கீழ்ப் பாதி சாலாபோக [1]மருசாதியினுல் உழுதா

[1] 'மருசாதி' என்ற சொல் மரியாதை என்பதன் திரிந்த உருவமாகும்.

## மூன்றும் ஏடு—முன்புறம்

32. ல் காஞ்சிரங் குளத்தின் கீழ் கீழப் பொறை தடி ஒன்று விதை கலம் செங்கழு நாட்டுக் குன்றத்தூருடைய குமாரசுவாமி

33. பட்டன் முடால நாட்டுக் கீழ்குளத்து வயலுள் தான் பிரம தேயம் பெற்றுடைய நிலத்தில் அட்டின பூமி கடலங் குளத்தா

34. லும் இலைஞ்சக் குளத்தாலும் நீர்பெறுவன எருவிச் செய்தடி ஏழு விதை பதினுழிக் காலால் இருகலம் ஓமாயனுட்

35. டுச் சிறு மண்ணூர் இளையான் கண்டன் தாங்கள் கீழ்ப் பாதி உழுதூட்டுவதாக அட்டின பூமி சிறும

36. ண்ணூர் பொன்னறைக்கலம் பாட்டு வயலுள் பொன்னறை தடி ஒன்று விதை கலனேய் தூணி ஏற்றிப்ப

37. ணி மக்களுக்கு விருத்திக்காக அட்டி முதலாயின பூமி முப் பத்தெண்கலனேயிரு குறுணி இதனுள் சாந்திசெய் வானு

38. க்கு விருத்திக்காக அடுத்த பூமி மீனச்சிச் சிறு குண்டூர் ரா குளத்தின் கீழ்'குருந்தறை பரனியறை பலாவனறைக் கலம்பா

## மூன்றும் ஏடு—பின்புறம்

39. டு புளியறைக் கலம்பாடு....யறைக் கலம்பாடு ஊற்றுத்தடி ஆயினியறை ஏற்றி தடி பத்து விதை....முப்பத்....

40. ட்டு க்க சி ா .. பன்னிரு குறுணியும் சிறு கொல் கீழ்ப் பொறை விதை கலமும் ஏற்றி ஐங் கலனேய் பங்கிருகு

41. று ணிப் பாடும் குடுத்தன அக நாழிப் பணி நாலுக்குமாக ஈயானஞ்சுவானுக்குங் குமரங் கண்டனுக்கும் உருத்திர....

42. ....எண்கல விதைப்பாடும் இதனேடு செல்லுங் கரையும் அட்டிக் குடுத்தது [2] पञ्चकाव्य

1. குண்டூரோர் என்று இருக்கலாம்.
पञ्चगव्य என்று படிக்கவும்.
வரி 42. பஞ்சகாவ்ய

43. ந் தெளிப்பானுக்கு தெதி கீழ் குளத்து எருவிச்செய்தடி ஏழு விதை இருகலமும் அடுத்தன பூ இடுவான் ஒரு

44. வனுக்கு விருத்தி அரு முனை ஆதனூர் வயலுள் படைப்பறைம ருணறை மாத்தூர் வயலுள் பராயறையிற் கிழக்கி

45. ன் கூறும் ஏற்றி விதை இரு கலமும் அடுத்தன தட்டழி மத்தளி கரடிகை தாளங் காகளம் ஏற்றி எட்டுப் பணி

## நான்காம் ஏடு—முன்புறம்

46. மாய நாட்டாரும் செங்கழு நாட்டாரும் முடால நாட்டாரும் படைப்பா நாட்டாரும் வள்ளுவ நாட்டாரும் அறமரு சாதி காக்கும் பரிசினு

47. ற் காப்பது இச் சாலைக்குப் பெய்த கலத்தில் பவிழிய சரணத் தார் உடைய கலம் நாற்பத்

48. தைந்து தயித்திரியச் சரணத்தார் உடைய கலமுப் பத்தாறு தலவகார சரணத்தார் உடைய

49. கலம் பதினலு இனி வருங்கல மூன்று சரணத்தார்க்கும் ஒப்பது प्रवेशक கஞ் செய்யு

50. ம் பரிசு வையாகரண மீமாயப் புரோஹிதப் புன்பாய் புவிஹ்ரீம் இலன் त्रैराज्य व्यवहा

51. ரத்துக்கு :வேண்டும் ஒத்துடையன் இது ஸத்யம் என்று ஐவர் சட்டரைக் கொண்டு பஞ்சக்க

52. ஞ்செய்தான் புகவு பெறுவான் வாரம் ஓதும் பரிசு சூத்திரத்தி லுஞ் சூத்திராரணத்தி

## நான்காம் ஏடு—பின்புறம்

53. லுந்துருச் சொல்லி ஒன்பது புகவினில் இரண்டு கிரம வாரம் அடுத் தோதுவது சாகையிலுங்

வரி 49. ப்ரவேசக
வரி 50. த்ரைராஜ்யவ்யவஹா

வரி 51. ஸத்ய

54. கற்பத்திலுங் கணத்திலுந் துருச் சொல்லி ஒன்பது புகவினில் இரண்டு வாரம் அடுத்தோ துவது நா

55. லு பாதத்திலுந் துருச்சொல்லி ஒன்பது புகவினில் அகத் தூஹத்தில் இரண்டு வாரம் அடுத்தோது

56. வது முக்கால் வட்டத்து வைத்து ஒரு சட்டனை ஒரு சட்டன் பிழைக்கப் பேசு வானுயில் பெருமக்க

57. ளுக்கு அஞ்சு 'காணம் பொன்றண்டம் இட்டுச்சாலை உண் பது குட்டுவானுயில் ஒரு காசு தண்டம் இட்டு சாலே

58. உண்பது குட்டுண்டானும் அஞ்சுகாணம் பொன் றண்டம் இட்டு சாலை உண்பது படைக் கலத் தால் புண்செ

59. ய்தான் அறத்துக்குப் புறத்தனுவது சட்டர் படைக்கலம் பிடித் துக் *குட்டத்துக்குச் செல்லப் பெறார் சட்ட

ஐந்தாம் ஏடு—முன்புறம்

60. ......யிலகப்பட்ட எச் சூது முக்கால் வட்டத் திருந்து பொரப் பெருர் பொருவார் அற்றைக் கலம் இழப்பது சட்டர் வெள்

61. ளாட்டிகளே மடத்தில் வைத்துக் கொள்ளப் பெருர் சாலா போகமுந் தேவதானமும் சத்திமுகம் இன்றி விலக்கப் பெருர் வில

62. க்குவார் மெய் வேற்றுவகை ஐங்கழைந்து பொன் தண்டம் இட்டன்றிச் சாலே உண்ணப் பெருர் சாலா போகத் திலுந் தேவ

63. தானத்திலுங்' குடியை வலியக் கொண்ட முதல் ஒன்றுக்குப் பத்தாகக் குடுப்பது சவைக்கடமை கடவார் பக்க

64. ல் மூன்று சரணத்திலு மூவர் சென்று புக்கது பாடாவது பாடு டு போகில் ஐம்பத்து நாலு காணம் பொன் த

* கூட்டத்திற்கு என்று வாசிக்கலாம்

## பார்த்திவசேகரபுரச் சாசனம் (தொடர்ச்சி)

### ஐந்தாம் ஏடு—பின்புறம்



65. ண்டமும் பட்டு கடமையுங் குடுப்பது தேவர் சென்னடையும் பதினுழிச் சாலையும் எவ்வழக்கு சொல்லியும் வி

66. லக்கப் பெருர் விலக்குவார் நியதி கழஞ்சு பொன் தண்டம் இட்டன்றிச் சாலை உளப் பெருர் பணிமக்கள் சட்டரை

67. ப் பிழைக்கப் பேசுவார் ஒரு காசு தண்டப்படுவது இப் பரிசு தெங்க நாட்டு வெண்ணீர் வெள்ளாளன் தெங்க நாடு கிழவ

## ஐந்தாம் ஏடு-பின்புறம்

68. स्वस्तिश्रीः । वृद्धिं प्राप्य यशोदयोपजनिताम्नन्दन्नयन्नुन्नतिम् वंशं यादवमप्यवा

69. घमखिलं गोमण्डलम् पालयन् [।*] संभक्ति द्विजराजवर्द्धितगु

70. रुप्रीतिर्बलिध्वंसिनीम् विक्रान्तिम् परिबृंहयन्दिशतु वः श्रीव

71. ल्लभो मंगलम् ॥

72. ஞயின சாத்த முருகன் ஆணத்தியாக ஓமாயனுட்டுப் பா கோட்டு பாப்பிகைகோட்டு திரையன் ஓமாயனுடு கிழவ

73. ஞயின சிங்கங்குன்றப்போழன் *எடுத்து ஸ்வஸ்தி ஸ்ரீ [॥*]

வரி 66 ன்ன
„ 73 ஸ்வஸ்தி ஸ்ரீ
* எழுத்து ஏன்றிருக்க வேண்டும்

# பார்த்திவசேகரபுரச் சாசனம்

## சம்ஸ்கிருதப்பகுதியின் மொழி பெயர்ப்பு

மங்களம் உண்டாகுக.

சுலோகம்

[இந்தச் சுலோகத்திற்குக் கிருஷ்ணனைப் பற்றிய ஒரு பொருளும் அரசனைப் பற்றிய ஒரு பொருளும் உண்டு. இதைச் சிலேடை என்பர்.[

### கிருஷ்ணனைப் பற்றிய பொருள்

யசோதையினுல் உண்டான வளர்ச்சியை உடையவனும், நந்தகோபனை உயர்ந்த நிலையை அடையச் செய்தவனும், யாதவகுலத்தைத் துன்பமறச் செய்தவனும், பசுக்கூட்டங்களனைத்தையும் காப்பவனும் (தன்) பக்தனுன கருடனுல் *குருவின் அன்பை வளர்த்துக் கொண்டவனும், பலியை அழிக்கக்கூடிய ஓங்குதலை வெளியிட்டவனுமான ஸ்ரீவல்லபன் (திருமகள்கேள்வன்) உங்களுக்கு மங்களத்தைத் தருவானுக.

### அரசனைப் பற்றிய பொருள்

புகழாலும் தயையாலும் உண்டாக்கப்பட்ட மேன்மையை அடைந்து மகிழ்பவனும், யாதவ குலத்தை (ஆய்குலத்தை)த் துயரற்றதாகவும் உயர்நிலை யடைந்ததாகவும் செய்தவனும், பூமண்டலம் (கோ=பூமி) அனைத்தையும் காப்பவனும், பக்தர்களான துவிஜ சிரேஷ்டர்களிடம் அதிகமான பிரீதியுள்ளவனும், பலசாலிகளை அழிக்கும் வீரத்தை ஓங்கச் செய்து கொண்டவனுமான ஸ்ரீவல்லபன் (என்ற அரசன்) நமக்கு நன்மையை அளிப்பானுக.

* கண்ணன் ஸாந்தீப முனிவரிடம் கல்வி பயின்ற காலத்தில், அம்முனிவரின் மகன் காணமற் போக, கருட பகவானை அனுப்பி. நமனுலகிலிருந்த குருவின் மகனை மீட்டுத் தந்ததால் கண்ணன் குருவின் அன்புக்குப் பாத்திரனுனுன் என்ற புராணக் கதை இங்குக் குறிப்பிடப் படுகிறது.

ஆய்குலமன்னர் செப்பேடுகள் 2 கருநந்தடக்கனின் திருப்பறப்புச் சாசனம்

## அறிமுகம்

தென் திருவாங்கூரிலே கோதை ஆற்றின் கரையில் திருப்பறப்பு என்ற ஊர் இருக்கிறது. அவ்வூரிலிருந்து சிறிது தூரத்தில்தான் அந்த ஆறு இருபது அடி உயரத்திலிருந்து அருவியாக விழுகிறது. அந்நாட்டிலே காணக் கிடைக்கும் உளம் கவரும் அருவிகளுள் அதுவும் ஒன்ரும். ஊரின் நடுவிலே பெரிய சிவன் கோயில் ஒன்று இருக்கிறது. அதிலிருந்து கிடைத்ததே இரண்டு ஏடுகளைக் கொண்ட இந்தச் சாசனம். (இவ்விரண்டு ஏடுகளும் சாசனத்தின் முதல் ஏடும் கடைசி ஏடும் ஆகும். இடையில் ஏடுகள் காணப்படவில்லை.)

இவ்விரண்டு ஏடுகளும் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுதப் பெற்றவை. ஒன்று கிரந்த எழுத்தில் வட மொழியிலே உள்ளது. மற்ருென்று பல்லவ அரசர் வழங்கிய தமிழ் எழுத்திலே தமிழ் மொழியிலே உள்ளது. இவ்விரண்டு ஏடுகளும் இடது புறத்திலே நடுவில் உள்ள ஒரு துளையின் மூலமாக ஒரு வளையத்திலே கோக்கப்பட்டிருந்தன. அந்த வளையம் வெட்டப்பட்டே காணப்படுகின்றது. யாரால், எப்போது வெட்டப்பட்டது என்பது தெரியவில்லை. இரண்டு ஏடுகளுக்கும் இடையில் இருந்திருக்க வேண்டிய மற்ற ஏடுகளும் காணவில்லை. எத்தனை ஏடுகள் இருந்தன என்பதை அறியவும் வழியில்லை.

வட மொழியில் காண்பதுதான் சாசனத்தின் ஆரம்பம் 'நமோ நாராயணய' என்று துவங்கும் இந்தச் சாசனத்தின் முதற் சுலோகம் பிரமதேவனுக்கும், இரண்டாவது சுலோகம் விஷ்ணுவுக்கும், மூன்ருவது சுலோகம் சிவபெருமானுக்கும் வணக்கம் தெரிவிக்கின்றன. அப்பால் தானம் அளித்த அரசனுடைய வமிசமான யாதவ குலத்தின் பெரு

மையை வர்ணிக்கத் தொடங்குகிற இடத்திலே அந்த ஏடு முடிவடைந்து சாசனம் குறையாக நின்று விடுகிறது. அரசன் பெயரோ அவன் யாருக்கு வழங்கினுன் என்பதோ ஏதும் தெரியவில்லே. அதிலிருந்து வரலாற்றுக்கு வேண்டிய முக்கியமான செய்தி ஒன்றும் கிடைக்கவில்லே.

எனினும் தமிழ்ப் பகுதி முக்கியமானது. இதன் கடைசி வாக்கியம், ஸ்ரீகோக் கருநந்தடக்கற்கு ஆயுதங்கள் செய்வான் விழிஞத்து ஸ்ரீவல் லபப் பெரும்பணேகனுயின அவியலன்றடக்கன் இலேகை' என்று முடிகிறது. அதனுல் கருநந்தடக்கன் அவன் மகன் விக்கிரமாதித்திய வரகுணன் ஆகியோர்கள் காலத்திலே இது வழங்கப் பட்டதாக இருத் தல் வேண்டும். எனினும் தமிழ்ப் பகுதியில் காணும் விவரங்களிலிருந்து தேவதான பிரம தேயமாக ஏதோ ஓர் ஊர் வழங்கப்பட்டதைத் தெரிவிப்ப தாகக் கொள்ளலாம்.

மற்றெரு விதத்திலும் இந்தச் சாசனத்தை முக்கியமானதாகக் கருதலாம். இதில் காணும் தமிழ் எழுத்துகள் அழகாக உள்ளன. எழுத்துகளின் வரிவடிவ வளர்ச்சியிலே இதற்கு முக்கியமான இடம் ஒன்று உண்டு.

மேற்கண்ட காரணத்தினுல் இந்தச் சாசனம் கி. பி. 9-ஆம் நூற்றுண்டின் இறுதிப் பகுதியில் அளிக்கப்பட்டதாகக் கருதலாம். இந்தச் சாசனத்தைத் திரு. கோபிநாதராயர் திருவாங்கூர் ஆர்க்கியாலஜி வரிசை வெளியீட்டில் முதல் தொகுதியில் முதன்முதலாக வெளி யிட்டார்.

---

திருப்பறப்புச் சாசனம்

# சாசன வாசகம்

## இரண்டாம் ஏடு—முன்புறம்

1. नमो नारायणाय ॥ बिभ्रत् बभ्रुजटावली वलयिनीम् स्वामुत्तमांग[1]श्रीयं बिभ्राणम् ल

2. ळिताक्ष सूत्रवलयं व्यालम्बि कृष्णाजिनं सर्गारम्भविधावधानविलसत्प्रज्ञाप्रपञ्च

3. स्थिरम् वैरिञ्चं वपुरातनोतु भवतामम्भोरुहासि [2]श्रीयम् ॥ कामाङ्गामुचभीमकायविधुति

4. ध्वस्तान्तरायं रयादाकल्पं कमलेक्षणस्य भवताम्प्रोज्ज्रम्भमाणम् पदम्[।*]शुभ्रैरात्मभुवः कम

5. ण्डलुभवैः प्रक्षाळितं वारिभिः पुण्यैः पूरयतु त्रिलोकसरसीसंरूढमम्भोरुहम् ॥ दशान्त्रयी त्रिपु

6. रविघातकारिणः कपर्द्दिनः क्षपयतु कल्मषाणि वः[।*]यदुद्भवे हुतभुजि चित्तसम्भवो गतः क्षणात्तुरगवि

7. षाणविभ्रमम् ॥ भारावतारकरणाय [3]भूवो बभूव नारायणः किल कुले स्वयमादिदेवः [।*]ताराधिपस्य ध*

## கடைசி ஏடு—முன்புறம்

1. வித்துப்பாடு கடிகை பட்டனத்து உதார வீரன்னாயின சோரகஞ் சேன்தன் அட்டின பூமி அவ்வூரே பனங்காட்டு வயலில் வடவர் அறெ இது சோரகஞ் சேந்தன் மக்கள்

2. மக்களே தேவன் கீழ்பாதி உழுதூட்டுவது சூழ் மண்ணுடையான் அட்டின பூமி குறுப்பன் கோடு விதை கலம் இதன்றலைக் கரையும்

[1] श्रियं என்று படிக்க

[2] श्रियम् என்று படிக்க

[3] भुवो என்று படிக்க

* இதற்குப் பின் ஏடு கிடைக்கவில்லை.

3. இவ்வூர் பங்குடையார் வாதாபி நாராயணன் கோவிந்தன்— இடைத்துறை 𑌪𑌰𑌮𑍇𑌶𑍍𑌵𑌰 𑌭𑌟𑍍𑌟𑌰𑍍 உயரியத்து கோவிந்த 𑌭𑌟𑍍𑌟𑌰𑍍 கூட லிலாவி 𑌯𑌜𑍍𑌞𑌨𑍍 காரை ஊர் பாண்

4. டன் சங்கரன்—முல்லை* ஊர் சேன்தந் னாகன்—நாய்த் தோட்டு த தன் துப்பன் திரு வல்ல வாழ் தலை மனை நாக சங்மன்—இவ்வூரே மற்றத்து சங்கரன் சங்கரன்

5. இவ்வூரே நயசித்த மங்கலத்து சேந்தன் சங்கரன் இவ்வூரே பூந்துருத்தி குமரந் அச்சுதன்—இவ்வூரே சேரியில் மணியன் கண்டன்—பெருமலூர் கண்ட நாராய

6. ணன்—இவ்வூரே சடையங் †நாராசணன் இவ்வூரே வலம் புரிச்சேரி சடையன் நாராசணன் இவ்வூரே கண்டங் துப்பிர மணியன்—இவ்வூரே 𑌸𑌰𑍍𑌵𑌕𑍍𑌰𑌤𑍁 யாசி அக்கி

7. இவ்வூரே சங்கரஞ் சடையன்—இவ்வூரே கடம்பங் தாயன்— கோடனூர் நாராசணன் சக்கிரபாணி—இவ்வூரே நக்கன் மாதவங்—இவ்வூரே அங்கி தாயன் வெங்கூர் கண்டன் சாத்

8. தன்—நீர் வான் ஊர் சிரிதரங் குமரன்—இவ்வூர்க்கு ஊர் உடையான் வள்ளுவ நாட்டு அருபூனை மூட்டு கோட்டு கண்ணஞ் சாத்தன் [॥*] ஶ்ரீ கோக்கருநந்தடக்கற்கு 𑌆𑌯𑍁𑌧𑌙𑍍கள் செய்வா

9. ன் விழிஞத்து 𑌶𑍍𑌰𑍀𑌵𑌲𑍍𑌲வப் பெரும் பணை கணுயின அவிய லன்றடக்கன் 𑌇𑌲𑍇𑌖𑍈 ॥।

* முல்லை என்பதில் ல் எழுத்து லை எழுத்துக்குக் கீழே எழுதப்பட்டிருக்கிறது
† நாராயணன் என்று படிக்க.
வரி 3 (1) ந்த (2) பரமேச்வர பட்டர் (3) பட்டர் (4) யக்ஞன்
வரி 6. ஸர்வக்ரது
வரி 8. ஆயுதங்
வரி 9. (1) ஶ்ரீ வல்ல (2) ல (3) இலேகை

# திருப்பறப்புச் சாசனம்

## சம்ஸ்கிருதப் பகுதியின் மொழி பெயர்ப்பு

நாராயணனுக்கு வணக்கம்.

**சுலோகம்—1**

செங்கிறமான சடைகளின் வரிசைகளை வளையமாகக் கொண்ட தன் மெல்லிய தலைகளின் ஒளியை யுடையதும், மெல்லிய உருத்திராட்ச மாலையை யுடையதும், தொங்குகின்ற மான் தோலை யுடையதும், படைப்பைத் தொடங்கும் பணியில் ஒரே நோக்குடன் ஒளிர்கின்ற பரந்த ஞான முள்ளதுமான பிரம தேவனின் திருமேனி (செந்தாமரைச் செல்வியை) செல்வத்தை உங்களுக்கு வளர்ப்பதாகுக.

**சுலோகம்—2**

நமுசியினுடைய பயங்கரமான சரீரத்தை அசைப்பதால் விரைவிலே ஊழிக்காலம்வரை இடையூறுகளில்லாமற் செய்ததும், பிரம தேவனின் கமண்டல தீர்த்தங்களாலே கழுவப்பட்டதும், கற்ப காலம் வரையில் வளர்ச்சி யடைந்ததும், மூவுலகங்களாகிய தடாகத்துத் தாமரைப் புஷ்பத்தைப் போன்றதும் ஆன, கமலக் கண்ணனின் (விஷ்ணுவின்) பாதம் உங்களுடைய கோரிக்கைகளை நிறைவேற்றுவதாகுக.

**சுலோகம்—3**

திரிபுரங்களுக்குத் தீங்கு விளைவித்த எந்தப் பரமசிவனுடைய மூன்றுவது கண்ணிலிருந்து உண்டான அக்கினியால் ஒரு கண நேரத்தில் மன்மதன் குதிரைக் கொம்பின் நிலையை (உருவற்ற நிலையை) அடைந்தானோ அந்தப் பரமசிவனுடைய மூன்று கண்களும் உங்களுடைய அழுக்காற்றை நீக்கட்டும்.

**சுலோகம்—4**

பூமியினுடைய பாரத்தை இறக்குவதற்காக எந்தக் குலத்தில் நாராயணன் தோன்றினனோ, சந்திரனுடைய *

* இதற்குப் பின் ஏடு கிடைக்காமையால் இச் சுலோகத்தின் முடிவு தெரியவில்லை

———

ஆய்குலமன்னர் செப்பேடுகள் 3 கருநந்தடக்களின் பாலியத்துச் சாசனம்

## அறிமுகம்

இரண்டு ஏடுகளில் பொறிக்கப்பட்டுள்ள இந்தச் சாசனம் வேறு சில செப்பேடுகளுடன் பாலியத்து அச்சன் என்பவர் வீட்டில் நீண்ட காலமாக இருந்து வந்தன. அரை நூற்றுண்டுக்கு முன் அவற்றைக் கண்டெடுத்த திரு. து. அ. கோபிநாதராவ் திருவாங்கூர் ஆர்க்கிய லாஜிகல் சீரிஸ் (1910-1913) முதல் தொகுதியில் பன்னிரண்டாம் பகுதியின் முதற் சாசனமாக 187-198 பக்கங்களில் வெளியிட்டுள்ளார்.

முதல் ஏட்டின் முன்புறம், தமிழ் எழுத்தில் தமிழ் மொழியில் எழுதப்பட்டுள்ளது. அந்த எழுத்துகளின் வடிவம் பல்லவர் ஆட்சியின் கடைசிக் காலத்திலும், சோழர் ஆட்சியின் ஆரம்ப நாளிலும் வழங்கி வந்த எழுத்தையே ஒத்திருக்கின்றது. அந்த ஏட்டின் பின்புறமும் அடுத்த ஏட்டின் இருபுறங்களும் வட மொழியில் நாகரி எழுத்தில் உள்ளவை. நாகரியில் எழுதப்பெற்ற சாசனங்கள் அந்நாளிலே தென்னுட்டில் மிகவும் குறைவு, மாமல்லபுரத்துக்கு அருகில் சாளுவங்குப்பத்தில் உள்ள அதிரணசண்டேசுவரர் குடைவரைக் கோயிலில் காணும் [1] பல்லவ ராஜசிம்மனுடைய கல்வெட்டோடும் [2] ராஷ்டிரகூட அரசனுகுன மூன்றும் கிருஷ்ணனுடைய கர்ஹாட்டுச் செப்பேடுகளோடும் இதனை ஒப்பிட்டுப் பார்க்கலாமென்று கோபிநாதராயர் கூறியிருக்கிருர்.

தமிழ்ப் பகுதி, தானம் அளிக்கப்பட்ட பூமியின் நான்கெல்லையைக் கொண்டதாக உள்ளது. வடமொழிப் பகுதியிலும் தான பூமியின் விவரத்தைத் திராவிட வசனத்தில் காணலாமென்று கூறப்படுகிறது.

(1) Epi. Indi Vol. X pl. II.
(2) ,, ,, Vol. IV. pls. facing PP. 284-5.

இவ்விடம் உள்ளது தமிழ்ப்பகுதியின் கடைசியே என்றும் அதன் முற்பகுதி காணுமற்போன ஏடுகளிலே இருந்திருக்கவேண்டும் என்றும் கோபிநாதராயர் கருதுகிறுர். இப்போது கிடைத்துள்ளதிலும் கடைசியிலே சில எழுத்துகள் காணப்படவில்லே. சில எழுத்துகளாவது இருந்திருத்தல் வேண்டும்.

வடமொழிப் பகுதியிலும் முதல் ஏட்டின் முடிவிற்கும் இரண்டாம் ஏட்டின் ஆரம்பத்திற்கும் தொடர்பு காணப்படவில்லே. அந்தப் பகுதி சுத்தோதனன் மகனுன புத்த பகவானுக்கு வணக்கம் கூறும் சுலோகத்தோடு ஆரம்பிக்கிறது. அடுத்தபடியாக, பௌத்தரின் மும்மணியை (திரிசரணத்தை)ச் சேர்ந்த தருமம் சங்கம் ஆகிய இரண்டுக்கும் வணக்கம் செய்யும் சுலோகத்திலே, சந்திரனிட மிருந்து தோன்றிய யாதவ (ஆய்)குலத்தின் புகழ் கூறப்பட்டுள்ளது. அந்த வம்சத்தைத் தோற்றுவித்ததால் சந்திரனின் களங்கம் மறைந்து விட்டதென்று கவி சமத்காரமாகக் கூறுகிறுர். அஸ்தகிரி, உதயகிரி, இமயம், மலயம் ஆகிய மலேகள் அந்தக் குலத்தில் தோன்றிய மன்னர்கள் நிறுவிய வெற்றித் தூண்கள் போலவும், வெண்டிரையுடன் கூடிய நாற்கடலும் கவரி வீசும் பணிப்பெண்கள் போலவும் அமைந்திருந்தனவாம். அவர்கள் நாட்டிலே வானில் திரிந்த மேகக் கூட்டங்கள், அந்தக் குலத்தின் பழைய மன்னர்கள் காலகதி அடைந்து நீண்டநாள் ஆயினும், அவர்கள் நடத்திய அசுவமேத யாக குண்டங்களிலிருந்து எழுந்த புகை சூழ்ந்த வானத்தை நினேவூட்டினவாம். சாசனம் வழங்கிய காலத்தில் அரசுபுரிந்த ஆய்மன்னர்கள் வேள்விகளேச் செய்யாத பௌத்த தருமத்தைப் பின்பற்றுபவர்கள் என்பதை உணர்த்துவதோடு அந்த வம்சத்தின் பழம் பெருமையையும் கவி சமத்காரமாக இந்தச் சாசனத்தில் எடுத்துக் காட்டுகிறுர்.

இந்தத் தானத்தைக் கொடுத்த அரசனின் முழுப்பெயர் நமக்குக் கிடைக்கவில்லே. சம்ஸ்கிருதப் பகுதியிலிருந்து இவனுடைய பெயர் வரகுணன் என்பது தெரிகின்றது. வரகுணன் என்பது பாண்டியனின் பெயர். ஆய் அரசனுடைய சொந்தப் பெயர் காணுமற்போன ஏடுகளில் எழுதப்பட்டிருக்கவேண்டும். இவனுடைய முழுப்பெயர் விக்கிரமாதித்திய வரகுணன் என்று கருதுவது தவருகாது, பாண்டியன் பெயரை இவன் சூட்டிக் கொண்டான் என்பது தெரிகிறது.

இந்தச் சாசனத்தின் மூலமாகத் தானங்கொடுக்கப்பட்ட நிலத்தின் பெயரும், யாருக்குத் தானங் கொடுக்கப்பட்டது என்பதும் இப்போ

துள்ள ஏடுகளிலிருந்து தெரிந்துகொள்ள முடியவில்லை. காணமற் போன செப்பேடுகளிலே இந்தச் செய்திகள் கூறப்பட்டிருக்கவேண்டும். ஆனாலும், கிடைத்துள்ள தமிழ்ப்பகுதியின் இறுதி வாசகம் "திரு மூல பாதத்து படாரர்க்கு அட்டிக் குடுத்தோம்'' என்று காணப்படுவதனால் (வரி 10) திருமூல பாதத்துக் கோயிலுக்கு நிலம் தானம் செய்யப்பட்டது என்பது தெளிவாகின்றது. திருமூல பாதத்துப் படாரர் என்பது எந்தக் கடவுள் என்று, இச்சாசனத்தை அச்சிட்ட கோபிநாத ராயருக்கு அப்போது தெரியவில்லை. திருமூலத்துப் படாரர் புத்தனா, சிவபெருமானா, திருமாலா என்பது தெரியவில்லை என்று அவர் எழுதியிருக்கிறார்.*

திருமூலத்துப் படாரர் என்பது புத்தரைக் குறிக்கிறது என்று உறுதியாகக் கொள்ளலாம். ஏனென்றால் இந்தச் சாசனத்தின் வடமொழிப்பகுதி புத்தருக்கும் அவருடைய தருமத்துக்கும் புத்த சங்கத்துக்கும் வணக்கம் கூறுகிறது. இவ்வாறு மும்மணிக்கு வணக்கம் கூறுவது (திரிசரணம் கூறுவது) பௌத்தமத வழக்கம். எனவே திரிசரணம் கூறுகிற இந்தச் செப்பேடு திருமூலபடாரர் என்று கூறுவது புத்தராகத் தான் இருக்கவேண்டும்.

இந்தச் சாசனத்தை வெளியிட்டு ஏழு ஆண்டுகளுக்குப்பிறகு, திருமூலபடாரர் என்பது திருமூல வாசம் என்னும் புத்தர் கோயிலைத் தான் குறிக்கிறது என்பது கோபிநாதராயருக்குத் தெரிய வந்தது. புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்ட ''மூஷிக வம்சம்'' என்னும் வடமொழிப் புராணத்திலே சில சரித்திரச் செய்திகளும் காணப்படுகின்றன. அந்நூலின் 12-ஆம் சர்க்கத்தில், விக்ரமராமன் என்னும் மூஷிக வம்சத்து அரசனது காலத்தில் கடற்கரையோரத்திலிருந்த ஜினன் கோயிலைக் கடல் அரித்து அழிக்கும் நிலையிலிருந்தபோது, அவ்வரசன் பாறைக் கற்களைப்போட்டுக் கடல் அரிக்காதபடி கரை கட்டினான் என்று கூறப்படுகிறது. (இங்கு ஜினன் என்பது புத்தரைக் குறிக்கிறது. புத்தருக்கு ஜினன் என்னும் பெயரும் உண்டு. இங்கு இது ஜைனக் கடவுளைக் குறிக்கவில்லை.) ஷை நூலின் 14-ஆம் சர்க்கத்தில் இந்தக் கோவில் மூலவாசம் என்று கூறப்படுகிறது. இராமகட என்னும் மூஷிக வம்சத்து அரசன், கேரள அரசன் சோழ அரசன்மேல் படையெடுத்துச் சென்றபோது, அவனுக்கு உதவியாகத் தன் சேனையைத் தன் மருமக

(* P P. 111, 112, 113, Travancore Archaeological Series Voll II 1920.)

னை வல்லபன்தலைமையில் அனுப்பினான். வல்லபன் சேனையுடன் கேரள நாட்டுக்குச் சென்றபோது, இடைவழியில், இராமகடன் இறந்து போனான் என்றும், அவனுடைய இராச்சியத்தை விக்கிரம ராமன் என்பவன் கைப்பற்றிக்கொண்டான் என்றும் கேள்விப்பட்டு உடனே மூஷிக நாட்டுக்குத் திரும்பினான். திரும்பி வரும் வழியில் மூலவாசம் என்னும் ஊரில் இருந்த சுகதன் (புத்தன்) கோயிலுக்குச் சென்று வணங்கி அந்த ஜினனின் (புத்தனின்) அருளைப் பெற்றான் என்று அந்நூல் கூறுகிறது.

மூஷிக வம்சத்தில் கூறப்படுகிற இந்தச் செய்தியை அறிந்தபிறகு கோபிநாதராயருக்கு இருந்த ஐயம்—திருமூல பாதத்துப் படாரர் என்பது எந்தத் தெய்வத்தைச் சுட்டுகிறது என்னும் ஐயம்—தீர்ந்துவிட்டது. வரகுணன் என்னும் ஆய்வேள் அரசனின் இந்தச் செப்பேட்டில் கூறப்படுகிற திருமூலபடாரர் என்பது ஸ்ரீமூலவாசம் என்னும் பௌத்தக் கோயிலைக்குறிக்கிறது என்று தெரிந்துகொண்டார். அவ்வாறே இச்செய்தியை எழுதி விட்டார்.*

திருமூல படாரர் என்பது தமிழ; ஸ்ரீமூலவாசம் என்பது வடமொழி. மேற்குக் கடற்கரைப்பட்டினத்தில் இருந்த ஸ்ரீமூலவாசக் கோயில் கி. பி. 11-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் அழிந்து போயிருக்கவேண்டும் என்று அவர் கருதுகிறார். அந்தக் காலத்தில் அக்கோயிலிலிருந்த புத்தர் திருமேனி வடக்கே காந்தாரம் என்னும் ஊருக்குக் கொண்டு போகப்பட்டு அங்கே வைக்கப்பட்டிருந்த தென்றும், அந்தத் திருமேனியை பௌச்சர் (M. Foucher) என்பவர் அங்குக் கண்டு பிடித்தார் என்றும், அந்தத் திருமேனியின் பீடத்தில் "தக்ஷிணாபதோ மூலவாஸ லோகநாத" என்று எழுதப்பட்டிருக்கிறதென்றும், எனவே தென்னாட்டில் இருந்த ஸ்ரீமூலவாசத்துப் புத்தரை இது குறிப்பிடுகிறது என்றும் நிச்சயமாகத் தெரிகிறது என்றும் எழுதியுள்ளார்.†

இதனால் கருநந்தடக்கன், திருமூல படாரர் (ஸ்ரீமூலவாசக்) கோயில் அழிந்து போவதற்கு முன், அது நன்னிலையில் இருந்த காலத்தில், அந்தக் கோயிலுக்கு இந்தத் தானத்தைக் கொடுத்தான் என்பது தெரிகிறது.

கி. பி. 8-ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் பாண்டிய நாட்டை ஜடில வர்மன் பராந்தகன் அரசாண்டான். அவனுக்கு மாறஞ் சடையன்

(* P. 116, P. 117, Travancore Archaeological Series Voll II 1920.)
(† P. 117 do, do, do.)

என்னும் பெயரும் உண்டு. அவனுடைய மூன்ருவது ஆட்சியாண்டில் வேள்விக்குடிச் செப்பேடும் பதினேழாம் ஆட்சி யாண்டில் சீவர மங்கலச் செப்பேடும் (மதராஸ் மியூஸியம் பிளேட்) வழங்கப்பட்டன. இவ்விரண்டு ஏடுகளும், அவ்வரசன் ஆய்வேள் அரசருடன் போர் செய்ததைக் கூறுகின்றன. இவ்விரண்டு போர்களில் பாண்டியன், ஆய்வேள் அரசனுகிய கருநந்தனை வென்றிருக்கவேண்டும். கருநந்தன், போரில் இறந்திருக்கவேண்டும். அவன் மகனுன கருநந்தடக்கன் பாண்டியனுக்குக் கீழ்ப்பட்டு வேணுட்டையரசாண்டான். வென்ற அரசனுடைய பெயரை அவனுக்கடங்கிய சிற்றரசர்கள் சூட்டிக்கொள்வது அக்காலத்து வழக்கம். அவ்வழக்கப்படியே கருநந்தடக்கன், பாண்டியனுடைய சிறப்புப் பெயராகிய ஸ்ரீ வல்லபன் என்னும் பெயரைத் தனக்குச் சூட்டிக்கொண் டான். மேலும் தன் மகனுக்கு வரகுண பாண்டியன் பெயரை (ஸ்ரீவல்லபன் மகன் வரகுணன்) சூட்டினுன். இவ்வாறு, வேணுட்டு ஆய்குல மன்னர் கி. பி. 9-ஆம் நூற்ருண்டில் பாண்டியருக்குக் கீழடங்கி யிருந்ததை இவர்களின் செப்பேட்டுச்சாசனங்களால் அறிகிருேம்.

பாலியத்துச் சாசனம்

## சாசன வாசகம்

### முதல் ஏடு-முன்புறம்

1. இலேஞத்துக்கு மேலெல்லே மேல்காணியார் குளத்துக்கும் பிடாரி கோயிலுக்குங் கிழக்கு வடவெல்லே வண்டாழங் கோட்டுக்கு தெற்று பண்ணிகுடித் திருக்கு

2. கரைத்தேவர் பழஞ்சிக்குந் தெற்கு மண்ணறை இரண்டுங் கீழ்குளத்து படுவன ஒற்றிக்காணங் கோவாக இலேஞத்தோடே சென்று வருவன சிற்றிடைச்செ தென்பா

3. †டய்போய் இலேஞத்து நீர்ச்சாய்வு இலேஞத்து வடபுற வழியே போய் இலேஞத்துக் கொற்றி கோட்டமகப்படக் கோவன் குளத்தொடு காலநேரிக் குளத்தினிடை பரம்

4. பே போய் காலனேரிக்குள மிலேஞத்துக்கு புரவாக தெரி திண்டி வயலுக்குந் தெங்கரைக்கு நடுவாக

5. ப் போயின இடைகழியாகப் போயின கீழிடுவைக்கு மேக்கு முதிச்சி பழஞ்சியோடு நெடுமன்

6. டையார் பழஞ்சி நடுவு போயின இடைகழிக்கு மிடந்நிற் பழஞ் சிக்கு புருகே போயின இடுவை

7. க்குங் கோற்புளிப் பழஞ்சிக்கு மேக்குக் கிடந்த இறவைக்கு தெற்கு இடைக்காட்டு நல்லினே யானேய்யன் கோயிலுக்கு தெற்கு கரு

8. நந்தருமன் குடி இருந்த வளர்வகப்பட கடலங்குளத்துக்கு தெற்கு பாறைக்கு தெற்கு வலிபலாவிற்கு இருவிற் தெல்ல தெற்கு குருந்துக்கு

9. தெற்கு கீழெல்லே ஒற்றைப்பனேக்கு மேக்கு நடுகல்லுக்கு மேக்கு தென்னெல்லே நாடும்பு முள்ளியும் படு நிலனீக்கி இத னகம் தொளிக்கோ

10. ட்டொடு கூடப் புன்செய் கூட்டுங் தறிக்கூறையுழுகோடு செல்லுப்புலேயரும் மற்றுங் கோயிற்குரிய தெல்லா மகப்பட திருமூலபாதத்து பாடாரர்க் கட்டிகுடுத்*

† "டேய்" என்று வாசிக்க

* இத்தற்குப் பின்னுள்ள சாசனத் தமிழ்ப் பகுதி ஏடுகள் கிடைக்கவில்லே.

## முதல் ஏடு-பின்புறம்

11. ॐ स्वस्ति ॥ यः कल्याणनयः स्वयमिवतनुर्न यः कल्पकस्य स्थितिं यस्मादभ्युदितस्तमांसि हरते सद्धर्मतेघर्म्मद्युतिः[।*]यत्पादाश्रयिणो

12 भवन्ति सुखिनस्सर्व्वे गणाः प्राणिनान्धेयान्मेरुरिवापरस्त्रिजगतीं सर्व्वां स शौद्धोदनिः ॥ [१*]आत्माकारग्रहणविमुखा

13. वाहृतापाङ्गलीलौ [1]प्रापौ नित्यं श्रुतिमवितृषानेकरूपाववोधौ [।*]देव्या [2]भूमेन्निखिल कुमतिध्वान्तरोधान्विता

14. याः नेत्रायेतां जिनकुवलयौ धर्म्मसंचौ चिराय [२*]नित्यन्दामानकरुणामृतवारिपूर(:) निद्धौं

15. [त]निर्म्मलनरेव विराजमाना [।*] लक्ष्मींश्चिराय भजतामवलोकितस्य दिश्यात्तु नः शिशिरदीधितितुल्यकान्तिः ॥[३*]

16. ज्योत्स्ना पूर इवामलश्शशधरादाह्लादयन्मेदिनीं यः प्रावर्तत यद्वचेन [3]शशिनन्मत्का कलङ्कः क्वचित् ॥[।*]

## இரண்டாம் ஏடு-முன்புறம்

17. यस्यास्तोदय हिम्यशैलमलयाः सैन्येभदन्ताग्रलीटङ्कक्षुण्णतटा भवन्ति विजय

18. स्तम्भाः जगन्निर्जये[४*] 'आर्म्मायस्य विलोलवीचिकलिका बाहाग्रफेनावलीप्रेङ्खचा

19. नरवाम चारचतुरा दासी चतुस्सागरी[।*] यज्जातस्य करोति मूर्ध्नि मकुटीबन्धैक बन्धौ रसा लीलाम्भो

20. रुहमण्डलेन ललितां रत्नातपत्रश्रियम् ॥[५*] यज्जातेष्वनुबन्धयाजिषु गतेष्वद्यापि तारापथे लक्ष्यन्ते

21. हयमेधधूमनिकरा लग्ना इवाम्भोधराः[।*]यत्र(ा)त्यानिव चानुकर्त्तुमथ ते गत्वा चतुस्सागरी स्वर्षन्त्याहृतमाहृत

22 स्वमुमती भूत्यै स्वसारोच्चयम् ॥ [६*]स्थेयात्क्षिति [4]भृतान्मूर्ध्नि स्फुरन्मुक्ताफलोदयः[।*] वंशो वार्ष्णेयभूपानां सोयमा*............[5]

* இதற்குத் தொடர்ச்சியான எழுத்துகள் தெரியவில்லை.

1 प्राप्तौ என்று படிக்க.

2 भूमेर्निखिल என்று படிக்க.

3 शशिनं मुक्त्वा என்று

4 भृतां मूर्ध्नि என்று படிக்க.

5 இங்கு चन्द्रतारकम् என்று சேர்த்து சுலோகத்தைப் பூர்த்தி செய்யலாம்.

## பாலியத்துச் சாசனம் (தொடர்ச்சி)

### இரண்டாம் ஏடு—முன்புறம்

17 18 19 20 21 22



### இரண்டாம் ஏடு—பின்புறம்

23 24 25 26 27 28 29 30



## இரண்டாம் ஏடு—பின்புறம்

23. *विभूषणेन [।*]भक्त्यानतेन बलराजिपरागधूम [ ]व्यारोदितारिवनितेन विलिञ्जभर्त्रा ॥ [1]मकरजुरि दिनेशे मासि पौषे दिने वा मृगशि

24 रसि गुरौ स प्राप्तपञ्चत्रिकायु:[।*] अवनिमदिशदस्या(:) दिक्षु सीमादिसर्व्वन्द्रमिडवचन एवालोक्यतामत्र पत्रे(॥) रक्षार्त्थ

25. मस्या: स्वयमेव रा[ज्ञा]मुस्थापितो राजति वीरकोत:[।*]बाहूपधानामुरसि प्रसुप्तां लक्ष्मीन्द धानो विजयानुरक्तां ॥

26. या[च]त्राकर्म्मण्यभवदनिशं प्रीतये कर्म्मभावो न स्वप्नेपि प्रणयिसुहृद: कर्त्तृता यस्य चासीत्सोयन्देवो वरगुण इ

27. ति [2]प्रार्त्थयत्यात्मवश्यां[3] पुण्यात्मासौ न खलु भवतामन्वयो नाशनीय: ॥ भूयोप्येष क्षितिप वृषभो भाविनो न

28. म्रमौलि: सर्व्वानेव प्रणयिसुहृदो याचते यादवेन्द्र:[। ]भूमि सेयं हृदयनिहिता रक्षणीया भवद्भि: काले का

29. ले स्वयमिव वधूरन्यभोगप्रमादात् ॥ पुण्यारम्भे त्वरयत मनो मानवा व: कृतान्त: काला काङ्क्षी निकटमटति व्यावृतास्य: प्र

30. चण्ड: [।*]तस्यैवासौ प्रियमिव [3]पित्रा: कर्तुमाशु प्रयाणै रहामीशो नयति भवतामायुष [4]श्शोषिमाशु ॥ स्वस्तिश्री न गोद् द्वादशि ॥

*இதற்கு முந்திய சுலோகப் பகுதி முன் ஏட்டின் இறுதியில் மறைந்து விட்டது.

[1] मकरजुषि என்று படிக்க.

[2] वश्यान् என்று படிக்க.

[3] पिता என்று படிக்க.

[4] शोषमाशु என்று படிக்க

# பாலியத்தூர் சாசனம்

## சம்ஸ்கிருதப் பகுதியின் மொழி பெயர்ப்பு

ஓம். மங்களம் உண்டாகட்டும்

**சுலோகம்—1**

எவர் தாமே மங்களச் சொரூபமானவரோ, எவர் கற்பகத் தருவைப் போன்றுள்ளவரோ, எவரிடமிருந்து தோன்றிய நல்ல தருமமாகிய கதிரவன் அஞ்ஞானமாகிய இருளை நீக்குகின்றனே, உயிரினங்கள் தாம் சுகம் பெறச் சரண் அடையும் திருவடிகளையுடையவர் எவரோ, அப்படிப் பட்ட சௌத்தோதனி (சுத்தோதனன் மகனான புத்த பகவான்) மற்றெரு மேருமலையைப்போல் மூன்று உலகங்களையும் குறைவின்றிக் காப்பவராகுக.

**சுலோகம்—2**

ஆன்மாவின் உருவத்தை அறிவதில் விருப்பமற்றவைகளும் (அநாத்ம வாதத்தையுடையவைகளும்), கடைக்கண் விளையாட்டு அற்றவைகளும் (காம நோக்கம் இல்லாதவைகளும்), எப்பொழுதும் கேள்வியை அடைந்திருப்பவைகளும் (உபதேசத்தைக் கேட்டுக்கொண்டிருப்பவைகளும்), அபாங்கம் என்னும் அலங்காரமான குறியையுடையவைகளும், பலவிதமான அறிவுத்திறன்களை யுடையவைகளும் உலகத்தை வென்றவைகளுமான தருமம், சங்கம் என்பவை இரண்டும் அஞ்ஞானமாகிய இருளினுல் தாக்கப்படும் பூமிதேவிக்குக் கண்களாக வெகுகாலம் இருப்பனவாகுக.

**சுலோகம்—3**

கருணையாகிய அமுதத்தை வழியவிட்டுக் கொண்டிருப்பதும், மிகத் தூய்மையான காட்சியளிப்பதும், சந்திர ஒளிக்கு ஒப்பானதுமான அவலோகித மூர்த்தியின் காந்தியானது வெகுகாலம் செல்வத்தை அருளுவதாகுக.

**சுலோகம்—4**

(இது முதல் நான்கு சுலோகங்களில் விருஷ்ணிகுலத்தின் சிறப்பு கூறப்படுகிறது. விருஷ்ணிகுலம் = யாதவகுலம், ஆய்குலம்).

எந்தக் குலம் வெண்ணிலாவைப்போல் சுத்தமாகவும் உலகத்தை மகிழ்வித்துக் கொண்டும் சந்திரனிடமிருந்து தோன்றியதோ, எந்த ஆய்குலம் தோன்றியதால் சந்திரனுக்கிருந்த களங்கம் நீங்கியதோ (அதாவது சந்திரன் பெருமைபெற்றானோ) எவருடைய சேனையிலுள்ள யானைகளின் தந்தங்களாகிய உளிகளினால் அஸ்தாசலம், இமாசலம், மலயம் என்னும் மலைகளின் சாரல்கள் செதுக்கப்பட்டு வெற்றித் தூண்கள் போல் அமைக்கப்பட்டனவோ ;

சுலோகம்—5

கடல்களாகிய பணிப்பெண்கள் அலைகளாகிய மொட்டுப்போன்ற கைகளினால் நுரைகளாகிய சாமரைகளை வீசுவதை எந்தக் குலம் பெற்றுள்ளதோ ;

சுலோகம்—6

முடிசூடுவதற்கென்றே உள்ள (எந்தக் குலத்தவர்) தலைக்குமேல் விளங்கும் கொற்றக் குடையானது, திருமகள் தன் கையிலுள்ள தாமரை மலரை நாளத்தோடு பிடித்துச் சுழற்றுவது போன்று சுழல்வதனால் சோபிக்கின்றதோ;

சுலோகம்—7

அத்தகைய யாதவகுலமானது மற்ற அரசர்களுக்குத் தலைமை யாகச் சந்திரன் நட்சத்திரங்கள் உள்ள வரையில் நீடித்திருக்கட்டும்.*

† சுலோகம்—1

பக்தியினால் வணங்கினவனும், தன் சேனைத் தொகுதியால் எழுப்பப்பட்ட தூசிகளாகிய புகையினால் தன் எதிரிகளின் மனைவிகளை அழச் செய்தவனுமான விலிஞ்ஜம் (விழிஞம்) என்ற நாட்டின் அரசனால்†.......

சுலோகம்—2

சூரியன் மகர ராசியில் இருக்கும்பொழுது (அதாவது தைமாதம்) பௌஷ மாதத்தில் மிருகசீரிட நட்சத்திரம் கூடிய வியாழக்கிழமை

* இதற்கு அடுத்த ஏடு கிடைக்கவில்லை.
† இதற்கு முந்திய ஏடு கிடைக்காமையால் சுலோகத்தின் முன் பகுதி காணப்படவில்லை. ஆகவே, கிடைத்துள்ள சொற்களுக்கு மட்டும் பொருள் தரப்பட்டுள்ளது.

யன்று அவன் (அவ்வரசன்) முப்பத்து ஐந்தாவது வயதை அடைந்து பூமியைத் தானம் செய்தான். திக்குகள், எல்லைகள் முதலானவை அனைத்தையும் இந்தச் சாசனத்திலுள்ள தமிழ் வசனங்களில் காண்க.

சுலோகம்—3

வெற்றியில் ஆசை கொண்டவளான (வீர) லட்சுமி எவனுடைய மார்பகத்தில் வீற்றிருக்கிறளோ அத்தகைய வீரகொத்தன் என்பவன் இந்தத் தானபூமியைக் காக்கும் அதிகாரியாக அரசனல் நேரில் நியமிக்கப்பட்டான்.

சுலோகம்—4

எவன், பிறர் தன்னிடம் இரத்தலை அன்பினல் மட்டும் விரும்புகிருனே, எவன் மற்றவரிடம் எப்பொழுதும், கனவிலும் கூட இரப்பதில்லையோ அப்படிப்பட்ட புண்யாத்மாவான வரகுணன் என்ற அரசன் தன் வம்சத்தவர்களை "நீங்கள் இந்த வம்சத்தை அழிக்கக்கூடாது" என்று இரந்து வேண்டுகிருன்.

சுலோகம்—5

மறுபடியும் இந்த மேன்மையுள்ள அரசன் தலைவணங்கிப் பக்தர்களின் அன்பர்களான எல்லோரையும் கேட்டுக்கொள்கிருன். இந்தப் பூமியை நீங்கள் உங்கள் உள்ளத்தில் வைத்துக்கொண்டு, மனைவியை மற்றெருவர் அனுபவிக்கும் ஆபத்து ஏற்படுமோ என்று காப்பதுபோல், இதையும் அந்த அந்தக் காலத்தில் காப்பாற்ற வேண்டும்.

ஓ மனிதர்களே! மனத்தைப் புண்ணியம் செய்வதற்கு விரைவுபடுத்துங்கள். கொடியவனை யமன் உங்களுடைய காலத்தை எதிர்பார்த்து வாயைத் திறந்து கொண்டு உங்கள் அருகிலேயே சுற்றி வருகிருன். அந்த யமனுக்கு நன்மை செய்ய விரும்பிச் சூரியன் தன்னுடைய பயணத்தால் உங்களுடைய ஆயுளின் மீதிப் பாகததை விரைவாக உறிஞ்சி விடுகிருன்.

மங்களம் உண்டாகட்டும்.

ந கோந் துவாதடி*

* இதன் பொருள் விளங்கவில்லை.

## அறிமுகம்

பார்த்திவ சேகரபுரம் செப்பேடுகளோடு கிடைத்த ஏடான ஒற்றை ஏட்டில் எழுதப்பட்டு முழுமையாகக் காணப்படும் சாசனம் இது. முதல் பக்கத்தில் ஏழு வரிகளும் பின்பக்கத்தில் ஒரு வரியுமாக மொத்தம் எட்டு வரிகள் கொண்டது இந்தச் சாசனம். இந்த ஏடு 14½" நீளம் 2¾" அகலம் கொண்டது. ஏட்டின் வலது புறம் தேய்ந்திருக்கிறது. அதனுல் முதல் பக்கத்திலுள்ள ஏழுவரிகளிலும் கடைசியிலே ஒன்றிரண்டு எழுத்துகள் காணப்படவில்லை.

இந்தச் செப்பேட்டுச் சாசனம் திருவாங்கூர் ஆர்க்கியலாஜிகல் சீரீஸ், வால்யூம் 1-ல் 16—18 பக்கங்களில் மசிப்படத்துடன் வெளியிடப்பட்டுள்ளது. வடமொழிச்சொற்கள் கிரந்த எழுத்தில் பொறிக்கப்பட்டுள்ளன.

விக்கிரமாதித்திய வரகுணன் என்னும் ஆய்குலவேந்தன் தன்னுடைய ஆட்சியின் எட்டாம் ஆண்டிலே பங்குனி மாதம், திருநந்திக்கரை என்னும் இடத்திலே தங்கியிருந்தபோது அளித்த தானத்தைத் தெரிவிக்கிறது இந்தச் சாசனம்.

இந்த அரசன் தெங்கநாடு கிழவன் மகள் முருகஞ் சேந்தியை மணந்தான் என்ற செய்தி இந்தச் சாசனத்தின் மூலம் தெரிகிறது.

இச் சாசனத்தைப் பதிப்பித்த திரு. து. அ. கோபிநாத ராயர், ஷ அரசன் தன் மனைவியான முருகஞ் சேந்தி என்ற ஆய்குல மாதேவியின் சொந்த உபயோகத்திற்காகச் சில நிலங்களைத் தானஞ் செய்தான் என்று பொருள் கொண்டிருக்கிருர். ஆனுல் அந்தப் பகுதிச் சாசன வாசகத்தைக் கவனிக்குமிடத்து, அந்த ஆய்குல மாதேவியின் தந்தையான தெங்கநாடு கிழவன் அவளை அரசனுக்குத் திருமணஞ் செய்வித்த

பொழுது சீதனமாகச் சில நிலங்களை அளித்தான் என்று கருதத் தோன்றுகிறது.

ஆய்குல மாதேவியின் பெயர் முருகஞ்சேந்தி என்பதிலிருந்து அவள் பெயர் சேந்தி என்பதும் அவள் முருகன் என்பானது மகள் என்பதும் விளங்கும். பார்த்திவ சேகரபுரச் செப்பேட்டுச் சாசனத்திலே தெங்க நாட்டு வெண்ணீர் வெள்ளாளன், தெங்கநாடு கிழவனுயின சாத்தமுருகன் அதன் ஆணத்தியாகக் குறிக்கப்பட்டிருக்கிறுன். இந்த முருகஞ் சேந்தியின் தந்தை அவனே போலும். அவ்விதமாயின் தெங்கநாடு கிழவனுன அவன் ஆய்குல மன்னனிடம் ஓர் அதிகாரியாக இருந்தான் என்பது தெளிவாகும்.

ஹ—சூர்க் கச்சேரிச் செப்பேட்டுச் சாசனம் கோக்கருநந்தடக்கன் என்னும் ஆய்குல அரசன் காலத்தில் கலியுக நாள் 14,49,087-ஆம் நாள் (கி. பி. 864-இல்) பார்த்திவ சேகரபுரத்தில் விஷ்ணுவுக்குக் கோயில் அமைத்தான் என்று கூறுகிறது. மேலும் தெங்கநாடு கிழவன் ஆன முருகன் சேந்தன் பெயரும் அந்த அரசனின் உத்தியோகஸ்தன் பெயராகக் காணப்படுகிறது. தெங்கநாடு கிழவன் மகள் முருகஞ் சேந்தியை இந்தச் சாசனம் குறிப்பிடுகிறது. முருகன் சேந்தனுடைய மகளே முருகன் சேந்தி; அதாவது முருகனுடைய மகள் சேந்தி. இந்தச் சேந்தி, ஆய்குல மாதேவி என்றும் கூறப்படுகிறுள். எனவே இவள் விக்கிரமாதித்திய வரகுணன் என்னும் ஆய்குல அரசனின் மனைவி என்பது தெரிகின்றது. தெங்கநாடு கிழவனுன முருகன் சேந்தன் கோக்கருநந்தடக்கன் காலத்திலும் அவனுக்குப் பிறகு விக்கிரமாதித்திய வரகுணன் காலத்திலும் அரசாங்க உத்தியோகஸ்தனுக இருந்தான். ஆகவே, கோக்கருநந்தடக்கனுக்கு அடுத்து வேணுட்டையரசாண்டவன் விக்கிரமாதித்திய வரகுணன் என்பது தெளிவாகிறது. எனவே கி. பி. 864க்குப் பிறகு இவ்வரசன் இருந்தவன் என்பது தெரிகிறது. இவன் ஆட்சிக்கு வந்த ஆண்டு தெரியவில்லை. எத்தனை ஆண்டுகள் அரசாண்டான் என்பதும் தெரியவில்லை. இச்சாசனத்திலிருந்து கீழ்க்கண்ட உறவுமுறை தெரிய வருகிறது.

கோக்கருநந்தடக்கன்
(கி. பி. 864-இல் பார்த்திவசேகர புரத்தில் விஷ்ணுவுக்குக் கோயில் அமைத்தவன்)

விக்கிரமாதித்திய வரகுணன் ..........

முருகன்சேந்தன்
(தெங்கநாட்டுக் கிழவன்)
|
முருகஞ்சேந்தி
(ஆய்குலமாதேவி)

ஆய்குலமன்னர் செப்பேடுகள்

# 1. திருநந்திக்கரைச் சாசனம்

முன்புறம்




பின்புறம்



## திருநந்திக்கரைச் சாசனம்

# சாசன வாசகம்

(முன்புறம்)

1. 𑌸𑍍𑌵𑌸𑍍𑌤𑌿𑌶𑍍𑌰𑍀 [।।*] கோ 𑌵𑌿𑌕𑍍𑌰𑌮𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑌵𑌰𑌗𑍁ணர்க்கு யாண்டு எட்டு பங்குனித் திங்கள் திருநந்திக்கரை இருந்து அடிகள் [1]கோ𑌵𑌿𑌕𑍍𑌰𑌮𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑌵𑌰𑌗𑍁ண ....[1]

2. ங்க நாடு கிழவன் மகள் ஆய்குல மாதேவியாயின முருகஞ் சேந்தியைத் திருவடிச் சார்த்த இவளுக்குக் குடியாக அட்டிக் குடுத்த பூ....[2]

3. ள்ளுவ நாட்டு மேற்கோட்டுப் பழங்கோப்பற்று செங்கணா வந்தடி பலவிதை பதிினெங்கல வித்துப்பாடும் சாண்டடந்தடி பலவிதை....[3]

4. ற்கல வித்துப்பாடும் குதாளங்கோடுதடி பலவிதை ஐங்கல வித்துப்பாடும் இதனொடு செல்வன புல்லெல் படுவன தடி பல....[4]

5. முக்கல வித்துப் பாடும் பெருமண்ணும் இடை மண்ணுங் தடி பல விதை ஐங்கல வித்துப்பாடும் ஏற்றித்தடி பல விதைபதி

6. ஞழிக் காலால் முப்பத்திரு கல வித்துப்பாடும் இவற்றின் றலெக் கரையும் புலெயுங் காராண்மை மீதாட்சி உள்ளடங்க இெ....[5]

7. லி கோ நீக்கி செம்மருதர் குடியாக 𑌪𑌾𑌰𑍍𑌥𑌿𑌵𑌶𑍇𑌖𑌰𑌪𑍁𑌰த்துப் பெரு மக்கள் காத்தூட்டுவதாக அட்டிக்குடுத்தது இதனுக்கு 𑌰𑌕𑍍𑌷𑌾𑌮𑍇....†

பின்புறம்

8. மாக இவையிற்றுளேய் பெருமக்களுக்கு அட்டிக் குடுத்த பூமி குதாளங் கோட்டில் விதை நாற்கலம் ।।।உ

1. இங்கு ஏடு சிதைத்திருக்கிறது. விடுபட்ட எழுத்தைத் "ந்குதெ" என்று வாசிக்கவும்
2. விடுபட்ட எழுத்தை "மி வ" என்று வாசிக்க.
3. விடுபட்ட எழுத்தை 'நா" என்று வாசிக்க.
4. விடுபட்ட எழுத்றை :'விதை" என்று படிக்க.
5. விடுபட்ட எழுத்தை 'றயி' என்று வாசிக்க

† ரக்ஷாபோக என்று வாசிக்கவும்

வரி 1 ஸ்வஸ்தி ஸ்ரீ (2) விக்ரமாதித்ய வரகு (3) விக்ரமாதித்திய வரகுண

வரி (7) பார்த்திவ சேகரபுர

# பிற்சேர்க்கை

## I. பாண்டியரைப் பற்றிய புராணக் கதைகள்

பாண்டியர் செப்பேடுகளிலே சில புராணக்கதைகள் குறிப்பிடப் படுகின்றன. பாண்டியர் சந்திரனுடைய பரம்பரையைச் சேர்ந்தவர். பாண்டியரில் ஒருவன் இந்திரனுடைய ஆரத்தை அணிந்தான். ஒரு பாண்டியன் இந்திரனுடைய சிம்மாசனத்தில் சமமாக அமர்ந்தான். ஒரு பாண்டியன் இந்திரனுடன் போர் செய்து அவனுடய முடியின்மேல் வளை என்னும் ஆயுதத்தை எறிந்தான், ஒரு பாண்டியன் பாரதப்போரில் யானைப்படையைச் செலுத்தினன், ஒரு பாண்டியன் கடல் சுவற வேல் எறிந்தான். இவ்வாறு சில புராணக்கதைகள் பாண்டியரைப்பற்றிக் கூறப்படுகின்றன. இந்தப் புராணக்கதைகள் இச் செப்பேட்டை எழுதிய காலத்தில் திடீரென்று தோன்றிவிடவில்லை. அக்காலத்துக்குச் சில நூற்றாண்டுகளுக்கு முன்னரே இக்கதைகள் வழங்கி வந்திருக்கும். அந்தப் பழங்கதைகளையே இச்சாசனங்களும் கூறுகின்றன. அந்தப் புராணக்கதைகளைச் சுருக்கமாகக் கூறுவோம்.

சந்திர குலம்.

சோழ அரசர் தங்களைச் சூரிய குலத்தவர் என்று சொல்லிக் கொண்டதுபோலவே பாண்டியர் தாங்கள் சந்திரகுலத்தில் பிறந்தவர் என்று கூறிக்கொண்டார்கள். இது சிலப்பதிகாரத்திலும் கூறப்படுகிறது. "தென்னவர் குலத்தோர் முதல்வன்", "தென்னவர் குலமுதல்", என்று சந்திரனையும், "மாலைத்திங்கள் வழியோன்", "திங்கட் செல்வன் திருக்குலம்" என்று பாண்டியரையும் சிலப்பதிகாரம் கூறுகின்றது. வேறு தமிழ் இலக்கியங்களிலும் இது கூறப்படுகிறது.

இந்திரனின் ஆரம் பூண்டது.

பாண்டியர் செப்பேடுகள், பாண்டியர் இந்திரனுடைய மணி ஆரத்தைப் பூண்டனர் என்று கூறுகின்றன. சிலப்பதிகாரமும் இதைக் கூறுகிறது. "செங்கண் ஆயிரத்தோன் திறல் விளங்காரம் பொங்கொளி மார்பிற் பூண்டோன் வாழி" (சிலம்பு. 11 : 24-25) "தேவர்கோன் பூணாரம் தென்னர்கோன் மார்பினவே" (சிலம்பு, ஆய்ச்சியர் குரவை) என்று சிலப்பதிகாரம் கூறுகிறது. இக்கதை, பின்னர்த் தோன்றிய திருவிளையாடற்புராணத்திலும் கூறப்படுகிறது. இந்த மணியாரம் பாண்டிய அரசர் பரம்பரையில் நெடுங்காலம் இருந்ததென்றும், கி. பி. 9-ஆம் நூற்றாண்டில் இருந்த பாண்டியன் சோழனுக்குத் தோற்றுத் தன் மணி

முடியையும் இந்திரஹாரத்தையும் இலங்கையரசனிடம் அடைக்கலமாக வைத்து விட்டுச் சேரநாட்டுக்குப் போய்விட்டான் என்றும் சரித்திரம் கூறுகிறது. சோழருடைய செப்பேடுகளும் இச்செய்தியைக் கூறு கின்றன.

**இந்திரனுடைய ஆசனத்தில் அமர்ந்தது.**

பாண்டிய அரசரில் ஒருவன் இந்திரனுடைய சிம்மாசனத்தில் சமமாக அமர்ந்தான் என்று பாண்டியர் செப்பேடுகள் கூறுகின்றன. இதுவும் ஒரு பழையகதை. திருவிளையாடற்புராணத்திலும் இக்கதை யைக் காணலாம்.

**இந்திரன் முடிமேல் வளை உடைத்தது**

பாண்டியர் செப்பேடுகள், பாண்டிய அரசன் ஒருவன் இந்திரனு டைய முடியின்மேல் வளை என்னும் ஆயுதத்தை எறிந்து முடியை வீழ்த்தினான் என்றும் கூறுகின்றன. திருவிளையாடற்புராணத்திலும் இந்தப் பழையகதை கூறப்படுகிறது. ''கொற்றத்து இடிப்படை வான வன் முடித்தலையுடைத்த தொடித்தோள் தென்னவன்'' என்று சிலம்பு (ஆய்ச்சியர் குரவை) கூறுகிறது.

**பாரதப் போரில் யானைப்படையைச் செலுத்தியது.**

பாண்டியன் ஒருவன் பாரதப்போரில் யானைப்படையைச் செலுத்தி னான் என்று கூறப்படுகிறான். ''மாரதர் மலைகளத்தவியப் பாரதத்திற் பகடோட்டியும்'' என்று சின்னமனூர்ப் பெரிய செப்பேடு (வரி 96) கூறுகிறது. இச்செய்தி வேறு நூல்களில் கூறப்படவில்லை.

**பூதங்களை ஏவல் கொண்டது.**

பாண்டியன் ஒருவன் பூதங்களை ஏவல் கொண்டு அவற்றால் ஏரிகளை யும் குளங்களையும் திருத்தியமைத்தான் என்று கூறப்படுகிறான். "பூத கணம் பணியாண்டும்'' (சின்னமனூர்ச் சிறிய செப்பேடு, வரி 10-11.) ''தடம் பூதம் பணி கொண்டு தடாகங்கள் பலதிருத்தியும்'' சின்னமனூர்ப் பெரிய செப்பேடு (வரி, 98-99).

**கடல் கடந்து அமுதம் கொண்டது.**

பாண்டியன் ஒருவன் கடலைக் கடைந்து அமுதம் கொண்டான் என்று கூறப்படுகிறான். "அலைகடல் கடைந்தமிர்து கொண்டும்'' (சின்

னமனூர்ப் பெரிய செப்பேடு. வரி. 84-85) என்று செப்பேடு கூறுகிறது. "கடல் கடைந்து அமிர்து கொண்டும்" என்று தளவாய்புரம் செப்பேடு (வரி 86) கூறுகிறது.

**கடல் சுவற வேல் எறிந்தது.**

ஒரு பாண்டியன் கடல் வற்றும்படி வேலை எறிந்தான் என்று கூறப் படுகிறான். "வெம்முனை வேல் ஒன்று விட்டும் விரைவரவிற் கடல் மீட்டும்" என்றும் (சின்னமனூர்ப் பெரிய செப்பேடு 90-91) "ஓதம் மீள வேலெறிந்தும்" என்றும் (சின்னமனூர்ச் சிறிய சாசனம் வரி 9-10) கூறப் படுகிறது. இச்செய்தி சிலப்பதிகாரத்திலும் காணப்படுகிறது. திருவி ளையாடற் புராணத்திலும் இக்கதை கூறப்படுகிறது.

**இராவணனைச் சமாதானம் செய்வித்தது.**

ஒரு பாண்டியன் இராவணனைச் சமாதானம் செய்துகொள்ளும்படிச் செய்தான் என்று சாசனம் கூறுகிறது. இந்தப் புராணக் கதையின் விவரம் சரியாகத் தெரியவில்லை. இவ்வாறு சில புராணக்கதைகள் இச் செப்பேடுகளில் கூறப்படுகின்றன.

## II பாண்டியர் செய்த அருஞ் செயல்கள்

மேலே கூறப்பட்டது போல மனித ஆற்றலுக்கு அப்பாற்பட்ட செயல்களைப் பாண்டியர் செய்தனர் என்று கூறுவதோடு, அவர்கள் செய்து முடித்த அருஞ்செயல்கள் சிலவற்றையும் செப்பேடுகள் கூறுகின்றன. அவையாவன :

இமயமலையின் உச்சியில் பாறைமேல் பாண்டியன் தன் அரச சின் னமாகிய கயல் மீன் உருவங்களைப் பொறித்தான்.

நாற்கடலின் நீரை ஒரேபகலில் கொண்டுவரச் செய்து அபிஷேகம் செய்து கொண்டான் ஒரு பாண்டியன்.

மாபாரதத்தைத் தமிழ் மொழியில் எழுதுவித்தான் ஒரு பாண்டியன்.

மதுரைமா நகரத்தில் பாண்டியன் தமிழ்ச் சங்கத்தை அமைத்துத் தமிழ் ஆராய்ந்தான். நாட்டில் பசிநோய்நீங்க இந்திரனுக்குத் திருவி ழாச் செய்தான் ஒரு பாண்டியன். "அடும்பசி நோய் நாடகற்றி அம் பொற் சித்திரம் உயரியும்" (சின்னமனூர்ப் பெரிய சாசனம் (99-100)

பாண்டியர் தமிழ் நூல்களின் கரைகண்டனர். "தென்றமிழின் கரை கண்டும்" (சின்னமனூர்ப் பெரிய சாசனம்-90).

ஒரு பாண்டியன், "நாற்கோடி பொன் கொடுத்து நூற்கடலைக் கரை கண்டான்" என்று கூறப்படுகின்ருன்.

ஒரு பாண்டியன் ஆயிரம் யானையை ஐயமிட்டான். 'ஆனை ஆயிரம் ஐயமிட்டும்.', (சின்னமனூர்ச் சிறிய செப்பேடு 11-12,) "போர்க்குன்ரு யிரம் வீசியும்" (சின்னமனூர்ப் பெரிய சாசனம் 92),

## III. "அம்பொற் சித்திரம்" உயர்த்தியது

சின்னமனூர்ப் பெரிய செப்பேடு, பழைய பாண்டிய மன்னரின் அரிய செயல்களைக் கூறுகிற இடத்தில், "தடம் பூதம் பணி கொண்டு தடா கங்கள் பல திருத்தியும் அடும்பசி நோய் நாடகற்றி அம்பொற் சித்ர முயரியும் தலையாலங்கானத்திற் றன்னெக்கு மிருவேந்தரைக் கொலை வாளிற் றலைதுமித்தும்" என்று பாண்டியர் சிலருடைய அருஞ்செயல் களைக் கூறுகிறது. இதில் கூறப்பட்ட 'அம்பொற் சித்ர முயரியும்' என்பதன் பொருள் என்ன ?

சின்னமனூர்ச் சாசனத்தை அச்சிட்டு வெளிப்படுத்திய* சுப்பிர மணிய ஐயர் இதற்குச் சரியான பொருள் கூறவில்லை. சரித்திரப் பேரா சிரியர் டாக்டர் S. கிருஷ்ணசாமி ஐயங்கார் இதற்குச் சரியாகப் பொருள் கூறி விளக்கம் எழுதியிருக்கிருர். இந்திர விழாவின் போது இந்திரனுடைய கொடியை ஏற்றித் திருவிழாச் செய்வதை 'அம்பொன் சித்திரம் உயரியும்' என்னும் வாசகம் குறிக்கிறது என்று அவர் விளக்கி எழுதியுள்ளார்.†

அவர் எழுதியதன் சுருக்கம் வருமாறு:

பழங்காலத்தில் இந்திரனுக்குத் திருவிழா தமிழ் நாட்டிலும் வட இந்தியாவிலும் கொண்டாடப்பட்டது. அக்காலத்தில் இந்திரனுடைய கொடியை ஏற்றித் திருவிழா நடத்தினர்கள். சின்னமனூர்ச் செப்பேடு கூறுகிற 'அம்பொற் சித்ர முயரியும்' என்னும் வாசகம் இந்திரனுக்குக் கொடி ஏற்றித் திருவிழாச் செய்ததைக் குறிக்கிறது. சோழ நாட்டில்

* S. I. I. Vol, III Part Iv.

† P. P. 581-584 Ancient India and South Indian History and Culture by Dr. S Krishnaswami Aiyengar 1941.

காவிரிப்பூம்பட்டினத்தில் ஆண்டு தோறும் சித்திரைத் திங்களில் 28 நாள் இந்திரனுக்குத் திருவிழாக் கொண்டாடப்பட்டதைச் சிலப்பதிகாரம், மணிமேகலை என்னும் காவியங்கள் கூறுகின்றன. காளிதாசன் என்னும் சம்ஸ்கிருத கவி இயற்றிய இரகுவமிசம் என்னும் காவியத்தில் 4-ஆவது சர்க்கத்தின் 3-வது சுலோகத்தில் இந்திர விழா குறிக்கப்படுகிறது. இரகு மகாராசனுக்கு முடிசூட்டு விழா நடத்தியபோது நகர மக்கள் வந்து அவ்விழாவைப் பார்த்து மகிழ்ந்தார்கள். புருஹூதனுடைய (இந்தி ரனுடைய) கொடியை உயர்த்தி இந்திரனுக்குத்திருவிழா நடத்தும்போது நகரமக்கள் வந்து பார்த்து மகிழ்வதைப்போல நகர மக்கள் இரகுவினு டைய முடிசூட்டு விழாவைக் கண்டு மகிழ்ந்தார்கள் என்று அந்தச் சுலோகம் கூறுகிறது.

அந்தச் சுலோகத்துக்கு உரை எழுதிய மல்லிநாதர் தம்முடைய உரையில் இந்திர விழாவைப் பற்றி மூன்று சுலோகங்களை மேற்கோள் காட்டுகிறார். அந்த மேற்கோள்-சுலோகங்களில் முதலாவது, நகர வாயிலில் நான்கு கம்பங்களின் மேல் யானையின் உருவம் எழுதப்பட்ட கொடிகள் ஏற்றப்பட்டதைக் கூறுகிறது. இரண்டாவது சுலோகம், சதுர வடிவமாக அமைத்த சக்கர துவஜத்தை (சக்கர துவஜம்—இந்திர னுடைய கொடி. சக்கரன்-இந்திரன். துவஜம்-கொடி) அரசனுடைய அரண்மனைக்கு எதிரில் நாட்டப்பட்டதைக் கூறுகின்றது. அது நகர மக்களுக்கு மகிழ்ச்சியையும் ஆரோக்கியத்தையும் அளித்தது என்றும் அந்தச் சுலோகம் கூறுகிறது. மூன்றாவது சுலோகம், எந்த அரசன் இந்திரனுக்கு இந்திர விழா எடுத்துக் கொடி நாட்டுகிறானோ அந்த அரசனுடைய நாட்டில் ஐயமில்லாமல் வேண்டிய அளவு மழை பெய்யும் என்று கூறுகிறது.

இவற்றை எல்லாம் எடுத்துக் காட்டி டாக்டர் ஐயங்கார் மேலும் கூறுகிறார். இந்திரனுடைய கொடியை ஏற்றி இந்திரனுக்குத் திருவிழா செய்வது நாட்டில் மழை பெய்வதற்காக அரசர்கள் மேற்கொண்ட வழக்கம் என்று கூறுகிறார். காவிரிப்பூம்பட்டினத்தில் இந்திரனுடைய வச்சிராயுதக் கோயிலில் வைக்கப்பட்டிருந்த முரசை எடுத்து, அரச னுடைய யானையின் மேல் ஏற்றி, இந்திர விழா எப்போது தொடங்கி எப்போது முடியும் என்று முரசறைந்து நகர மக்களுக்குத் தெரிவிக்கப்பட்டது. காவிரிப்பூம் பட்டினத்திலேயே இந்திரனுடைய கற்பகத்தருக் கோவிலில் இருந்த ஐராவத யானையின் உருவம் எழுதப் பட்ட கொடியை எடுத்துக்கொண்டு ஊர்வலமாக வந்து கொடி ஏற்றித்

திருவிழா செய்யப்பட்டது. இவற்றையெல்லாம் சிலப்பதிகாரம் கூறு கிறது. மணிமேகலைக் காவியமும் இந்திர விழாவைக் கூறுகிறது. மழை பெய்வதற்காக மழைக்குத் தெய்வமாகிய இந்திரனுக்கு இந்திரவிழா நடத் தப்பட்டதை இவை தெரிவிக்கின்றன. பாண்டி நாட்டிலும் ஒரு பாண்டிய அரசன், இந்திரனுக்குக் கொடி எடுத்து இந்திரவிழா நடத்தியதைத் தான் சின்னமனூர்ச் செப்பேடு 'அம்பொற் சித்ர முயரியும்' என்று கூறு கிறதென டாக்டர் ஐயங்கார் விளக்கியுள்ளார்.

இந்திரனுடைய ஊர்தி வெள்ளை யானை; ஆகவே, இந்திரனைக் குறிப் பதற்காக இந்திரனுடைய கொடியில் யானையின் உருவம் எழுதப்படுவது வழக்கம்.

## IV. களப்பிரர்

களப்ரர், களப்பிரர், களபரர் என்று பெயருள்ள அரசர்களைப் பற்றி முதன் முதலாகப் பாண்டியருடைய வேள்விக்குடிச் செப்பேட்டுச்சாசனத் திலிருந்து அறிகிறோம். இந்தச் செப்பேடு ஐம்பத்தைந்து ஆண்டு களுக்கு முன்பு கிடைத்தது. களப்பிரர் பாண்டி நாட்டைக் கைப்பற்றி நெடுங்காலம் அரசாண்டார்கள் என்பதை வேள்விக்குடிச் செப்பேட்டி னால் அறிகிறோம். தொன்று தொட்டுப் பாண்டி மண்டலத்தை யரசாண்டு வந்த பாண்டியரைக் களப்பிரர் வென்று நாட்டைக் கைப்பற்றி ஏறத்தாழ 250 ஆண்டு அரசாண்டனர் என்றும், கடுங்கோன் என்னும் பாண்டியன் களப்பிரரை வென்று மீண்டும் பாண்டியர் ஆட்சியை நிறுவினான் என்றும் இந்தச் செப்பேட்டுச் சாசனம் கூறுகிறது. இந்தச் சாசனத்தின் வாசகம் இது. "அளவரிய ஆதிராசரை அகல நீக்கி அகலிடத்தைக் களப்ர னென்னுங் கலி அரைசன் கைக்கொண்டதனை இறக்கிய பின் படுகடல் முளைத்த பருதிபோல பாண்டியாதிராசன் வெளிப்பட்டு விடுகதி ரவி ரொளி விலக வீற்றிருந்து வேலை சூழ்ந்த வியலிடத்தைக் கோவும் குறும்பும் பாவுடன் முருக்கிச் செங்கோலோச்சி வெண்குடை நீழல் தங்கொளி நிறைந்த தரணி மங்கையைப் பிறர் பாலுரிமை திறவிதி னீக்கித் தன்பாலுரிமை நன்கன மமைத்த மானம் பேர்த்த தானை வேந் தன் ஒடுங்கா மன்னர் ஒளிநகரழித்த கடுங்கோ னென்னும் கதிர்வேற் றென்றன்" (வரி 39—46.)

இப்போது புதிதாகக் கிடைத்துள்ள தளவாய்புரச் செப்பேடும் இச் செய்தியை இவ்வாறு கூறுகிறது. "களப்பாழரைக் களைகட்ட மற்றிரள் தோள் மாக்கடுங்கோன் மானம் பேர்த்தருளிய கோன்" (வரி. 131-132.)

வேள்விக்குடிச் சாசனம் களப்ரர் என்று கூறுவதைத் தளவாய்புரச் சாசனம் களப்பாழர் என்று கூறுகிறது. (களப்பாழர் = களப்பாளர்.) களப்ரர், களப்பாளர் என்னும் சொற்கள் ஒரே பொருளைக் குறிக்கின்றன.

### களப்பிரரைப் பற்றிய செய்திகள்

வேள்விக்குடிச் சாசனம் கிடைத்த அந்தக் காலத்திலே களப்பிரரைப்பற்றி ஒன்றுமே தெரியாமலிருந்தது. இது பற்றித் திரு. வெங்கையா 1908-ஆம் ஆண்டுச் 'சாசன இலாகா அறிக்கையில், பாண்டிய அரசரைக் களப்பிரர் எப்படி வென்றார்கள், வென்றவர்கள் எப்படி பாண்டி நாட்டை அரசாண்டார்கள், பின்னர் அவர்கள் எவ்வாறு 'துரத்தப்பட்டார்கள் என்பவை தெரியவில்லை'' என்று எழுதினர்.* இன்றும் களப்பிரரைப்பற்றிய முழு வரலாறு தெரியவில்லை. என்றாலும் முன்னைவிட இப்போது சற்று அதிகமாகவே தெரிகிறது.

யாப்பருங்கலம் என்னும் இலக்கண நூலின் விருத்தியுரையில் சேர சோழ பாண்டிய அரசர்கள் களப்பாளனை (களப்பிரனை)ப் பாடிய வெண்பாக்கள் மேற்கோள் காட்டப்பட்டுள்ளன. தனிப்பாடற்றிரட்டு என்னும் நூலிலும் இந்த வெண்பாக்கள் காணப்படுகின்றன. சேரசோழ பாண்டிய அரசர் களப்பாளருக்குக் கீழடங்கியிருந்தார்கள் என்பது அவற்றிலிருந்துதெரிகின்றது. அந்த வெண்பாக்களும் அவற்றைப் பற்றிய குறிப்புகளும் இவை:—

தில்லையில் (சிதம்பரத்தில்) சேர சோழ பாண்டியர் மூவரையும் அச்சுத களப்பாளன் சிறையிலடைத்து வைத்தான் என்றும் அவ்வமயம் அவன் அவர்களின் காலில் தளை(விலங்கு) இட்டபோது மூவேந்தரும் கீழ்க்கண்ட வெண்பாக்களைப் பாடினர்கள் என்றும் கூறப்படுகின்றது-

சேர அரசன் பாடியது :—

திணைவிதைத்தார் முற்றந் திணையுணங்கும் செந்நெல்
தனைவிளைத்தார் முற்றமது தானும்—கனைசீர்
முரசுணங்கும் சங்குணங்கும் மூரித்தேர்த் தானை
அரசுணங்கும் அச்சுதன்தன் முற்றத்து.

*(A. R. E. 1908. P. 53)

சோழ அரசன் பாடியது:—

அரசர் குலதிலகன் அச்சுதன் முற்றத்தில்
அரசர வதரித்த வந்நாள்—முரசதிரக்
கொட்டிவிடு மோசையினுங் கோவேந்தர் காற்றளையை
வெட்டிவிடும் ஓசை மிகும்.

பாண்டி மன்னன் பாடியது:—

குறையுளார் எங்கிரார் கூர்வே லிராமன்
நிறையறு திங்க ளிருந்தான்—முறைமையால்
ஆலிக்குந் தானை யலங்குதார் அச்சுத! முன்
வாலிக் கிளையான் வரை.

இது பாடியதும் ஒரு விலங்கு கூடப்போட்ட பின் பாண்டியன் பாடியது:

குடகர் குணகடலென் றார்த்தார் குடகர்க்
கிடகர் வடகடலென் றார்த்தார்—வடகடலர்
தென்கடலென் றார்த்தார் தில்லையச்சு தானந்தன்
முன்கடை நின்றார்க்கும் முரசு.

களப்பாள அரசனின் சிறப்பை இன்னொரு வெண்பா கூறுகிறது. இவ்வெண்பாவைப் பாடியவர் பெயர் தெரியவில்லை.

"படுபருந்தும் சூர்ப்பேயும் பல்விலங்கும் நாயும்
கொடியுங் கழுகுமிவை கூடி—வடிவுடைய
கோமான் களப்பாளன் கொல்யானை போமாறு
போமாறு போமாறு போம்.

ஆசாரிய புத்ததத்ததேரர் என்னும் பௌத்தபிக்கு, சோழ நாட்டுத் தமிழர். அவர் சோழ நாட்டில் கி. பி. 5-ஆம் நூற்றாண்டில் அச்சுத விக்கந்தன் என்னும் களபர அரசன் காலத்தில் இருந்தவர். சோழ நாட்டுக் கவீர பட்டினம் (காவிரிப்பூம்பட்டினம்), உரக புரம். (உறையூர்), பூத மங்கலம் முதலிய ஊர்களில் வாழ்ந்தவர். சோழ நாட்டுப் பூதமங்கலம் என்னும் ஊரில், கணதாசர் என்றும் வேணுதாசர் என்றும் பெயருள்ள அமைச்சர் ஒருவர் கட்டிய பௌத்த விகாரையில் ஆசாரிய புத்த தத்ததேரர் தங்கியிருந்த காலத்தில் விநயவிநிச்சயம் என்னும் நூலைப் பாலிமொழியில் எழுதினர். அந்நூலில் அச்சுத விக்கந்தனைக் கூறுகிறார். அவ்வரசனை அவர் "களபகுல நந்தன" என்று கூறுகிறார். இதனால்

அச்சுதவிக்கந்தன் களப குலத்தில் தோன்றியவன் என்பது தெரிகின்றது.[1]

மேலே காட்டிய சான்றுகளிலிருந்து சேரசோழபாண்டிய நாடுகளை கி. பி. 5-ஆம் நூற்றாண்டில் அச்சுத விக்கந்தன் என்னும் களபர (களம்ப) அரசன் ஆட்சி செய்திருந்தானென்பது தெரிகின்றது.

கி. பி. 5-ஆம் நூற்றாண்டில் காவிரிப்பூம் பட்டினத்தில் வாழ்ந்திருந்த புத்த தத்ததேரர் என்னும் பெயருள்ள தமிழப் பௌத்தர் தாம் இயற்றிய விநயவிநிச்சயம் என்னும் பாலி மொழி நூலில் தம் காலத்தில் சோழ நாட்டை யரசாண்டிருந்த அச்சுத விக்கந்தன் என்னும் பெயருள்ள களப்பிர அரசனைக் குறிப்பிடுகிறார். அச்சுதவிக்கந்தனுக்கு அச்சுத நாராயணன் என்னும் வேறுபெயரும் உண்டு. யாப்பருங்கல விருத்தியுரையில், விளக்கத்தனார் இயற்றிய "விளக்கத்தார் கூத்து" என்னும் நூலிலிருந்து ஒரு செய்யுள் மேற்கோள் காட்டப்பட்டுள்ளது. அந்தச் செய்யுள் சோழ நாட்டிலிருந்து தமிழகம் முழுவதையும் அரசாண்டுகொண்டிருந்த அச்சுதன் என்னும் அரசனை வாழ்த்துகிறது: அந்தச் செய்யுளின் பகுதி இது:

"அடுதிறல் ஒருவற் பரவுதும்; எங்கோன்
தொடுகழற் கொடும்பூண் பகட்டெழில் மார்பிற்
கயலொடு கிடந்த சிலையுடைக் கொடுவரிப்
புயலுறழ் தடக்கைப் போர்வேல் அச்சுதன்
ஒன்று கடல் உலகம் முழுவதும்
ஒன்றுபுரி திகிரி உருட்டுவோன் எனவே."

கயலாகிய மீனையும் சிலையாகிய வில்லையும் கொடுவரியாகிய புலியையும் இந்த அச்சுதன் தனக்குரிய அடையாளமாகக் கொண்டிருந்தான் என்பது இச்செய்யுளிலிருந்து தெரிகிறது. அதாவது, பாண்டிய சேர சோழ அரசர்களின் அடையாளமாகிய மீன் வில் புலிகளின் குறிகளையே இவன் தன்னுடைய அடையாளமாகக் கொண்டிருந்தான் என்பதை அறிகிறோம். ஆகவே இந்த அச்சுதன் சேர சோழ பாண்டிய நாடுகளைக் கைப்பற்றி அரசாண்டான் என்பது அறியப்படுகிறது.

1 P. 37. University of Ceylon Review 1948. 'பௌத்தமும் தமிழும்' மயிலை, சீனிவேங்கடசாமி எழுதியது

இந்தச் செய்யுளில் கூறப்பட்ட அச்சுதனும் விநயவினிச்சயம் என்னும் நூலில் கூறப்பட்ட அச்சுத விக்கந்தனும் ஒருவரே என்பதும் இவன் களப்பிர அரசர் பரம்பரையில் வந்தவன் என்பதும் தெரிகின்றன.*

## களப்பிரர் வீழ்ச்சி

கடைச் சங்க காலத்தின் இறுதியில் ஏறத்தாழ கி. பி. மூன்றும் நூற்றாண்டின் இடைப்பகுதியில் களப்பிர அரசர் சேரசோழ பாண்டிய நாடுகளை வென்று அரசாண்டார்கள் என்று சரித்திர ஆசிரியர்கள் எல்லோரும் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். ஏறத்தாழ இரண்டரை அல்லது மூன்று நூற்றாண்டு காலம் களப்பிரர் ஆட்சி தமிழகத்தில் இருந்தது. பிறகு கடுங்கோன் என்னும் பாண்டியன் களபர அரசனைப் போரில் வென்று பாண்டி நாட்டில் மீண்டும் பாண்டியர் ஆட்சியை நிறுவினான் என்னும் செய்தியை வேள்விக்குடிச் செப்பேடும் தளவாய்புரச் செப்பேடும் கூறுவதை முன்னமே எடுத்துக் காட்டினோம்.

கடுங்கோன் களபரனை வென்று பாண்டி நாட்டை மீட்டுக்கொண்ட அதே காலத்தில், தொண்டை மண்டலத்தைக் காஞ்சிபுரத்திலிருந்து அரசாண்டு கொண்டிருந்த பல்லவ அரசன், சோழநாட்டைக் களப்பிரரிடமிருந்து வென்று கைப்பற்றிக் கொண்டான் என்பதைப் பல்லவர் செப்பேடுகளிலிருந்து அறிகிறோம். "பிறகு, புகழ்பெற்ற வீரனும் பகைவரின் ஆற்றலை அடக்கும் வலிமையுடைவனுமாகிய சிம்மவர்மனுக்கு வெற்றி வீரனாகிய சிம்மவிஷ்ணு மகனாகப் பிறந்தான். அவன் நெல் வயல்களும் கமுகு(பாக்கு) மரங்களும் நிறைந்த கவேரன் மகளால் (காவிரி ஆற்றினால்) அழகு பெற்ற சோழநாட்டைக் கைப்பற்றினான்." என்று வேலூர்ப்பாளையச் செப்பேடு (சுலோகம் 10) கூறுகிறது.†

"உண்மை தியாகம் அடக்கம் போன்ற நல்ல குணங்களையுடையவனும் க்ஷத்திரிய (வீர) குணங்களை யுடையவனுமான அவன் (சிம்மவிஷ்ணு) கவேரன் மகளான காவிரி ஆற்றை மாலையாகவும், நெல் வயல்களையும் கரும்பு வயல்களையும் ஆடையாகவும், கமுகந் தோட்டங்களையும் வாழைத் தோட்டங்களையும் மேகலையாகவும் அணிந்த சோழநாட்டைக் கைப்பற்றினான்" என்று பள்ளங்கோயில் செப்பேடு கூறுகிறது†

* மறைந்து போன தமிழ் நூல்கள்' மயிலை சீனி, வேங்கடசாமி எழுதியது.

† பல்லவர் செப்பேடு முப்பது. பக்கம் 27, 253. தமிழ் வரலாற்றுக் கழகப் பதிப்பு

பல்லவ அரசனாகிய சிம்மவிஷ்ணு யாரிடமிருந்து சோழ நாட்டைக் கைப்பற்றினான் என்பதை இச்சாசன வாசகங்கள் கூறவில்லை. சோழநாடு சோழ அரசர்களுக்கு உரியதாகையால், அவர்களிட மிருந்து பல்லவ சிம்மவிஷ்ணு சோழ நாட்டைக் கைப்பற்றியிருக்க லாம் என்று எளிதாகக் கூறி விடலாம். ஆனால், அப்படிக் கருதுவது தவறு. அக்காலத்தில், பாண்டி நாட்டை ஆண்டது போலவே சோழ நாட்டையும் களப்பிர அரசனே ஆண்டுகொண்டிருந்தான். சிம்ம விஷ்ணு களப்பிர அரசனிடமிருந்தே சோழ நாட்டைக் கைப்பற்றினான் என்பதில் சிறிதும் ஐயமில்லை. எனவே, கடுங்கோன் பாண்டிய நாட் டைக் களப்பிரனிட மிருந்து கைப்பற்றிக்கொண்டதுபோலவே, அதே காலத்தில் சிம்மவிஷ்ணுவும் சோழநாட்டைக் களப்பிரனிடமிருந்து கைப்பற்றினான் என்பது தெளிவாகிறது. அதே காலத்தில் சேர நாட்டைக் களப்பிரனிடமிருந்து சேர அரசனும் கைப்பற்றிக்கொண் டான் என்பது தெரிகின்றது. சேரநாட்டை மீட்டுக்கொண்ட சேர அரசன் பெயர் தெரியவில்லை. இவ்வாறு களப்பிரர் ஆட்சி கி. பி. 6-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் முடிவுற்றது.*

## களப்பிரர் சிற்றரசரானது

சேர சோழ பாண்டிய நாடுகளைக் கைப்பற்றித் தமிழகம் முழுவ தையும் பேரரசர் நிலையில் இருந்து அரசாண்ட களப்பிரர் கி. பி, ஆறும் நூற்றாண்டின் பிற்பகுதியில் வீழ்ச்சி யடைந்த பிறகு அவர்கள் முழுவதும் மறைந்து விடவில்லை. களப்பிர அரசரின் சந்ததியார் குறுநில மன்னராகச் சில இடங்களில் இருந்தார்கள். பல்லவன் சோழநாட்டை வென்ற பிறகு, சோழ நாட்டில் களப்பிரர் சிற்றரசராக இருந்ததைச் சாசனங்களில் காண்கிறோம். களப்பிரர் ஆட்சிக்காலத்தில் அவர் களுக்குக் கீழடங்கிச் சிற்றரசர் நிலையில் இருந்த சோழ அரசர், சிம்ம விஷ்ணு சோழ நாட்டைக் களப்பிரரிட மிருந்து கைப்பற்றிய பிறகு, களப்பிரரைப்போல் பல்லவ அரசர்களுக்கிக் கீழடங்கி யிருந்தார் கள். கி. பி. 6-ஆம் நூற்றாண்டுக்குப் பிறகு இருந்த முதலாம் நரசிம்ம வர்மனும், மேலைச்சளுக்கிய அரசர்களான முதலாம் விக்கிர

* பாண்டியன் கடுங்கோன் பாண்டி நாட்டையும் பல்லவ சிம்மவிஷ்ணு சோழ நாட்டை யும் களப்பிர அரசனிடமிருந்து கைப்பற்றியது ஏறத்தாழ கி பி. 575-ஆம் ஆண்டில் என்று சரித்திர ஆசிரியர்கள் கருதுகின்றனர், K. A. நீலகண்ட சாஸ்திரி கி. பி. 590-ஆம் ஆண்டில் என்று கருதுகிறார். கி. பி. 575-ஆம் ஆண்டு என்பதே சரியெனத் தோன்றுகிறது.

மாதித்தியன், விசயாதித்தியன், இரண்டாம் விக்கிரமாதித்தியன் ஆகியோரும் களபர அரசரை வென்றதாகத் தங்களுடைய சாசனங்களில் கூறிக்கொள்கின்றனர். இவ்வாறு இவர்கள் கூறிக்கொண்டிருப்பதனுலே இவர்கள் காலத்திலும் களப்பிரர் பேரரசராக இருந்தார்கள் என்று கருதுவது தவறு. சிற்றரசராக இருந்த அவர்களை இவ்வரசர்கள் வென்றுர்கள் என்பதே சரித்திரத்துக்குப் பொருத்தமாகும்.

## களப்பிரர்—களப்பாளர்

களப்பிரரும் களப்பாளரும் வெவ்வேறு இனத்தவர் என்றும் இருவருக்கும் யாதொரு தொடர்பும் இல்லை என்றும் சிலர் எழுதினுர்கள். அவர்கள் இருவரும் ஒருகுலத்தவரே என்று வேறு சிலர் எழுதினுர்கள். இவ்வாறு இருவகைக் கருத்துகள் சில ஆண்டுகளாக ஆராய்ச்சிக்காரர்களுக்கிடையே இருந்து வந்தன. "களப்பாள் என்ற சோணுட்டூரொன்றில் முற்காலத்தில் வாழ்ந்து கொண்டிருந்த அரசியல் தலைவன் களப்பாளன் என்று சிறப்பித்து வழங்கப்பட்டமையால், அவன் வழியினர் களப்பாளர் என்றும் களப்பாளராயர் என்றும் குடிப் பெயர் பெற்றுப் பெருமையோடு வாழ்ந்து வருவாராயினர். எனவே தமிழராகிய களப்பாளரும் ஏதிலராகிய களப்பிரரும் ஒருவரே யாவரென்னும் முடிவு எவ்வாற்ருலும் ஒத்துக்கொள்ளத் தக்கதன்று" என்று திரு. T.V. சதாசிவ பண்டாரத்தார் தாம் எழுதிய 'பாண்டியர் வரலாறு' என்னும் நூலில் எழுதியுள்ளார்.

இவையெல்லாம், தளவாய்புரச் செப்பேடு கிடைப்பதற்கு முன்னர் நிகழ்ந்தவை. இப்போது, புதிதாகக் கிடைத்துள்ள தளவாய்புரச் செப்பேட்டிலிருந்து களப்பிரரும் களப்பாளரும் ஒருவரே என்பது தெளிவாகின்றது. "கற்றறிந்தோர் திறல் பரவக் களப்பா ழரைக் களைகட்ட மற்றிரடோள் மாக்கடுங்கோன்" என்று தளவாய்புரச் செப்பேடு (வரி 131-132) கூறுகின்றது. (களப்பாழர் என்ருலும் களப்பாளர் என்ருலும் ஒன்றே). இதனுல் வேள்விக்குடிச் செப்பேடு கூறுகிற களப்பிரரும் தளவாய்புரச் செப்பேடு கூறுகின்ற களப்பாழரும் (களப்பாளரும்) ஒருவரே என்பது ஐயமறத் தெரிகின்றது.

சிவஞான போதம் என்னும் சைவ சித்தாந்த நூலை இயற்றியவரும் மெய்கண்டார் என்னும் பெயருடையவருமான பெரியார் கி. பி. 12 ஆம் நூற்ருண்டில் வாழ்ந்தவர். அவருடைய தந்தையாரின் பெயர் அச்சுத

களப்பாளர் என்பது. கி. பி. 5 ஆம் நூற்றுண்டிலிருந்த அச்சுதன் என்னும் பெயருள்ள களப்பிர அரசனைப் பற்றி முன்னமே கூறியுள்ளோம். 12 ஆம் நூற்றுண்டில் இருந்த மெய்கண்டாரின் தந்தையான அச்சுத களப்பாளர் களப்பிரர் குலத்தைச் சேர்ந்தவரோ? இது ஆராய்ச்சிக்குரியது.

சேர சோழ பாண்டியம் என்னும் தமிழகம் முழுமையும் கைப்பற்றி முடிமன்னராக அரசாண்ட களப்பிரர் ஆட்சி ஏறக்குறைய கி. பி. 300 முதல் 575 வரையில் நீண்டிருந்தது என்றும், பிறகு அவர்கள் பாண்டியர், பல்லவர்களால் தோல்வியுற்றுச் சிற்றரசர் நிலையில் தாழ்ந்து போனுர்கள் என்றும் கண்டோம். களப்பிரர் ஆட்சிக் காலத்தில் எழுதப்பட்ட செப்பேட்டுச் சாசனங்களாவது கல்வெட்டெழுத்துச் சாசனங்களாவது அவர்கள் வழங்கின காசுகளாவது இதுவரையில் கிடைக்கவில்லை. களப்பிரர் தமிழர் அல்லர். இவர்கள் தமிழகத்துக்கு அப்பால் வடக்கிலிருந்து வந்தவர்கள் என்று சரித்திரம் அறிந்தவர் எல்லோரும் கருதுகிருர்கள். ஆனுல், வடக்கில் எந்த நாட்டிலிருந்து வந்தார்கள் எந்த அரச பரம்பரையைச் சேர்ந்தவர்கள் என்பன இன்னும் முடிவு பெருத ஆராய்ச்சியாகவே இருக்கின்றது. இதுபற்றிச் சிலர் சிற்சில கருத்துக்களை வெளியிட்டுள்ளனர்.

அகநானூறு என்னும் சங்கச் செய்யுள்களில், கள்வர் அல்லது களவர் குலத்தைச் சேர்ந்த புல்லி என்னும் அரசன் கூறப்படுகிருன். கள்வர் அல்லது களவர் வேங்கடமலையைச் சார்ந்த வட்டாரங்களில் அக்காலத்தில் அரசாண்டு கொண்டிருநத சிற்றரசர்கள். இந்தக் களவரே பிற்காலத்தில் தமிழ் நாட்டைக் கைப்பற்றி யரசாண்டிருக்கக் கூடும் என்றும் சிலர் கருதுகின்றனர்.

களப்பிரர் கன்னட நாட்டிலிருந்து வந்து தமிழ் நாட்டை யரசாண்டவர் என்றும், பெரிய புராணம் என்னும் திருத்தொண்டர் புராணத்தில் மூர்த்திநாயனுர் புராணத்திலும் கல்லாடச் செய்யுளிலும் கூறப்படுகிற கருநட வேந்தன் களப்பிர அரசனே என்றும் சிலர் கருதுகின்றனர்.

தக்கண தேசத்தை அரசாண்ட பேர்போன சதகர்ணி என்னும் சாதவாகன அரசர் வீழ்ச்சியடைந்த பிறகு அவர்களில் ஒரு கிளையினர் தமிழகத்தைக் கைப்பற்றியிருக்கக் கூடும் என்றும் அவர்கள் களப்பிரர் என்று பெயர் பெற்றிருக்கக்கூடும் என்றும் சிலர் கருதுவர்.

தமிழ்நாட்டிலிருந்த குறும்பர் என்னும் சிற்றரசர்கள் ஒன்று கூடி முடிமன்னரை வென்று தமிழ் நாட்டையரசாண்டனர் என்றும் அந்தக் குறும்பரின் கூட்டமே களப்பிரர் என்றும் கருதுகிறவரும் உளர். குறும்பச் சிற்றரசர் கலவரம் செய்து நாட்டைக் கைப்பற்றியபடியால் அவர்கள் களபரர் என்னும் பெயர் பெற்றிருக்கக் கூடும் என்று இவர்கள் கூறுவர்.

செந்தலைச் சாசனங்களில் முத்தரையர் என்னும் சிற்றரசர்களின் பெயர்கள் கூறப்படுகின்றன. அப்பெயர்களில் ஒன்று பெரும் பிடுகு முத்தரையன் என்பது. இவனுக்கு இன்னொரு பெயர் "கள்வர் கள்வன்" என்பது* கள்வர் கள்வன் என்னும் பெயருக்கும் களப்பிரர் என்னும் பெயருக்கும் தொடர்பு இருக்கக் கூடும் என்று சிலர் கருதுகின்றனர்.* முத்தரையரும் களப்பிரரும் ஒரு இனத்தவரா என்பது ஆராயத் தக்கது.

செந்தலைச் சாசனத்தில் அல்லாமல் நாலடியார் என்னும் நூலிலும் முத்தரையர் கூறப்படுகின்றனர். முத்தரையர் என்பதை முத்து + அரையர் என்று சிலர் பிரிக்கின்றனர். மூன்று + தரையர் = முத்தரையர் என்று சொல்வது பொருத்தமாகத் தோன்றுகிறது. சேரசோழ பாண்டியம் என்னும் மூன்று தரைகளை (நாடுகளை) அரசாண்டபடியால் அந்தப் பரம்பரையாருக்கு முத்தரையர் என்று பெயர் ஏற்பட்டிருக்கலாம். அப்படியானல், முத்தரையரைக் களப்பிரர் என்று கருதுவது தவருகாது. சேரசோழ பாண்டிய நாடுகளை அரசாண்டபடியால் களப்பிரர் வில் புலி கயல்மீன்களின் அடையாளங்களைத் தமக்குரிய அடையாளங்களாகக் கொண்டிருந்ததை மேலே காட்டினேம். களப்பிரர் ஆட்சி வீழ்ச்சியடைந்த பிறகு அந்தப் பரம்பரையினர் சிற்றரசராகத் தாழ்ந்து தஞ்சாவூர்ப் பகுதிகளில் அரசாண்டு முத்தரையர் என்று பெயர் பெற்றிருந்தனர் போலும். முத்தரையருடைய தஞ்சாவூரைச் சோழர் குலத்தைச் சேர்ந்த விஜயாலயன் கி. பி. 9-ஆம் நூற்றுண்டில் வென்று கைப்பற்றிச் சோழ சாம்ராச்சியத்துக்கு அடிகோலினன் என்று சரித்திரம் கூறுகிறது. அதற்குப் பிறகு முத்தரையர் சரித்திரத்திலிருந்து மறைந்து போனர்கள்.

* Epi India Vol XIII. P. 143-44.

* S. I. I. Vol III, Part IV, Intruction P, 7.

# V பாண்டிய அரசர் பரம்பரை

**(வேள்விக்குடி செப்பேடு)**

1. பாண்டியன் கடுங்கோன்
2. மாறவர்மன் (அவனிசூளாமணி)
3. சேந்தன் (செழியன், வானவன்)
4. மாறவர்மன் (அரிசேசரி, அசமசமன். நெல்வேலிப் போர் வென்றவன்)
5 கோச்சடையயன் (ரணதீரன், தென்னவானவன், செம்பியன், சோழன், மதுரகரு நாடகன், கொங்கர் கோமான்)

ஸ்ரீமாறன்

6. (இராசசிம்மன் I. பல்லவமல்லனை வென்றவன்)
7. நெடுஞ்சடையன் (ஜடிலபராந்தகன். காடவனைப் பெண்ணுகடத்தில் வென்றான். கங்கராசன் மகளை மணந்தான். வேள்விக்குடி செப்பேட்டை வழங்கினன்)

**(இந்நூலில் உள்ள பாண்டியர் செப்பேட்டின்படி)**

**(சின்னமனூர்ச் சிறிய செப்பேடு)**

ஜயந்தவர்மன்

அரிகேசரி (அசமசமன், மாறவர்மன்)

(இதற்குப் பிறகு ஏடு கிடைக்கவில்லை)

**(சீவரமங்கலச் செப்பேடு)**

மாறவர்மன் (பல்லவபஞ்சனன்)

நெடுஞ்சடையன் (ஜடிலவர்மன். பரம வைஷ்ணவன். சீவரமங்கலச் செப்பேட்டை வழங்கினன்)

**தளவாய்புரச் செப்யேடு**

பராந்தகன் கோச்சடையன் (கருவூரில் காடவனை வென்றான்)

ஸ்ரீவல்லபன் (கேரளனையும் சிங்களனையும் வென்றான்)

- வரகுணன் II
- பராந்தக மகாராசன் (வீரநாராயணன், தளவாய்பு[ரச்] செப்பேட்டை வழங்கினன்)

(சின்னமனூர்ப் பெரிய செப்பேடு)

பராங்குசன்
(அரிகேசரி, சேரனை நெல்வேலியிலும்
பல்லவனைச் சங்கரமங்கையிலும் வென்றவன்)

ஜடிலன்

இராசசிம்மன் II

வரகுணன் I
(வரகுணமகாராசன்)

ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபன்
(பரசக்கரகோலாகலன். பல்லவனையும்
கேரளனையும் சிங்களனையும் மாயா
பாண்டியனையும் வென்றான்)

வரகுணன் II
(வரகுணவர்மன்
கி.பி. 862 இல்
அரசனானான்.)

பராந்தக சடையன்
(பராந்தகன்)

இராசசிம்மன் III
(விகடவாடவன், மந்தர
கௌரவன். சின்னமனூர்ப்
பெரிய செப்பேட்டை வழங்கினான்)

சிவகாசிச் செப்பேடு

தீவிரகோபன்

ஸ்ரீவல்லபன்
(குண்ணூரிலும் ஈழத்திலும் போர் வென்றான்
காடவனைக் கடலானூரில் வென்றான்)

மான குலாசலன்

மானாபரணன்
(ராசமல்லன். கேரள அரசன் ரவியின்
மகளை மணந்தவன்)

சுந்தர
பாண்டியன்

வீரபாண்டியன்
(வீரகேரளன், வினயவிஞ்
சுகன், விசாலசீலன் இவன் சிவ
காசிச் செப்பேட்டை வழங்கினான்.

# பிற்சேர்க்கை

## VI. செட்பேட்டுச் சாசனம் கொடுத்த பாண்டியர்.

கடுங்கோன்

(இவன் கொடுத்த செப்பேட்டுச் சாசனம் ஒரு கலவரத்தின் போது கெட்டுப்போயிற்று. அந்தச் சாசனம் இப்போது கிடைக்கவில்லை.)

|

மாறவர்மன்
(அவனி சூளாமணி)

|

செழியன் சேந்தன்

|

அரிகேசரி மாறவர்மன்

|

கோச்சடையன்

|

மாறன்
(இராச சிம்மன்)

|

நெடுஞ் சடையன்

(ஜடிலன் பராந்தகன்)

(3-ஆம் ஆட்சி யாண்டில் வேள்விக்குடி செப்பேட்டை வழங்கினன். 17-ஆம் ஆட்சி யாண்டில் சீவர மங்கலச் செப்பேட்டை வழங்கினன். சின்ன மனூர் (சிறிய)ச் செப்பேட்டை வழங்கினவனும் இவனே. வழங்கின ஆட்சி யாண்டு தெரியவில்லை.)

|

வரகுண மகாராசன்

|

ஸ்ரீமாறன்
(ஸ்ரீ வல்லபன், பரசக்கர கோலாகலன்)

|

வரகுண மகாராசன்

பராந்தகன் சடையன்

(45-ஆம் ஆண்டில் தளவாய்புரச் பேட்டை வழங்கினன்)

|

இராச சிம்மன்

(16-ஆம் ஆட்சியாண்டில் சின்னமனூர்ப் (பெரிய) செப்பேட்டை வழங்கினன்)

|

வீரபாண்டியன்

(சோழன் தலைகொண்டவன்)

(3-ஆம் ஆண்டில் சிவகாசி செப்பேட்டை வழங்கினன்)

# பிற்சேர்க்கை

## VII. பாண்டிய அரசர் பரம்பரை (ஆராய்ச்சி)

### வேள்விக்குடி சாசனம்*

1. கடுங்கோன்
2. மாறவர்மன் அவனிசூளாமணி
3. சேந்தன்
4. அரிகேசரி மாறவர்மன்
5. கோச்சடையன்
6. மாறவர்மன் (ராஜசிம்மன்)
7. ஜடில பராந்தகன் நெடுஞ்சடையன்

### சின்னமனூர் பெரிய சாசனம்

அரிகேசரி பராங்குசன்
|
இராஜசிம்மன்
|
வரகுண மகாராஜன் I
|
ஸ்ரீ மாற ஸ்ரீ வல்லபன்
├── வரகுணன் II
└── பராந்தகன் சடையன் வீரநாராயணன்
    |
    ராஜ சிம்மன் III

### வேள்விக்குடி சாசனம்†

1. கடுங்கோன்
2. மாறவர்மன் அவனிசூளாமணி
3. சேந்தன்
4. அரிகேசரி மாறவர்மன்
5. கோச்சடையன்
6. மாறவர்மன் (ராஜசிம்மன் I)
7. ஜடில பராந்தகன் நெடுஞ்சடையன்

### சின்னமனூர் பெரிய சாசனம்

அரிகேசரி பராந்தகன்
|
ஜடிலன்
|
ராஜசிம்மன்
|
வரகுண மகாராசன்
|
ஸ்ரீ மாற ஸ்ரீ வல்லபன்
├── வரகுணவர்மன்
└── பராந்தக வீரநாராயணன்
    |
    மாறவர்மன் ராஜ சிம்மன் II

(*1907-08 எபிகிராபி அறிக்கை, துபோ [illegible] (The Pallavas P. 67) சதாசிவ பண்டாரத்தார் (பாண்டியர் வரலாறு) இவர்கள் கருததுப்படி.

† நீலகண்ட சாஸ்திரி (The Pandya Kingdom P. 41) இதன்படி இரண்டு பாண்டியர் குறைகின்றனர், இவர் கருத்துப்படி.

# சிறப்புச் சொல் அகராதி

[ இதில் ரோமன் எண்கள் இந்நூலின் முற்பகுதியான முன்னுரை, "பாண்டியரும் செப்பேடுகளும், கி. பி, 6-ம் நூற்றுண்டின் இறுதி முதல் 10-ஆம் நூற்றுண்டுவரை ஆட்சி செலுத்திய பாண்டியர்" வரையில் உள்ள பக்கங்களைக் குறிக்கின்றன. (உதாரணம் I, II, III, IV, V முதலியன). அரபி எண்கள் 'பாண்டியர் செப்பேடுகள்' என்னும் பகுதி முடிய உள்ள பக்கங்களைக் குறிக்கின்றன. "ஆய்குல மன்னர் செப்பேடுகள்" என்னும் பகுதியின் எண்கள் அகார எழுத்தைச் சார்ந்து அமைந்துள்ளன. (உ-ம்). அ1. அ2 முதலியன) இச் சிறப்புச் சொல்லகராதியை உபயோகிப்பவர் முதலில் இதனை அறிந்துகொள்ள வேண்டும். ]

தெ



தே



தொ



ந



நி



நீ



நெ



நொ



ப



ப



பா

---





Scale : three-fourths

Fig. 1. Seal with bull etc.

The legend reads *Śrī Siṁhavarmmaṇaḥ* |

*Pātraskhalitavṛittīnāṁ sāstramā*[*nasāṁ* ‖]

1st plate—2nd side : *Lines* 1 to 8

2nd plate—1st side : *Lines* 9 to 16



# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

## சென்னை - 600 113.

## அண்மை வெளியீடுகள்

| | | ரூ. பை. |
|---|---|---|
| Persona in Tolkappiyam | : | 50.00 |
| தொல்காப்பியப் பொருளதிகாரம் ஆங்கில மொழிபெயர்ப்பு | : | 40.00 |
| சங்க இலக்கியம் கவிதையியல் நோக்கு சிந்தனைப் பின்புல மதிப்பீடு | : | 110.00 |
| நாடகமேடை நினைவுகள் | : | 160.00 |
| தமிழின் பா வடிவங்கள் | : | 35.00 |
| உலகத் தமிழாராய்ச்சி நிறுவன சுவடி விளக்க அட்டவணை (சித்த மருத்துவம்) | : | 75.00 |
| உலகத் தமிழாராய்ச்சி நிறுவன சுவடி விளக்க அட்டவணை (இலக்கியம்) | : | 70.00 |
| உலகத் தமிழாராய்ச்சி நிறுவன சுவடி விளக்க அட்டவணை (மெய்யியல் & நாட்டுப்புறவியல்) | : | 70.00 |
| செந்தமிழ்ச் செல்வியின் இலக்கியப்பணி | : | 20.00 |
| அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகத் தமிழ்ச் சுவடிகள் விளக்க அட்டவணை தொகுதி - 1 | : | 110.00 |
| Tamil India | : | 40.00 |
| Studies in Tamil Prosody and Poetics | : | 45.00 |
| புதிய அமைச்சகம் புரிந்த பணிகள் | : | 10.00 |
| தனிநாயகம் அடிகளாரின் ஆய்வுகள் | : | 22.00 |
| மன்னான் சின்னாண்டிக் கதைப்பாடல் | : | 18.00 |
| தமிழ்நாட்டில் பைரவர் வழிபாடு | : | 19.00 |
| ஆளும் தமிழ் | : | 28.00 |
| பொருள் புதிது | : | 35.00 |
| அறநூல் | : | 38.00 |
| சின்னணைஞ்சான் கதை | : | 75.00 |
| தொல்காப்பியம் இலக்கியக் கோட்பாடுகள் | : | 110.00 |
| இயற்கை மொழியாய்வு - தமிழ் | : | 75.00 |
| சூடாமணி நிகண்டு : ஒரு சொல் பல்பொருள் விளக்கம் | : | 65.00 |
| தமிழ் நாடக மேடை முன்னோடிகள் | : | 40.00 |
| இராசேந்திரன் (நாடகம்) (ம.ப.) | : | 50.00 |
| தமிழ் வள்ளல் பாண்டித்துரையார் | : | 25.00 |
| பாணினியின் அஷ்டாத்தியாயி - தமிழாக்கம் - பகுதி 1 | : | 95.00 |
| பாணினியின் அஷ்டாத்தியாயி - தமிழாக்கம் - பகுதி 2 | : | 60.00 |
| பாணினியின் அஷ்டாத்தியாயி - தமிழாக்கம் - பகுதி 3 | : | 90.00 |
| தேவநேயப் பாவாணரின் மொழியியல் - வரலாற்றுக் கொள்கை (அ.சொ.) | : | 35.00 |

**பாண்டியர் செப்பேடுகள் பத்து : 125.00**